# ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு

தொகுதி பதினொன்று

புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
(புதுவை அரசு நிறுவனம்)

# ஆனந்தரங்கப் பிள்ளை நாட்குறிப்பு

தொகுதி பதினொன்று

பதிப்பாசிரியர்

இர. ஆலாலசுந்தரம், எம்.ஏ., பிஎச்.டி.,



புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
(புதுவை அரசு நிறுவனம்)

# ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு - தொகுதி XI

வெளியீட்டு எண் : 17

முதற்பதிப்பு : சூன் 2005

ISBN : 81-85452-18-0 (Set) Vol.9,10,11,12

81-85452-19-9 (Vol.11)



வெளியீட்டாளர் : புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்

112, காமாட்சி அம்மன் கோயில் வீதி,

புதுச்சேரி – 605 001.

இந்தியா.

அச்சிட்டோர் : அரசினர் மத்திய அச்சகம்

புதுச்சேரி – 605 009.

விலை :

# பதிப்பாசிரியர் முகவுரை

பதினொன்றாம் தொகுதியானது 1757 ஜூலை தொடங்கி 1759 டிசம்பர் வரையிலான பதிவுகளைக் கொண்டுள்ளது. இது முழுக்க முழுக்க ஏழாண்டுப் போரைப் பின்னணியாகக் கொண்டது. துவக்கத்தில் தென்னிந்தியாவில் தளபதி லல்லி வெற்றி பெறுவது போல் தோன்றினாலும் இறுதியில் ஆங்கிலேயரின் பணம் மற்றும் படை பலமே வெல்லப் போகிறது என்பதை உணர்த்துகிறது.

இத்தொகுதியில் விட்டுவிட்டும் தொடர்ச்சியாகவும் பல நாட்பதிவுகள் காணக்கிடைக்கவில்லை. அதில் ஒன்றான 1758 செப்டம்பர் 17 முதல் 1759 ஜனவரி 23 வரையிலான காலத்தில்தான் லல்லி சென்னையை நீண்ட நாட்கள் முற்றுகையிட்டு, அதைப் பிடிக்க முடியாமல் விட்டுப் போக நேர்ந்தது. ஆங்கிலேயர் தேவனாம்பட்டணத்தை இழந்தனர். அதற்கு ஈடாக மசூலிப்பட்டணத்தைக் கைப்பற்றினர்.

நம் பிள்ளை உடல் நலம் மேலும் குன்றி வந்தது. தம்மை (பிள்ளை) பிரெஞ்சு ஆளுநர் புறக்கணித்து வந்தது அவரது மனநிலையையும் உடல் நிலையையும் வெகுவாகப் பாதித்து விட்டது. உடல்நிலை கெட்டநிலையில் முன்பு போல் கம்பெனியின் பொறுப்புகளையும் அவரால் நன்கு நிறைவேற்ற இயலவில்லை. மனம் நொந்து போய் அவர் ஆளுநர் லெறியைச் சந்திப்பதையே குறைத்துக் கொண்டார்.

முதலில் 1757 செப்டம்பரில் தளபதி சூப்பீரும், சில மாதங்கள் கழித்து லல்லி பிரபுவும் படைகளோடு பிரான்சிலிருந்து வந்தனர். இருவருமே சிறந்த தளபதிகள், பல சண்டைகளில் பகைவரைத் தோற்கடித்தனர். ஆயினும் ஆங்கிலேயரது அடிப்படை வலிமை அவற்றை யெல்லாம் சமாளித்து உறுதியாக நின்றது. துவக்கத்தில் பிரெஞ்சுக்காரரே இறுதியில் வெல்லப் போகிறார்கள் என்ற பிள்ளையின் நம்பிக்கையும் போகப் போகத் தளரலாயிற்று. பிரெஞ்சுக் கவுன்சிலர்களும் அதிகாரிகளும் கூட அவரது நம்பிக்கையைக் குலைக்கும் வகையில், பல நாட்களில் அவரோடு உரையாடல் நிகழ்த்தினர். இவ்வாறு பிரெஞ்சு அதிகாரிகளே நம்பிக்கை இழந்துபோன நிலையைப் பிள்ளையின் குறிப்புகள் நன்கு விவரிக்கின்றன.

இப்போர் நிகழ்ச்சிகளைத் தவிர, அவற்றின் விளைவாகப் புதுச்சேரி அனுபவித்த அவமரியாதைகளையும் வருணிக்க வொண்ணாத

பேரின்னல்களையும் பிள்ளை நன்கு பதிவு செய்துள்ளார். அவரது நேர்மை, நியாய உணர்வு, மக்களனுதாபம், சுயமரியாதை ஆகியவை எப்போதும் போன்றே இத்தொகுதியிலும் வெளிப்படுவதை நாம் படிக்கலாம்.

பிரெஞ்சு அரசால் தம் படைகளுக்கும் கூடச் சம்பளம் கொடுக்க முடியவில்லை. எனவே புதுச்சேரி மக்களை வதைத்தும் சிறையிட்டும் பல பெயர்களில் பணம் சேர்த்தது புதுவை அரசு. ஏராளமான மக்கள் நகரை விட்டே வெளியேறினர். லெறிக்கும் லல்லிக்கும் இடையிலான சச்சரவுகளையும் லெறிபட்ட அவமானங்களையும் கூட இத்தொகுதியில் நாம் படிக்கலாம். கடற்தளபதி தெஷேவும் தரைப்படை லல்லியும் கூட இணக்கமாக ஒன்றுபட்டுச் செயல்பட முடியாமல் முரண்பட்டது பிரெஞ்சுத் தரப்புக்கு ஒரு பேரிழப்பே.

புதுச்சேரி மைய அரசு ஆவணக் காப்பகத்தில் பிரெஞ்சில் Pondicherry Records என்ற தொகுதிகளும் ஆனந்தரங்கப் பிள்ளையின் பிரெஞ்சு, தமிழ்க் கடிதத் தொகுதிகளும் உள்ளன. பிரெஞ்சும் தமிழும் வரலாறும் அறிந்த ஒருவர் அவற்றினைத் தமிழில் பதிப்பித்து வெளிக் கொணர்ந்தால் பெரும்பணி ஒன்றினைச் செய்தவராவார்.

இர. ஆலாலசுந்தரம்

# ஜூலை 1757

*1757 வருசம், ஜூலை மாசம், தேதி 1; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 21; சுக்கிறவாரம்*

அப்பால் பதினோரு மணிக்கி தொரை அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைச்சபடியினாலே நான் போனவிடத்திலே தொரையவர்கள் சவா பாசி ராயன் வெகுமானம் வந்திருக்குதே, அதைப் போய்க் கொண்டு வரத் தேவையில்லையா வென்று கேட்டதுக்கு, நல்ல தென்று சொன்னதுக்கு முன் அவர்கள் வெகுமானம் வந்தால் நடக்குற, மரியாதை யென்ன வென்று கேட்டதுக்கு, ரெண்டு கோன்சேலியேரும் பட்டப் பல்லக்கு நீசான் போட்டு சோபுதார் மேளதாளம் வகையிராக்களுடனே போய் எடுப்பிச்சுக் கொண்டு வருகுறதென்று சொன்னதுக்கு, நவ பத்து தேவையில்லையா வென்றும், யெத்தனை பீரங்கி போடுகிறதென்றும் கேட்டதுக்கு, பதினஞ்சு போடுகிறது, நீர் பிறப்பட்டால் நவ பத்து அல்லாமல் மைத்தப்படி தேவையில்லை யென்று சொன்னதுக்கு, நல்லது நாளை சாயங்காலம் போயி யெடுப்பிச்சுக் கொண்டு வாருமென்று சொல்ல, நல்லது யென்று அனுப்பிக் கொண்டு பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தோம்.

இத்தனாள் பகலைக்கு மேலாக நாலு மணிக்கி தொரை அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைக்கப் போனவிடத்திலே அவர் தண்டுக்கு அனுப்பக் குதிரைகள் வேணுமென்று கேட்டதுக்கு, நல்லதென்று ஊரிலே யிருக்கிற குதிரைகளை பிடிச்சு வந்து கும்பினி குதிரை லாயத்திலே கட்டச் சொன்னபடிக்கு பதினஞ்சு குதிரை மட்டுக்கும் கட்டினார்கள். நம்முட குதிரையும் இரண்டு அனுப்பிவிச்சோம். யெல்லாம் குதிரை லாயத்திலே சேர்ந்த உடனே கபுறு சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்தோம்.

*1757 வருசம், ஜூலை மாசம், தேதி 2; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 22; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் பிறப்படச்சே கேழ்வியான சேதி : நேத்து செத்த (துவறு, சேத்த) குதிரை யெல்லாம் குதிரை லாயம் விசாரிக்குற வெள்ளைக்காரன் அவரவர்கள் கிட்ட பத்து பணம் வாங்கிக் கொண்டு யிந்தக் குதிரைகளாகாது யென்று தொரைக்குச் சொல்லி விட்டு விட்டதாயும், நம்முடைய குதிரை ரெண்டும் (நமது) லாயம் வந்து சேர்ந்ததென்று சேதி கேட்டுக் கொண்டு நான் கோட்டைக்குப் போயி குமான்சேர் (மோன்சேர்) கோவர்ணதோர் மேல்வீட்டின் பேரிலே யிருக்கச்சே கண்டு ஆசாரம் பண்ணி ஒன்பது மணி வரைக்கும் யிருந்து,

அப்பால் பூந்தோட்டக் கச்சேரியே வந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் முசே லெறி கோவர்ணதோர் முசே தெவோ, கோன்சேலியோர், முசே குலேத்து (M. Colle)[1] (என்கிற) வந்த கோன்சேலியோர், முசே குப்பி, பின்னை யிரண்டு மூணு ஒபிசியால்மார், முசே சோல்மினியாக்கு, முசே ஷர்பாந்தியோர் யிவர்களுடனே கூடயிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். உடனே குதிரைகள் வந்து தாவென்று கேட்டார். நேத்து ராத்திரி குதிரை மேஸ்திரி வெள்ளைக்காரன் கிட்ட ஒப்பிவிச்சோமென்று சொன்னதுக்கு, யிவ்விடத்துக்குக் கொண்டு வரச் சொல்லென்று சொன்னதுக்கு, சோபுதாரரை அனுப்பி குதிரைக ளெல்லாம் கோட்டையிலே கொண்டு வரச் சொன்னபடிக்கி வந்தது. ஆற்காட்டு துலுக்கர், சாவுக்காரர்கள், பத்து குதிரைக்காரர் குதிரை மேஸ்திரி வெள்ளைக்காரனுக்கு நாலு ரூபாயும் ஆறு ரூபாயும் பத்து ரூபாயுமாய்க் கொடுத்து அவரவர் குதிரைகளைக் கொண்டு போனார்கள். வினாயகனும் அப்படித் தான் கொண்டு போனான். அப்பிறம் கோவர்ணதோரும் முசே தெவோவும் மூணு பேரும் காம்பிராவிலே போயி பேசினார்கள் பத்து மணி வரைக்கும். அப்பால் குதிரை வந்து தென்று கபுறு சொன்னதுக்கு யிப்பறம் வந்து பார்த்தவுடனே அந்த வெள்ளைக்காரக் குதிரை மேஸ்திரி அஞ்சாறு குதிரை ஆகும், மத்தக் குதிரை ஆகாதென்று சொன்னான். அப்பால் சாவுக்காரர்கள் குதிரைகளை (துரை) விலை கேட்டு, விலை ஒசத்தி யென்று சொல்லி, யென்னைப் பார்த்து விலை நேராய் வந்தால் பேசிவந்து சொல்லென்று சொல்லிப் போட்டு உள்ளே போனார். வெள்ளைக்காரர் குதிரை மேஸ்திரி சாவுக்காரர் குதிரைகளிலே மூணு குதிரையும் நம்முடைய குதிரையிலே ஒரு குதிரை மணிலாக் குதிரை மெத்த நேத்தியானதும் பின்னையும் யிரண்டொரு குதிரை, ஆருதோ, அதுவும் கூட்டிக் கொண்டு போனான். யினி மேல் அது தெரிஞ்சு யெழுத வேண்டியது. அப்பால் நான் பதினோரு மணிக்கு பூந்தோட்டக் கச்சேரி வந்தேன்.

இத்தனாள் பனிரெண்டு மணி வேளைக்கு முசே கொவர்ணதோர் சோபுதாரர் ஒருத்தனும் பாளாசி ராயன் வக்கீலுடைய சம்பந்தம் அனந்த தீர்த்தாச்சாரி யென்கிறவனும் வந்து வண்ணாந்துறைக்குப் போகயில்லை. வெகுமானம் கொண்டுவந்த மீர் நேமத்துல்லாக் கான் யென்கிறவன் கடைத்தெருவிலே சுங்குவார் கும்பினீர் கிடங்கியிலே யிறங்கியிருக்கிறானே, அவ்விடத்திலே யிருந்து வாரதே யல்லாமல் வண்ணாந்துறைக்குப் போகத் தேவையில்லை என்று துரை சொல்லச்

[1] Colle என்றுதான் ஆங்கிலத்தில் உள்ளது.

சொன்னாரென்று வந்து சொன்னதுக்கு, நல்லது அப்படியே செய்வோ மென்று சொல்லிப் போகச் சொல்லி நான் வீட்டுக்குப் போனேன்.

பகலைக்கு மேலாக நாலு மணிக்கு கோட்டைக்குப் போயி நயினாருக்குச் சொல்லி அனுப்பிவிச்சு மேளதாளம் நட்டுமுட்டுக்காரர்கள் யிட்டிகள் வகையிராக்கள் யெல்லாம் கீழண்டைக் கோட்டை வாசற்படிக்கு எதிரே யிருக்கிற கடற்கரை வாசற்படி மண்டபத்திலே சேத்து, மேல் வீட்டின் பேரிலே போயி தொரைக்குக் கபுறு சொன்னவிடத்திலே, யிதிலே முசே தெவோவும் முசே குலோத்தும் (Colle) சரிகை சட்டைகள் போட்டுக் கொண்டு சிங்காரிச்சுக் கொண்டு வந்தார்கள். அவர்களைப் பார்த்து வந்தவாசிக்கு முசே குப்பியும் வெள்ளைக்கார தாசிமானு (detachment) அறு நூறு யெழு நூறு சிப்பாயிகளும் ரெண்டு மூணு பீரங்கியும் போகுது, போனவுடனே போவீர்களென்று சொல்லி, ஆனைகளும் கொண்டு போகவேணும், ரெண்டு தரம் பீரங்கிகளைச் சுடவேணுமென்று முசே தெவோ கோவற்ணதோருடனே[1] சொன்னதுக்கு, யென்னைப் பார்த்து அப்படிச் செய்யவேணுமென்று சொன்னார். அப்பால் உம்முடைய மனதுபடிக்கு நடப்பிக்குறதுதானே யென்று சொன்னேன். ஆனால் ஆனைகள் வரவும் சரன்சாமி பண்ணவும் தேசகாலமில்லை என்று சொல்லி ஆனைகளைக் கொண்டு வரச் சொல்லி ஆள் அனுப்பி விச்சு நம்முடைய அவுதாவும் அழைப்பிச்சு முஸ்தீப்பு பண்ணச் சொன்னேன். இதிலே கோட்டையிலே நூறு பேர் வெள்ளைக்காரர்கள் மாத்திரம் வரிசை வைத்து கடுதாசிகள் (Cartriges) குடுத்து, சிப்பாயிகள் யெழு நூறு பேருண்டு, அவர்களுக்கும் கடுதாசிகள் ... பீரங்கிகள் குண்டுகள் (குடுத்து) ஒப்பிசியால்மார் கொஞ்சம் பேர், அலமாஞ்சு உசாறுகள் (hussars–குதிரை வீரர்கள்) கூட வரிசை வைத்துக்கொண்டு, வெளியே பயணம் போனார்கள். சின்ன துரை பின்னை கோன்சேலியேர் வகையரா பெரிய மனுஷர்கள் யெல்லாரும் கோட்டையிலே வந்து சேர்ந்தார்கள். அப்பால் அஞ்சே கால் அஞ்சரை மணி வேளையாச்சுது. முசே தெவோவும் முசே குலோத்தும் பிறப்பட்டார்கள். நானும் மூன்சீர் (முசே) கோவற்ணதோரை ஆசாரம் பண்ணிக் கொண்டு பிறப்பட்டு, தாழே வந்து கோவற்ணதோர் பல்லக்கும் நிசான் வகையரா, சோபுதாரர், சேர்வைக்காரனை பிறப்படச் சொன்னால், ரெண்டு வெள்ளைக் கொடி (ஏந்திய) சோபுதாரர்கள், சேருவைக் காரன் வகையிராக்கள் பிறப்பட்டார்கள். சேவுகர் கூடயில்லை. அப்போ சேர்வைக்கரனை ராச்சூர் பாணம், வெள்ளை கொண்ட (வெள்ளைக்கொடி), சரன்சாமி (எல்லாம்) யெங்கே யென்று கேட்டதுக்கு, கந்தப்ப முதலி(யைக்) கேழ்க்கவேணும் (அவை) வினாயகப்பிள்ளை வீட்டிலே (யிருக்குது) ... யென்று (அவன்)

[1] கோவர்ன(ண)தோர் என்றே பிரதியின் பெரும்பாலான இடங்களில் எழுதப்பட்டுள்ளது.

சொன்னான். ஆனால் நடவுங்கள் யென்று சொல்லிப் போட்டு நான் பிறப்பட்டு பல்லக்கின் மேலேறிக் கொண்டு கோட்டைக்கு வாசற்படி (யைக்) கிடக்கச்சே (கடக்கச்சே), மேளதாளங்கள் வகையரா யீட்டிக்கழி கூட வந்து வழுதாவூர் வாசற்படி தெருவிலே பெரிய கடை யிருக்கிற[1] சுங்குவார்[2] பிடவைக் கும்பினிக் கிடங்கிலே வந்து சேர்ந்தோம். உள்ளே நொழைஞ்சு போனவுடனே பாளாசி ராயன் தரப்பிலே பெகுமானம் கொண்டு வந்(தவன்), முசே தெவோவை ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு ஆனவுடனே, அப்பால் யென்னை(யும்) ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு போயி உட்க்காந்தோம். அப்பால் பாலாசி ராயன்[3] அனுப்பினானென்று புராணபுரி சாலு(வை) சாமேவார் ரெண்டு, செடிதார் (ரெண்டு), பாகை ஒன்று, புராணபுரி துப்பட்டா ஒன்று, சரிகை போட்டது, குசிராத்தி (இடைக்கட்டு) படுக்கா ஒன்று, செடிதார் சுருள் பாகையிலே நடுநாயகப் பச்சை வைத்து சுத்திலும் பச்சை ரவை (கற்கள்—மரகதம்) செதுக்கின சிறுப்பெஷூ ஒன்று, யிறநூறு ரூபா பொறும், அவர்கள் நூறு விராகன் என்று சொல்லுவார்கள், யென் பார்வைக்குப் பார்த்தால் பிடவை சீலையும் சிறுப்பேஷூம் முன்னூறு ரூபாய் பொறும், முன்னூத்தன்பது ரூபா ஒசந்த விலையென்று தோத்திச்சு. அப்பால் வந்தவர்கள் கோன்சேல்க்காரராச்சுதே அவர்களுக்கு யேதாகிலும் குடுக்கவேணு மென்று கேட்டதுக்கு யில்லை என்று சொன்னார்கள். நீங்கள் பெரிய மனுஷரண்டையிலே யிருந்து வந்தால் அதுக்குத் தக்கதாயல்லவோ நடப்பிக்க வேணும் யென்று சொன்னால், நீங்கள் அழைப்பிச்சால் கிறயம் குடுத்து விடுகுறோ மென்று சொன்னார்கள். அப்பால் வீட்டிலிருந்து ரெண்டு சீரொப்பா, யென்பது ரூபா, அது ஒன்றும் அறுபது ரூபாயிது ஒன்றும் அழைப்பிச்சு, யெண்பது ரூபாயது முசே தெவோவுக்கும், அறுபது ரூபாயது முசே குலேத்துக்கும் குடுப்பிச்சு தொரைக்கு வந்ததைத் தட்டிலே வைத்து பல்லக்கு மேலே வைத்துக் கொண்டு, அங்கே யிருந்து வந்தவன் சுறுட்டுப் பொறுக்கியானாலும், ஆற்காட்டுக்கு (ஒரு நவாபு மாதிரி) பல்லக்(கிலே வந்து) மமுதி, அங்கி, முகிஷிப்பாகை, குசிராத்திப் படுக்கா யிது (எல்லாம்) முஸ்தீப்பு பண்ணிக் கொண்டு வந்தான். அதைப் போட்டுக் கொண்டு தயாராயிருந்தவனை பல்லக்கு மேலே வைத்துக் கொண்டு முசே தெவோவும் முசே குலேத்தும் உபயபாரிசத்திலே வர, வேடிக்கையாய்க் கோட்டையே போய்ச் சேரச்சே பயிராக்குகள்,

---

[1] இன்றைய நேரு வீதி அன்று பெரிய கடைத்தெரு.

[2] இந்த சுங்குவார் என்கிற தெலுங்குச் செட்டியார் குடும்பம் பல முக்கிய ஊர்களில் வணிகம் செய்து வந்தது. சென்னையில் சுங்குவார் வீதி என்ற பிரதான வீதியும், அப்பால் 50 மைல் கடந்து சுங்குவார் சத்திரம் என்றொரு இடம் வேலூர் சாலையிலே இருப்பது இதை நினைவு படுத்துகின்றன.

[3] இப்படி பாளாஜி ராயன், பாலாஜி ராயன் என்று ஒரே வாக்கியத்தில் எழுதப்பட்டுள்ளதைக் காண்க. பாலாஜிராவ் மராட்டிய பீஷ்வா.

(standards), வெள்ளைக் கொடிகள் வந்தது. ஆனைகளும் அவுதா போட்டுக் கொண்டு வந்தது. பயிராக்குகள், கொ(கு)டைகள் யேது வந்ததென்று (நான்) கேட்டதுக்கு, தொரை பார்த்து கந்தப்பனைக் கோவிச்சுக் கொண்டு சொன்னாராம். கந்தப்பன் வினாயகனைக் கோபிச்சுக் கொண்டானாம்... அப்பால் கீழண்டைக் கோட்டை வாசற்படியிலே நுழையச்சே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். அப்பால் மேல்வீட்டின் பேரிலே யேறி நடுச்சாலையிலே கோவர்ணதோரைக் கண்டு பெகுமானம் குடுக்கச்சே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். அப்பால் முசே திலார்ஷு பாரிசி பேச்சிலே குசலப்பிரசினை தொரை தரப்பிலே கேட்டார். அவனும் பாசிசியிலே தான உத்தாரம் சொன்னான். காகிதத்தைக் குடுத்து சவுத்தாய்ச் சம்மதி யிந்த மட்டுக்கும் கர்னாடகத்துக்குக் குடுக்குறோமென்று குடாமல் போனீர்கள். முசே புசி தாஷ்சிணையத்துக்கு ஆக யிருந்தோம். அப்படி யிருக்கக்கூடாது. சினேக தர்மத்துடனே தானே நடப்பிச்சுக் கொள்ளுகிறதென்று சொல்லி, காகிதத்திலே பின்னையும் விஸ்தரிச்சு யெழுதியிருக்குது என்று சொன்னான். நல்லது, காகிதம் பாத்துக் கொண்டு உத்தாரம் சொல்லுகுறோமென்று பாக்கு வெத்திலை பன்னீர் குடுத்து ஆசுதாவாய்ப் போயிருக்கச் சொல்லி அனுப்பிவிச்சார்கள். அப்பால் அவனை சந்தினோர் கார்க்கிற (இடம்) மட்டுக்கும் முசே தெவோவும் முசே குலோத்தும் (நானும் அழைச்சுக்) கொண்டு போயி வழி விடப் போன விடத்திலே, அவன் சொன்னது : யென்னை ரெண்டு பேர் கையிலாக்காய்க் கொண்டு (நுன்றாய் வரவேற்று) வந்தீர்கள், ஆனபடியினாலே ... (நான் வந்ததை) முடிய வைக்க வேணும் யென்று மீர் சாயபு சொன்ன சேதியை முசே தெவோ குலோத்துடனே சொன்னதுக்கு, அவர் ... அப்படியே நடப்பிக்குறோ மென்று சொன்(னார்). துலுக்கர் பேச்சு தப்பிப் போவார்கள், பறங்கிகள் தப்புறதில்லை யென்று ராச்சியமெல்லாம் வதந்தியாயிருக்கிற பேச்சை நிறுவாகம் பண்ணவேணு மென்று (அவர் மேலும்) சொன்னதுக்கு அப்படியே செய்யுறோ மென்று மறுபடி முசே தெவோ உத்தாரம் சொன்னார். அதைக் கேட்டுக் கொண்டு அவன் பல்லக்கு ஏறிக்கொண்டு போனான். நாங்கள் மேலே போயி கோவர்ணதோர், சின்ன துரை, முசியே கில்லியார் வகையரா, கோன்சேலியேர்களிலே முசே புலோ தவிர மத்தப் பேரெல்லாரும் யிருந்தார்கள். அப்பால் முசே தெலார்ஷும் மோன்சீர் கோவர்ணதோரும் பேசியிருந்தார்கள்.

அது பார்த்தால் வந்தவாசி தக்கா சாயபு பேரிலே முசே சொபினே, முசே ஷெவிறோ பண்ணுகிற தொந்தரைகளைச் சொல்லுகிற சாடையாய்க் கண்டுது. அந்த மட்டுக்கும் நான் அனுப்பி வைச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து அங்கேயிருந்து வீட்டுக்கு வந்தேன்.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 3; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 23; ஆள்திவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி, வந்தவாசியின் பேரிலே இங்கிரேசுக்காரர் பவுன்சு வந்து சமீபத்திலே யிறங்கி யிருக்கிறதாகவும், நம்முடைய பிரான்சுக்காரர் பவுன்சு சமீபத்திலே யிறங்கியிருக்கிறதாயும், இங்கே யிருந்து சிறிது பாறும் முசே குப்பியும் ரெண்டு பீரங்கியும் போச்சுதென்றும், யின்னம் சண்டை அத்தயில்லை (ஆரம்பமாக வில்லை) யென்று கேழ்க்கிறபடியினாலே, யினிமேல் நடக்குறதை அறிஞ்சு யெழுத வேணும்.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 4; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 24; சோமவாரம்*

இத்தனாள் காலமே கேழ்வியான சேதி, காத்திலே அடிபட்டு வந்து சேர்ந்த லகுலுவார் (Le Gloir) யென்கிற கப்பலின் பேரிலே மருந்து குண்டு சாமான் யேத்தி சியாமுக்கு அனுப்பிவிக்குறதாய்க் கேழ்விப்பட்ட படியினலே, அவ்விடத்திலே ஒரு பெத்திரி உண்டாக்கிறதுக்கு யெத்தனம் போலே தோணினதை யெழுதி வைத்தேன்.[1]

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 5; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 25; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே சிப்பாயிகள் புதுசாய் வைத்து கொஞ்சம் வெள்ளைக்காரர்களையும் வந்தவாசிக்கு அனுப்புறதுக்கு யெத்தனம் பண்ணினார்களென்று, நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 6; ஈசுவர வருசம், ஆனி மாசம், தேதி 26; புதவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி: "நேத்து ராத்திரி மயிசூர் வெங்கிட்டநாராயணப்பய்யன், வில்லியநெல்லூரிலே யிருக்கிறவன், வந்து முசே கோவர்ணதோரைச் சந்திச்சு, நந்திராசா அனுப்பின பதிலுத்தரமும்

---

[1] *Pondicherry Records*, (எண்.15, பக்.518) என்ற ஆவணத்தின்படி 1756–லேயே பிரெஞ்சுக்காரர் தமது தூரக்கிழக்கு பெத்திரிகளை மூடிவிட்டார்கள். ஆகவே சயாம் என்பது சிரியம்– என்றிருக்கலாம் என்று டாட்வெல் எழுதுகிறார் (English Vol. XI, P. 8). 1756 இல் மூடிய சயாம் கிடங்கை 1757 இல் மீண்டும் நிறுவ பிரெஞ்சுக் கம்பெனி முயன்றது என்று நாம் கொண்டு, பிள்ளையின் பதிவு சரியாகவே இருக்கக் கூடும் என நாம் ஊகிக்கலாம். சயாம். இந்தோ சீனாவில் தம் ஆதிக்கத்தை நிறுவ 20 ஆம் நூற்றாண்டு வரை பிரெஞ்சுக்காரர் முயன்று வந்துள்ளனர்.

குடுத்து தனக்கு யெழுதி வந்த சேதி யென்று கோவர்ணதோருக்குச் சொன்னது: "யிருபது நாளைக்கு முன்பாக யென்னையும் அழைப்பிச்சு, "உங்கள் பவுன்சை அழைப்பிச்சு ஸ்ரீரங்கத்திலே வைத்துக் (கொள்ளுங்கள்). சீர்மையை (அப்படி நீங்கள்) உங்கள் வசம் பண்ணாவிட்டால் நாங்கள் கோட்டையும் சீர்மையும் விட்டு விடுவோமென்று யெழுதி அனுப்பச் (சொன்னீர்கள்). பின்னை ... நடந்த சங்கதியும், யிப்போ உங்களுக்கும் இங்கிரேசுக்காரருக்கும் யிருக்கிற (அல்ல, லடாயும்) லாபமும் சீமைக்கப்பல் வராமலிருக்கிற சங்கதி முதலானது (களும்) சொல்லி, காகிதம் யெழுதி அனுப்பச் சொன்னபடிக்கி, தங்க(ளது) காகிதமும் குடுத்து, நானும் யெழுத வேண்டிய வயணப்படிக்கிக் காகிதம் யெழுதி அனுப்பிவிச்சுதுக்குப் பதிலுத்தாரமும் வந்தது. பவுன்சுக்கு அயிதர் நாய்க்க னென்கிற சறுதாரையும் அய்யாயிரம் குதிரை, ஆறாயிரம் யேழாயிரம் (சிப்பாய்கள்) யிருபத்தைய்யாயிரம் முப்பதினாயிரம் ஹேமும் (ஸ்தோமும்) கூட்டி அனுப்பினார்கள். யிந்த மட்டுக்கும் (அவை) ஸ்ரீரங்கம் வந்து (சேர்ந்திருக்கும்)". பின்னையும் யெழுதி வந்த சேதிகள் விஸ்தாரமாய்ச் சொ(ன்னார்)... "யெங்கள் ட்டாணாவை நீங்களிருக்கச் சொன்னால் வைக்குறோம்; இல்லாவிட்டால் அழைப்பிச்சுக் கொள்ளுகிறோம்," யென்றும் சொன்னார். அந்தப் பேச்சை அக்கறையில்லாமல் (விட்டுப்போட்டு), "நல்லது, காகிதத்தை பிரான்சு படுத்திக்கொண்டு வந்த பிற்பாடு உத்தாரம் சொல்லுகுறோமென்று வழவழவென்று (துரை) சொல்லி போகச் சொன்னார். வெங்கிட்ட நாராயணப்பன், "யிவர்கள் பேச்சை சத்தியமாய் யெப்படி நம்புகிறது? யிருபது நாளைக்கு முன்னே அழைச்சு காகித மெழுதி அனுப்(பச் சொன்ன வார்த்தை) யிப்போ பொய்யானால், யெப்படி நம்புகிறது?" யென்று சொல்லிக் கொண்டு யிருந்தா ரென்கிற சேதி கேட்ட பேர்கள் யென்னுடனே வந்து சொன்னார்கள்.

இத்தனாள் ராத்திரி கேழ்விப்பட்ட சேதி: ஆனி ஆனபடியினாலே, சந்தாசாயபு மகனும் அல்லி நக்கியும் ரெண்டு பேர்களும் முசே தெலார்ஷுடனே சொல்லி கோவர்ணதோருடனே (பேசி) சீமா மூலம் முசே தெவோ பாரிசுமாயிருக்கிறதைத் தங்களுக்குக் குத்தகை குடுத்தால் சத்தியாய் யிரண்டு லெட்சம் ரூபா குடுக்கிறோ மென்றும், மத்தது கந்தாயப்படிக்குப் பணம் செலுத்தி வைக்குறோமென்றும் (சொன்னார்களாம்). பின்னையும் யென்ன யென்ன வயணமாய்ப் (பேசினார்களோ) தெரியவில்லை. அந்தப்படிக்கி கோவர்ணதோருடனே பேசி முசே தெவோவும், முசே லெனுவார், முசே பொஷேத்து, முசே தெலார்ஷு, முசே கில்லியார், முசே குலேத்துக் கூட சின்னதுரை

வீட்டுக்குக் குத்தகைப் பட்டயம் யெழுதுகிற நொயால் (Noual) நொத்தேரும் யித்தனாள் காலத்தாலே வந்தார்கள். சாயங்காலமும் வந்தார்கள் யென்று சொன்னார்கள்.[1]

***1757 வருசம், ஜூலை மாசம், தேதி 12; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 1; செவ்வாய்வாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போயி முசே லெறி கோவர்ணதோர் மேல்வீட்டின் பேரிலே யிருக்கச்சே போயாசாரம் பண்ணினேன். முசே தெவோ, முசே சோலிமினியாக்கு, முசே சர்பெண்தியர், முசே புறணி (Brenier), யிப்போ மயோர் ஜனராலாயிருக்கிறவன், வகையரா யிருந்தார்கள். அப்போ வடக்கே யிருந்து ரெண்டு கப்பல் யிங்கிரேசுக் கொடி போட்டுக் கொண்டு வந்தவன், சமீபத்திலே (வந்து) பிரான்சுக் கொடி போட்டான். அப்போ கோட்டையின் பேரிலேயும் கொடி போட்டார்கள். அப்பால் கோட்டைக்கு அக்கினி மூலையிலே தூர பீரங்கி வேட்டுக்கு யெட்டாமல் துலை தூரத்திலே நங்கூரம் போட்டு வெள்ளைக்கொடியைப் போட்டான். அப்பால் வெள்ளைக் கொடியை வாங்கிப் போட்டு யிங்கிரேசுக் கொடியைப் போட்டான். ஒரு சுலுப்பு ஒன்று மேல்ப்படி ரெண்டு கப்பலும் (இடையிலிருந்து) தேவனாம்பட்டணத்து வடக்கே ஆலம்புரவி (இருந்து தெற்கில்) மட்டுக்குமோ (அதற்கு) அப்பாலுமோ போக்குவரத் (தாயிருந்தது). குறுக்கும் நெடுக்குமா யோடிக் கொண்டு திரியுறான். யிந்தப்படிக்கி தமாசுகளும் யேகத்தாளிக(ளும்) பண்ணுகிறாப் போலேயும், யிப்படி ... ரெண்டு மூணு நாளாய் நிலையில்லாமல் போக்குவரத்தாயிருந்தவன், யின்றைய தினம் அக்கினி மூலையிலே யிருக்கி(றான். இது) முதலானதுகள் பார்த்து, முசே கோவர்ணதோர் முதலான பேர் பேசிக் கொண்டிருந்ததைப் பார்த்துப் போட்டு நான் பிடவைப் பார்க்குற சாலையிலே வந்தேன்.

***1757 வருசம், ஜூலை மாசம், தேதி 14; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 3; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே வடக்கே யிருந்து ஒரு கப்பல் திின்மார்க்குக் கொடி (Denmark) போட்டு வந்தது. அதை யிங்கிரேசுக் கப்பல் ரெண்டும் தொரத்தி, ஒரு பீரங்கி ஒன்று சுட்டான். அவன் வடக்கே திரும்பிக் கொண்டு ஒடிப்போய் விட்டான். அது தரங்கம்பாடிக் கப்பல் யென்று கோட்டையிலேயும் கொடி போட்டான். துரத்தினதுகள் முதலான விளையாட்டுகளும் மேலே யிருந்த சீனயோர்களும் கடற்கரையிலேயும்

[1] விளங்கிக் கொள்ள முடியாத இந்நீண்ட வாக்கியங்களைப் புரியும்படி மாற்றி அமைக்க நேர்ந்துள்ளது.

வெகு செனங்கள், ரசா சாயபு, அல்லி நக்கி சாயபு கூட தமிஷர் (தமிழர் பலரும்) கூட வந்து வேடிக்கை பார்த்துப் போனார்கள். வடக்கே ஒரு கப்பல் நேத்தைப் பிடிச்சு (வடக்கே கூனிமேட்டில்) லங்கர் போட்டுக் கொண்டு யிருக்குறான். யிங்கிரேசுக் கப்பல் மூன்று தான் சென்னப்பட்டணத்திலே யிருந்தது; ... மத்ததுகள் சுலுப்புகள், கோறபு (grabs) வகையரா யிருந்ததைப் பூடகம் பண்ணியிப்படி அனுப்பிவிச்சார்கள். யிதிலே பயந்து வந்தவாசி அண்டையிலே இறங்கியிருக்கிற (நமது) பவுன்சும் சீரங்கத்திலே பிலத்த பவுன்சாய் கொஞ்ச மிருக்கிறதே அதுவும் (திரும்ப) வரவேணுமென்று யெத்தனம் பண்ணினார்கள். நம்முடைய லகுலுவார் (Le Gloire) கப்பலும் முன்னூத்தன்பது வெள்ளைக்காரருகள் யேத்தி சண்டை சரன்சாமி பண்ணித் தயாராயிருக்கிறது. யின்னம் ஒன்றும் கூட யிருந்தால் யிங்கிரேசுக் கப்பல்களைத் துரத்தி அடிக்கலாம். அது யில்லாததினாலே யிங்கிரேசுக்கார சுலுப்புகள் புஷ்ட்டி யில்லாமல் போனாலும் விலாசமாய்த் திரியுறார்கள். நம்முடைய யிங்ஸ்காருதுகள் (squadron) யிந்த மாதக் கடைசியிலே வரு மென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 15; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 4; சுக்கிரவாரம்*

இத்தனாள் மத்தியானத்துக்கு மேல் மூணு மணிக்குத் தெற்கே நின்ற யிரண்டு யிங்கிரேசுக் கப்பல்களும் பாயெடுத்து ஆலம்பரவித் துரையிலே நின்ற ஒரு இங்கிரேசுக் கப்பல் பிரான்சு நீசான் போட்டுக் கொண்டு வடக்கே ஒடிவருகிறவனைப் பார்த்து, வருகுறவன் (கமாண்டோர் ஆதலாலே) யெதிர் கொண்டு போயி ஒன்பது வேட்டு பீரங்கி ... வேட்டு சுட்டு ஆசாரம் பண்ணின. (கப்பித்தானுடைய கப்பலும் பதிலுக்கு ஒன்பது வேட்டு போட்டது). அப்போ தெற்கே யிருந்து போற கப்பல்க்காரன் ஒசந்து போ(கா) மல் (தூரத்தே போகாமல்) கரை அனிசாய் (ஓரமாய்) வந்தபடியினாலே, கோட்டைக் கொத்தளத்தின் பேரிலே ... (இருந்த) பீரங்கிகளைச் சுட்டார்கள். நம்முடய குலுவார் கப்பலிலேயும் சுட்டார்கள். அது ஒன்றும் யெதிராளிக் கப்பலின் பேரிலே படாமல் யிப்பறந்தானே விழுந்துது. கப்பல்க் காரனுஞ் சுட்டான். அந்த மட்டுலே அவன் வடக்கே போயி அந்த கமாண்டோர் கப்பலையும் அழைச்சுக் கொண்டு, மூணு கப்பலும் யெப்போதையும் போலே தெற்கே அக்கினி மூலையிலே சீனி (நங்கூரம்) போட்டுக் கொண்டு யிருக்கிறார்கள். அப்போ ஊரிலே யிருக்கப்பட்ட செனங்கள் வேடிக்கை பார்க்கப் போனவர்கள் யெண்ணிக்கை யில்லாமலிருந்தது. அந்த செனங்க ளெல்லாம் யிந்த பீரங்கி வெடியைக் கேட்ட மாத்திரத்திலே அவரவர் நடந்த வாக்கிலே கடுக்க(னைக் கயற்றின பேரும்), வீட்டுலே போய் பெண்டுகள் தட்டு,

முட்டுகளை வாங்கிப் பொட்டியிலே போட்டுப் புதைச்ச பேரும், வெளியே போறதுக்கு யெத்தனம் பண்ணின பேரும், சமுத்திரக்கரை ஓரத்திலே யிருக்கப்பட்ட குடிகள் செட்டிகளெல்லாம் மேற்கே வழுதாவூர் வாசற்படித் தெருவிலே வந்து விட்டதாகவும், யிந்தப் படிக்கி ... யிரண்டு நாழிகை தேசகாலம் பட்டணம் அதளகுதளப்பட்டுது. செனங்களிருந்த விடத்திலே யிராமல், அலைந்து போம்பு தீந்தவுடனே (குண்டு தீர்ந்தவுடனே) அவரவர் ஸ்தம்பிதப்பட்டு யிருந்தார்கள். ஆனால் ல குலுவார் கப்பலிலே பீரங்கி சுடுகிறபோதும் கரையிலே சுடுகுறபோதும் பீரங்கி கெடிக்கிறவன் ரெண்டு பேருக்குக் கைபோயி, முகம் பொசுங்கிப் போய் நோவாளிக் கிடங்குக்கு யெடுத்துக் கொண்டு போனதாய் சேதி கேழ்க்கப்பட்டது. ஆனால் யிங்கிரேசுக்காரருடைய அடி யென்ன வென்றால், வடக்கே யிருந்து வந்த கப்பல் பேரிலே வெள்ளைக் கொடி போட்டு வந்தபடியினாலே, அதைத் துரத்திக் கொண்டு போறாப் போலே தாங்கள் போறபடியினாலேயும், அங்கே வருகிற கப்பல் பிரான்சுக் கப்பல் யென்று யிவர்கள் (நினச்சி), ல குலுவார் யென்கிற கப்பல் வெளியே பிறப்படும், அப்பால் (அதைப்) பிடிச்சுக் கொள்ளலாம் யென்கிற யெத்தனம் பண்ணினதின் பேரிலே வந்த சாடையாய் தோணினதை யெழுதி வைத்தேன்.

இத்தனாள் ஸ்ரீரங்கத்திலே (யிருக்கிற) பவுன்சிலே நூறு சொலுதாது(களையும்), யிரநூறு முன்னூறு சிப்பாயிகளையும் அவ்விடத்திலே வைச்சுப்போட்டு, மத்த பவுன்சுகளெல்லாம் பிறப்பட்டு விறுத்தாசலம் வந்து சேர்ந்ததாகவும், அதுலே யிருந்து குவாடுது குதிரைக்காரர் பிறப்பட்டு யின்றைய தினம் வந்து சேர்ந்தார்கள் யென்றும் சொன்னார்கள்.

ஆனால் கங்கிபாடி லக்ஷ்மணச் செட்டியும் வரதப்பச் செட்டியும் முன் சித்திரை மாசம் வையாசி மாசத்திலே அவ்விடத்திலே யிருந்து பாளையம் போச்சுதே, அதுலே சேதத்துக்கு ஒரு அத்தாட்சி வைத்துக் கொண்டு, யெல்லாம் சேதமாய்ப் போச்சு தென்று சொன்னால் தள்ளிக் குடுப்பார்கள் யென்று யோசனை பண்ணினார்கள். தொரையிடத்திலே காறுபாறு அங்கமில்லாத படியினாலேயும் கோன்சேல்க்காரர் அவரவர் சுயகாரியம் பார்த்துக் கொண்டு யிருக்கிறபடியினாலேயும் பட்டணம் அராசிகப் பட்டு கும்பினீர் காரியமும் லொகுசான் பட்டுப்போச்சு தென்று செனங்கள் சொலலிக் கொள்ளுகிறதும் யென் காதிலே விழுந்ததை யெழுதி வைத்தேன்.

தாது வருசம் ஆடி மாசம் முதல் யீசுவர வருசம் ஆனி மாசம் முதல் (தேதி வரை) வீரராகவ செட்டி, லக்ஷமண செட்டி, வரதப்ப செட்டி ஸ்ரீரங்கம் உபய காவேரி தீரம் கோட்டையிலே குத்தகை வாங்கினது

(வருஷம் ஒன்றுக்கு) 4,00,000 சீமையிலே சமாபந்தி பண்ணின(தில் வராமல் போன நிலுவை) 6,30,000 (அல்ல, 63,000 தான்).

நஷ்ட்ட வயணம் :

| | |
|---|---|
| முசிறி அமுறு (ஜீவ மானியம்) | 10,000 |
| தொட்டியம் | 10,000 |
| நாயகநெல்லூர், அய்யலூர் கட்டளை | 4,000 |
| கிஷ்ணராயபுரம் | 6,000 |
| விட்டுக்கட்டி | 10,000 |
| பிக்ஷாண்டார்கோவில் | 5,000 |
| லால்குடி | 3,000 |
| கோயில்சீமை | 15,000 |
| ஆக சமாபந்தி நஷ்ட்டம் | 63,000 |

தானிய விலைவாசி நஷ்ட்டம் :

| | |
|---|---|
| முன் சமாபந்தியில் ரூ 1—க்கு விராகன் போட்டிருந்ததி யிப்போ தானியம் சவுக்கையாய்ப் போயி அதிலே நஷ்ட்டம் வந்தது | 10,000 |
| ஆகமொத்தம் | 73,000 |
| அஞ்சு வருசத்துக்கு சீமையிலே வசூல், விராகன் | 4,90,000 |
| தீவானி குத்தகை | 4,00,000 |
| சிப்பந்தி சுமாரு | 30,000 |
| ஆக விராகன் | 4,30,000 |
| அஞ்சு வருசத்துக்கு ஆதாயம் | 60,000 |

புதுச்சேரியிலிருந்து தண்டு திரிச்சிராப்பள்ளிக்குப் ப்போகையில் கள்ளர் கொள்ளையிட்ட வயணம்:

| | |
|---|---|
| முசிறி சீமையில் | 2,00,000 |
| விட்டுக்கட்டி சீமையில் | 3,00,000 |
| ஆக | 5,00,000 |

முசியே கில்லியார் அவ்விடத்துக்குப் போயி குடிகளுக்கு வாரம் நெல்லு 100க்கு 40 விழுக்காடு குடுக்கச் சொன்னதுக்கு, யிவர்கள் குடுத்த வயணம் :

லால்குடி சீமையில் 100க்கு 30 விழுக்காடு; விட்டுக்கட்டி சீமையில் 100க்கு 20 விழுக்காடு; தொட்டியம் சீமையில் 100க்கு 15 விழுக்காடு ஆக இந்தப்படிக்கு வாரம் குடுக்கப்பட்டது.[1]

மூறு முத்தூர் கட்டனை யிந்த தாலூக்குக் குடிகளும் மகா செனங்களும் பிறப்பட்டுப் போய் யேழு மாத மாச்சுது. யிது வரைக்கும் வந்து சேர்ந்ததில்லை.

*1757 வருசம், சூலை மாசம், தேதி 16; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 5; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோவர்ணதோர் வழுதாவூர் வாசற்படியாலே பிறப்பட்டு குண்டுசாலை கொத்தளங்கள் யெல்லாம் பார்த்துக் கொண்டு ஒன்பது மணிக்கு வில்லியநெல்லூா் வாசற்படியாலே கோட்டைக்கு வந்ததாய்க் கேழ்விப்பட்டபடியினாலே, வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருந்தோம்.

நேத்து யிங்கிலீசுக்காரர் கப்பல் மூணில் ஒன்று ஈசானிய மூலையிலேயும் ரெண்டு அக்கினி மூலையிலேயும் யிருந்துதே, அது மூணும் யேகமாய் யித்தனாள் காலமே தெற்கே அக்கினி மூலையிலே ஒரு கப்பலைக் கண்டு மூணு கப்பலும் பாயெடுத்து அதை துரத்திக் கொண்டு போனதாயும், அஸ்தமனத்திலே கூடலூர் துறை பிடிச்சதாயும் கேழ்க்கப்பட்டதை யெழுதி வைத்தேன்.

*1757 வருசம், சூலை மாசம், தேதி 17; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 6; ஆதிவாரம்*

இத்தனாள் யிங்கிலீசுக்காரர் கப்பல் துறைமுகத்திலே சீனி போட்டதை விட்டுப் பாயெடுத்து மேலாக ஓடிப்போனார்கள் யென்றும், மறுபடி துலவிலே காணுதென்றும் சொன்னார்கள். யிதல்லாமல் யித்தனாள் சூரிய உதையத்திற்குப் பிடவை பார்க்கிற சாலையிலே முசே லெறி கோவர்ணதோர்த்தனம் பண்ணுகிறபோது ஆகாதவன் யென்கிற விருக்ஷத்துக்குக் கிளைகள், கப்புகள், கொழுந்துகள். இலைகள், பூகாய், பழம் யெல்லாம் சித்திரிச்சு யெழுதி (ஒ) காகிதம் ஒட்டி விச்சாப்போலேயும், அதைக் கோயிலுக்குப் பூசைக்கு வந்த வெள்ளைக்காரர்களெல்லாம்

---

[1] இவ்வூர்கள் அனைத்தும் முசிறி, குளித்தலை, திருச்சி ஆகிய பகுதிகளைச் சேர்ந்தவை.

படிச்சுப் பார்த்து முசே லெறியிடம் போய்ச் சொல்லி அந்தக் காகிதத்தைக் கிழிச்சுப் போட்டாப் போலேயும் வெள்ளைக்காரர்கள் சொன்னார்கள்.

இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு முசே புசி அறுமாதிலே யிருந்து விசாகப்பட்டணத்தின் பேரிலே முசே லாசு பவுன்சு கூட்டிக் கொண்டு போய் சண்டை பண்ணின சேதி முன் யெழுதி வந்துதே, அந்தக் கோட்டையை முசே லாசு பிடிச்சுக் கொண்டு முசே லெறி கோவர்ணதோருக்குக் காகிதம் யெழுதி அனுப்பிவிச்சான். அதலே யெழுதி யிருந்தது. விசாகப்பட்டணம் கோட்டையைப் பிடிச்சுக் கொண்டதிலே விசாகப்பட்டணம் கோவர்ணதோர் மேஸ்தர் யிசுமுட்டி (Smith)[1] யென்கிறவனும் ரெண்டு கோன்சேலியேர்களும் யிரநூறு சொலுதாதுகளும் சிறிது ஒப்பிசியாலுமார்கள் கூட அகப்பட்டார்கள் யென்றும், நம்முட பிரான்சுக்காரரிலே ஒருத்தன் சாவு யென்றும், கப்பித்தான், கோன்சேலியேர்கள், சொலுதாதுகள் வகையராகளை முட்டுகள் பணம் காசுகள் வகையிரா கோட்டையிலே யிருந்ததுகளும் பின்னையும் சிறிது வர்த்தகர்களுதும் அவ்விடத்திலே யிங்கிலீசுக்காரருது கப்பலிருந்த படியினாலே அதிலே யேத்தி சென்னப்பட்டணத்துக்கு அனுப்பிவிச்சார்களென்றும் சேதி வந்ததாய் ஒரு வெள்ளைக்காரன் வந்து கபுறு சொன்னான். சீத்தாராம் சோசியர் சொன்னபடி இங்கிலீசுக்காரர்களுக்கு யிறக்கம் காணுகிறதுக்கு யேஷியங்கள் கண்டு வருகிறபடியினாலே மைத்தக் காரியமும் சரிப்படும்.[2]

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 18; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 7; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே நான் கோட்டைக்குப் போயி மோன்சியோர் லெறி கோவர்ணதோர் வகையிராக்கள் தென்னண்டை நெடுஞ்சாலையிலே யிருக்கச்சே, ஆசாரம் பண்ணினேன். நகை முகமாயிருந்தார். விசாகப்பட்டணம் யிங்கிலீசுக்காரருடைய பட்டணத்தை நம்முடைய பவுன்சும் முசே லாசும் பிடிச்சுக் கொண்டு நம்முடைய பிரான்சுக் கொடியைப் போட்டு யிங்கிரேசுக் கப்பித்தான் மேஸ்தர் யிசுமிட்டும் ரெண்டு கோன்சேலியேர்களும் யிறநூறு சொலுதாதுகளையும்

---

[1] இந்த லெவின் ஸ்மித் கவர்னர் அல்ல. அவர் ஒரு வியாபார ஏஜெண்ட் (factor) மட்டுமே. கவர்னராக இருந்தவர் பெர்சிவல். புசி விசாகப்பட்டணத்தைப் பிடித்தது ஜூன் 26இல் நிகழ்ந்தது. பல ஆங்கிலேயர்கள், பிரெஞ்சு ஆளுநர்கள் போன்று பெரிசிவலும் தனது செயல்பாடுகளையும் நினைவுக் குறிப்புகளையும் எழுதியுள்ளார். இந்த பிரெஞ்சு Memoire–கள் இன்னமும் ஆங்கிலத்திலோ தமிழிலோ பெயர்க்கப் படவில்லை என்பது ஒரு பெருங்குறை.

[2] பிள்ளை பிரெஞ்சு வலிமையிலும் வெற்றியிலும் துவக்கதில் இவ்வாறு நம்பிக்கை வைத்திருந்தார். சோசியத்தில் இருந்த நம்பிக்கையின் விளைவு இது.

ஒப்பிசியாலுமார்களையும் பிடிச்சுக் கொண்டு அடைக்கலம் வைத்துக் கொண்ட சேதி நேத்து சாயங்காலம் யெழுதி வந்ததுக்கு வெள்ளைக்காரர் அவரவர் வந்து மொபார்க்குபாதி சொல்லி, நானும் மொபார்க்குபாதி சொன்னேன். நகை முகமாய் யிருந்தார். முசே பெடுத்தல்மீ வந்தார். அவர் உடனே முசே லெறி சந்தோஷமாய் விசாகப்பட்ணடம் ... நம்முடயவர்கள் பத்தே (ஜெயம்) பண்ணின சேதி வந்த காயிதத்தையும் படிச்சுக் காண்பிச்சார். அப்பாலிருவரும் பேசியிருந்து அவர் அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்கள். பிரான்சுக்காரரிலே ஒருத்தன் மாத்திரம் சேதம் மென்றும் யெழுதிவந்தது. யின்னாரென்று விசிதப்படவில்லை. கோட்டையிலே யிருந்த பணம் காசு தட்டு முட்டுகள் சமஸ்தமும் (ஆங்கிலேயர் தமது) கப்பலிலே யேத்தி அனுப்பி விட்டார்கள். யிந்த சேதி தான் யின்றைக்கு வெள்ளைக்காரர்களெல்லாரும் பேசியிருந்தார்கள். அப்பால் முசே லெறி காம்பிராவிலே போனார். நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

முசே பிளாக்கூரு, குண்டூர் பாலிசெட்டி, ஒழுகரை கிராமத்தார்கள், கனகராய முதலி தம்பி தானப்ப முதலியும் அங்கே யிருந்தார்கள். குண்டு கிராமத்தாரும் யிருந்தார்கள். யிங்கிரீசுக்காரர்களுடைய வடக்கே யிருக்கிற விசாகப்பட்டணத்தைப் பிடிச்ச சேதி வந்த சந்தோஷத்துக்குப் பனிரெண்டு மணிக்கு யிருபத்தோரு பீரங்கி சுட்டார்கள்.

ஈசுவர வருசம் ஆனி மாசம் 23 தேதி (ஜூலை 23, 1757) மகாராச ராசஸ்ரீ வசரத்துராய விசய ஆனந்த ரங்கராயர் (அவர்கள்) வில்லியநெல்லூர் பாகூர் சீமை நாட்டார், அப்பு முதலியார், சொக்கம்பட்டு வெங்கிடபதி ரெட்டியார், கிறுமாம்பாக்கம் சருவாரெட்டியார், சிலுகால் (Chilkala) வெங்கிடபதி ரெட்டியார் யிவர்களுக்கு யெழுதிக் கொடுத்த ரெசீது வில்லியநெல்லூர், பாகூர் சீர்மைக்கு, தாது வருசத்துக்கு (1756–57) தாங்கள் யெழுதிக் கொடுத்த ஆதாயச் சம்மதிக்காக யித்தநாள் நம்முடைய சர்க்காரில் ராமய்யன் கொண்டு வந்து செலுத்தினது பூவிராகன் முன்னூறுருக்குக் கடைட் விலைப்படிக்கி பூவிறாகன் நூறுக்கு ரூபா முன்னூத்தன்பத்து நாலாக (விராகன் 100க்கு ரூபாய் 354) கூடின ரூபா ஆயிரத்து அறுபத்து ரெண்டுக்கும் (1862) யிதுவே ரசீதாகக் கட்டிக்கொள்ளவும். (இது) நக்கல்.

ஈசுவர வருசம் ஆடி மாசம் 7 தேதி (ஜூலை 18, 1757) மகாராச ஸ்ரீ வசரத்ராய விசய ஆனந்தரங்கராயர்வர்கள் வில்லியநெல்லூர், பாகூர் நாட்டார்(கள்) அப்பு முதலியார், சொக்கம்பட்டு வெங்கிடபதி ரெட்டியார்,[1]

[1] "கிருமாம்பாக்கம் சருவா ரெட்டி, வில்லியநெல்லூர், பாகூர், நாட்டார் சில்கல வெங்கடபதி ரெட்டி," என்று ஆங்கிலப் பதிப்பில் கூடுதலாக இருவர் பெயருள்ளது.

யிவர்களுக்கு யெழுதிக் குடுத்த ரசீது. தாங்கள் நமக்குத் தரவேண்டிய வில்லியநெல்லூர் பாகூர் ஆதாயச் சம்மதிக்காக யித்த நாள் தாங்கள் வகையரா நம்முடைய ராமய்யர் நம்முடைய சர்க்காரிலே செலுத்தி விச்சது பூவிராகன்[1] 285க்கு, (அதாவது ரொக்கம் ரூபாய் 736–ம், 290–ம்) ஆக ரூபாய் ஆயிரத்து யிருபத்து ஆறு (1,026) செலுத்திவிச்ச(துக்கு) யிதுவே ரசீதாகக் கட்டிக் கொள்ளவும். இதுவுமல்லாமல், வந்தவாசியின் மேலே யிங்கிலீசுக்காரர் பவுன்சுக்கு ஆற்காட்டிலே யிருந்து மத்தத்தாய் ஒட்டகையின் பேரிலே ராய்ச்சூர் பாணம் வந்ததாயும், அதுகிட்ட வந்தவுடனே பாளையத்திலே ஒரு வேட்டு சுட்டவுடனே அந்த ராச்சூர் பாணம் கொண்டு வந்த ஒட்டகையும் ... தாகலானதாயும் யெழுதி (திரும்பி ஓடிவிட்டதாகவும்) வந்ததாய்ச் சேதி கேழ்விப்பட்டேன்.

யிதுக்கு முன் நம்முடவர்கள் யிங்கிரீசுக்காரருடயது பிண்ட முருலங்கையும்,[2] பின்னையொரு ரேவும்[3] பிடிச்சு அங்கே அகப்பட்ட பேரை அப்போதானே மச்சிலி பந்தருக்கு அனுப்பிவிட்டார்கள். யிப்போதான் விசாகப்பட்டணம் போச்சுதே, ஆனபடியினாலே சீதாராம சோசியர் சொன்னபடிக்கு யிங்கிரேசுக்காரர் எல்லாம் யெடுபட்டு பிரான்சுக்காரர் நீசான் யெங்கும் விழும் யென்றும் சொல்லியிருந்தபடிக்கி யேஷியம் கண்டு கொண்டு வருகிறபடியினாலே, யினிமேல் நமக்குச் சொல்லி யிருக்கிறதும் சரிக்கட்டி வருமென்கிறதாய் மனதுக்கு தோணினதை யெழுதி வைத்தேன்...

***1757 வருசம், சூலை மாசம், தேதி 20; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 9; புதவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யிங்கிரேசுக்காரர் பவுன்சு வந்தவாசி அண்டையிலே நம்முடைய பிரான்சுக்காரர் பவுன்சுக்கு ரெண்டு மூணு நாழிகை (சுமார் 5 கி.மீ.) வழியிலே யிறங்கி யிருந்தது வாங்கிப் போய்விட்டார்கள் யென்கிற சேதி நேத்து சாயங்காலம் வந்ததாய்க் கேழ்விப்பட்டதை யின்றைய தினம் தினசரியிலே யெழுதி வைத்தேன்.

***1757 வருசம், சூலை மாசம், தேதி 21; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 10; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே இங்கிலீசுக்காரர் கப்பல் கோட்டைக்கு அக்கினி மூலையிலே ரெண்டு கப்பலும், யீசானிய மூலையிலே ஒரு

---

[1] இது நட்சத்திர விராகன் எனவும் பட்டது.
[2] Bandamurlanka என்ற இவ்வூர் கோதாவரி மாவட்டத்தில் உள்ளதாக ஆங்கிலப் பதிப்பு தெரிவிக்கிறது.
[3] மடபொல்லம் என்ற ஆங்கிலேயர் கிடங்கு.

கப்பலும், போக்குவரத்திலே ரெண்டு சுலுப்பும் ஓடிக்கொண்டு திரிஞ்சுது கூட பாயெடுத்து தேவனாம்பட்டணத்துத் துறையைப் பார்த்தாப்போலே ஓடிப் போகுதென்று போனவன், மறுபடி வருவானோ வரமாட்டானோ வென்று மிப்படியாகச் சொல்லிக் கொண்டார்கள். அப்பால் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 22; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 11; சுக்கிரவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : நானா குமாஸ்தா பலவந்த ராயன் முன் மீர் சாயபை[1] அனுப்பிவிச்சோமே அவனைச் சீக்கிரமாய் அனுப்பச் சொல்லி சாத்துக்கி (க)டைக்கு (Satghar) யிப்பறம் கடப்பைநத்தம் கட்டத்தில் (கடப்பநத்தம் கோட்டையில்) யிறங்கிருக்கிற பதினைய்யாயிரம் குதிரைக்கு சர்தாராய் வந்த பலவந்த ராயன் காகிதம் வந்து தென்று ஆற்காடெல்லாம் வலசை வாங்குறார்களென்றும், கோட்டைக்கு வெகு தூரம் யிருந்த வீடெல்லாம் பிடிச்சு நிரவிப் போடுகிறார்கள் யென்றும், ஆமூர் (ஆம்பூர்), வாணியம்பாடிக்கு மராட்டியர் குதிரைகள் வந்து கொள்ளை யிட்டுக் கொண்டு போறதைத் தொட்டு மமுதல்லி கான் பெண்டுகள் குஞ்சுகள் குழந்தைக ளெல்லாம் சென்னப்பட்டணம், மயிலாப்பூர் போய் சேர்ந்தார்கள் யென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

இத்தனாள் சவதாய (சுவுதாய் தொடர்பாக) நானா சிராயாதற்பிலே (?) யிருந்து யிருபதுனாயிரம் குதிரையுடனே வந்து யிறங்கியிருக்கிற பலவந்த ராயர் தரப்பிலே யிருந்து ஆயிரம் குதிரையுடனே அமிருதராயர் யென்கிறவர் வேலூர் அந்தப் பிராந்தியத்திலே நானூரு குதிரையை வைச்சுப்போட்டு, அறுநூறு குதிரையுடனே ஆற்காட்டுக்குச் சமீபத்திலே வந்தவுடனே, மமுதல்லி கான் வகையிராக்கள் யெதிர் கொண்டு போயி அழைச்சுக் கொண்டு வந்து ஆற்காட்டிலே வைச்சுக் கொண்டிருக்கிறதாகவும், அந்தச் சேதியிங்கே யிருக்கிற வக்கீலுக்கு யெழுதி வந்ததாய் அவன் வந்து சொன்னான். இத்தனாள் யிங்கிரேசுக்கப்பல் பட்டணத்துக்கு யீசானிய மூலையிலேயும் அக்கினி மூலையிலேயும் யிருந்த கப்பல்(கள்)... இத்தனாள் யிவ்விடங்களிலே காணாமல் யெல்லாம் கூடலூர் துறையிலே யிருக்குது.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 24; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 13; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே, யிங்கிலீசுக்காரர் வாங்கிப் போனவர்கள் மறுபடியும் வந்தவாசிக்கு சமீபத்திலே வந்ததாயும், யித்தநாள் யிரநூறு

[1] இவர் பிரெஞ்சு வக்கீலாய் நானா சாகிப்பின் அவையிலிருந்தவர்.

சொலுதாதுகள் ஸ்ரீரங்கத்திலே யிருந்து வந்திருந்தவர்களிலே போனார்களென்றும், உசார்க்கு (உசார்–Hussar) குதிரைக்காரர்கள் ஸ்ரீரங்கத்திலேயிருந்து வந்தவர்களும் நாளையதினம் வந்தவாசிக்குப் போகுதென்றும், ஆலம்புரவிக்கு அன்பது சொலுதாதுகள் போனார்களென்றும் யிதுகளுடனே சிப்பாயிகளும் கூடப் போனார்களென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

தெத்து வாசற்படியிலே போகிறவர்களை(யும்) வார பேர்களை(யும்) கத்தியினாலே சிலுக்கச் சிலுக்க வெட்டுகிறதும், பெண்டுகளை முலையைப் பிடிச்சுக் கீழே தள்ளு தள்ளுகிறதும், சத்தே தலைவிரிச்சான் கூட்டத்தை யெல்லாம் காரியங்கள் கூட நடப்பிவிச்சுப் போடுகிறதும், ரெண்டொருத்தரைக் குடல் சரிய குத்திப் போட்டுக் கிராதகமும் பண்ணினதைப் பிராது பண்ணிக் கொண்டதுக்குக் கூட கேழ்வியில்லாமல் போனால், மத்ததுக்கு யெதுக்கு பிராதுண்டா? ஞாயம் நடக்கப்போறது? யிதிலே பட்டணத்து ஞாயம் அறிந்து கொள்ளவேண்டியது (என்று) செனங்கள் சொல்லிக் கொள்ளுகிறார்களென்று வந்து சொன்னார்கள்.

இத்தனாள் சாயங்காலம் யேழரை மணி வேளைக்கு முசே பெடுத்தல்மீ வேலைக்காரன் ராமய்யப் பிள்ளை பெண்சாதி கருமாந்திரம் பண்ணிக் கொண்டு மேளதாள தீவட்டி ஆடம்பரத்துடனே அசோக சாலையிலிருந்து பல்லக்குகள் குதிரைகள் வகையராவுடனே சம்பிரமமாய் வரச்சே, வடக்கே சென்னப்பட்டணத்து வாசற்படி சமீபத்திலே அகந்தைக்கு (அகழி, ஓடை) வடவண்டை சந்தினோர் கார்க்குற மட்டுக்கும் வரந்தனிலும் சும்மாயிருந்து, அப்பால் அவ்விடத்துக்கு வருகிற ஒப்பிசியால் பேர் விளங்கன் சிப்பாயிகள் பதினைஞ்சு பேரை வைத்து துப்பாக்கிப் பிடிங்கினாலே வருகிற பேர்களை யெல்லாம் தெரத்தித் தெரத்தி அடிக்கச் சொல்லி யெறக்கவே (ஏற்கெனவே?) திட்டம் பண்ணி வச்சிருந்தபடிக்கி, சம்பிரமக்காரர்கள் வந்து நுழைந்தவுடனே முன் சொல்லப்பட்ட சிப்பாயிகள் அடிக்கத் துவக்கினார்கள். வந்தவர் குதிரைகள் பல்லக்குகள் மேளக்காரர்கள் தீவட்டிகள் யீட்டிக்கழி நட்டுமுட்டு நாடகசாலை வகையிராக்கள் பட்ட அடிகளிலே சின்னா பின்னமாய் ஓடினார்கள். அப்பால் அங்கே பெரியதனம் பண்ணிக் கொண்டு வந்த வினாயகனும் நயினாரும் அவர்களை யெல்லாம் மறுபடி சேத்து பிறகே வரச் சொல்லி, யிவர்கள் முன்னே நுழைந்தார்கள். ராமய்யப் பிள்ளை தம்பி கூட வந்தவர்களை முன்னே சில்லரைக்காரர்களுக்கு அப்படிப்பட்ட அடி கதாசித்தாய் (?) சிறிது பேர்களுக்கு பட்டும் படாமலும் யிருந்தது. யிவர்களுக்கு ஓடக்கூடாததினாலேயும் யேன் தள்ளுகிறீர்கள்?

ஈசானிய மூலை என்பது வடகிழக்கு; அக்கினி மூலை என்பது தென் கிழக்கு.

அடிக்குறீர்கள் யென்று கேழ்க்கப் போனதைத் தொட்டு துப்பாக்கி புடங்கடி வரிசையாய்ப் பட்டு ஓடினார்கள். அதன் பேரிலே .... (கிழிந்து போயிருக்கிறது)

அப்பால் வினாயகன் மாத்திரம் முன்பட்ட அடி பொறாமல் பின்னையும் வந்து, மறுபடியும் வேலைக்காரனை வெளியிலே யிருந்தவாக்கிலே அழைப்பிச்சுக் கொண்டு நூறு ரூபாய் குடுக்கிறேனென்று ஒப்பிசியாலுடனே பேசிவித்த பிறகு, வினாகனை வரச் சொல்லி, "யிப்படி ஆடம்பரமாய் ராத்திரியிலே வந்தாலெப்படி? உங்களுடனே சத்துருக்கள் கூட வந்தால் யெப்படி? மோசம் வரும் ஆனபடியினாலே யாங்காட்டும் நான் துரத்தி அடிச்ச தென்று சொல்லி, அந்த ரூபாயைக் கையிலே சுத்திக்கொண்டு, உள்ளே போகச் சொல்லி உத்தாரங் குடுத்தான். அதன்பேரிலே மூலைக்கு மூலை ஓடிப்போன வனெல்லாம் பெருமாள் கோயில் வந்து சேர்ந்து மறுபடி தீவட்டிகளைக் கொளுத்திக் கொண்டு மேளதாளத்துடனே பிறப்பட்டு வீட்டைவந்து சேர்ந்(தார்கள்). பிறத்துக்கு சீவமா(?)[1] யென்று தலையைத் தடவிக் கொண்டுயிருந்தார்கள். அதன் பேரிலே முசே பெடுத்தல்மீ யுடனே சொல்லி, முசே லெறிக்குச் சொல்லி, அதன் பிற்பாடு முசே லெறி ஒடுதி ஒன்று கொண்டு போய்க் குடுத்தார்கள். காலத்தாலே யிவர்கள் வெளியே போகச்சே முசே பெடுத்தல்மீ ஒடுதி ஒன்று குடுத்தான். போனதும் வந்ததும் அதன் பேரிலே (தான்) காசுக் காசைப்பட்டு பிரபுவினுடைய விசாரணையைப் (விசாரணை இல்லாததைப்) பார்த்துக் கொண்டு அடிச்சு, ரூபாயை வாங்கிப் போக விட்(டார்கள்).

நானும் யிந்தப் பட்டணத்துக்கு வந்து முப்பத்து யெட்டு வருஷமாச்சுது. இந்த வருஷத்துக்கு முன்னே முசே துப்பிளேயிச்சு தொரைத்தனத்திலே நடந்த கலகத்தைக் காட்டிலும் யிது பெரிதல்லவே. அதுக்கு இது ஆயிரம் பங்கு வித்தியாசமுண்டு. அந்த நாளையிலே நானும் கூட அமுல் பண்ணினே(ன்)... அப்படிப்பட்ட நாளையிலே கூட யின்றைய தினம் நடந்தாப் போலே நடந்ததில்லை. யிந்த நாளையிலே அவனவன் வீட்டிலே யிருக்கிற பெண்டுகளை யிழுத்துப் போகாமல் நடக்குறது பாக்கி ஒன்றே அல்லாமல், மத்த சோராவாரி யெல்லாம் நடந்தேறிப் போச்சுது அவனவன் வீட்டிலே பூந்து மரமட்டுகள் (மட்டைகள்), குதிரைகளெருது, பகவுகள், கன்றுக் குட்டி, வகையிரா வேணுமென்றதுகளை வீட்டுக்காரனைக் கேளாமல் சேவுகன் வாரதும் பலவந்தமாயி பிடிச்சுப் போறதும், வெள்ளைக்காரர்கள் வந்து பிடிச்சுப் போற வஸ்துவை யெடுத்துப் போறதும், யேனென்று கேட்டவுடனே கூலி ஆளுகளை விட்டு யெடுத்துப் போறதும், யேனென்று கேட்டதுக்கு

[1] புகார் சொல்லப்போகிறோம் என்று ஆங்கிலத்தில் உள்ளது.

அடிக்கிறது (தும்) அடிக்க வாரதும் யிப்படிப்பட்ட அனியாயம் பட்டணத்திலே நடக்கிறதுகளை யெத்தனை யென்று யெழுதப் போறேன்? சின்ன துரை சாவடி ஞாயம் தீர்க்குற புதுமைகளும், அவர் விசாரணை பண்(ணு)கிற) புதுமைகளும் (200 அல்லது 300) அடிக்குற அடிகளும் ... (எழுதி முடியாது). முன் மரியாதை ராமன் கதை(யில்) அந்த நாளில் (நடந்த) விபரீதம் யென்னமோ, அதுக்கு முசே பெடுத்தல்மீ... யிந்தக் காலத்துக்கு யேற்பட்டார்.

முன் பட்டணம் ஏறச்சே முசே லெனுவார் குவர்ணதோரும் முசே துலோரம் சின்னதுரையுமாய் (இருந்து) காடு பட்டணமாச்சுது. தாரித்தியம் போய் அயிஸ்வரியம் பட்டணத்திலே பிரவேசிச்சது. யிப்போது அது விபரீதமா(கி), அனித்தியம் (அநியாயம்?) பிரகாசிக்கிறபோது யென்ன சின்னம் நடக்க வேணுமோ அது நடக்குது. பெகு சனங்கள் யென்னேரம் சொல்லிக் கொள்ளுகிற அராசிகத்தைச் சுருக்கமாய் நாலு வரியிலே யெழுதி விச்சு வைத்தேன். யிப்போ நடக்குற புதுமைகள் யிங்கே மாத்திரமா வென்றால், ராச்சியமெல்லாம் யிப்படி நடக்குறபடியினாலே யிவ்விடத்திலேயும் நடக்குறது அதிசயமல்ல. யிப்படி அராசகம் கண்டல்லோ யிப்போ அதிகாரியாயிருக்கிறது துலுக்க பாதுஷா அழிஞ்சு கற்னாடக ராசா வுண்டாக வேணு மென்ற படியினாலே அதுக் கடுத்த சின்ன மெல்லாம் நடக்குது. யிதை விந்தையாய் யெண்ணத் தேவையில்லை. சீதாராம சோசியர் முன் குரோதன வருசத்திலே (1745–46) சொன்னபடிக்கி நடக்கிறபடியினாலே ஒருத்தர் பேரிலேயும் குத்தம் சொல்லக் கவையில்லை. காலம் பண்ணி விக்கிறதென்று விவேகிகள் யெண்ணிக் கொள்ளுவார்கள்

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 26; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 15; செவ்வாய்வாரம்*

இங்கிரேசுக்காரர் பவுன்சு வாங்கினபோது காஞ்சிபுரம் போயி சேந்ததாய்ச் சொன்னார்கள்.

### *1757 வருசம், சூலை மாசம், தேதி 27; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 16; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே வாழைப் பந்தலில் மறுபடி அய்யண்ண சாஸ்திரி தோணரம் வைச்சானென்று இங்கிரேசுக்காரர் ட்டணா வாங்கிப் போனதாயும், அதன் பேரிலே அரும்புலூர் தாலூக்கு, சாலமார்க்கம்

---

[1] அது சமயம் பெடுத்தல்மீ நம்பிள்ளையின் ஆதரவாகக் கவுன்சிலில் இருந்தாலும். கொதேக்குப் பின்னும் இப் பொழுதும் அவர் புரிந்த ஊழல்களையும் அநீதிகளையும் பிள்ளை விவரிக்கத் தவறவில்லை.

தாலூக்கிலே யிருந்த யிங்கிரேசுக்காரர் மனுஷர் வாங்கிப் போனதாயும், அய்யண்ண சாஸ்திரி தோரணம் வைக்கப் போறாரென்றும் சேதி வந்ததாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.[1] மத்துப்படி ஆலம்புரவிக்குச் சிறிது சொலுதாதுகளும் சிப்பாயிகளும் போனார்கள். வந்தவாசி அண்டையிலே யிறங்கியிருக்கிற நம்முட அறமாதுக்கு சொலுதாதுகளும் சிப்பாயிகளும் போனார்கள்.

*1757 வருசம், சூலை மாசம், தேதி 28; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 17; குருவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : ஏழெட்டு நாளாய் சாத்துக்கடையிலே வந்து யிறங்கி யிருக்கிற பலவந்தராயன் குமாஸ்தா அமிர்த ராயனென்கிறவன், வேலூருக்கு முன்னூறு நானூறு குதிரையுடனே வந்தான்; மிறுத்தி சல்லி கான் மனுஷரை அனுப்பி அழைப்பிச்சு விருந்து பண்ணிவிச்சு சவுதாய்ப் பேச்சுக்கு மார்க்கம் பேசுகுறான்; ஆற்காட்டுக்கு மமுதல்லி கானண்டைக்கு வருவானென்று ஆற்காட்டிலே விடுதி அமத்திவிச்சு தயாராய்க் காத்துக் கொண்டிருக்கிறானென்றும், மமுதல்லி கான் குஞ்சு குழந்தைகளைச் சென்னபட்டணம் மயிலாப்பூர் போயி சேர்ந்த படியினாலே, குடிகள் வர்த்தகாள் வகையிரா வலசை வாங்கிப் போனார்களென்றும் சொன்னார்கள். மராட்டியர் குதிரைகள் வருகிறபடியினாலே யென்னமா யிருக்குமோ? அவரவர் சாகா பார்த்துக் கொண்டு போகச் சொல்லி தமுக்குப் போடுவிச்சாதாயும் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் துறைக்கு நேராய் யிரண்டு இங்கிரேசுக் கப்பல் காணுதென்று சொன்னார்கள். (மேலும்) கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் : யிங்கிரேசுக்காரருது (இரண்டு) மனுவார்க் கப்பல் சண்டை முஸ்திப்புடனே புறப்பட்டு, கப்பல் காலியா (?) யெல்லாம் முறிஞ்சு ரொம்ப வேசடைப்பட்டு பொம்பாய் வந்து சேர்ந்ததாயும், அப்படி காலியா முறிஞ்சு வந்தது சண்டைப்பட்டு முறிஞ்சுது (அல்லது) காத்துனாலே முறிஞ்சுதென்று தெரியாது யென்றும், பொம்பாயி லிருந்து மயேயிக்கு சேதி வந்ததாயும், அங்கே யிருந்து யிவ்வடத்துக்குச் சேதி வந்ததாயும் வெள்ளைக்காரர் சொல்லிக் கொண்டதை யெழுதி வைத்தேன்.

*1757 வருசம், சூலை மாசம், தேதி 31; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 20; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோவர்ணதோர் சீர்மைக்

[1] வாழப்பந்தல் ஆற்காடு வட்டத்திலும், அரும்பலூர், சாலவாக்கம் ஆகியன மதுராந்தகம் வட்டத்திலும் பிரிட்டிஷ் ஆட்சியின்போது இருந்தன.

காகிதம் நேத்தைக்கு வந்ததில் ஒரு காகிதத்தைப் படிச்சு கோன்சேலியேருக்குக் காண்பிச்சு வைத்தார். யெல்லாரும் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அதிலே முசியே துப்பிளேயிக்சு சேதி நேத்து முசே பெடுத்தல்மீக்கு வந்தக் காகிதம் அதிலே யெழுதி யிருந்த படிக்கி யெழுதி யிருந்தது மல்லாமல், சீர்மையிலே யிங்கிரேசுக்காரர்களுக்கும் பிரான்சுக் காரர்களுக்கும் சண்டைகள் நடக்குறதிலே பிரான்சுக்காரர்கள் செயமும் யிங்கிரேசுக்காரர்கள் அபசெயமும் யெழுதியிருந்தது. இது முதலான சேதி படித்துப் பார்த்து, அப்பால் அரை நாழிகை நேரம் பேசியிருந்து, முசே லெறியும் முசே பெடுத்தல்மீயும் ரகசியம் பேசுகிறதற்காகக் காம்பிராவிலே போனார்கள். மத்த பேர்களெல்லாரும் நானும் கூட யிறங்கி அவரவர் வீட்டே அவரவர் போனார்கள். நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் ராத்திரி யிங்கிரேசுக் கப்பல் ரெண்டும் ஒரு சுலுப்பும் யேழு மணிக்கு துரைக்கு சமீபத்திலே வந்தவுடனே கோவர்ணதோரும் மத்துமுள்ள பேர்களும் கடற்கரைக் கொத்தளங்க(ளிலெல்லாம்) மனுஷர்களை யேத்தி, பீறங்கிகளை யெல்லாம் தயாரு பண்ணி, கப்பலையும் தயாறு பண்ணி, கொத்தளங்கள் பேரிலே கொடி மரத்தின் பேரிலே மத்தாப்புகளை வைத்து ஊரிலேவுண்டான வெள்ளைக்காரர்களை யெல்லாம் வரச் சொல்லி தம்பூறு அடிச்சு, வெள்ளைக்காரர்களைச் சேர்த்து தயாராய் இருந்தார்கள். யிங்கிரேசுக் கப்பல் கப்பலுக்குக் கிட்ட வந்ததுக்கு கப்பல்க்காரன் ஒரு பீறங்கி குண்டு போட்டுச் சுட்டான். அந்த மட்டுக்கும் குண்டுக்கு யெட்டாமல் போய் யீசானிய மூலையிலே சீனி போட்டான்.

# ஆகஸ்ட் 1757

*1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 1; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 21; சோமவாரம்*

இத்தனாள் சீமையிலே யிருந்து முசே ரீஷு (le Riche) யெனக்கொரு காகிதமும் முசே பெடுத்தல்மீக்கு ஒரு காகிதமும் யிப்படி யனுப்பினார். அதிலே முசே துப்பிளேயிக்சு காரியம் ஒன்றும் தீர்ந்ததில்லை, முன் கூட்ட நாட்டமுமில்லை, வீட்டுடனே யிருக்கிறாரென்றும், மதாம் துப்பிளேயிக்சு வெகு வியாதியுடனே யிருக்கிறாள், அவள் குமாரத்திக்குக் கலியாணமில்லை யென்றும், பிரான்சுக்காரருடைய சண்டை செயமாயிருக்கிறது, இங்கிரேசுக்காரருக்கு அபசெயமாயிருக்குது யென்கிற சேதி(யும்) யெழுதி யிருந்தது. யிதுவே யல்லாமல் வேறே ஒரு சேதியும் யெழுதி வரயில்லை யென்றும், கப்பல்கள் நொவெம்பர் மாசம் மட்டுக்கும் பிறப்பட வில்லை என்றும் யெழுதி வந்தது யென்று (துரையுடனே சொன்னேன். அப்பால்) பட்டணத்திலே நடக்கிற அனியாயங்களும் சொல்லி, சுவாமி எப்போது யிதை விலக்குவாரோ தெரியா தென்று சொன்னதுக்கு ஆவணி பிறட்டாசி மாசத்தையிலே விலக்கி கப்பலுகளும் வந்து பட்டணத்துக்கு சுபமாய் நடக்குமென்று சொல்லிப் போட்டு அனுப்பி விச்சுக்கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

*1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 2; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 22; செவ்வாய்*

இத்தனாள் நானாவினுடைய குதிரைகளிலே அமுர்தராயன் பிறகே ஆற்காட்டுக்கு வந்த ஆயிரம் குதிரைகளிலே அறநூறு எழுநூறு குதிரைகள் ஆம்பூர், வாணியம்பாடி, திருப்பத்தூர், விரிஞ்சுபுரம் அத்துக்கு வந்து கொள்ளை யிடுகுற சேதி மீர் இனாயத்துல்லாவுக்கு யெழுதி வந்ததென்று கபுறு கேழ்விப்பட்டேன்.

*1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 3; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 23; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணிக்கி கோட்டைக்கிப் போயி முசே லெறி கோவர்ணதோர் கொவர்ணமா மேலே தென்னண்டை பாரிசம் தாவாரம் நெடுஞ்சாலையிலே யிருக்கச்சே அவருடனே கூட முசே கில்லியார், முசே பிறணியேர், முசே சர்பெந்தியேர், முசே சொல்மினியாக்கு பின்னையும் நாலஞ்சு ஒப்பிசியால் மார்களும் யிருந்தார்கள். அப்போ

நான் மேல் வீட்டின் பேரிலே போய் கோவர்ணதோருக்கு ஆசாரம் பண்ணினேன். மைத்த பேருக்கும் ஆசாரம் பண்ணினேன். கோவர்ணதோர் உத்துப் பார்த்தார். மைத்த பேரெல்லாம் தலையை வளைத்து ஆசாரம் பண்ணினார்கள். ரெண்டு மூணு பேர் தொப்பி கழட்டினார்கள்.

யிப்படி யிருக்கச்சே யிங்கிரேசுக் கப்பல்(கள்) துறையிலே யிருக்கிறதிலே ஒரு கப்பலிலே யிருந்து ஒரு கோவை (கோவா) மிஸ்திசு அல்லது புடுத்திக்கீசுக் காரன் கிலோசோ[1], பீறங்கி சுடுகிறவனோ தெரியாது, நேத்து ராத்திரி கப்பலிலே யிருந்து விழுந்து நீஞ்சிக் கொண்டு கரையிலே வந்து சேர்ந்தவுடனே, கடற்கரையிலே சென்தினோர் அழைத்து வந்து கோட்டை வாசற்படியிலே ஒப்பிச்சான். வாசற்படி குவாடுது (guard–காவல்) ஒப்பிசியால் கொப்பிறாலை (Corporal) கூடக் கூட்டி மேல்வீட்டின் பேரிலே கோவர்ணதோரண்டையிலே கூட்டி வந்து விட்டவுடனே, கோவர்ணதோரும் அங்கே யிருந்த பேர்களும் யிவனை யிந்த யிங்கிரேசுக் கப்பல்காரர்கள் பூறுவோத்திரம் யென்ன வென்று கேட்டதுக்கு, தானேறி யிருக்கும் கப்பலிலே நூத்தன்பது பேர் கிளாசிகள், மிஸ்திசுகள், சட்டைக்காரர், யிங்கிரேசுக்காரர் பத்துப்பேர் பிரான்சுக்காரர் கூடலூரிலே சண்டைக் காவலிலே (போர்க் கைதிகளாய்) யிருக்கிறார்களே அதிலே பிடிச்சு யேத்தினார்கள். யிந்தப்படிக்குத் தானே பிள்ளை ஒரு கப்பலிலேயும் யிருக்குறது. ... ஆனால் சண்டைக் கப்பலிலே யென்ன சரன்சாமி குண்டு, தீக்குடுக்கைகள் வகையிரா சாமான்கள் யிருக்குமோ அதுக ளெல்லாம் தாஷ்சியில்லாமல் யேத்தியிருக்குறது. கொம்மாந்தாம் கப்ப(லில்) மாத்திரம் பின்னையும் யிருபது முப்பது வெள்ளைக்காரர்கள் அதனமாய் யேத்தியிருக்குது. முன் பதினைஞ்சு யிருபது நாளைக்கு முன்னே வந்த போதும் யிந்தக் கப்பலைப் பிடிச்சுப் போறது மல்லாமல் விட்டால் கொளுத்திப் போட்டுப் போறதென்று வந்தார்கள். யிது சூலை மாசம் 31 தேதிக் குள்ளாக கொளுத்துகிற தாகிலும் பிடிக்கிறதாகிலும் கெட்டியாய் நடத்துகிறே னென்று சென்னப்பட்டணம் கோவர்ணதோருடனே பந்தயம் போட்டுக் கொண்டு வந்தார்கள். போன மாசம் போயி யிந்த அகொஸ்து மாசம் பிறந்து மூணு நாளாச்சுதே, யினிமே லென்ன யோசனை பண்ணுவானோ தெரியாது—யென்று, யிது முதலான சேதி கோவர்ணதோர் வகையராக்களுடனே சொன்னான்.

அதுக்கு கோவர்ணதோர் சொன்னது, "யிவன் புளுகன்" யென்று உத்திரம் சொல்லி ஒரு கொற்பராலை யிவன் பிறகே திரியச் (காவல் காக்கச்) சொல்லி அனுப்பிவிட்டார்கள். இஸ்பத்தாலிலே சாப்பாடுகள் போட்டு அங்கே வரச் (இருக்கச்) சொல்லி அனுப்பிவிட்டார்கள்.

---

[1] mestice or lascar (கலாசி)

யிப்படி யிவனுடனே பேசிக் கொண்டிருக்கச்சே தானே கோன்சேல் கூடத் தக்கதாக முசே பெடுத்தல்மீ, முசே தெவோ வகையிரா முசே புலோ கூட கோன்சேலியேர்கள் யெல்லாரும் வந்தார்கள். அப்போ கோன்சேல் வீட்டிலே கோவர்ணதோர் கூடப் போனார். முசே தெவோ வந்தவுடனே ரெண்டு காகிதம் கொண்டு வந்து கோவர்ணதோர் கையிலே குடுத்தான். அதைப் படிச்சானவுடனே முசே தெவோ என்னைப் பார்த்து யென்னமோ சொன்னான். அந்த சாடைப் பார்த்தால், அந்தக் காகிதம் குடுத்தது சீமைகளுடனே சேர்ந்த சம்மதி போலே கண்டுது. அப்பால் கோன்சேலுக்கு நுழைந்தவுடனே கந்தப்பன் யிருந்து கொண்டு நேத்து முசே புசி அண்டையிலிருந்து காகிதங்கள் வந்தது நிமித்தியம் கோன்சேல் கூட்டினார்கள் யென்று சொல்லி, முசே புசி விசாகப் பட்டணம் துறையிலே முப்பது ஆயிரம் பவுன்கடனே யிறங்கி யிருக்கிறானாம், அதிலே யிருந்த கோன்சேல்காரனும் மேஸ்தர் பரசுவேலும் (Mr. Perceval) விசாகப்பட்டணம் கப்பித்தானாயிருந்தவனும் அவர்கள் சண்டையிலே அகப்பட்டவர்கள் சாதி வழக்கப்படிக்கி கத்தியெடுக்கிறது (இல்லை). ... அழைத்தனுப்பிவித்த[1] (போது) வாறோமென்று யெழுதுகிற வாடிக்கைப் படிக்கி ஒடம்படிக்கை யெழுதிக் குடுத்துப் போட்டுப் போனார்களென்றும் சொலுதாதுகளை மாத்திரம் காவல் வைத்திருக்குது யென்றும், மேஸ்தர் கிளேவிசு இஸ்காதுருடனே வருகுறானென்றும் கபுறாயிருக்குதென்றும் வந்த அனுக்காறுகள் சொன்னார்களென்றும் கந்தன் சொன்ன சேதியைக் கேட்டுப் போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கி வந்தேன். பத்து மணிக்கு கோன்சேல் கலைஞ்சு முசே பெடுத்தல்மீ வீட்டுக்கு வந்தான் (போனான்). காரியம் சுவரூபம் தெரியாது.

***1757 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 4; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 24; குருவாரம்***

இத்தனாள் முன் பவ வருசம் (1755) தை மாசம் கோபால கிஷண செட்டி, சுங்கு சேஷாசல செட்டி, கோடவர்த்தி வெங்கிடாசல செட்டி வகையிரா புடுத்திக்கிசுக் கார சலோமா (சாலமன்) வகையிரா ரெண்டு பேர் கையிலே இங்கிரேசுச் சட்டம் முசினீர்[2] சகலாத்து சிப்பம் பதினாயிரத்துச் சிலுவானம் ரூபாய்க்கு வாங்கி(னார்கள்). தவணைப் படிக்கி அவர்கள் ஆறு மாசத்திலே குடுக்க யில்லாவிட்டால் நான் குடுக்க

[1] வெள்ளைக்காரப் போர்க் கைதிகள் மட்டும் தாங்கள் இனிமேல் இக்குறிப்பிட்ட நாட்டுக் கெதிராக இனி ஆயுத மெடுப்பதில்லை என்று ஒரு வழக்கமான உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்ட பின் போக அனுமதிக்கப்பட்டனர். சுதேசிச் சிப்பாய்களோ கைதிகளாகச் சிறையில் அடைக்கப்பட்டனர். வெள்ளைக்கார சொல்தாதுகளை (soldiers) இரு தரப்பாரும் பரஸ்பரம் பரிவர்த்தனை செய்து கொள்ளும் வழக்கமும் உண்டு.

[2] முசினீசு ஒருவகை வெளிநாட்டுத் துணி.

சாமீன் எழுதிக் குடுத்திருந்த சம்மதிக்கி பாக்கி(க்கு ஒரு துபாசியை அனுப்பினார்கள்). அவனுக்கு அன்னூத் தெண்பத்தஞ்சு (ரூ.585) ரூபா குடுக்க வேண்டியிருந்ததை, மேல்ப்படி துபாசி, பேர் விளங்கன், பிறகே நம்முட சராபு (shroff) மேலுகிரி செட்டி, ராயப்பன் வசம் அன்னுத்தெண்பத்தஞ்சு ரூபாயும் குடுத்தனுப்ப, அவன் ரசீது அனுப்பி, முன் குடுத்த ரசீதுகளும் யிந்த ரசீதும் நாளைக் காலத்தாலே கொண்டு வந்தால் உங்கள் அசல் சீட்டுக் குடுத்து விடுகுறோனென்று சொன்னா னென்று ரெசீது கொண்டு வந்து குடுத்து சேதியும் சொன்னான்.

***1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 7; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 27; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : நானா வக்கீலாகிய அமிர்த ராயன் ஆயிரம் குதிரையுடனே ஆற்காட்டிலே மமுதல்லி கான ண்டையிலே வந்திருக்கிறவனுக்கும் மமுதல்லி கானுக்கும் ஒப்பு உடம்படிக்கை நடந்து யெட்டு லட்சம் ரூபாயாய்த் தீந்து அஞ்சு லட்சம் ரூபாய் சீர்மையின் பேரிலே தனகாவும் (அடமானமும்) யிந்தப் படிக்கி மூணு லட்சம் ரூபாய் கில்லேதாரர் பேரிலே தனகாவும் யிந்தப்படிக்கி ஒடம்படிக்கை பண்ணிக் கொண்டு, சிறிது ரொக்கத்திலே குடுக்கிறதுக்கு சென்னப்பட்டணத்திலே போயி அனுப்புகிறோமென்று சமாதானத்தின் பேரிலே அமிர்த ராயனை அனுப்பிவிச்சுக் கொண்டு மமுதல்லி கான் பிறப்பட்டு காஞ்சீபுரம் போயி சென்னப்பட்டணத்துக்குப் போனதாயும் யிந்தப்படி உத்தக்(?) கபுறு வந்ததை யெழுதி வைத்தேன்.

ஆனால் மமுதல்லி கான் யிந்தப்படி ஒடம்படிக்கை பண்ணிக் கொண்டு போன சாடை பார்த்தால், நானா குதிரைகள் பதினய்யாயிரம் சுவார் மட்டுக்கும் சாத்துக்கடை துர்க்கத்தின் பேரிலே வந்திருக்குதென்றும், சமீபத்திலே ஆயிரம் குதிரையுடனே அமிர்த ராயன் வந்திருக்கிறதைத் தொட்டும், பிரான்சுக்காரருக்கும் யிங்கிரேசுக்காரருக்குஞ் சண்டை நேந்து கொண்டு பிரான்சுக்காரர் பவுன்சு சமீபத்திலே வந்திருக்கிறதைத் தொட்டும் பாக்கு வெட்டியிலே அகப்பட்ட பாக்கு போலே யிருக்கிற வேளை அறிஞ்சு, யிந்த வேளையிலே அவர்களை பகைச்சுக் கொண்டோ மானால், தன் பேச்சுக்கு மோசம் வருமென்று யோசனை பண்ணி, முன்னே தானே பெண்டுகளைச் சென்னப்பட்டணம் மயிலாப்பூருக்கு அனுப்பிவிட்டாப் போலே ஆச்சுதே, மனது வாரதுக்கு யிந்த யெடுப்பாடும் யெடுத்து ஒரு உடம்படிக்கை யென்று தீத்துக் கொண்டு தப்பிப் போன சாடையாய்த் தோத்துதே அல்லாமல் மனப்பூர்வமாய்த் தீத்துக் கொண்ட சாடையாய்க் காணயில்லை.

இத்தனாள் சாயங்காலம் முசே ஒம்மோ குதிரை சுவார்களுடனே பட்டணத்துக்குள்ளே வந்ததாய் சேதி கேழ்க்கப்பட்டோம்.

*1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 9; ஈசுவர வருசம், ஆடி மாசம், தேதி 29; செவ்வாய்*

இத்தனாள் நேத்து சரீரம் சுவஸ்தமில்லாமல் லங்கணம் போட்டு யிருந்து விட்டேன். பத்தியம் பண்ணினபடியினாலே காலமே வெளியே போறதுக்கு ஆயாசமாயிருந்த படியினாலே வெளியே போகயில்லை. முன் முசே துப்பிளேயிக்சு வினுடைய அடு(டி)மையாயிருந்த யின்னியாசி (இன்னாசி) யென்கிற பறப்பயல், அவர் சீமைக்குப் போகச்சே யிந்த சட்டைக்கார யின்னியாசி யிவ்விடத்திலே யிருந்த படியினாலே, அவன் உள்ளடியிலே (இரகசியமாக) யிங்கிரேசுக்காரருக்குக் காகிதம் மத்தது யெழுதிக் கொண்டு வந்(தான்). யிப்பால் பிரான்சுக்காரர் தண்டு வந்தவாசியின் பேரிலே போயிருந்த விடத்திலே அங்கே போயிருந்து, அவ்விடத்து சேதி யிங்கிரேசுக்காரருக்கு யெழுதுகிறதும் சொலுதாதுகளைக் கலைச்சு யெதிரி தண்டுலே கொண்டு போயி விட்டுவிடுகுறதும் யிப்படி நடந்தவிடத்திலே, ஒரு நாளவன் யெழுதின காகிதம் அகப்பட்டு அவனையும் பிடிச்சு யிவ்விடத்திலே அனுப்பிவிச்சதுக்கு காலமே கோன்சேல் கூடி சாயங்காலம் அவனைத் தூக்கிப் போட்டார்கள்.

*1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 13; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 1; சனிவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி, சவா பாசி ராயனுடைய பவுன்சு சருதார் பலவந்த ராயன் கேட்டதன் பேரிலே சாத்துக்கடை, மூளவாளம், கோளாளம் யிந்த வட்டங்களிலே பதினய்யாயிரம் குதிரையுடனே வந்து யிருக்கிறான். அவன் உத்தாரப்படிக்கி அன்னூறு குதிரையுடனே அமுர்த ராயனென்கிறவன் ஆற்காட்டுக்கு வந்திருந்(தானாம்). அவனை அழைத்துக் கொண்டு மமுதல்லி கான் சென்னபட்டணம் போனானென்று யேழெட்டு நாளைக்கு முன்பாக கேழ்விப்பட்டிருந்(தேன்). யிப்போ கேழ்விப்பட்ட தென்னவென்றால், சென்னபட்டணத்துக்குப் போனவிடத்திலே மேஸ்தர் பிக்கட்டு கொவர்ணருடைய மிலாகத்து (சந்திப்பு) மத்தது ஆனபிற்பாடு, திருவல்லிக்கேணியிலிருந்து பட்டணத்துக்குப் போற வழியிலே யிருக்கிற முசே பொறுனேவால் (M. Barnewall) தோட்டத்திலே மமுதல்லிக் கான் யிறங்கியிருக்கிறான்.[1] திருவொத்தியூரிலே அமுர்த ராயன் யிறங்கியிருக்கிறா னென்றும், சிறிது பணங்காசுகள் குடுக்க ஒடம்படிக்கை பண்ணிக் கொண்டு தங்களுக்கும்

[1] இத்தோட்டம் சேத்துப்பட்டிலே இருந்தது. மேலும் சில விடங்களில் பார்னவெல் வீடும் தோட்டமும் வைத்திருந்தான். கர்னல் லவ் (Love) என்பாரின் Vestiges old Madras என்ற நூல் இப்படி ஏராளமான தகவல்களைத் தருகின்றது.

மத்தத்தா யிருக்கவும், ஆயிரம் குதிரை வாங்காமல் (திரும்பப் பெறாமல்) தங்களுடனே கூடயிருக்கவும் யிப்படி சிறிது ஒப்பு உடம்படிக்கை பேசுகுறார்கள் என்றும், பட்டணத்திலுண்டான வற்தகாள் பணமுள்ள ஆஸ்திக்காரர்க ளெல்லாரும் அவரவர் பழவேர்க்காடு முதலான நம்பிக்கை ஸ்தலங்களுக்கு திரவியங்களை அனுப்புவித்தவர்களும் அனுப்பியிருக்கிற பேர்களும் பட்டணத்திலிருக்கிற செனங்களை யெல்லாரும் முன் ஒரு தரம் பனிரெண்டு வருஷத்து(க்கு முன்னாலே) பறி குடுத்தவர்க ளானபடியினாலே பெகு திகிலெடுத்து யிருக்குறார்கள். அந்தப் பட்டணத்துக்கு அப்படியே சம்பவிக்கப் போகுது. அது தப்பாது. முன் அட்சய வருசம் (1746) பிறட்டாசி மாசம் சென்னப்பட்டணம் பிரான்சுக்காரர் வாங்கினபோது அன்வர்தி கான் குமாரன் மாபூசு கானும், யிப்போ மமுதல்லி கானும் மத்தத்து பண்ணி, அன்வறதி கானைக் கூட ஆற்காட்டு சுபா கூட போக்கடிச்சுக் கொண்டு, யிந்த மட்டும் நடந்த சேதி தான் யெல்லாருக்கும் விசிதமாயிருக்குதே.

யிந்த வருசமும் சென்னப்பட்டணம் பிரான்சுக்காரர் வசமாகுறதுக்கு யேஷியம் மமுதல்லி கானுடனே கூட பாசி ராயன் தாலூக்கு அமுர்த ராயன் ஒருத்தன் கூடினாப் போலே தோத்துது. யினிமேல் நடக்குற சமாச்சாரம் முன் சீத்தாராம சோசியர் சொல்லி (வந்த) கட்டமும், யிப்போ சுப்பா சோசியன் சொல்லி வருகிற கெட்டமும் அறியவேண்டியது. யித்தனாள் உசார் சுவார்கள் அன்பது குதிரைக்காரர் முசே குப்பி கூட முன் யிறங்கி யிருக்கிற லசுக்கருக்குப் போனார்கள். சேத்துப்பட்டின் பேரிலே போயி ...

***1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 19; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 7; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலத்தாலே ஏழரை மணிக்கு கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி கோவர்ணதோர் மேல்வீட்டின் பேரிலே தென்னண்டை தாவார நெடுஞ்சாலையிலே முசே பிஷேர் (M. Pichard), முசே பிறிணியோர் (M. Brenier), வகையிரா ஒபிசியால்மார்களும் முசே தெவோவுடனே வட பேசிக் கொண்டிருக்கச்சே, நான் போயி ஆசாரம் பண்ணி அரை நாழிகை நேரமிருந்து அப்பால் பிடவை பார்க்குற சாலையிலே போயிருக்கச்சே, முசே கில்லியார் (Mr. Guillard) வந்து யெனக்கு ஆசாரம் பண்ணினார். நானு மாசாரம் பண்ணினேன். யென்னைப் பார்த்து யிந்த வருஷம் முதல் கொண்டு சீர்மை, பூமிகள், சண்டைகள் சிலவு, படைத்தலைவர், கோட்டை வகையிரா பிரான்சு ராசாவுடையது ஆகு மென்றும், கும்பினியாருது வர்த்தக மாத்திரம் பண்ணிக் கொள்ளத் தக்கதாக யேரோப்பாவிலே யிருந்து ராசாவினுடைய பவுன்சும் படைத்தலைவர் கூடவந்து நடக்குமென்றும் நீர் போன வருஷம்

பிடிச்சுச் சொல்லிக் கொண்டு வருகிறீரே, அந்தப் படிக்குத் தானே வருகு தென்று நேத்தய தினம் முசே துப்பிளேயிக்சு காகிதங்கள் முசே தெபொஷேத்தும் முசே தெலார்ஷுக்கும் வந்தது. உனக்குச் சொன்ன சோசியர் மெத்தக் கெட்டிக்காரர் யென்றும், நீர் சொன்னபடிக்கி யிங்கிரேசுக்காரர் கோத்துவார் (பத்திரிகள்) பரிச்சேதமாய் இந்தியாவிலே யில்லாமல் போமென்றும், யிந்தியா ராச்சியத்திலே துலுக்க(ருக்கு) விஸ்தாரமான ராச்சியம் (நஷ்டப்) படுமென்றும் சொன்னபடிக்கி யேஷியம் சரியாய் பிரான்சு ராசா உத்தாரம் குடுத்து நாலாயிரத்து அன்னூறு, அய்யாயிரம் சொலுதாதுகளும், யிருபத்து ரெண்டு கப்பலும், ரெண்டு பேர் ராசா வினுடைய படைத்தலைவர்களும் முஸ்தீத்தாய்க் கப்பலின் பேரிலே யேறி, போன வருசம் நொவம்பர் மாசம் 29 தேதி பத்துக் கப்பல் பாயெடுத்தது யென்றும், தெசம்பர் மாசம் 14 தேதி பனிரெண்டு கப்பலும் பாயெடுத்து புதுச்சேரிக்கு வருகுறதென்றும், முசே துப்பிளேயிக்சும் கம்பாஞானாவிலே (Champagne) சமுசாரத்துடனே போயிருக்குறா ரென்றும், அவர் பெண் சாதிக்கும் சரீரம் சுவஸ்தம் தப்பியிருக்கிற தென்றும், மேல்ப்படி குமாரத்திக்குக் கலியாணம் யில்லையென்றும், முசே கொதே பேச்சு வெகு பிரபலமாயிருக்கு தென்றும், இந்தியாக் காரியத்துக்கு அவர் பேச்சும் பேரிலே தான் சகலமும் ரவாணாவாய் வருகு தென்றும், முசே தெலார்சுக்கும் முசே தெபோசேத்துக்கும்[1] யெழுதி வந்தது.

பின்னையும் யென்ன யெழுதி வந்ததோ? முசே தெலார்சு, முசே தெபோசேத்து முகம் களை வாங்கிக் (இழந்து) கண்டுது. காகிதத்திலே யிவர்கள் (சொந்தக்) காரியத்திலே யாதொரு மக்கின (கெட்ட செய்தி) யெழுதி, அதினாலே அந்த மக்கினமோ, அல்லது முசே துப்பிளேயிக்சு காரிய பாகங்கள் கெட்டுப் போய் உளுக்கார்ந்து கொண்டிருக்கிறதினாலேயோ, காகிதம் பாத்தவுடனே யிவர்கள் ரெண்டு பேர் முகமும் பெகு களை வாங்கி விசாரத்தை அடைந்த சாடை முகத்திலே கண்டுது.

யினிமேல் யென்ன நடக்குமோ என்றும், உங்கள் சோசியர்கள் சொன்னார்கள் யென்றும், முசே கில்லியார் கேட்டதுக்கு, "நான் சொன்னபடிக்குத் தான் யிப்போ சமாச்சாரம் யெழுதி வந்துதே! கப்பல் வந்த பிற்பாடு நடக்குற விந்தைகள் சிறிது சொல்லியிருக்குது. உமக்கு சரிப்பட்ட பிற்பாடு அப்பால் டில்லி முழுகுறதுக்கும் துலுக்கானியம் அழியுறதுக்கும் யேஷியம் உம்முடனே சொன்னதுக்கு யிது ஆதியானபடியினாலே, யிது நடந்த பிற்பாடு மத்த வய்ணமும் சொல்லுகுறே" னென்று சொன்னேன். முசே லெகு, முசே பெடுத்தராம்,

---

[1] இவர்கள் இருவரும் இத்தியாவில் துய்ப்ளேயின் உடமைகளுக்கு ஏஜென்ட்டுகள்.

முசே துருவேத்துக் (Drouet)கிழவன் வந்தார்கள். மேலே எழுதின பேச்சே விஸ்தரிச்சுப் பேசியிருந்து அவரவர் வீட்டுக்குப் போகச்சே, முசே கில்லியாரை யிந்தக் காகிதம் யெப்படி வந்ததென்று கேட்டதுக்கு ஒலாந்துக்காரனுக்கு ஆம்முத்திரதாமிலே (Amsterdam) யிருந்து ஒரு சுலுப்பு சேதி கொண்டு வந்தது. அந்த சுலுப்பு நாகப்பட்டணத்துக்கு வந்துது. அந்த சுலுப்பிலே முசே துப்பிளேயிக்சு யெழுதின காகிதங்கள் வந்தது யென்று சொல்லிப் போட்டு, வீட்டுக்குப் போனார். நானும் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

### *1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 20; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 8; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே எட்டு மணிக்கி கோட்டைக்குப் போன விடத்திலே முசேலெறி கோவர்ணதோர் மேல்வீட்டின் பேரிலே யிருந்தார். அப்போ நான் போயிக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவரும் தலங்கம்பாடி கோன்சேலியேர் சீனயோர் சேம்பால் யென்கிறவரும் பேசிக்கொண்டிருந்தார்கள். யிப்படி யிருக்கச்சே ஒரு கப்பல் கண்டுது. அதைப் பார்த்து தலங்கம்பாடி கோன்சேலியேர் தலங்கம்பாடி கப்பல் வருகுதென்று சொன்னான். கோட்டையிலேயும் கொடி போட்டார்கள். கப்பலும் சமீபிச்சு துறை பிடிச்சு பீரங்கி போட்டான். கரையிலேயும் பீறங்கி போட்டார்கள். அந்த மட்டிலே நான் பிறப்பட்டு பிடவைப் பார்க்குற சாலையே வந்தேன்.

அங்கே முசியே கில்லியார் யிருந்தார். அவரைக் கண்டு ஆசாரம் பண்ணினேன். அவரும் ஆசாரம் பண்ணினார். அப்படி யிருக்கச்சே அவர் "கப்பல் நாளுக்கு நாள் வந்து சேர வேணும். அது யெதுனாலே யென்றால் சீமையிலிருந்து கப்பல் பிறப்பட்டதுக்குச் சேதி வந்தது. அப்பால் பாதி வழி வந்ததுக்குச் சேதி வந்தது. ஆனபடியினாலே எந்த வேளையிலே கப்பல் வந்து நிற்குதோ தெரியாது. யினிமேல் நாழிகைக் கெடுவே யல்லாமல் நாள் கெடுவு சொல்லக் கூடாது," யென்று சொன்னதுமல்லாமல், "முன் பட்டணத்திலே நடந்த அனியாயத்துக்குக் கப்பல் வருகிறதுக்குள்ளே யின்னம் யென்ன அனியாயம் நடக்குமோ தெரியாது. யினி நடக்க நடக்க அறிய வேண்டிய," தென்று சொன்னதுக்கு, நானிருந்து "யிந்தப் புதுச்சேரியிலே பிரான்சுக் கொடி விழுந்து அன்பத்தேழு வருஷ மாச்சுது.[1] யிதுக்குள்ளே நடவாத அனியாயங்கள் யெல்லாம் ரெண்டு மூணு வருஷத்திலே நடந்து தீந்தது. ஆனால் யிந்த பட்டணத்துக்கு யின்ன மொரு உன்னதம் புசிக்க (எட்ட) வேண்டியது.

[1] டச்சுக்காரர் புதுச்சேரியை 1699இல் பிரெஞ்சுக் கம்பெனி வசம் மீண்டும் ஒப்படைத்ததைப் பிள்ளை குறிப்பிடுகிறார்.

இல்லாவிட்டால் யிந்தோடே நாசமாய்ப்போம். அந்த உன்னதம் புசிக்க வேண்டியிருக்கிறபடியினாலே யினிமேல் முன் முசே லெனுவார் நாளையிலே நடந்ததுக்கு திவி குணம் அதனமாய் நடக்கத் தக்கதாய் ஒருநல்ல கட்டம் (?) ஒடுதியும்[1] வருடம் ... ஆனால் அன்பதாம் வருஷத்துக்கு மேல் ஒரு உன்னதம் நடக்க யிருக்குதென்று யெனக்கு நன்றாய்த் தெரியும். அதுக்கு யிந்த வருஷம் சுப காலம் பொறக்குற படியினாலே முன் சொல்லப்பட்ட கட்டம் (கட்டு) ஒடுதிகள் வருகிற கப்பலிலே வந்து தீரும்," என்று சொன்னதுக்கு, மெய்தான் அப்படி வருகுதென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள் யென்று சொன்னார்.

அப்படி யிருக்கச்சே, பின்னையும் லோகாபிரமமாய்ப் பேசியிருந்து சென்னப்பட்டணத்திலே வர்த்தகர் பணங்காசுகள் பழவேர்க்காடு (பழவேற்காடு) அந்தப் பிராந்தியங்களிலே அனுப்பிவிக்கிற சேதியும் சென்னப்பட்டணத்திலே முன் நம்முட பிரான்சுக்காரர் பிடிச்சு நீசான் போட்டபோது அங்கே பெருமாள் கோயில், யீசுவரன் கோயிலுக்கு[2] யிப்பறம் சுங்குவார் வீடு பரியந்தம் யிடியாமல் விட்டுவிட்டு யிருந்தார்கள். யிப்போ அதை யிடிச்சுப் போடத்தக்கதாக உத்தரவு குடுத்து தமுக்குப் போடச் சொன்னவிடத்திலே, வர்த்தகரெல்லாம் கூடி மேஸ்தர் பிக்கட்கு அண்டையிலே போயி, வெகு நாளா யிருக்கிற கோயில், அதை யிடிப்பார்களா யென்று சொல்லிக் கொண்டதுக்கு, அவர் பட்டணத்துக்குக் கலாபம் வந்திருக்கச்சே யிடியாமல் வைக்கப்படா தென்று சொன்னது மல்லாமல், நீங்கள் நல்ல தனத்தோடே யிடிச்சுப் போட்டாலாச்சுது, யில்லாவிட்டால் பலவந்தத்திலே ஆள்களை அனுப்பி யிடிச்சுப்போடச் சொல்லுவோ மென்று சொன்னதின் பேரிலே, யினிமேல் கேழ்க்கிறதிலே சாரமில்லை யென்று வர்த்தகர்கள் கோயிலை யிடிக்குறபோது அதிலே யிருக்கிற விக்கிரகங்களை அப்பிறத்திலே யிடம் பார்த்து வைக்கவேணும், அவரவர்களை தங்கள் வீடுகளை பார்த்துக் கொள்ள வேணும், ஒரு மாசத்துக்கு உத்திரவு குடுக்க வேணுமென்று கேட்டதுக்கு ஒரு மாதத்துக்கு உத்திரவு குடுக்கப் படாதென்று, பதினைஞ்சு நாளைக்குள்ளே யிடிச்சுப் போடத்தக்கதாக உத்திரவு குடுத்தாராம். ஆனபடியினாலே முன் நம்முட பிரான்சுக்காரர் பிடிச்சுவந்த கொடி போட்டிருந்த போது பாதி பட்டணம் போச்சுது, யிப்போ சகலமும் போச்சுது. யினிமேல் சென்னப்பட்டணம் போச்சுது. பட்டணம் யென்ற நாமதேயம் கூடச் சொல்லுகுறதுக்கு யிடமில்லாமல் நாமகஷ்டமாய்ப் போய்விடும். அதுக்கு யேஷியம் யெப்படி யென்றால், முன் உன்னதமாய் நடந்தது, அப்பிறம்

---

[1] ஒரு கடுதாசிக் கட்டு.

[2] இவை சென்ன மல்லிகேஸ்வரர் கோவில், சென்ன கேசவப் பெருமாள் கோவில். கோட்டைக்கும் ஊருக்கும் மிடையே தற்காப்புக்காக வெட்டவெளி இருத்தல் வேண்டும் என்று ஆங்கிலேயர் கருதினர்.

பாதி நஷ்ட்டமாச்சுது, யிப்போ நாம நஷ்ட்டமாய்ப் போறதுக்குக் காலம் சமீபிச்சிருக்கிறபடியினாலே, குறையிருக்கிற வீடுகளையும் யிடிக்கத் தக்கதாக வந்துது," என்று நான் சொன்னேன். அவர் மெய்தான், நமக்கு திரண்ட கப்பல் வருகுதென்று அவர்களுக்கும் சேதி வராவிட்டால் யிந்த யேஷியம் நடவாது.[1] அவர்களுக்கு சேதி வயணமாய் வந்து அறிஞ்சு யிருக்கிறபடியினாலே மத்த வீடுகளையும் யிடிக்கத் தக்கதாக உத்திரவு குடுத்தார்கள். யினிமேல் இங்கிரேசுக்காரருக்குச் சென்னப் பட்டணத்தின் பேரிலே ஆசையில்லை யென்று தோணு" தென்று சொல்லி, பின்னையும் சிறிது பேச்சுகள் பேசியிருந்து பிறப்பட்டு வீட்டுக்கு போனார். நான் அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

***1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 21; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 9; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி நேத்து ராத்திரி முசே மோர் சேத்து முசே பிளாக்கூரை சுட்டுப் போட்டு, ... வேஷம் போட்டுக் கொண்டு ஓடிப்போகப் போறானென்று விடிஞ்சு ஒன்பது மணி வரைக்கும் கோட்டை வாசற்படி திறவாமல், போறவர்களை வாரவர்களை யெல்லாம் சோதிச்சு, அப்பால் கதவைத் திறந்து விட்டார்கள். முசே திலார்ஷூவையும் முசே தெனோத்தியோர் (des Nandiers) கிறேபியரையும் நேமிச்சு நடந்த சேதிகளை யெல்லாம் விசாரிச்சு யெழுதச் சொல்லித் திட்டம் பண்ணினார்கள் என்றும் கேழ்விப்பட்டுது. யினி மேல் யென்ன நடக்குமோ தெரியாது.

***1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 22; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 10; சோமவாரம்***

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு முசே மோர்சேத்துவை முசே சொபினேயும் முசே புறுணீயும் (Brenier) கடற்கரை வாசற்படியாலே தப்பிப் போகச் சொல்லி விட்டு விட்டதாகவும், அவன் பிறப்பட்டு முகத்துவார மட்டுக்கும் போனவிடத்திலே அவ்விடத்திலே யிருக்கிற சிப்பாயிகள் யிவனைப் பிடிச்சுக் கொண்டு கடற்கரைவாசற்படி காக்குற சந்திரேரைக் கூப்பிட்டுச் சொன்னவிடத்திலே, அந்தச் சேதி முசே சொபினேயும் முசே புறுணியும் (பிரெனியே) அறிஞ்சு, உடனே வந்து அந்த சிப்பாயிகளை அடிச்சு மெரட்டித் துரத்திவிட்டு அந்தட்சணம் சலங்குக் காரரை அடிச்சு யெழுப்பி ஒரு சலங்கு முஸ்தீப்பு பண்ணச் சொல்லி, அந்தச் சலங்கிலே முசே மோர்சேத்தைப் போட்டு அரியாங்குப்பத்துத் துறைக்கு அப்பால் கொண்டு போய்விட்டு விடச்சொல்லி அனுப்பிவிச்சதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

---

[1] இப்படி பிரெஞ்சுக் கப்பல்கள் வருகிற சேதியை டச்சுக் கப்பல் ஒன்றின் மூலம் ஆங்கிலேயர் அறிந்தனர்.

*1757 வருசம், அகொஸ்து மாசம், தேதி 29; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 17; சோமவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதியென்ன வென்றால், சென்னபட்டணத்திலே போயிருக்கிற நானா வினுடைய மேஸ்தர் (குமாஸ்தா) அமுர்த ராயன் யென்கிறவனுக்கும் யிங்கிரேசுக்காரருக்கும் ஒப்பு உடம்படிக்கையிலே சமாதானமில்லாமல் பிறப்பட்டு, ஆற்காட்டுக்குப் போறதா யிருக்கச்சே, மறுபடி மமுதல்லி கான் உபயத்திரவாளுக்குச் சமாதானம் பண்ணி திருப்பதியின்[1] பேரிலே ரெண்டு லக்ஷம் ரூபாய் தனக்காவும் (அடமானம்) முப்பதினாயிரம் வராகனுக்கு சகலாத்தும், பின்னையும் காஞ்சீபுரம் வகையிரா சீமைகளிலே ரெண்டு லக்ஷம் ரூபாய்க்கு தனக்காவும் யிந்தப்படி ஸ்னேகம் பண்ணி சமாதானமாய் (ஆனதாக) சேதி கேழ்க்கப்பட்டுது. யிதுவுமல்லாமல் நகடப்பை நத்தம் கானட்டிலே (கானகத்தில்) பத்துப்பதினையாயிரம் குதிரையுடனே யிறங்கியிருக்கிற பலவந்த ராயனென்கிறவன் ஆயிரம் ஆயிரத்தன்னூறு குதிரை மட்டும் தன்னண்டையிலே வைச்சுக் கொண்டு மத்தக் குதிரைகளைக் கடப்பையான் சீர்மை(களான) மதனபல்லி, குற்றம் கொண்டான் (ஆகிய) சீமைகளைக் கட்டத்தக்கதாக அனுப்பினதாகவும், அந்தச் சேதி கடப்பை அப்துல் நபி கான் கேட்டு, அய்யாயிரம் ஆறாயிரம் குதிரையுடனே பவுன்சு பிறப்பட்டதாகவும், அந்தச் சேதி பலவந்த ராயன் கேட்டு திருப்பதிக்குப் போய் சுவாமி தெரிசனம் பண்ணிக் கொண்டு அப்பால் தங்கள் பவுன்சு போய் யிறங்கி யிருக்கிற தாவுக்கு அன்னண்டையிலே யிருக்கிற பவுன்சுடனே போறதாயி சேதி கேழ்க்கப்பட்டுது.

---

[1] அப்போதே திருப்பதியில் பக்தர்கள் விழா நாட்களில் பெருந்திரளாய்க் குவிந்ததால் ரொக்கமாக நிறைய வருவாய் கிடைத்தது. 1753 முதல் அப்பணத்தை வசூலிக்கும் உரிமையை ஆங்கிலேயர் குத்தகைக்கு எடுத்திருந்தனர். இவ்வசூல் விவரங்களை 1818இல் வெளியான Graeme's Report என்ற நூலில் காணலாம்.

## செப்டம்பர் 1757

***1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 2; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 21; சுக்கிறவாரம்***

இத்தனாள் பதினோரு மணிக்கு கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் வேலூர் முறுத்தசல்லி கான் என்கிறவன் பிரான்சுக் காரருடைய பவுன்சு போயி நெல்லூர் சீமை(யைக்) கட்டின விடத்திலே, அதிலே வேலூரான் சீர்மை ரெண்டொன்று ராமய்யப்பட்டணம் வகையரா சேர்ந்திருந்ததை யிவர்கள் கட்டிக் கொண்ட நிமித்தியம், அதை விட்டு விடவேணுமென்று ரெண்டொரு மாசத்துக்கு முன்னே ஒரு வெள்ளைக் குதிரையும் பின்னையும் சிறிது பெகுமானங்களும் நயினியப் பிள்ளை வீட்டுக்கு யெதிர் வீட்டிலே வந்திருந்தது. யிந்த மட்டுக்கும் தாது பிராதில்லாமலும் ஒடம்படிக்கைகள் செவ்வைப் படாமலும் கிடந்தது. இதுக்கு யித்த நாள் விமோசனமாய் முசே தெலார்ஷு மாரிபத்திலே தொரைக்கு உள்ளபடியிலே யென்ன ஒடம்படிக்கை பேசி விச்சார்களோ அதன் பேரிலே சந்தி செவ்வைப் பட்டு பெகுமானம் முன் சொல்லப்பட்ட வெள்ளைக் குதிரையும், முன் பானையம் முறுத்த சல்லிக்கானுக்கு உபராலாய் (உதவியாய்) அனுப்பியிருந்த சம்மதிக்குக் கூட பதினாயிரம் ரூபாய்க்கு பெகுமானம் உண்டென்று சொன்னார்கள். அதிகமோ குறைச்சலோ தெரியாது. யிதுகளெல்லாம் கொண்டு போயி யித்தனாள் சந்திச்ச விடத்திலே யெப்போதும் முறுத்தசல்லி கான் வெகுமானம் வந்தால் பதினோரு பீரங்கிப் போடுகிறது, யிந்த விசை பதினஞ்சு பீரங்கி போட்டு பெகுமானத்தை வாங்கிக் கொண்டு பதிலுக்கு வெகுமானம் குடுத்த வயணம்.

சகலாத்து சிப்பம் 10; முகமல் சுருட்டு 4; பட்டு சுருட்டி 2; சூர்கத்தி 12; கத்திரி 6; வீதரு புட்டி 1; யிந்தப்படிக்கு 1; பதிலுக்கு பெகுமானம் பண்ணி அனுப்பினதாய்ச் சொன்னார்கள்.[1]

***1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 8; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 27; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே எட்டு மணிக்கு கோட்டைக்குப் போக வேணுமென்று பிறப்படச்சே பத்துப் பணிரெண்டு கப்பல் காணுதென்று கோட்டையின் பேரிலே யிருக்கிற கொடிமரத்தின் பேரிலே கறுப்பு வெள்ளை கலந்த அடையாளக் கொடி போட்டார்க ளென்றும், யிங்கிரேசுக்

[1] கண்ணாடித் தம்ளர்கள் (vitre) அடங்கிய பெட்டி.

கப்பல்கள் ரெண்டு கூடலூர் துறைக்கு நேராக யிருந்தது சென்னப்பட்டணத்துக்கு யின்று காலமே போகத் தக்கதாக முன்னுதாகப் பாயெடுத்து ஒடுது யென்றும், நரம்பை(க்கும்) நல்ல வாடைக்கு(ம்) நேராய் நம்முட கப்பல் காணுதென்றும், கறை பிடிச்சு வருகுதென்றும், அடிக்கடி செனங்கள் வந்து கபுறு சொல்லிக் கொண்டே வந்தார்கள். நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன். ஒன்பது மணிக்கு காரைக்காலிலிருந்து கட்டுமாத்தின் பேரிலே காகிதம் வந்து தென்றும் சொல்லிக் கொண்டார்கள். அந்தக் காகிதத்திலே நம்முட கப்பலுகள் வந்துதென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

***1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 9; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 28;***

இத்தனாள் சிரஞ்சீவி செளபாக்கியவதி திரிபுரசுந்தரி குமாரனுக்கு பதினாறு நாள் புத்திரோச்சவம் பண்ண வேண்டிய பிரகாரம், யித்தனாள் நாமகரணம் சரவண சதாசிவனென்று[1] பேரிட்டு சடங்கு செய்து வைத்(தோம்).

உடனே நான் சீமையிலிருந்து ராசாக் கப்பல் வந்ததிலே பிறிகத்தியேர் முசே ஷெவலியேர் சுப்பீரென்கிற வரும் அவருக்கு ரெண்டாவது முசே ஷெவல்லியேர் தெத்தேரே யென்கிறவரும் நேத்து சாயங்காலம் முசே கில்லியாரும் முசே புலோவும் முசே பிஷேர் அலுமாஞ்சு கொம்மாமும் முசே லாசும் போயழைத்ததுக்கு யின்றைக்கு காலமே வாரோமென்று சொன்னபடி யினாலே, யித்தனாள் காலத்தாலே ஆறுமணிக்குத் தானே நேத்து போயி வந்த நாலு பேர்களும் போயழைக்க அவர்களும் படகிலே யிறங்கி வருகிற சேதி வந்து, நான் போயி கோட்டையிலே கோவர்ணமாமிலே யிருக்கிற முசே லெரி குவர்ணர்தோர், முசே தெபொஷேத்து வகையிரா கோன்சேலியேர்களுடனே யிருக்கிறவரை (துரையை) கண்டு ஆசாரம் பண்ணினேன். அவருட முகம் வெறிச்சாப் போலே யிருந்தது. யென்னைப் பார்த்த பின்னையும் சத்து விகாரமாய்த் தானே யிருந்தார். அப்பால் சலங்கின் பேர் முசே ஷெவாலியேர் சுப்பீர் வகையிரா[2] யிறங்கின உடனே அவரேறி வந்த கப்பலிலே தானே பதினைஞ்சு பீரங்கி போட்டார்கள். அப்பால் கூட வந்த கப்பலிலே கூடத் துறையிலே யிருந்த கப்பலிலே கூட பதினைஞ்சு பீரங்கி விழுக்காடு போட்டார்கள். சலங்குக் கரைக்கு சமீபமாய் வருகுதென்று பார்த்து முசே லெறி கடற்கரைக்கு வரவேணும் யென்று

---

[1] திரிபுர சுந்தரி நமது பிள்ளையின் தம்பி மகள். வைணவர்களான இவர்கள் குழந்தைக்குச் சைவப் பெயரிட்டதைக் காண்க.

[2] Bregadier Monsieur le Chevalier de Supire, and M. le Chevalier de Dure.

பிறப்பட்டு படி மட்டுக்கும் வந்தவுடனே, முசே தெலார்ஷு, முசே தெபொஷேத்து, முசே தெபோ, முசே (லெ)னுவார் யிருந்து கொண்டு தொரைகிட்டப் போய், காதிலே "சலங்கு தூர வருகுதே, யிப்போ தானே போய்க் காத்திருக்க வேணுமா?" யென்று சொன்ன சாடையாய்க் கண்டுது. அந்தச் சேதி கேட்ட மாத்திரத்திலே தானே முசே லெறி பத்தடி திரும்பி வந்தார். யிதுக்குள்ளே சேவுகன் வந்து சலங்கு கிட்டவந்து தென்று சொன்னபடியினாலே, மறுபடி கடற்கரை வாசற்படிக்குக் கிட்டவந்து நின்று கொண்டிருந்தார்கள். சின்ன துரை கடற்கரைக்குப் போகச்சே கீழண்டைக் கோட்டை வாசல் கடந்த உடனே வந்து கலந்து கொண்டார். யிதிலே சலங்கும் துறை வந்து பிடிச்சு முசே ஷெவல்லியேர் சுப்பீர் யென்கிறவரும் அவருக்கு ரெண்டாவது முசே ஷெவலியேர் தெ தோறா (முன்பு தெத்தேரே) என்கிறவரும் கரையிலே யிறங்குறதுக்கு முன்னே உள் கோட்டை கோவர்ணமா கீழே பிடிச்சு அலைக்கரை மட்டுக்கும் சொலுதாதுகளையும் சட்டைக்காரர் களையும் காபிரிகளையும் வரிசை வச்சு வாழைமரம் தென்னம் மட்டைகளெல்லாம் வரிசையாய் நட்டு மேளதாளம் நட நாடகசாலை பயிராக்கு முதலானதுக ளெல்லாம் வந்திருந்துது. யிறங்கினவுடனே முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் என்கிறவர் அரை நாழிகை தேசகாலம் நின்று, சலங்குக ளெல்லாம் சீக்கிரத்துக்கு முஸ்தீது பண்ணி அனுப்பி, சொலுதாதுகளை யிறக்குங்கோ ளென்று காறுபாறு பண்ணிப் போட்டு வந்தவுடனே முசே லெறிக்கும் அவருக்கும் தெரிசன மாச்சுது. கோன்சேலியேர்களும் ஆசாரம் பண்ணினார்கள். அந்த மட்டிலே கொத்தளங்களிலே யிருக்கிற பீரங்கிகள் யெல்லாம் நூத்துச் சிலுவானம் பீரங்கி மட்டுக்கும் தீந்தார்கள். அப்பிறம் யெல்லாரும் கோவர்ண மாமுலே மேலே போனார்கள். போனவுடனே சகலமான பேரும் வந்தவருக்கு ஆசாரம் பண்ணினார்கள். நானும் ஆசாரம் பண்ணினேன். யென்னையும் பார்த்து பதிலுக்கு ஆசாரம் பண்ணினார்.

அந்த மட்டிலே, வந்தவர்களிலே ரெண்டு பேர்களும் முசே லெறியும் கப்பலுக்கு ரெண்டாவது கொம்மாந்தானும் மூணாவது கொம்மாந்தானும் கொவர்ணமா மேலே கோன்சேல் வீட்டுக் கீழண்டைக் காம்பிராவிலே போய்க் கதவை சாத்திக் கொண்டு யெதோ பேசி, பீரங்கி மேஸ்திரி முசே ஷெர்பாந்தியேர் வென்கிறவரை அழைப்பிச்சு யேதோ ஒடுதி குடுத்த சாடையாய் கண்டுது. அவன் போனபிறகு முசே தெபோஷேத்தை அழைப்பிச்சு யென்னமோ பேசி அனுப்பிவிட்ட உடனே, அவர் வெளியே வந்தார். அதன் பிறகு சீர் (Sieur) கொவர்ணதோர் வந்தவரை அழைச்சுக் கொண்டு வீடுகளெல்லாம் (அறைகள் எல்லாம்) காண்பிச்சுக் கொண்டு வந்தார். அதன்பிறகு தாமிருக்கிற காம்பிராவைக் காண்பிக்க அழைச்சுக் கொண்டு போயி காண்பிச்சார். உடனே வந்தவர் முசே லெறியுடனே

யென்ன சொன்னாரோ தெரியாது. முசே லெறி கொவர்ணதோர், கோன்சேலியோர்களை அழைச்சு நீங்கள் வீட்டுக்குப் போங்களென்று சொன்னதாயும், கோன்சேலியேர்கள் யெல்லாம் பிறப்பட்டு வருகிறபோது முசே கில்லியார் என்னைக் கண்டு "நீரேன் யிங்கே யிருக்கிறீர்? யெங்களைப் போலே ஒத்த கோன்சேலியேர்களுக்கே போகச் சொல்லி உத்தாரம் பிறந்த மட்டுக்கும் யெங்களுக்கு அத்ததாய் நீரும் வீட்டுக்குப் போக வேணு," மென்று யென்னை அழைச்சுக் கொண்டு கீழே யிறங்கி வரச்சே பேசிக் கொண்டே வந்தோம். அப்போ அவர் சொன்ன சேதி, முசே லாலி (Lally–லல்லி) என்கிறவர் லுத்தினாந்து சனரால் வருகிறமட்டுக்கும் யிவர் பெரியவர், யிவர் ஒடுதிப் படிக்கி முசே லெறி நடக்க வேணுமென்று சொல்லி மத்தப் பேச்சு யெல்லாம் நாளை பேசிக் கொள்ளுவோமென்று சொல்லிப் போட்டு அவர் வீட்டுக்குப் போனார். நானும் பிறப்பட்டு வீட்டுக்கு வரச்சே சின்ன துரை பிறப்பட்டு வீட்டுக்கு வரச்சே வாசற்படியிலே தம்பூறு அடிக்கயில்லை யென்றும், சின்ன துரைக்கு அடிக்குற தம்பூறு முசே லெறிக்கு அடிக்குற தென்றும் முசே லெறிக்கி அடிக்குற தம்புறு வந்தவருக்கு அடிக்கிறதென்றும் சேதி சொன்னார்கள்.[1]

***1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 10; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 29; சனிவாரம்***

நேத்து ராத்திரி மயேயிலிருந்து அவ்விடத்து திரேக்கு தோர் முசே லுயேத்து (Louet) காயிதம் கொண்டு வந்த பிராமணன் சொன்ன சேதி யென்னவென்றால் யிதுக்குப் பதினைஞ்சாம் நாள் சனிக்கிழமை நாள் சீமைக் கப்பல் யெட்டு உருப்படி மயே யிக்குவரதாக ரேரே கண்டு(து). அதிலே ரெண்டு கப்பல்க்காரர் துறை பிடிச்சு யிறங்கி அவ்விடத்து திரேக்குதோர் முசே லுயேத்துடனே கண்டு பேசி, புதுச்சேரிக்குப் போறோமென்று சொல்லிப் போட்டுப் போனார்க ளென்றும், மறுநாள் ஆதிவாரத்தன்று அந்தச் சேதிக்குக் காகிதம் யெழுதி யெங்களைப் பயணம் பண்ணி அனுப்பினாரென்றும், பதிமூணாம் நாள் நேத்து ராத்திரி வந்து சேர்ந்து தொரைக்குக் காகிதம் கொண்டு வந்து குடுத்தோமென்றும், நல்லக்காத்து அடிக்கிறபடியினாலே சீக்கிரமாய் நாலஞ்சு நாளையிலே வருமென்றும் மிந்தப் படிக்கு நேத்து ராத்திரி தொரைக்கு வந்து கபுறு சொன்னதாய் யின்றைக்கு யெனக்கு வந்து கபுறு சொன்னான். ஆனபடியினாலே முசே லாலி வருகுற இஸ்காதுரும் சாஸ்திரப் படிக்கி புரட்டாசி மாசம் 6 தேதி வரவேணு(மென்று) யிவர்கள் சொல்லுகுறதை பார்த்தால், ரெண்டாந் தேதியே வரும்போலே காணுது. யிந்த மட்டுக்கும்

[1] வந்திறங்கிய நாளிலேயே ராசாவின் படைத்தலைவர்களுக்கும் ஆளுநர் லெறிக்கும் மனவிரோதம் இவ்வாறு ஆரம்பமாயிற்று.

பின்னையொரு விந்தைகளும் காணோம். யினிமேல் யென்ன நடக்குறதோ அறியவேணும். யிப்போ வந்திருக்கிற கப்பலிலே ஆறே ழுகப்பல் ராத்திரிப் பயணம் போறதாய் செனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.

*1757 வருசம், செப்தம்புறு மாசம், தேதி 11; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 30; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே நானும் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வரவேணுமென்று யிருக்கச்சே முசே ஷெவலியேர் சுப்பீர் வகையிராக்கள் கோன்சேல் கூடியிருந்தவர்கள் கலைஞ்சு, முசே ஷெவல்லியேர் சுப்பீர் என்கிறவர் யிப்போ வந்திருக்கிற கப்பலுகளுக்குக் கொம்மாந்தாமாயிருக்கிற முசே புவேத்துக்கு (M. Bouvet) யேழு கப்பலுடனே மசுக்கரைக்குப் போறதுக்குத் தானோ, பின்னை யேங்கே போறதுக்கோ தெரியாது. அவருக்கு திஸ்பாச்சு (despatch) குடுத்து கடுதாசியும் யெழுதிக் குடுத்தனுப்பினார்கள். முசே புவேத்து அந்த ஒருதியை வாங்கிக் கொண்டு கடற்கரைக்கு வந்து படகேறி கப்பலுக்குப் போகச்சே கரையிலே பதினஞ்சு பீரங்கி போட்டார்கள். அவர் பிறப்பட்டுப் போயிவிட்ட பிறகு அந்தச் சேதியை அறிஞ்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

*1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 12; ஈசுவர வருசம், ஆவணி மாசம், தேதி 31; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஏழு மணிக்கு சின்னதுரை முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போன விடத்திலே முசே பெடுத்தல்மீ மேல் வீட்டின் பேரிலே யிருந்தார். நான் போயி ஆசாரம் பண்ணின உடனே சீமைக் கப்பலிலே உனக்கு யென்ன சந்தோஷக் கபுறு வந்து தென்று கேட்டார். "யிது வரைக்கும் நானொரு சேதியும் அறியேன். ஊரிலே வெள்ளைக்காரர்களும் சரிப்போன படியெல்லாம் சொல்லுகுறார்கள். தமிழர்கள் அதைப் பார்க்கிலும் பின்னையும் ஒருத்தன் சொன்னாப் போலே சரிப் போனபடிக்கு யெல்லாம் சொல்லுகிறார்களென்று" (என்று) சொன்னதுக்கு, "அது நாளும் கேழ்விப் பட்டேன். யெனக்கு உத்தியோகம் போச்சென்றும் பின்னையும் ரெண்டு பேர் கோன்சேலியேர்களுக்கு உத்தியோகம் போச் சென்றும், யென் வீட்டிலே சொலுதாதுகளை அனுப்பி சவுக்கை வைத்தார்க ளென்றும் இப்படி நானா விதமாகச் செனங்கள் சொல்லிக் கொண்ட சேதி யெல்லாம் கேழ்விப்பட்டேன். அதெல்லாம் அபத்தம். முசே ஷெவல்லியே தெ சுப்பீர் யிப்போ வந்தவர் சண்டைக் காரியங்களுடனே சேர்ந்ததுகளுக்குக் கப்பலின் பேரிலே ஆகட்டும் கரையிலே ஆகட்டும் அவர்கள் சரிப்போன படிக்கு நடப்பிச்சுக்

கொள்ளுகுறது; சீமை பூமி வர்த்தகம் பட்டணத்துக் காரியங்களெல்லாம் கும்பினியாருது... யிவ்விடத்துக் கோன்சேல் மேலே யெழுதப்பட்ட ராசா மனுஷர்களுக்கு சம்பளம் திட்டம் பண்ணிக் (கொடுக்க வேண்டும் என) வந்திருக்குது. அந்தப்படிக்கு சம்பளம் குடுத்து அவர்கள் வேணுமென்று கேழ்க்கிற சரன்சாமிக ளெல்லாம் கும்பினி குடுத்து நடப்பிக்குறதிலே அல்லாமல், ராசா மனுஷர்களுக்குச் சீமை பூமி பட்டணம் காரியம் வர்த்தகத்துடனே சேர்ததது ஒன்றும் கவையில்லை யென்று (வந்துள்ளது). பிறகே முசே லாலி (லல்லி) யென்கிறவர் ரூத்தினாந்து செனரால் தெ ரூவா (Lieutenant General du Roi) ஆக வருகிறாரே,[1] அவர் வந்தால் யிப்போ முசே லெறிக்கு அடிக்குற ரெண்டாவது தம்பூறும் மரியாதையும், யிப்போ ஷெவல்லியேர் முசே சுப்பீருக்கு நடக்குறதும் தம்பூறுஷாம் (tambour-aux-champs) முதலான பெரிய துரைக்கு நடக்குற மரியாதையெல்லாம் முசே லாலிக்கு நடக்கும். யிப்போ நானெப்படி ஒரு மரியாதையும் யில்லாமல் கும்பினீர் காரியம் பார்த்துக் கொண்டு யெங்களுக் குள்ளே முசே லெறிக்குக் கீழே கும்பினீர் காரியம் பார்த்துக் கொண்டிருக்கிறேனோ அப்படித் தான் (இனியும்). முசே லெறிக்கும் ஒரு மரியாதையு மில்லாமல் கும்பினியார் காரியம் பார்த்துக் கொண்டு. பெரியவன் சின்னவன் கோன்சேலியேர் என்கிற தாரதம்மிய மாம்படியே மரியாதையே யில்லாமல் (நாங்கள் இருக்கிறது," என்று சொன்னார்). முசே கொதே உமக் கேதாகிலும் காகிதம் அனுப்பினாரா யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "யிது வரைக்கும் நானொரு காகிதமும் அறியேன். ஒரு சேதியும் ஒருத்தரும் சொல்லயில்லை. நானும் கேழ்க்கவுமில்லை. யென்னுடைய அதிருஷ்ட்டப்படிக்கு நடக்கப் போகுது. நலம் வந்தாலும் யெளப்பம் வந்தாலும் அந்தந்த வேளைக்குத் தகுந்ததாய் வருகுறது, வராமல் நிற்கத் தக்கதில்லை, யென்று யோசனை பண்ணிக் கொண்டு நானொருத்தரை சேதி கேழ்க்கிறதில்லை. ஒருத்தர் வீட்டுக்குப் போறதுமில்லை," யென்று சொன்(னேன்). "முசே குலுவேத்து கொமுசேயிராய் (நேமிக்கப்பட்டு)[2] உன் சீமையோடே உன் கையிலே குத்தகைக்குக் குடுத்த கணக்கு வணக்கு சேர்ந்த சம்மதிகள் அலாயிதாய் விசாரிக்கவும், அதுகளுக்கு யெசமானாக வருகுறான்... உன் கையிலே யிருக்கிற சீமை வழி கோன்சேலுக்குக் கூட அக்கரையில்லாமல் உன் வசமாய்த் தானே யிருக்கவும், யிப்படி சிறிது ஒடுதியாய் அலாதியாய் வருகுது. சிறிது வந்திருக்கும். கோன்சேல் காகிதம் கட்டு அவிழ்த்துப்

---

[1] பிற ஆளுநர்களைப் போலவே, சுப்பீர், லல்லி ஆகியோரும் தமது நினைவுக் குறிப்புகளை எழுதியுள்ளது மிகவும் உபயோகமானது.

[2] சீமைகளின் வருவாய்க் கணக்குகள் தங்களுக்கு வருவதில்லை என்று கம்பெனி அடிக்கடி குறை சொல்லி வந்தது. எனவே, ரங்கப் பிள்ளை வசமே குத்தகையை விடுத்து, கணக்குப் பார்ப்பதற்காக குலுவேத்தை அது நியமித்தது. குமிசேர்களின் கொள்ளை, அநியாயம் பற்றிய பிள்ளையின் பல புகார்க் கடிதங்களும் இம்முடிவுக்கு ஒரு முக்கிய காரணம்.

பார்த்தால் அதிலே உனக்கு முசே கொதே காகிதம் யிப்படி யிருக்கும். நானானால் உன் சீமை வழி, கிராம வழி வரவுமில்லை. நானொரு கிராமமாகிலும் குத்தகை கூட வாங்கயில்லை. அந்த சோலிக்கே நான் வரயில்லை," யென்று (அவர் மேலும் சொன்னார்). நான் யிருந்து கொண்டு, "யெனக்குக் காகிதம் வந்தாலும் உடனே நான் சொல்லேனா அல்லது சேதி கேட்டிருந்தாலும் மறைக்கத் தக்கதில்லை," யென்று சொன்னதுக்கு, "நீர் கும்பினியாருக்கும் முசே மோந்திராமுக்கு (Montaran). முசே கொதேக்கும் யெழுதின காகிதத்தை யென் கையிலே குடுக்கச் சொன்னால், நீர் பரஸ்பரமாய் அனுப்பினதென்ன?" வென்று கேட்டார்.[1] 1757 வருசம், செப்தெம்பர் மாசம், தேதி 26; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 14; சோமவாரம்அப்போ கும்பினி காகிதம் பெட்டியிலே ஸதா (துயாராய்) யிருந்ததாலும், நானும் கோட்டைக்குப் போயிருந்து சமயம் வாய்த்த படியினாலே(யும்) அந்தப் பெட்டியிலே போட்டேன்," என்று சொன்(னேன்). "உனக்கு வருகிற காகிதத்துச் சேதி கூட யெனக்கு சீர்மையிலிருந்து பரஸ்பரமாய் ஒருத்தர் யெழுதி அனுப்பினார்கள்," என்று சொன்(னார்). "நீர் யின்னம் கும்பினி காகிதம் கோன்சேலுக்கு வந்திருக்குமே, அது பாத்ததில்லையா?" யென்று (நான்) கேட்டதுக்கு, யிந்த மட்டுக்கும் கோன்சேல் காகிதம் பார்த்ததில்லை யென்றும், வந்த காகிதக் கட்டும் அப்படியே தானே யிருக்குதென்றும் சொன்னார்.

### *1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 17; ஈசுவர வருசம், பிறட்டாசி மாசம், தேதி 5; சனிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : கூடலூரிலே யிருந்து தமிழர் தெலுங்கர் வகையிரா வர்த்தகாள் உத்தியோகஸ்தர்கள் முதலான பேர்கள் பெண்டுகள் பிள்ளைகள் வகையிரா மனுஷர்களையும் ஆஸ்திகளையும் உடையார்பாளையம் அரியலூர் வகையிரா தாவுகளுக்கு அனுப்பினதாயும், அவரவர் வீட்டுக்கு ஒருத்தரெண்டு பேர்கள் மாத்திரம் யிருக்கிறார்களென்றும், வெள்ளைக்காரர்களும் அவரவர் பெண்டுகளும் ஆஸ்திகளும் நாகப்பட்டணம் தரங்கம்பாடிக்குப் பிரவேசம் பண்ணிக் கொண்டு, பிருஷாள் மாத்திரம் சண்டை சரன்சாமி பண்ணிக் கொண்டு சண்டைக்குத் தயாராய் யிருக்கிறார்கள் யென்றும் சேதி கேழ்க்கப்பட்டது. அவர்களுக்கு நஷ்டட காலமானபடியினாலே, யென்ன தைரியமா யிருந்த போதிலும் நம்முட பவுன்சு யிறங்கினவுடனே பிரமையும் பயமும் தோன்றி கோட்டையைப் பலவந்தமாய் ஒப்பிச்சுப் போட்டு அவர்களும் பிரிசொனேர்–தெ–கேர் ஆவார்களென்று நான் முன்னும் நிஷ்கருஷை பண்ணினேன். சென்னப்பட்டணம் சீமையிலேயும் சட்டியோடே சட்டி அடிபடுகிறதும் பானையோடே பானை அடிபடுகிறதுகளும் தட்டுமுட்டுப் பணம் காசுகள்

---

[1] "என்னிடம் காண்பிக்காமல் ஏன் அனுப்பினாய்?" என்பது பொருள்.

கூடப் பழவேற்காடு வகையிரா யிடங்களுக்குக் குஞ்சு குழந்தைகளைக் கூட அனுப்பி, அவ்விடத்திலேயும் தேவனாம்பட்டணம் கூடலூர் (அங்கும் அப்படியே) சட்டமாய்த் தானே யிருக்குது. இங்கிரேசுக்காரர் கோந்துவார் இந்தியாவிலே யில்லாமல் யெடுத்துப் போமென்று சாஸ்திரம் சொல்லியிருக்கு(றதுக்கு) சேதியும் சரியாய் வந்து பிடிச்சு யிருக்கிறபடியினாலே, நம்முடைய பிரான்சுக்காரர் டில்லி மட்டுக்கும் சுவாதீனம் பண்ணிக் கொண்டு ராசதந்திரம் நடக்குமென்றும் சாஸ்திரம் சொன்னபடிக்கு நடக்குமென்றும் நிஷ்கருஷை பண்ணிக் கொண்டேன். நம்முடைய லசுக்கரும் வெளியே பிறப்பட சகலகசரன்சாமியும் பிரம்பை, லக்ஷ்மண நாயக்கன் மண்டபம், மேட்டு மேலே போய்ச் சேருது. முசே ஷெவல்லியேர் தெ தெரெ (de Dure) என்கிறவர் சருதாராய்ச் சண்டைக்குப் பயணப் பட்டு புதன்கிழமை வியாழக்கிழமை போவானென்று சொல்லிக் கொண்டார்கள்.

***1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 18; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 6; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே ஷெவல்லியேர், தெ சுப்பீர்—வகையிரா கோயிலுக்குப் போயி பூசை கேட்டு கோவர்ணதோர் கொவர்றமா மேலே போகச்சே, நான் போய் ஆசாரம் பண்ணிப்போட்டு பிடவைப் பார்க்குற சாலையே வந்து உளுக்கார்ந்து கொண்டிருக்கச்சே, ரெண்டு மூணு வெள்ளைக்காரர் வந்து பேசிக் கொண்டிருந்த பேச்சு யென்னயென்றால்: போன மார்கழி மாசம் 23 தேதி 24 தேதி 25 தேதிக்கு வெள்ளைக்காரர் 1757 ஆண்டு சனேர் மாசம் 3 தேதி 4 தேதி 5 தேதி 6 தேதி வாக்கிலே, பிரான்சா ராசாவா யிப்போ ராச்சியபாரம் பண்ணுகிற லூயி கேன்சு (லூயி1 XI) யென்கிற வரை பரீசு (Paris) என்கிற பட்டணத்திலே ராச மாளிகையிலே அவ்விடத்திலே யிருக்கிற சம்பாவுலு கோயில் பாதிரியார்களுக்குள்ளே ரெண்டு பேர் பாதிரிகளுடுப்பை வாங்கிப் போட்டு, வெள்ளைக்காரர் கிரகஸ்தாள் போட்டுக் கொள்ளுகிற உடுப்பைப் போட்டுக் கொண்டு, கத்தியைப் பக்கத்திலே வைத்துக் கொண்டு ராசாவைக் கண்டு பேசவாராப் போலே வந்து கண்டு பேச, அவர் காது குடுத்துப் பேச அந்த சமயத்திலே ஒரு குத்து பக்க விலாவிலே குத்தி மறுபடி ரெண்டாம் குத்து குத்தச்சே ராசா கீழே விழுந்தா ரென்றும், அதின் பேரிலே அங்கே யிருந்த பேர் அவர்கள் ரெண்டு பேரையும் பிடிச்சுக் கொண்டு காவல் பண்ணி, வாச்சியிலே (உளி) சரீரத்தை செதுக்கிச் செதுக்கி, அதிலே காரமான வஸ்துக்களைக் கலந்து கலந்து வார்த்து, அதிலே யெரிச்ச லெடுத்து சங்கடப்படுகிற வேளையிலே ஆரார் உங்களை கொல்லச் சொல்லி அனுப்பினார்கள் யென்று கேட்டு, தாங்கள் ரெண்டு பேரும்

யோசனை பண்ணிக் கொண்டு கொல்ல வந்தோமே யல்லாமல் ஒருத்தர் சொல்லின் பேரிலே கொல்ல வந்ததில்லை யென்று சொன்னார்களென்றும், அப்படிப்பட்ட யிமுசை பண்ணிக் கேட்டதிலும் கொல்லச் சொன்னவர்களைச் சொல்லாமல் செத்துப் போனார்களென்றும், ராசாவுக்கு ஆயிசு பிரமாணம் நன்றாய் யிருந்தபடியினாலே மேலும் பெகு ராச்சியம் பாரம் பண்ண யோகாதி செயம் விருத்தியா யிருக்கிறபடியினாலே காயம் கட்டி சுவஸ்தமாச்சுது யென்று புடுத்துக்கால் (Portugal) ராசாவுக்குச் சேதி வந்ததாயும், யிது(க்கு) முன்ரெண்டு மதம் யிந்த சம்பாவுலு கோயில் பாதிரிகள் குத்திப்போட யெத்தினம் பண்ணினவிடத்திலே தப்பிப் போய் யிந்த விசை குத்தினார்கள் என்றும், அதின் பேரிலே சம்பாவுலுக் கோயில் சன்னியாசிமார்களுக்கு[1] யென்ன சம்பவிக்கப் போகுதோ தெரியாது யென்றும், இந்தச் சேதி புடுதிக்கிசுக் கப்பலிலே வந்ததாயும் பேசிக் கொண்டார்கள்.,. அந்தச் சேதியைக் கேட்டிருந்து அப்பால் நான் பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

ஆனாலிந்த பிரான்சு ராசாவினுடைய சேதி கேட்ட பிற்பாடு முன் குரோதன வருசம் (1745–46) கார்த்திகை மாசம் தை மாதத்தையிலே வைப்பூர் சீதாராம சோசியன் வந்து, யென் சாதகத்துக்கு 37 வருசம் ஆன குரோதன வருசம் ஆயித கண்டம் யெழுதி அதுக்குப் பரிகாரம் யெழுதி, மறுபடி 48 ஆம் ஆண்டு தாது வருசம் (1756–57) ஆயுத கண்டம் யெழுதி, தப்பாது யிது, பிறம்ம லபி (பிரம்ம லிபி) யென்று எழுதினது அல்லாமல், பரிகாரமில்லை யென்று யெழுதி, ஆகிலும் களத்திர நிரியானம் (மனைவியின் மரணம்) வந்திருந்தால் கண்டம் தப்பிப்போ மென்று (சொன்னார்) ஆறாம் பிரபு (ஆளுநர் காலத்திலே) ராச விண்டுவம் (ராசாவுக்கு மகிழ்ச்சியிராது) யென்று யெழுதி யிருந்த யேட்டைப் படிச்சு, அப்பாலே பலகரை (சோழி) போட்டுக் கணிச்சுப் பார்த்து, சனி சக்கரத்திலே பக்க வேர் அன்பத்தாறும் ஆணி வேர் நாலும் ஆக அறுபது வேருக்கு அந்த நாற்பத் தெட்டாம் வருசம் ஆன தாது வருசத்திலே... அன்பத்தொன்பதே முக்கால் வேர் அத்துப்போய், கால் வேர் நிற்குற படியினாலே ஆயிசு பூரணம்; அந்தக் கால் வேரும் தெற்கித்து ஆணி வேரிலே நிற்குற படியினாலே ஆயிசு பூரண ஆயிறத்தாய(?) மென்று சொல்லி, ஆனாலிந்த கெண்டத்துக்கு உமக்குத் தாங்காமல் போறதுக்கு துலாத்திலே போக பிரகஸ்பதி தடி போலே ஒருத்தன் கிடக்குறானென்றும், அவனைத் தாங்கு தென்றும் சொல்லி பின்னையும் சற்று நேரம் பொறுத்து பலகரை போட்டுக் கெணிச்சுப் பார்த்து, யிந்த புதுச்சேரிக்குத் தொரையாயிருக்கிற வரிருக்கிறாரே, அந்த ராசாவா யிருக்கிறவர்

[1] இந்தப் பாதிரிகள் ஜெசூட் பிரிவினர். இதன் விளைவாக ஜெசூட்டுகள் இயக்கம் பின்னர் பிரான்சில் தடை செய்ப்பட்டது.

(புதுச்சேரிச்) சீமை(க்கு) யிப்போ ராசரீகம் பண்ணிக் கொண்டு யிருக்கிறவருக்கு சிங்காசனத்திலே வைத்துப் போட்டு பட்டங்கட்டி கிரீடம் தரிச்சார்களே, அது அற்பிசி மாச மாயிருக்குமோ யென்று கேட்டார். (நான்) அவர் சென்னப்பட்டணம் கட்டினதும் (பிடித்ததும்) கலியானமானதும், வருஷா வருஷம் பிரான்சாவிலே யிருக்கிற பிள்ளைகள் பெண்டுகள் இத்தனை யென்றும், செத்தவர்கள் இத்தனை யென்றும், கலியாண மித்தனை யென்றும், ஆடு மாடு கோழி கோதும்பை ரொட்டி வகையிரா பட்டணத்திலே சிலவானது களுக்குத் தொகைகளும், வீடுகள் கோயில்கள் வகையிரா சமஸ்தமும் யெழுதி ராசா வமுசஸ்தர்கள் யெல்லாரையும் வயணமாய் யின்னார் யின்னாரென்றும் கண்டெழுதி, அவர்கள் பிறந்த வருசம் கலியாணம் பண்ணின வருசம் பிள்ளைகள் பிறந்த வருசம் கூட யெழுதி (இருக்கிற) 1733 வருசத்து சின்ன லீவுரு (நூல்) ஒன்றும், நாற்பதாம் வருசத்து லீவுரு ஒன்றும் யிருந்தது, (அதிலே) 1722 வருசம் ஒயித்தோபர் மாசம் 25 தேதி பட்டம் கட்டின வயணம் யெழுதி யிருந்தது.

அதைப் பார்த்து நம்முட சுபகிருது வருசம் அற்பிசி மாசம் 13 தேதி (25 அக்டோபர் 1722) பட்டம் கட்டின தென்று சொன்னேன். அதுக்கு அவர் சொன்னது : "உம்முட துலாத்திலே கிடக்கிற பிரகஸ்பதி அவசாம (?) சிங்காசனத்திலே யிருந்து கீரிடம் தரிச்சுக் கொண்டு யிருக்கிற அவசரமாயிருக்குதே, அதினாலே அற்பிசி மாசமா யென்று கேட்டேன்," என்று பதிலுத்தரம் சொன்னார். அப்போ எனக்கு அவர் பார்க்குற புலம் நன்றாய்த் தெரியாததைத் தொட்டு யென்னத்துக்காகக் கேட்டாரோ வென்று யிருந்தேன். அந்த ஆயுத கெண்டம் போன தாது வருசம் மார்கழி மாசம் 13 தேதி நம்முட ஒத்தை கொம்பானை யென்னைப் பாய வந்துதும், நான் தப்பிச்சுக் கொண்டதும், அப்பால் அந்த மாசம் யிருபத்தாறாந்தேதி வெள்ளாழத் தெருவிலே நம்முட பல்லக்கை முறிச்சதும் பாத்தோமே. ஆயுதகண்டம் யோக பிரகஸ்பதியைப் பிடிக்குதென்று முன்னே சொல்லி, அப்பால் பிரான்சு ராசாவுக்கு ராச்சியத்துக்குப் பட்டங்கட்டினதும் அற்பிசி மாசமா யென்று கேட்டதும் அப்போ தெரியாமல் போனாலும், யிப்போ பிரான்சு ராசாவுக்கு அந்த மார்கழி மாசம் தை மாசத்தையிலே கத்தியினாலே ஆயுத கெண்டம் கண்டு சுவஸ்தமானதுக்கும் சரியாயிருந்தது.

ஆனபடியினாலே யிந்த ராசாவுக்கு யின்னம் வெகு யோகமும் நடக்கும்; இந்தியா ராச்சியத்திலே துலுக்கராச்சிய மெல்லாம் கட்டுவார்களென்று முன் சீத்தாராம் சோசியன் சொன்ன சாஸ்திரமும் மெய்தான், யிப்போ அவர் அண்ணன் மகள் சுப்பா சோசியன் சொன்னதும் சரிப்படுமென்று நிஷ்கருஷை பண்ணிக் கொண்டு, யெனக்கும் தினம் தினம் பிறவந்த மானமாய் (செழிப்பாய்) ராசயோகம் நடக்கு மென்கிற

பரவசமும், அப்பாவுக்கு யிப்ப யிருக்கிற யிந்த ராசா மனுஷர்கள் யிவ்விடத்திலே ராச்சியம் கட்டுகிறார்களே உள்ளடியிலே அவர்களிடத்திலே ரொணான பந்தமிருந்து ராச யோகம் நடக்கும். முன் சோசியமார் சொன்னபடிக்கி யிந்த வருசம் மார்கழி மாதம் கடைசி (அல்லது) தை மாசம் முதல் துவக்கி வருகிற வருசத்திலே நன்றாய் மோகரிச்சு (வளர்ந்து) பெலத்து நடக்குமென்று நிஷ்கருஷை பண்ணி யெழுதினேன்.

### *1757 வருசம், செப்தம்பர் மாசம், தேதி 22; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 10; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே சென்னப்பட்டணத்திலே யிருந்த அன்வர்தி கான் குமாரன் மமுதல்லி கான் சென்னப்பட்டணத்துக்கு வந்திருந்த (சமயம்) மேஸ்தர் பிக்கட்டு கொவர்ணருக்குச் சொல்லி சம்பத்தி ராயனைப் பிடிச்சு டோலியிலே போட்டு ஆற்காட்டுக்கு அனுப்பி, விலங்கிலே போட்டானென்று சொன்னார்கள். யெதினாலே மமுதல்லி கானுக்கு சம்பத் ராயன் பேரிலே யித்தனை துவேஷம் என்றால், யெப்போதும் மாபூசு கான், நசிபுல்லா கான் வகையராக்களிடத்தில் பட்சமாய்த் தன்னை பறவாய் (மதிக்காமலும்) பண்ணாமலும் அப்பிரிதியாய் (இருந்தான்). மமுதல்லி கானுக்கு அயிசுவரியத்துக்கு அந்தியம் (முடிவு) வராமலிருந்துது. சம்பத்து ராயனும் கஷ்ட்ட கால ஆதிக்குக் காலம் வராமலிருந்த படியினாலே அட்டியாயிருந்தது. யிப்போ உபயத்திவர்களுக்கும் கஷ்ட்ட காலம் ஆரம்பமான படியினாலே, மாபூசுகானுக்குப் போதிக்கப் பண்ணி, அவனைச் சத்துருவாக்கினான். நெல்லூர் நசிபுல்லா கானுக்கு யெழுதி பிரான்சுக் காரரிடமாய்ச் சேரச் சொன்னானென்று யிங்கிரேசுக்காரர்களுக்கு அதுக்கேத்த மார்க்கமாய்ச் சொல்லி சம்பத்து ராயனைப் பிடிக்கவும் காவல் வைக்கவும் நடந்தேறிப் போச்சுதானபடியினாலே, இனி மேல் சறுவாத்துமனாக மமுதல்லி கானுக்கு சறுவாரிஷ்ட்டம் (கஷ்டம்) பிடிச்சுதென்று சகல செனங்களும் சொல்லிக் கொண்டதும் சரியே. நடக்குறதும் சரியே தப்பாது.

### *1757 வருசம், செப்தெம்பர் மாசம், தேதி 26; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 14; சோமவாரம்*

இத்தனாள் ஊரிலே, குதிரைகள், வண்டிகள், ஆள்கள், போயிகள் (டோலித் தூக்கிகள்) வகையராக்களை அல்லோ முன் பிடிச்சு அனுப்பினார்கள். யித்தனாள் ஆனைகளும் பிடிச்சு அதின் பேரிலே கவுறுகள், புறுவுகள்[1] யேத்தி தண்டுக்கு அனுப்பிவிக்குறார்கள். யினிமேல்

[1] எருமை, ஆடு (இறைச்சி) என ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

ஊரிலே அவரவர் கிரகஸ்தாள் வீட்டுப் பெண்களைப் பிடிப்பார்களோ யென்னமோ தெரியாது. அது தவிர மத்ததெல்லாம் சோராவாரியாய் ... நடத்துகிறார்கள். யித்தனையும் தமிழர் வீட்டுகளிலே அல்லாமல் வெள்ளைக்காரத் தெரு வழி போகப்படாது. ... பறையன், வெள்ளைக்காரச் சட்டை போட்டுக் கொண்டிருக்கிறவன் வீட்டு வழிப்போனால் அந்த பறையர் சேவுகரை, அடிச்சுத் தொரத்துகிறார்கள். அப்படியிருக்க, தமிழர் வீடுகளிலே மாத்திரம் யிப்படி சோராவாரியாய் நடத்துகிறதும், அன்னீதங்களும் முசே லெறி அவர்கள் தொரைத்தனத்திலே கண்டோம்.

தண்டு முன்னிருந்த வெள்ளைக்காரரையும் சேர்த்து, அதுக்குப் பெரியதனமாய் முசே ஷெவல்லியேர் தெ துரேயை (de Dure) நேமிச்சுக் காட்டு மேட்டுக்கு அனுப்பி விச்சிருந்தார்களே, யித்தனாள் வண்ணாரக் கிடங்கிலே யிறங்கியிருந்த வெள்ளைக்காரரையும் பயணம் பண்ணி அனுப்பினார்கள். அவர்களும் சாயங்காலம் காட்டு மேட்டுக்குப் பயணம் பிறப்பட்டு ஆற்காட்டு கில்லா[1] வாங்குறதாய் யோசன பண்ணி சண்டை சரன்சாமிகள் முஸ்தீத்துப் பண்ணுகுறார்கள். யின்னம் தண்டு காட்டுமேட்டு விட்டு அப்பால் போனதில்லை. நாளை நன்றையிலோ போமோ யென்னமோ தெரியாது.

இத்தனாள் அரியூலூரிலே யிருந்து வந்த சேதி யென்ன யென்றால், அரியலூரிலே மீனாக்ஷி அய்யன் யென்கிற பிராமணன் நாமக்காவாய் (பெயருக்கு) மழவராயனைத் துரத்தனத்துக்கு வைத்து, சகல அதிகாரமும் யெக்குத்தி யாராய்ப் பண்ணிக் கொண்டு வந்தான். அப்படி யிருக்க, குறிஞ்சான் குளம் தென்னண்டைக் கரை மேலே அந்த வூர் நயினாருடைய வமுசத்தார் செத்துப் போனால் யெடுத்துப் போற வழியாம். அந்த வழியிலே மீனாட்சி அய்யன் பெருமாள் கோயில் ஒன்று கட்டிவிச்சு, கரையின் கீழே பின்னையும் தென்பாரிசத்திலே யீசுவரன் கோயில் ஒன்றும் கட்டி விச்சு, அக்கிரகாரமும் கட்டிவிச்சு, குளத்துக் கரை வழி ரெண்டு கோயிலுக்கும் நடுவே அஞ்சாறு அடியிலே சந்தாய் விட்டு யிருந்த தாம். ஒரு மாதத்தைக்கு முன்னே அந்த நயினாருடைய[2] பெண்சாதி செத்துப் போய் அந்த வழியிலே யெப்போனதயும் போலே பிணத்தை யெடுத்துப் போகவேணு மென்றால் மீனாட்சி அய்யன் யெடுத்துப் போகப்படா தென்று சொல்ல, அவர்கள் நிராகரிச்சு யெடுத்துப் போய் விட்டார்களென்று மனதிலே அக்கசை வைத்துக் கொண்டு பிறப்பட்டு, காட்டுக்கு வெளியே (உடையார்பாளையம் தாலுக்கில்) அறக்கட்டளை யென்கிற கிராமத்திலே போயிருந்தானாம். அப்பால் நயினார் மனுஷரை அனுப்பி (அய்யனை) வரச் சொல்லிச் சொன்னால், மீனாட்சி அய்யன் மூணு உடம்படிக்கை

[1] ஆற்காடு கில்லாவும், அடுத்து செங்கல்பட்டும் என்று ஆங்கிலத்தில் உள்ளது.
[2] இந்த மழவராயனைத்தான் நயினார் என்று பிள்ளை குறிக்கிறார் போலும்.

கேட்ட வயணம் : முதலாவது யினி மேல் அந்தக் கரை வழியாய்ப் பிணங்களைக் கொண்டு வரத் தேவையில்லை, ரெண்டாவது தண் பேச்சுக்குக் குறுக்குப் பேசாமல் தான் சொன்னபடி கேழ்க்குறது, மூணாவது, துறையூர் பாப்பு ரெட்டி காரியத்துக்குத் தான் யெம்மாத்திரம் பணம் சிலவு பண்ணி சிப்பந்தி வைத்தாலும் சண்டைக்குப் போனாலும் சம்மதிச்சு யிருக்குறது. இப்படியாக மூணு உடம்படிக்கை கேட்டு அனுப்பிவிச்சானாம். அதுக்கு நயினார் சம்மதிக்காமல் போனதின் பேரிலே, அந்த நயினாரை குத்திப்போட வேணு மென்று சுவாமி துரோக யோசனை பண்ணி, அஞ்சு ஆறு பேர் ஊழியக்காரரை அனுப்பி விச்சுக் குத்திப்போடச் சொல்லி அனுப்பிவிச்சபடிக்கு அவர்கள் நயினார் யிரண்டு மூன்று பேர்களுடனே மெத்தை மேலே யிருக்கச்சே வந்து நயினாரை வெட்டினார்களாம். அந்தக் காயத்(தோடு) நயினார் தப்பிவிச்சுக் கொண்டு, (அவரது ஆட்கள்) ரெண்டு மூணு பேர் குத்த வந்த அஞ்சாறு பேரையும் வெட்டினார்களாம். ரெண்டு பேர் யிதிலேயும் அதிலேயும் செத்த மாத்திரத்திலே கூக்குரலாய்க் கும்பல் கூட்டி மத்த ரெண்டு மூணு பேரையும் வெட்டிப் போட்டு, அந்தட்சணம் மீனாட்சி அய்யனைப் பிடிச்சு வந்து விலங்கு போட்டுக் காவல்பண்ணி, வீடு வாசல் கொள்ளையிட்ட யிடத்திலே ரொக்கம் கட்டி அறுபதினாயிரம் பொன்னும் ரத்தினம் (பதித்த) நகையும், சாதா நகை(களும்) சவளி வகையராவிலே முப்பதினாயிரம் பொன்னுக்கு யிருந்தது. அதைக் கொண்டு போய் நயினாருக்குக் குடுத்து விட்டார்கள் யென்று சேதிவந்தது.

### *1757 வருசம், செப்தெம்பர் மாசம், தேதி 27; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 15; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே யெட்டு மணி வேளைக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி கீழண்டை நெடுஞ்சாலையிலே யிருக்கச்சே முசே புறுணியோர் (M. Brenier), முசே சோல்மினியாக்கு வகையிரா ஆறேழு வெள்ளைக்காரர் யிருக்கச்சே நான் போய் ஆசாரம் பண்ணினேன். சந்துஷ்ட்டியாய்த் தானே பார்த்துக் கொண்டிருந்தார். அரை மணி நேரம் யிருந்து பிடவை பார்க்குற சாலையே போயிருக்கச்சே, முசே கில்லியார் வந்து, "ஒருத்தர் கையிலே (அச்சு) அடிச்சுப் போட்ட லீவுறு சீமையிலே யிருந்து வந்தது. அது படிச்சுப் பார்த்துக் கொண்டேன். அதிலே நாசர் சங்கு செத்த மட்டுக்கும் நடந்ததைச் சரியாய் யெழுதியிருந்தது. அதிலே மச்சிலிப்பந்தரிலே கோசா கலந்தர் கான் யென்கிற சுபேதாரனிருந்தவன் நாசர் சங்கு உத்தாரப் படிக்கு பிரான்சு பெத்திரிக் கப்பித்தான் முசே கொக்கேத்துவையும் (Coquet) அவர் பெண்சாதி பிள்ளைகள், சின்னக் கப்பித்தான், கணக்கர் வகையிராக்களையும் கும்பினீர் குடுத்தியேரையும் கூடக் காலில் பண்ணி

வெகு சங்கடங்க ளெல்லாம் பண்ணின போது, புதுச்சேரியிலே யிருந்து முசே கில்லியார் கோன்சேலியேரை கொம்மாந்தாம் செனரலாக்கி, முசே லத்துரை (Latour) சொலுதாதுகளுக் கெல்லாம் கப்பித்தானாக்கி, நூத்தன்பது சொலுதாகளுடனே(யும்) மூணு கப்பலுகளுடனே(யும்) சண்டை சரன்சாமிகளை கூடக் குடுத்து அனுப்பினதுக்கு, முசே கில்லியார் அவ்விடத்துக்குப் போயி உபாயமாய் சண்டையு மில்லாமல் பட்டணத்து சனங்களை நோகப் பண்ணாமல் கொள்ளையிடாமல் மச்சிலிபந்தரையும் பிடிச்சுக் கொண்டு முசே கொக்கேத்து வகைராக்களைக் காவலும் விடுவிச்சு, மச்சிலி பந்தரையும் பிடித்துக் கொண்டு அமுல் பண்ணின போது பட்டணத்து சனங்க ளெல்லாம் ஆச்சரியப்பட்டு, யிப்படி உபாயமாய்ப் பட்டணம் சத்துருக்கள் கையிலே யிருந்ததை சண்டை யில்லாமல், சனங்களுக்கு நோவென்கிற தில்லாமல் வாங்குறது எங்கும் கண்டதில்லை, கேட்டதில்லை. வெகு சமர்த்தன், கெட்டிக்காரன் என்றும், யிவர்கள் அமுல் பண்ணினால் நாங்கள் சுகப்படுவோம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். கோசா கலந்தர் கான் யென்கிற மச்சிலிபந்தர் சுபேதாரன் பட்டணத்துக்கு வெளியே பேட்டையிலே யிருந்தவன், கோட்டைக்குக்கும் பட்டணத்துக்கும் தண்ணீர் முதலான ரஸ்துக்கள் போகாமல் முத்திகைப் போட்டு சண்டைக்கு யெத்தனம் பண்ணின விடத்திலே, ஒரு நாள் ராத்திரி அவனிருக்கிற யிடத்துக்குப் போயி விழுந்து சண்டை பண்ணி கோசா கலந்தர் கானையும் பிடிச்சுக் கொண்டு சிறிது பேர் ராணுவத்தையும் சேதப்படுத்தினதின் பேரிலே, அவ்விடத்துப் பாளையக்காரர், வர்த்தகாள், குடிகள் வகையிராக்கள் முசே கில்லியார் ஞாயஸ்தர், நல்ல சூரனென்று பிரான்சுக்காரருக்குக் கீழ்ப்படிஞ்சு நடந்து கொண்டார்கள் என்றும், பிள்ளையும் அனேகம் சேதியிருக்கு தென்றும், முசே லெனுவார் யேனத்திலே (Yanam) யிருந்தவன் துலுக்கர் வந்து பெத்திரியைச் சுட்ட மட்டுக்கும் யிவனும் வீடுகளில்லாத குப்பத்தை நெருப்புப் போட்டுச் சுட்டு, சிறிது கப்பல் கலுப்பு யிருந்ததையும் சுட்டுப் போட்டதும், தைரியமில்லாமல் யெதித்து சண்டை குடாமல் பிறப்பட்டுப் போய் விட்டானென்றும், அவனொரு யிடத்துக்குப் பெரியவனாக யிருக்கிறதுக்கு யோக்கியனல்ல னென்றும், சத்தே நித்தையாயி யெழுதியிருக்கிற புஸ்தகத்தைப் படிச்சுப் பார்த்தேன். யிந்தப்படி லட்சம் பொஸ்தகம் (பிரதிகள்) போடப்பட்டு யேரோப்பா ராச்சிய மெல்லாம் படிச்சார்கள். யெனக்கு வெகு கீர்த்தி யுண்டாச்சுது. யிது போது மென்று சொன்னதுக்கு, நானும் ஸ்தோத்திரமாய்ச் சொல்லி, "அந்த லீவுரை' வாங்கிக் கொண்டு வாரும், அதிலே யின்னம் சிறிது காரியம் உண்டு,

---

[1] கில்லியார், லெனுவார் பற்றிய இந்நூற் செய்திகளை தொகுதி 7 இலும் பிள்ளை எழுதியுள்ளார்.

அது வெளிச்சம் பண்ணுகுறேன்," யென்று சொன்னதுக்கு, "நாளைக்கு வாங்கி வாறேன்," யென்று சொல்லிப் போட்டு அவர் கோந்துவாரே போனார்.

அப்பால் முசே லெனுவார் வந்தவன் ஆசாரம் பண்ணினான். நானும் ஆசாரம் பண்ணினேன். அவன் வீட்டுக்குப் போனான். நானும் பூந்தோட்டக் கச்சேரிக்கு பத்து மணிக்கு வந்தேன்.

***1757 வருசம், செப்தெம்பர் மாசம், தேதி 28; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 16; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே எட்டு மணிக்கு கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி கோவர்ணதோரும் முசே புறுணியே வகையிரா அஞ்சாறு பேர் ஒப்பிசியால்மார்களும் கொவர்ணமா மேலே யிருந்தார்கள். நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவர் முசே பிறுணியே வகையிராக்களுடனே பேசிக் கொண்டிருந்தார். அப்பால் அங்கே யிருந்து பிடவை பார்க்குற சாலையே வந்தேன்.

அவரவர் சொன்னது : முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் வகையிரா ராசா மனுஷர் வந்தவர்களும், அவர்கள் தாலூக்கு சொலுதாதுகளும் பிறப்பட்டு யித்தனாள் பிரம்பை மேலே மேட்டு லட்சுமண நாயக்கன் மண்டபம் சேர்ந்து, அங்கே யிருந்து நாளை நன்றைக்குப் பயணப்பட்டு செஞ்சி போய்ச் சேருகுறார்களென்று சொல்லி, வழுதாவூர் வில்லியநெல்லூர் வகையிரா தாலூக்குக ளெல்லாத்துக்கும் சிப்பாயிகள் போயி குதிரை மனுஷர் வகையிராக்களைப் பிடிக்குற காபிரா சொல்லி முடியாதென்று செனங்கள் சொல்லிக்கொண்டார்கள். சீமா மூலத்திலிருந்து ஆள் வகையிரா அழைப்பிக்கச் சொல்லி சவரிராயப் பிள்ளைக்கும் முசே தெவோ தாக்கீது பண்ணினானென்று சொன்னார்கள்.

ஷெவல்லியே தெ சுப்பீர் வகையிரா ராசாவினுடைய ஒப்பிசியால்மார் வகையிரா பயணப்பட்டு பிரம்பை மேட்டு மேலே போய்ச் சேர்ந்தார்கள்.

***1757 வருசம், செத்தெம்பர் மாசம், தேதி 29; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 17; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போன விடத்திலே நேத்து ராத்திரி பிரம்பை மேட்டுக்கு வெள்ளைக்காரார் தண்டு யிறங்கி யிருக்கிற யிடத்துக்குப் போன முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் சரன்சாமிகள், கூலிக்காரார் வகையிரா சாமான்கள் வந்து சேரயில்லை யென்று மறுபடி வந்துவிட்டா ரென்றும், மேல்வீட்டின் பேரிலே யிருக்குறாரென்றும்

குதிரைகள் யெருதுகள் பாறுபறுதாக்கள் (கூலிகள்) யெடுக்கிறதுக்கு சரன்சாமி ஆகயில்லை யென்றும் கோபமாயிருக்குறாரென்று சொன்னார்கள். அப்பால் முசே லெறி சீமைக்குக் காகிதங்கள் யெழுதுகிற அவசரத்தினாலே வீட்டுக்குள்ளே காம்பிராவிலே தானே யிருக்குறார்க ளென்றும் சொன்னார்கள். கூடலூரிலே அவரவர் தட்டுமுட்டு சாமான் ரொக்க முள்ளபட தரங்கம்பாடி, நாகப்பட்டணம், உடையார்பாளையம் போய்ச் சேர்ந்துது யென்றும், சென்னப்பட்டணத் தாருது பழவேற்காடு வகையிரா யிடங்களுக்குப் போச்சு தென்றும் சொல்லி யிந்த பேச்செல்லாம் நடந்தது.

*1757 வருசம், செத்தம்பர் மாசம், தேதி 30; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 18; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலத்தாலே வினாயகப் பிள்ளை, சவரிராயப் பிள்ளை பேரிலே புதுசாய் வந்த முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் சரன்சாமி பாறு பறதன் தயாராகயில்லை யென்று அழைப்பிச்சு சுருக்குப் பண்ணினா ரென்று முசே தெவோ கூட வந்து கண்டு பேசினாரென்றும் சொன்னார்கள். நான் ஒரு நாழிகை நேரம் பேசியிருந்து பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி: தேவனாம்பட்டணத்திலிருந்து ஒரு சம்பானிலே பல்லக்குகள், பல்லக்குக் கோப்புகள் (கழிகள்), செம்பு தபலைகள், பெட்டிகள் தட்டுமுட்டுகள் சாமானுகள் யேத்திப் போனதாயும், அதைக் காரைக்காலார் பிடிச்சுக் கொண்டாப் போலேயும், அவர்கள் தேவனாம்பட்டணம் வர்த்தகளுது, நாகப்பட்டணத்திலே கொண்டு போயி யிறக்கச் சொல்லி அனுப்பிவிச்சார்கள் என்றும் சொன்னதாயும், அந்தச் சேதி புதுச்சேரிக்கு யெழுதி வந்ததாயும் சொன்னார்கள்.

## அக்டோபர் 1757

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 1; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 19; சனிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : முசே தொத்தேல் வகையிராக்களுக் கெல்லாம் குதிரைகளையும் சீனி (saddles) வகையிரா சரன்சாமி பண்ணுகுறார்க ளென்றும், நாளைய தினம் பயணம் பிறப்பட்டு வழுதாவூருக்குப் போயங்கே யிருபது நாள் முகாம் பண்ணி அப்பால் செஞ்சிக்குப் போக முசே ஷெவல்லியே தெ சுப்பீர் போவா னென்றும் யிவ்விடத்திலே யினி மேலே முசே லாலி (M. Lally) வருகிறவர் பிறகே வருகுறவர்களுக் கெல்லாம் வீடுகள் முஸ்தீதுகள் பண்ணுகுறார்கள் யென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 2; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 20; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே ஷெவல்லியே தெ சுப்பீர் சண்டைக்குப் பயணச் சன்னாகமாய் நவபோத்து, பயிராக்குகள் கூட நடக்க வழுதாவூருக்குச் சாயங்காலம் போனார்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 3; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 21; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெகு, முசே (லகிரனே) (M. La-grenee), முசே துருவேத்து வகையிரா மூணு நாலு பேர் பிடவை பார்க்குற சாலையிலே யிருந்தார்கள். யென்னைக் கண்டவுடனே ஆசாரம் பண்ணினார்கள். நானும் ஆசாரம் பண்ணினேன். முசே லாலி இஸ்காதுரு முரீசு சேர்ந்துதென்று மயேயிலே யிருந்து வந்த காகிதத்திலே யெழுதி வந்ததென்றும், அஞ்சாறு நாளையிலே கப்பலுகள் வந்து சேர்ந்து விடும் யென்றும் யிந்தப்படி சொல்லி வெள்ளைக்காரர் தெருவிலே யிருக்கிற வீடுகளெல்லாம் வருகுற ராசா மனுஷருக்கு விடுதிவிட யெடுத்து யெழுதினார்கள் யென்றும், தமிழர் தெருவிலேயும் விடக்கத் தக்கதாக வீடுகள் எடுத்து யெழுதுகிறார்க ளென்றும், இஸ்காதுரு ஒயித்தோபர் மாசம் 10 தேதிக்[1]குள்ளே வந்து சேருமென்றும் சொன்னார்கள். ஆனால் கப்பல்கள்

---

[1] இத்தேதிகள் பற்றி பிரெஞ்சு ஆவணங்களே மாறுபடுகின்றன. சான்றாக 17 ஆம் தேதியில் தான் அது மரீசியஸ் வந்தது என்கிறது d'Ache's Memoirer.

வந்தவுடனே மறுபடி பயணமாய்ப் போய் விடுமே, சண்டைக்குப் போகத் தக்கதாகக் கூடுகிறதில்லையே, உடனே மழைக் காலம் வருகுதே யென்று சொன்னதுக்கு, அப்படித் தான் யென்று சொல்லி முசே லாலி, லுத்தினாந்து செனரால், மெத்தப் பெரிய மனுஷர் யிந்த இந்தியா ராச்சியத்துக்கு யிப்படிப்பட்ட பெரிய அதிகாரஸ்தர் ஒருக்காலும் வந்ததில்லை, யிதொரு புதுமை யென்று யிதை ஆச்சரியமாய்ப் பேசி யிருந்தார்கள். அப்பால் கூடலூராருது அரிசி நெல்லு வகையிரா சாமானுளுகள் பத்துப் படகிலே யேத்தினார்(கள்). நாகூர், நாகப் பட்டணம் துறைக்குப் போனதைக் காரைக்காலிலே பிடிச்சுக் கொண்டார்களென்றும், நாகூர் கிருஷ்ணய்யன் வகையிரா கூடலூர் வர்த்தகாள் யிவ்விடத்திலே வந்து உத்திரவு வாங்கிக் கொண்டு போக வந்திருக்குறார்களென்றும் தமிழர் வந்தவர்கள் சொன்னார்கள்.

### *1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 4; ஈசுவர வருசம், பிரட்டாசி மாசம், தேதி 22; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி கோவர்ணமா மேலே யிருந்தார். முசே பிறுணியே (M. Brenier) வகையிரா அஞ்சாறு பேர் ஒப்பிசியால்மார்களிருந்தார்கள். ஆசாரம் பண்ணி நின்றேன். ... (துரை) பார்க்கயில்லை. மறுபடி திரும்பிப் பார்த்தவுடனே ஆசாரம் பண்ணின உடனே சிவக்கப் (வெறித்துப்) பார்த்துக் கொண்டிருந்தார்.

முசே செற்பந்தியோர் (M. Charpentier) வந்து யென்னமோ பேசினான். நானிப் பாலே வந்து உளுக்காந்துக் கொண்டிருக்கச்சே, அங்கே சிறிது பேர் வெள்ளைக்காரர் வந்து சொன்னது : சேத்துப்பட்டின் பேரிலே நம்முடையவர்கள் சண்டைக்குப் போன விடத்திலே[1] சாகராப்பானுக் (மதிலுக்) குள்ளே போனவிடத்திலே, சாகராப்பானுவை கோட்டைக்காரன் தானே கொளுத்தி விட்டானென்றும்,[2] அதன்பேரிலே நம்முடையவர்களுக்குச் சேத மென்றும், காயமும் சேதமும் அறுபது பேர் வெள்ளைக்காரர்களுக்குக் காணு மென்றும் முசே சொபினேக்குக் காலிலே காயம்பட்டு தென்றும், பின்னையும் ரெண்டொரு ஒப்பிசியால்மார்களுக்கு சேதமும் காயமும் உண்டென்றும் பேசிக்கொண்டு யிருந்து, யின்றைக் குள்ளே (அல்லது) நாளைக்குள்ளே கோட்டை கைவசமாகு மென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதைக் கேட்டிருந்து அப்பால் அவ்விடத்தி லிருந்து பிறப்பட்டு, பூந்தோட்டக் கச்சேரியே வந்தேன்.

---

[1] தேவனாம்பட்டணம் கோட்டையை முதலில் தாக்க வேண்டுமென்று சுப்பிரின் திட்டம். அதைப் புதுச்சேரிக் கவுன்சில் ஏற்றுக் கொள்ளவில்லை.

[2] ஊரின் மதில்மேலிருந்த பீரங்கிகள் சுடப்பட்டன.

ஏழெட்டு நாளைக்கு முன்பாகத் தானே மயிசூர் நந்திராசா காகிதம் ஒன்று முசே லெறிக்குக் கொண்டு வந்து குடுத்து, அவர்கள் வைக்கீல் வெங்கிட்ட நாராணப்பய்யன் என்கிறவனும் நாலஞ்சு நாளைக்கு முன்னே வந்து முசே லெறியுடனே பேசின சேதி யென்ன வென்றால் : நந்தி ராசா அண்டைக்கு மாபூசு கான் சந்தி அனுப்பினதாயும், அந்தச் சேதி முசே லெறிக்குச் சொல்லி அனுப்பிவிச்சாப் போலேயும், அது யென்ன வென்றால், யிப்போ இங்கிரேசுக்காரர் வசமாயிருக்கிற மதுரை சீமை நாற்பது லட்சம் ரூபாய் சீமையும் உங்களுக்குக் கட்டிக் குடுக்கிறோம், நீங்கள் தங்களுக்கு யிவ்வளவு சீமையும் யிவ்வளவு குதிரை பவுன்சு சம்பளமும் குடுக்கிற தென்றும், அது சம்மதி யில்லாவிட்டாலும் உங்களுக்கு நீங்களனுப்பும் பவுன்சுக்குச் சம்பளமும் உங்களுக்கு யிவ்வளவு சீமை சாகீர் யென்று விட்டுக் குடுக்கிறோமென்றும், அதுக்கு உங்கள் பவுன்சுக்குச் சம்பளமும் உங்களுக்கு யிவ்வளவு சீமை சாகீர் யென்று விட்டுக் குடுக்கிறோமென்றும், அதுக்கு உங்கள் பவுன்சு அனுப்பிவிக்குறதென்றும், யிந்த ரெண்டு ஒடம்படிக்கையிலே யெந்த ஒடம்படிக்கை பேசினாலும் சம்மதி தானென்றும், வந்து சேதி சொல்லி காகிதமும் குடுத்ததுக்கு, யிப்போ கப்பல் போற அவசரமான படியினாலே மேலுத்தரம் சொல்லுகுறோமென்று வெங்கிட்ட நாராயணப்பய்யனுக்குச் சொல்லிப் போகச் சொன்னதாயும் சேதி கேழ்க்கப்பட்டது.[1]

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 7; ஈசுவர வருசம், பிறட்டாசி மாசம், தேதி 25; சுக்கிறவாரம்***



இத்தனாள் முன் கூடலூர் வர்த்தகர்களுது தட்டு முட்டுகள் நாகப்பட்டணத்துக்கு அனுப்பின விடத்திலே காரைக்காலிலே பிடிச்சுக் கொண்டதுக்கு நாகூர் கிருஷ்ணய்யன் முதலான வர்த்தகன் யிவ்விடத்திலே வந்து பிரயத்தனம் பண்ணிக் கொண்டிருந்தார்களே, அதுக்கு நேத்து கோன்சேலில் பேசித் தீந்து வர்த்தகர்களுது அதை விட்டு விடச்சொல்லி காரைக்கால் முசே பொறுஷேக்குக் (Porcher) காகித மெழுதிக் குடுத்ததாய் சேதி கேழ்க்கப்பட்டுது.



***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 8; ஈசுவர வருசம், பிறட்டாசி மாசம், தேதி 26; சனிவாரம்***

இப்பவும் அஞ்சாறு நாளாய் கேழ்விப்படுகிற சேதி யென்ன வென்றால் : யிவ்விடத்துக்குக் கப்பலுகள் வந்து சொலுதாது வகையிரா

[1] தன் தம்பியைப் போலல்லாமல் மாபூசு கான் மதில் மேற் பூனையாகவே கடைசி வரை இருந்தார். எனவே தான் ஆங்கிலேயர் அண்ணனை விட்டு தம்பியான மகம்மதலியை நவாபாக வைத்தனர். மாபூசு கானின் இந்த யோசனைகளைப் பரிசீலிப்பதற்குக்கூட லெறி அதிகாரமில்லாமல், தட்டிக் கழித்தார்.

பெலங்கள் வந்து தென்குற சேதி கேட்டு சென்னபட்டணத்திலே அவரவர் தட்டுமுட்டு பணங்காசுகள் குஞ்சு குழந்தைகள் கூட பழவேற்காடு வகையிரா யிடங்களுக்கு அனுப்பி விட்டவர்கள், நம்முட பவுன்சு சேத்துப்பட்டு, ஆற்காட்டுக்கு மேலே யிருக்குற (போகிற) சாடை அறிஞ்சு, (உடனடியாகப்) பயமில்லை யென்று குஞ்சு குழந்தை வகையிராக்களையும் சிறிது தட்டுமுட்டுகளையும் கூட அழைப்பிச்சுக் கொள்ளுகிறார்கள். வீடு வாசல்கள் யிடிக்குறதுகள் நின்று, காபிராவும் நின்று யிருக்கு தென்று சேதி சொன்னார்கள். கூடலூரிலேயும் வெள்ளைக்காரச்சிகள் தரங்கம்பாடி, நாகப்பட்டணம் போயி சேர்ந்து, பணங்காசுகள் கூட தரங்கம்பாடி நாகப்பட்டணம் உடையார்பாளையம் போய்ச் சேர்ந்தது மல்லாமல், குடி படைகள் கூட திருவீதி புவனகிரி வகையிரா யிடங்களுக்குப் போனவர்களிப்போ மறுபடி குடிகள் மாத்திரம் வந்து சேருகுறார்களென்றும் சொன்னார்கள். காபிரா அடங்கி யிருக்கிற தென்று சொன்னார்கள். யென்ன யின்னேரத்துக்குக் காபிரா அடங்கி நின்றாலும் நாளை வருகுற யிந்த அற்பிசி மாசம் 21 தேதி முதல் வருகுற பெகுதானிய வருசம் அற்பிசி மாசம் 20 (1757 செப்டம்பர் 2) தேதிக்குள்ளே இங்கிறேசுக்காரர் பட்டணம் பரிச்சேதம் யிராது, இங்கிரேசுக்காரர் கொடி பறவாது, பிரான்சுக்கொடி பறக்க வேணும் ஆனபடியினாலே தக்கன் கூட பிரான்சு வெள்ளைக்கொடி பறந்து தீரவேணும் யென்று முன் குரோதன வருசம் மார்கழி மாசத்தையிலே (1745–46) சீதாராம சோசியர் சொன்ன சாஸ்திரம் பொய்க்குமோ? ஒருக்காலும் பொய்யாது. பனி யிரண்டு வருஷ காலம் அவன் சொன்னபடிக்கி நலம் மிளப்பம் ரெண்டும் சரிப்பட்டு வந்தபடியினாலே மேல்ப் பலனும் சரிப்படுமென்றும் தோத்தியிருக்குது. அனுபவத்தின் பேரிலே அறிய வேண்டியது.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 10; ஈசுவர வருசம், பிறட்டாசி மாசம், தேதி 28; சோமவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் வழுதாவூர் கோட்டையிலே யிருக்கிற வரிடத்திலே முசே அஸ்திரீக்கு (அஸ்திருக்) (M. Astruc) யென்று முன் திருச்சினாப்பள்ளிக் கோட்டையிலே சண்டையிலே அகப்பட்டுக் கொண்டிருந்து (கைதியாகி), அப்பால் வெளிப்பட்டு, சீமைக்குப் போயங்கே யிருந்து, யிந்த ராசா மனுஷர் கப்பலிலே கூட வந்தவன், அப்போது ஒப்பிசியாலாயிருந்தவன் (துளபதி) தான் யிப்போவும் அதே உத்தியோக(மே வகித்து) அவனும் முசே தொத்தேலும் ரெண்டு பேர்களும் முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் (கீழே யிருந்து) ... காரியங்க ளெல்லாம் நடத்திக் கொண்டு வருகுறதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது. விணாயகன் உத்தியோகம் தண்டுக்குச் சிலவுக்கு (க் கணக்கு எழுதிவைக்கிற) உத்தியோகம் (மாயிருந்ததை) முசே மரேவும்

(வுக்கும்) (மரி-M. Marie) முசே அபலேவுக்கும் (M. Abeille) குடுத்தார்கள் என்றும், அவர்கள் தங்க(ளது) மனுஷரைப் போட்டு, யின்று நாளை முதல் விசாரிச்சுக் கொள்ளப் போகிறார்கள் யென்றும்,[1] மைசூர் வெங்கிட்ட நாராயணப்பய்யனுக்குச் சொல்லி அனுப்பி, அவயும் தங்களிடத்திலே தானே மொகத்துமா (விவகாரம்) வந்து பேசச் சொல்லிச் சொன்னதாயும், யினி மேல் துறையூர் வகையிரா மொகத்துமாக்க ளெல்லாம் அவ்விடத்திலே தானே நடக்கப் போகுதென்றும் சொல்லிக் கொள்ளுகுறார்கள். சேதி பயாவாறியாய், நிசமாய் அறிய வேண்டியது.

இத்தனாள் நல்லமழை பேஞ்சுது. மழைக்காலம் ஆரம்பமான படியினாலே மழை பேஞ்சுது. ஆச்சரியமல்ல.

### *1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 13; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 1; குருவாரம்*

இத்தனாள் மதுரை சேதி கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், மாபுசு கான் மனுஷன் பறகாதுல்லா (பரகதுல்லா) வென்கிறவனுக்கும் இங்கிலீசுக்காரர்களுக்கும் ஒடம்படிக்கை யாய், பரக்கதுல்லா பதினாயிரும் ரூபா ரொக்கத்திலே வாங்கிக் கொண்டு மதுரைக் கோட்டையை இங்கிரேசுக்காரர் கையிலே ஒப்பிவிச்சுவிட்டுப்[2] போய் விட்டதாயும், யிதிலே பிரான்சுக்காரர்களுக்குக் கப்பலுகளும் தளமும் வந்து தென்று சேதிகேட்டு மதுரைக் கோட்டையிலே யிருந்த யிங்கிரேசுக்கார மனுஷர்கள் கோட்டையைக் காலியாய் போட்டுப் போட்டு, தமது பவுன்சும் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையை(யும்) பந்துபஸ்துப் பண்ணி வைக்கிறார்க ளென்றும் மாபூசுக் கானும்[3] மயிசூரார் பவுன்சும் அயிதர் நாயக்கன் வந்தவனும் மதுரைக் கோட்டையைக் கட்டிக் கொள்ளுவார்க ளென்றும் சேதி கேழ்க்கப்பட்டது.

### *1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 14; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 2; சுக்கிறவாரம்*

இத்தனாள் பகலைக்கு மேலாகக் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், சேத்துப்பேட்டு (பட்டு)க் கோட்டையை நம்முடைய பிரான்சுக்காரர் லக்கை யேறி பத்தே பண்ணி, நேத்தய தினம் முதல் தேதி குருவாரம் வெள்ளைக் கொடி போட்டார்க ளென்று சேதி வந்தது.

---

[1] இது முதல் அரும்பாத்தையின் பணிகள் வெள்ளையர் கைக்கு மாறின.

[2] காசு கொடுத்தால் இந்தியப் பாளையக்காரர் எதையும் செய்வார்கள் என்பதற்கு இது ஒரு சான்று.

[3] மாபூசு கான் அடிக்கடி கட்சி மாறுவதைப் பார்க்க. யூசுப் கானும் ஆங்கிலேயர் தரப்பில் நின்றான்.

அதிலே யிருந்த யிராசத்து[1] மகம்மது கான் யென்கிறவனைப் பிடிச்சுக் கொண்டார்கள் என்றும், அவனுட கூட யிருந்த பேரிலே இரநூத்தன்பது துலுக்கப் பாராக்கரரைக் கத்தியினாலே வெட்டியும் குத்தியும் கொன்று போட்டார்களென்றும், நாற்பது பேர் வெள்ளைக்காரர் யிருந்தவர்களைப் பிடிச்சுக் காவல் பண்ணிக் கொண்டார்கள்.[2] என்றும் சொல்லிக் கொண்டார்கள். லக்கை யேறிப் பிடிச்சபடியினாலே நம்முட பிரான்சு சொலுதாதுகளிலேயும் சேதமுண்டாயிருக்கு மென்று சொன்னார்கள். நன்றாய்த் தெரிந்து விசிதமாய் யெழுத வேண்டியது.

இத்தனாள் பகலைக்கு மேலாகத் தமுக்குப் போட்ட தென்ன வென்றால், வெளியிலே யிருந்து நவதானியம் முதலான தானிய வகைகள், மைத்த பலசரக்கு, நெய் வகையிரா சரன்சாமிகள் பட்டணத்துக்குப் பதினஞ்சு நாளாய் வராமல் ... கிடையாமல் போனபடியினாலே, தண்டுக்கு மனுஷர்கள் மாடுகள் ஒட்டகம் ஆனை குதிரைகள் வகையராக்களைப் பிடிச்சு அனுப்புகிற சோராவாரியினாலே, யெல்லா வஸ்துகளும் வரத்து நின்று போனபடியினாலே பட்டணம் காபிராப்பட்டு யிருக்கிற தென்றும் சேதி கேழ்க்கப்பட்டு, தொரைகளினிமேல் மாடுகள், மனுஷர்கள் வகையிராக்களைப் பிடிக்குறதில்லை, அவரவர் வெளியிலே யிருந்து தானியம் வகையரா தினிசுக(ளை) அழைப்பிச்சுவிக்கச் சொல்லி தமுக்கு போடச் சொல்ல, அந்தப் படிக்கு தமுக்குப் போட்டார்கள். ஒரு வேளை மாரிக் கால மென்று மூணு மாதமும் சண்டை நிறுத்தினாலும் நிறுத்துவார்கள் யென்று சொல்லிக் கொண்டார்கள்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 15; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 3; சனிவாரம்***

இத்தனாள் காலத்தாலே நேத்து சேத்துப்பேட்டுக் கோட்டை வாங்கின சேதி வந்தபடியினாலே, அப்பால் ஆற்காட்டுக் கோட்டையை வாங்கச் சொல்லி நம்முட பிரான்சு தளகர்த்தர் வகையிரா தளம் யிறங்கி யிருக்கிற சேதி சேத்துப்பேட்டுக் (பட்டுக்) கோட்டைக்கு முசே ஷெவல்லியோர் தெ சுப்பீர் வழுதாவூரிலே யிருந்து யெழுதி அனுப்பினா ரென்றும் யின்றைய தினம் முசே லெறியும் சாமான்க ளெல்லாம் ஆற்காட்டுக்குச் சரன்சாமி பண்ணச் சொல்லியும், முசே தெவோவுக்கும் சொல்லி சீமா மூலத்திலே யிருக்கிற அமுல்தாருக்கும் சவரிராயன் யெழுதி அனுப்பினாரென்றும் சொல்லிக் கொண்டார்கள். சேத்துப்பேட்டு (?) கில்லா சாகீர் முன் ரெண்டு மாசமாய்ச் சவரிராயன் (நிர்வகித்து வந்ததை)

---

[1] இது நசீர் என்றிருக்க வேண்டுமென்று டாட்வெல் குறிப்பிடுவது சரி என்று தோன்றவில்லை.

[2] வெள்ளையர் தமது இனத்தவரையும், இந்தியரையும் நடத்திய வேறுபாட்டைக் கவனிக்க.

வந்தவாசி தாசில்தாரனுக்கு யெழுதி அனுப்பி சப்த்தி பண்ணி பிலன் அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தார்கள். இத்தனாள் அலாயிதாவாக மங்கல ராமச்சந்திரராயனை அமுலுக்கு அனுப்பினானென்று சொன்னார்கள்.

*1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 16; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 4; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு ஒரு கப்பல் மசுக்கரையிலிருந்து ஓடிவரச்சே, வீராம்பட்டணம் துறைக்கு யிப்பறம் வரச்சே, ஒரு பீரங்கி போட்டு கடசியான பாய்மரத்திலே சிகப்புக் கொடிகள் கட்டினவுடனே, துறையிலிருந்து கப்பலிலே ரெண்டு பீரங்கிப் போட்டு, மேலே கபுலா கொடி மேலே பூலால் கொடிக்கு மேலே ஒரு சிகப்புக் கொடி போட்டான். அப்பால் கோட்டையிலே கொடியின் பேரிலே ஒரு வெள்ளைக் கபுலாக் கொடியும் கறுப்பு பூலாக் கொடியும் போட்டார்கள். யெல்லாம் (பின்னர்) யிறக்கிப் போட்டார்கள். கப்பல் வந்து துறை பிடிச்சு முசே மறுக்கி தெ கொம்பிளாம் (Marquis de Conflans) யென்கிறவன், முசே துப்பிளேயிக்சு நாளையிலே வந்திருந்து கோல்கொண்டைக்கு சலாபத்து சங்கு அண்டைக்குக் கும்பினியா ரனுப்பின வெகுமானம் கொண்டு போயி குடுத்துப்போட்டு மறுபடி புதுச்சேரிக்கு வந்து சீமைக்குப் போனவன், யிப்போ மறுபடி யிந்தக் கப்பலிலே வந்து யிறங்கி முசே லெறியை வந்து கண்டு பேசி, முசே லாசு வீட்டிலே போய் விடுதியினார்களென்றும், (?) யிந்தக் கப்பல் முசே லாலி, லூத்தினாந்து செனாரால், ஆக வருகிறவனுடனே கூட வந்து மசுக்கரை சேந்து,[1] அவர் முன்னுதாக யிவரை அனுப்பி, யிவ்விடத்திலே தாங்கள் பத்தொன்பது யிருபது கப்பலுடனேயும் நாலாயிரம் சொலுதாதுகளுடனேயும் வருகுறபடியினாலேயும் சரன்சாமிகள் முஸ்தீது பண்ணிவிக்கச் சொல்லி முசே ஷெவல் லியேர் தெ சுப்பீருக்கும் காகிதம் யெழுதி அனுப்பினாரென்றும், அந்தக் கப்பலுகளும் வந்தால் யெட்டுப் பத்து நாளையிலே வந்து இங்கே துறை பிடிக்க வேணுமென்றும், யில்லாவிட்டால் அச்சி வந்து பிடிச்சு, அங்கே மழை காலத்துக்கு எம்வேறுனாரிட்டு (மழைக்காலம் கழித்து) மார்கழி மாசத்தையிலே, சனேரிப் பண்டிகைக்கு வந்து சேருவானென்றும் சொன்னதாய் சேதி சொன்னார்கள்.[2]

[1] இவை பிள்ளை கேள்விப்பட்ட சேதிகள். பிள்ளை தரும் கப்பற்படை நடமாட்டத் தேதிகள் சில நாட்கள் முன்னதாக இருக்கின்றன என்று ஆங்கிலப் பதிப்பாசிரியர் டாட்வெல் எழுதுகிறார். சுப்பீர், லாலி போன்றோரின் நினைவுக் குறிப்புகளை அவர் ஆதாரமாகக் காட்டுகிறார்.

[2] நம் பிள்ளை இப்பொழுதெல்லாம் கோட்டைக்குச் செல்வதைத் தவிர்த்து வந்தார். எனவே தான் சேதி கேள்விப்பட்டதாய் அன்றாடம் எழுதுகிறார்.

வந்த கப்பல்காரன் கோட்டைக்காரனுக்கு பீரங்கி போடவுமில்லை. கோட்டைக்காரன் முன்னுதாய்ப் போடவுமில்லை. யெதுனாலே பீரங்கி போடயில்லை யென்றால், முசே ஷெவல்லியோர் தெ சுப்பீர் வழுதாவூரிலே யிருந்தபடியினாலே யிவ்விடத்திலே யிருக்கிற முசே லெறி வகையிரா கோன்சேலியோர் கும்பினியார் தாலூரக்கான படியினாலே கப்பல்க்காரன் பீரங்கி போடயில்லை யென்று சொல்லிக் கொண்டார்கள். யித்தனாள் வந்த கப்பலிலே மகுக்கரை வந்த சேதி வந்ததே அல்லாமல், யிதுக்கு முன் வந்ததில்லை யென்றும், யிந்தச் சேதி வாரதுக்கு முன்னமே முசே லாலி வருகுற இஸ்காதுரு வருமென்றும் ஒருத்தருக்கும் நிசமில்லை. இன்றைக்கு நிசப்பட்டு தென்று பெரிய மனுஷர் வெள்ளைக்காரர் சொன்னார்கள்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 17; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 5; சோமவாரம்***

இத்தனாள் முன் அமிரால் மயிலார்க்கு மேஸ்தர் பொஸ்கவேன் (Mr. Boscowan the Unlucky Admiral) விப வருசம் வந்து சண்டை பண்ணி அற்பிசி மாசம் (1748 நவம்பர்–டிசம்பர்) தோத்துப் போய் ஓடிப் போன தினமானபடியினாலே யிந்தப் பண்டிகை வருஷா வருஷம் கொண்டாடுகிறபடியினாலே, அன்றைய தினம் யித்தனாளானபடியினாலே, யின்றைய தினம் முசே லெறி கொவர்ணதோர், சின்ன துரை முசே பெடுத்தல்மீ, கோன்சேலியோர் வகையிரா வெள்ளைக்காரரெல்லாரும் கோயிலுக்குப் போயி பூசை கேட்டு பிரார்த்தனை சொல்லி, கோயில் மணிக லெல்லாம் அடிச்சு, யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அப்பாலவரவர் கோயில் காலமாய்ப் போலே வீட்டுக்குப் போனார்கள்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 21; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 6; சுக்கிரவாரம்***

இத்தனாள் சேத்துப்பேட்டு (பட்டு) சேதி யெழுதினதிலே ஆறேழு நாளாய் தக்கீத்தாய் (வதந்தியாய்) சேதி கேழ்க்கப்பட்டதை யெல்லாம் தெரிந்து கொண்டு சுருக்கமாய் யெழுதின தென்னவென்றால் : சேத்துப்பேட்டு (?) கோட்டை லக்கை யேறின வுடனே இசராத்து மகம்மது கான் யென்கிறவன் தான் வைச்சுக் கொண்டிருந்த பேருடனே உள்ளே யிருந்து வெளியே பிறப்பட்டச்சே பட்டாணச்சியைக் கத்தியை உருவி வெட்டிப்போட்டுத் தானும் ஆயுதபாணியாய்ப் பத்து பேர் யிருபது பேர் பட்டாணியர்க ளிருந்த பேருடனே, உள்ளே யிருந்து வெளியே பிறப்படச்சே, (எதிரிகள்) லக்கை யேறி உள்ளே நுழையச்சே துப்பாக்கிகள் வரிசை வரிசையாய் தீந்துக் கொண்டே நுழைந்த படியினாலே யிசராத்து மகம்மது கான் வகையிராக்களுக்கு காயம் பட்டு செத்து விழுந்து போனார்களாம்.

பின்னையும் யிருந்த பேரையும் வெட்டியும் குத்தியும் கொன்று போட்டார்கள். சிறிது பேர் தப்பின பேர்களு முண்டு. இரசாத்து மகம்மது வச்சிருந்த துலுக்கச்சி தங்கச்சி ஒருத்தி அக்கா ளொருத்தி போட்ட ஆபரணத்துடனே ஒபிசியால்மார் ரெண்டு பேர் கையிலே அகப்பட்டார்கள். அகப்பட்ட பேர்கள் பேரிலே ஆபரணம் ரெண்டாயிரம் விராகனுக் குண்டு என்று ஒப்பிசியால்மார் தங்கள் ஆதினம் பண்ணிக் கொண்டார்களென்றும், ரெண்டு லட்சம் ரூபாய் மட்டுக்கும் கொள்ளை அகப்பட்டு தென்றும், யிதிலே அலுமாஞ்சு கொம்மாந்தும் முசே பிஷேருக்கு வெள்ளி நகைகளும் ரொக்கமும் பொன்னகை வகையிரா நாற்பதினாயிரம் ரூபாய்க்கு உண்டென்றும் சொன்னார்கள். மூணு ஆனை, அன்பது அறுபது குதிரை, அறுபதினாயிரம் கலம் நெல், யிதல்லாமல் அரிசி வகையிரா சக்கிற (முகாம்) சரண்சாமிகள் ரெண்டு லெட்சம் ரூபாய்க் குண்டென்றும் சொன்னார்கள். கோட்டையிலே யிருந்த பீரங்கி துப்பாக்கிகள் வகையிரா ஆயுதங்களை யெல்லாம் கொள்ளைக்காரர் தானே சேந்ததாய்ச் சொன்னார்கள்.

திருவண்ணாமலை சேதி : கோட்டையும் சீமையும் ஒப்பிச்சுப் போட்டு யெதிரிகள் ஒடம்படிக்கையின் பேரிலே போனதின் பேரிலே கொள்ளை தானியங்கள் வகையிரா, கோட்டை சக்கிற சாமான்கள் யென்ன யிருந்ததோ, அது முசே தெவோ, அமுல்தாரன் சவரிராயன் மனுஷர் வசமானது. அவர்களுக்கும் அவர்களால் அனுப்பி விக்கப்பட்டவர்களுக்குஞ் சேர்ந்தது, போக நின்றது கும்பினீருக்கு யெழு துவார்களோ யென்னமோ தெரியாது. இந்த தாசத்தும் (விஷயம்) பேரிலே கில்லாதாரர்கள், ஸ்தானாபதிகள் யெல்லாம் வந்து முசே ஷெவல்லியேர் தெ சுப்பீருடனே பேசுகிறார்களென்றும் சொன்னார்கள்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 22; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 10; சனிவாரம்***

இத்தனாள் சூரிய உதயமாக ஒரு நாழிகை யென்னச்சே நான் முகம் கழுவிக் கொண்டு பாக்கு போட்டுக் கொண்டிருக்கச்சே, கோட்டையிலே வேலை செய்கிற கருமார மேஸ்திரி பேர் விளங்கனும், பின்னையும் ரெண்டு மூணு பேரும் கருமார்களும் ரெண்டு பேர் தச்சரும் ஆக ஆறேழு பேர் வந்து கும்பிட்டு நின்று, "எங்கள் காளிகா தேவி விசயதெசமிக்கு வரதராசப் பெருமாள், காளஸ்தீஸ்வரன் கோயில் ஈசுவரருடனே கூட பாறு வேட்டை பிறப்படுகுறதுக்கு ரெண்டு மூணு வருஷமாய் உங்களுடனே சொல்லிக் கொண்டு வந்ததுக்கு, ஊராருடனே சொல்ல வேணுமென்று நீங்கள் சொன்னீர்கள். நாங்கள் அவர்களைக் கேழ்க்கிறதுக்குப் போசுங்காம (பேசுங்காலம் இல்லாமல்) விருந்தது. யிப்போவானால், நேத்தைய தினம் நாங்கள் முசே கலாருடனே

(M. Clare) சொல்லி ஒப்பித்திசாம் யெழுதி தொரைக்குக் குடுத்தோம். அதின் பேரிலே அவர் ஆரை அழைச்சுச் சொல்ல வேணும் வென்று கேட்டார். அதுக்கு யெங்களுடனே கேளாமல் படிக்கு முசே கலார் யிருந்து கொண்டு, யிவர்களை வினாயகப் பிள்ளை கையிலே பிடிச்சு ஒப்பிச்சு யிந்த வேலை நீ செய்து போடவேணும் யென்று சொன்னார். வினாயகப் பிள்ளையும் அதுக்கு முன்னேயும் அங்கே வந்திருந்தார். அவன், அழைச்சு யெங்களை அவர் கையிலே ஒப்புவிச்சு யிவர்கள் வேலை நீ செய்து குடுத்து யெனக்கு வந்து கபுறு சொல்லென்று சொன்னார். வரும்படியே யுங்களுடைய மனதின் படிக்கு நடப்பிச்சு உங்களுக்கு வந்து கபுறு சொல்லுகுறேனென்று சொல்லிப் போட்டு பிறப்பட்டு, யெங்களையும் அழைச்சுக் கொண்டு வந்து வரதராசப் பெருமாளுடனே கூட உங்கள் காளிகா தேவியையும் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போங்கோ ளென்று சொல்லி உத்தாரங் குடுத்து அனுப்பினார். அந்தப்படிக்கு யின்றைக்கு நாங்கள் யெழுந்தருளிப் பண்ணிக் கொண்டு போற கபுறு உங்களுடனே சொல்லிப் போட்டுப் போக வந்தோ," மென்று சொன்னார்கள். அதுக்கு நானிருந்து கொண்டு, "மெத்தவும் சந்தோஷமாச்சுது. ஆனால் பட்டணத்துக்குள்ளே நம்முடைய மதத்துக்கு யெத்தனை விருத்தியாயி நடக்குதோ அத்தனையும் யெனக்கு சந்தோஷந்தான். ஆனாலிது வலங்கையாருடைய அனுகூலத்தின் பேரிலே நடக்க வேணுமே யல்லாமல், துரைகளுடைய உத்தாரம் யிதுகளுக்குக் கவையில்லை. ஆனால் நீங்கள் துரைகளுடைய உத்தாரம் யிதுகளுக்குப் பெத்து நல்ல வேலை செய்தீர்கள். யிது உங்களுக்கு அட்டியில்லாமல் நடக்குறதுக்கு நான் ஒரு உபாயம் சொல்லுகுறேன். அந்தப்படிக்குச் செய்யுங்கோள்," என்று சொன்னதுக்கு, "நல்லது அப்படியே செய்குறோ," மென்று சொன்னார்கள். அதுக்கு நான் சொன்னது : "வலங்கையாரிலே சாதிக்கி ரெண்டு பேர் நாட்டாமைக்கா(ர் இருக்கி) றார்களே. அதிலேயும் முக்கியமாய் கவிரைகள், இடையர்கள்,[1] அகம்படையர்கள், வெள்ளாழர், கைக்குளவர் வகையிரா யிப்படி யேழெட்டு சாதியுடைய நாட்டாமைக்காரர்கள் யிருக்குறார்களே. அவர்களண்டைக்கு நல்ல பேச்சாய், அவர்களுடனே பட்டணத்திலே தர்மராசா, மாரியாத்தாள் சகலமான தெய்வங்களும் வேடிக்கையாய்க் கூடப் பிறப்படுகுறாப் போலே எங்கள் தெய்வமும் கூட பிறப்படத்தக்கதாக நீங்கள் தயவு பண்ணி உத்தாரம் குடுக்க வேணும். அதினாலே பின்னையும் வேடிக்கையா யிருக்குறது மல்லாமல், யெங்களுக் கெல்லாம் வெகு சந்தோஷமாயிருக்கும். நாங்களும் உங்களுடைய வேலைக்காரர் அல்லாமல் மத்தப்படி அல்லவே யென்று யிப்படியாக நல்ல பேச்சைச் சொல்லி அவர்களுடைய உத்தாரம் வாங்கிக் கொண்டு

[1] இடையர் எப்பிரிவையும் சேராதவர் என்று பிள்ளை எழுதியுள்ளார்.

நடப்பிச்சார்களானால் ஒரு தவறுதலையும் வராமல் சம்பிறமமாய் நடக்கு," மென்று நான் சொன்(னேன். அதுக்கு) அவர்கள் சொன்னது, "அப்படி நாங்கள் ஒருத்த ரண்டைக்குப் போகத் தக்கதுமில்லை. ஒருத்தருக்கு நல்லப் பேச்சும் சொல்லத் தக்கதுமில்லை. யெங்களுக்குத் தொரைகளுடைய உத்தாரமாயிருக்குது. வினாயகப் பிள்ளையை நடப்பிச்சுப் போடச் சொல்லி உத்தாரம் குடுத்து யிருக்குறார். அவருமப்படியே நடப்பிச்சுப் போடுகிறோ மென்று சொல்லி யிருக்கிறார். அந்தப்படி நடந்தேறிப் போகு," தென்று சொன்னார்கள். அதுக்கு நான் ஆனால், "உங்களுடைய மனசுக்குச் சரிப் போனபடியே செய்யுங்கோள்," யென்று சொல்லி, "முன்னாலே இடங்கையாருடனே சேந்த காளத்தீஸ்வரனைக் கூட எழுந்தருளப் பண்ணுகிறதுக்கு முசே லப்பிற வித்தியேர் (M. de la Prevostiere's) நாளையிலே இடங்கையார் பிரயத்தனம் பண்ணி, அப்போ திருவேங்கிடம் பிள்ளை அவர்கள், நரசப்ப ணாயக்க ரவர்கள் கூட முளை அடிச்சு (பரிந்து பேசி) யிருக்கச்சேயும் வலங்கையார் சம்மதியாமல் (போனார்கள்). அப்பால் முசே லெனுவார் அவர்கள் தானே நாற்பது நாற்பத்து அஞ்சு நாள் பிடிமானமாய் முன்னடந்த தஸ்தவேசைப் பிடிச்சுக் கொண்டு யெத்தனையாக வலங்கையாருக்குச் சொல்லியும் சம்மதியாமல், அப்பால் துரைகளே. மனுவாய்க் கேட்டுக் கொண்டதின் பேரிலே (அவர்கள் ஒப்புக்கொள்ள) நடப்பிச்சுக் கொள்ளச் சொல்லி உத்தாரம் குடுத்தார்கள். அப்படி யெல்லாம் ஒரு காளத்தீசுவரன் கோயிலுக்கு வெகு பிரயத்தனம் பண்ணினதின் பேரிலே நடந்திருக்கச்சே, யிதுக்கு யிப்படி நடப்பிச்சுக் கொள்ளுகிறதுக்கு வலங்கையார் சம்மதியார்கள். அப்பாலுங்களுடைய மன," தென்று நான் சொன்னேன். அந்த மட்டுக்கும் அவர்கள் பிறப்பட்டுப் போனார்கள்.

மறுபடி யென்னண்டைக்கு வந்ததில்லை. அப்பால் அவர்கள் போயி வினாயகப் பிள்ளையுடனே சொல்லிக் கொண்டதாயும், அதுக்கு அவர் யெவன் தகையுறவன், யெவனுக்கு யென்ன குதிராத்து யிருக்குது. உங்களுடைய மனுசுப்படிக்கு உங்களுடைய தெய்வத்தை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு போங்கோளென்று சொன்னதாய் சேதி கேழ்க்கப்பட்டுது.

அப்பால் நாலு நாழிகை பொறுத்து வினாயகப் பிள்ளை கோட்டை அண்டையிலிருந்து கொண்டு, வலங்கையாரிலே வெள்ளாழரிலே கனகசபை முதலி, பழவக்கார தேவராயச் செட்டி வகையிராக்களை அழைப்பிச்சு, உங்க(ளுடைய) வரதராசப் பெருமாளுடனே கூட காளிகா தேவியை எடுத்துக் கொண்டு போகத் தக்கதாக தச்சர், கருமார்கள், கன்னார் வகையராக்களுக்கு தொரை உத்தாரம் குடுத்திருக்கிறார். அந்தப்படிக்கு எழுந்தருளிப் பண்ணிக் கொள்ளட்டும் என்று சொன்னார். அதுக்கு நாங்கள் ஒருக்காலும் நடவாத சம்மதியை யிப்போ நூதனமாய்

நடப்பிக்குறதுக்கு சம்மதிக்குறதில்லை யென்று சொன்(னார்கள்). அதுக்கு அவர் நீங்கள் சம்மதியாவிட்டால் வரதராச சுவாமி பிறப்படுகிறது கூட நின்று போமென்று சொன்னார். அப்படி நின்று போனாலும் போறதே யல்லாமல் நாங்கள் சம்மதிக்குறதில்லை யென்று சொல்லிப் போட்டு வந்தோமென்று கனகசபை முதலி, தேவராய செட்டி வகையராக்கள் யென்னுடனே வந்து சொன்னார்கள். அதுக்கு நான் "துரைகள் பார்த்துச் சொன்னால் நீங்கள் கேழ்க்கத் தேவையில்லையா?" யென்று சொன்னதுக்கு, அதுக்கு அவர்கள் "பின்னை யெந்தக் காரியம் சொன்னாலும் கேழ்ப்போமே யல்லாமல், யெங்கள் சாதி வழக்கத்துடனே சேந்த சம்மதிக்கி ஒடுக்காலும் யில்லாதது நடக்க வேணுமென்று சொன்னால், சறுவாத்துமனாக நாங்கள் சம்மதிக்கிறதில்லை. அப்பாலவர்கள் சோராவாரியாய் நடப்பிச்சால் நடப்பிக்கட்டு," மென்று சொன்னார்கள்.

அதுக்கு நான் "உங்களுக்குத் தெரியும். தொரைகளுக்குத் தெரியும் நீங்கள் வந்து சொன்ன சேதியும் கேட்டோம். அவர்கள் வந்து சொன்ன சேதியும் கேட்டோம்," யென்று சொன்னேன். அப்பாலவர்கள் பிறப்பட்டுப் போனார்கள்.

அதின் பேரிலே மேலுகிரிச் செட்டி வகையிராக்கள் வந்து சொன்ன கபுறு யென்னவென்றால், வினாயகப் பிள்ளை கோட்டையிலேயும் சின்ன துரை வீட்டிலேயும் அவர்களுடனே சொன்னது: "யிப்போ யிப்படி இடங்கையாருடனே சேர்ந்த காளிகா தேவி பிறப்படுகிற சம்மதிக்கி வலங்கையாருடனே சொல்லி, அவர்கள் சம்மதியாமல் படிக்கி விகாதம் பண்ணிவிச்சது ரங்கப் பிள்ளையாக்கும். அது யென்னத்தினாலே யென்றால், யென் மாரிபத்திலே எனக்கு தொரை உத்தாரம் பண்ணினார் என்று சொல்லி விகாதம் பண்ணிப் போட்டார்கள். யென்னமானாலும் தொரை உத்தாரம் குடுத்த சம்மதிக்கு யிவரிப்படிச் செய்யலாமா? யிந்தச் சேதியை நான் போயி தொரையுடனே சொல்லிப் போடுகிறேன்," யென்று யிப்படி யெல்லாம் சொன்னானாம். அதுக்கு கிட்டக் கேட்டுக் கொண்டிருந்த பேரிலே ரெண்டொருத்தர், "யிப்படி யெல்லாம் சொல்லுவார்களா? அவரென்ன யெந்தக் காரியத்துக் கானாலும் வருகுறாரா? நீரிப்படிப்பட்ட விசேஷங்கள் சொல்லுகிறதல்ல," வென்று சொன்னதாயும், அதின்பேரிலே, "அப்படியல்ல. தொரை அவர்கள் பார்த்து யெந்தக் காரியம் பண்ணவேணு மென்றாலும் யிவர் அப்படித்தான் விகாதம் பண்ணுகிறார். அந்த சம்மதி தொரை அவர்களுக்கும் நன்றாய் தெரியும். யிது நானிப்போ தானே தொரையவர்களுடனே போயி சொல்லிப் போடுகிறே," னென்று சொல்லிப் பிறப்பட்டு கோட்டை மெத்தை மேலே போயி, துரையவர்களுடனே சொன்(னான்). முசே காலாருடனே சொல்லி அவரைக் கொண்டும் சொல்லி விச்(சான்). அதின் பேரிலே

தொரையவர்கள் மகா கோபம் பண்ணிக் கொண்டார். யினிமேல் யென்னமாய் நடக்குமோ தெரியாதென்று சொல்லி, மறுபடியும் வினாயகப் பிள்ளை வந்து அவரவர்களுடனே சொன்னாரென்று ரெண்டொருத்தர் மனுஷர் முகாந்திரமாய்ச் சொல்லி அனுப்பிவிச்சதும் உண்டு. ரெண்டொருத்தர் அவர்களாக தானே வந்து சொன்னதும் உண்டு. அதுகளுக்கு நான், "யென் பேரிலே இப்படிப்பட்ட அபாண்டமான சேதி பிறக்குற மட்டுக்கும் ஒபியேக்குகைகுகை (?) யென்கிற ஞாயமாய், சும்மா அபாண்டம் பிறக்குது வந்து ஒரு நன்மைக்கே யென்று யெண்ணிக் கொண்டேன்."

அப்பால் நான் பகலைக்கு சாப்பிட்டு ஆன பிற்பாடு ஒரு மணிக்கு வலங்கையார் வந்து சொன்ன தென்ன வென்றால், "யெங்களை தொரை அழைக்குறார் யென்று சேவுகன் வந்து அழைச்சான். நாங்கள் போயி மேல் வீட்டின் படி யேறச்சே சோபுதாரன் யெதிராக வந்து, நீங்கள் காளிகா தேவியை யெழுந்தருளப் பண்ணுகிறதுக்குச் சம்மதியாமல் போனால் உங்கள் வரதராச சுவாமியையும் யெழுந்தருளப் பண்ணத் தேவையில்லை யென்று தொரை யவர்கள் சொல்லச் சொன்னார்கள். உங்களையும் போகச் சொன்னார்கள்," யென்று வந்து சொல்லிப் போட்டுப் போனார்கள். அப்பா லின்றைக்கு பாறுவேட்டை ஊருகோலம் நடக்கயில்லை.

அப்பால் சாயங்காலம் பெரியண்ண நயினார் மகன், யிப்போ நயினார் யிருக்குறவன், வந்து கபுறு சொன்ன தென்ன வென்றால், "தொரையவர்கள் காளத்தீசுவரனை மாத்திரம் யெழுந்தருளப் பண்ணச் சொல்லி. உத்தாரம் குடுத்தார். அந்தப்படிக்கி நடத்தச் சொல்லி நாங்கள் காளத்தீசுவரன் கோயிலாருடனே சொன்னோம். அதுக்கு அவர்கள் வரதராசப் பெருமாள் பிறப்படாமல் நாங்கள் யெழுந்தருளப் பண்ணக் கூடாது யென்று சொன்னார்கள். அந்தப்படிக்கித் தொரைக்கும் போய்ச் சொன்னோம். அதுக்குத் துரையிருந்து கொண்டு, "ஆனால் யெந்த தெய்வமும் பிறப்படத் தேவையில்லை," யென்று சொல்லிப் போட்டு உத்தாரம் குடுத்தார் என்று வந்து சொல்லிப் போட்டுப் போனான். யிப்படி நானாவிதத்திலேயும் விசயதெசமி பாருவேட்டை நின்று போச்சுது.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 23; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 11; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் : முன் 4 தேதி (அக்டோபர் 16) மசுக்கரையிலே முசே லாலி வந்து சேந்த சேதிக்குக் கபுறு கொண்டு வந்த திறிசொன்சு (திலிஜன்ட்–Delignnt) யென்கிற கப்பல் இன்றையதினம் றவாணா (புறப்பட்டுப் போனது) வென்று சொன்னார்கள். பின்னை யொன்றும் விந்தை சேதியில்லை.

ஆனால் யின்றைய தினம் வழுதாவூரிலே யிருந்து முசே ஷெவல்லியே தெ சுப்பீர் மழை காலமானபடியினாலே வெளியிலே சண்டை பண்ணுகிறது மோககூப்பு பண்ணி (விட்டு விட்டு) பிறப்பட்டு வந்து சேர்ந்திரார்கள். வெளியிலே போயி யிருக்கிற பவுன்சும் பிறப்பட்டு வண்ணாந்துறை வந்து (சேர்ந்தார்கள்). குறை நாளை நாளை நன்றைக்கு உள்ளே வந்து சேருமென்றும் சொன்னார்கள். கும்பினியார் பவுன்சும் அதுக்கு சறுதார் முசே சொபினேயும் மாத்திரம் திருவண்ணாமலை, வேட்டவலம், கல்லுல்லகடை[1], பின்னையும் அந்தப் பிராந்தியத்துச் சீமை பூமி கில்லாவுகள் துர்க்கங்களை பத்தே பண்ணிக் கொண்டுயிருக்கும் படியாய் சுவாரிப் போனார்க ளென்று சொன்னார்கள்.

### *1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 24; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 12; சோமவாரம்*

இத்தனாள் நான் சரீரம் சுவஸ்த மில்லாத தினாலே வெளியே போகயில்லை. கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால்: முன் மாசி, தை மாசம் பிப்ரவரி, மார்ச்) முசேனுவார், கோன்சேலியேர், ஸ்ரீரங்கம் சீமை பூமி வகையிரா காரியம் விசாரிக்கும்படியாய் ஸ்ரீரங்கத்துக்குப் போனபோது, தெற்கே யிருக்கிற மாபூசு கான் முசே (லெ)னுவாருக்கு சவாபுசால் (பேச்சு வார்த்தை) நடப்பிச்(சான்). தனக்கு அன்னூறு சொலுதாதுகளும் ரெண்டாயிரம் மூவாயிரம் பாறும் பத்து பீரங்கியும் மத்தத்து அனுப்பிவிச்சால், அதுக்கு யிவர்களுக்கு லட்சம் ரூபா ரொக்கத்திலே குடுக்கவுஞ் சிறிது சாகீர் விடவும் பின்னையும் யிப்படியாகச் சிறிது உடம்படிக்கை களுமாய்ச் சொல்லி யனுப்பி விச்சதுக்கு, "அப்படியே நான் புதுச்சேரிக்குப் போன பிற்பாடு நீர் சாகிதமும் யெழுதி வக்கீல் அனுப்பிவிச்சால் துரைக்குச் சொல்லி அனுகூலம் பண்ணித் தாரே," னென்று முசே (ஏல)னுவார் மாபூசு கானுக்குச் சொல்லி அனுப்பிவிச்ச தாகவும், அது காரியத்துக்கு மாபூசு கான் காகிதம் யெழுதி வக்கீலையும் அனுப்பிவிச்சதாகவும், அந்த வக்கீல் மூசே (லெ)னுவார் மாரிபத்திலே தொரை அவர்க(ளைப்) பேட்டி பண்ணிக் கொண்டதா(யும்) சேதி சொன்னார்கள். யினிமேல் நடக்குற சமாசாரம் என்னமோ அறிய வேண்டியது.

### *1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 26; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 14; புதவாரம்*

இத்தனாள் யெனக்கு சுவஸ்த மில்லாதபடியினாலே வெளியே போகயில்லை. முசே ஷெவல்லியேர் தெ சுப்பீர் சீமையிலே யிருந்து யிவ்விடத்துக்கு வந்த பிற்பாடு, சந்தா சாயபு மகன் ரசா சாயபு பேட்டி

[1] ஊர்ப்பெயர் தெளிவாக இல்லை. சேத்துப்பட்டுக்கு அருகில் இருக்க வேண்டும்.

ஆகாமலிருந்த படியினாலே யித்தனாள் முசே தெலார்ஷு மாரிபத்திலே ரசா சாயபும் அல்லி நக்கீயும் ஷெவல்லியேர் தெ சுப்பீருக்கு அன்னூரு ரூபாயிலே ஒரு சீரொப்பாவும், முசே லெறி அவர்களுக்கு நானூரு ரூபாயிலே ஒரு சீரொப்பாவும் வாங்கிக் கொண்டு பேட்டி ஆனதாகவும், அவர்கள் வாங்கிக்கொண்டு பன்னீர் பாக்கு வெத்திலை குடுத்து யிருபத்தோரு பீரங்கி போடுவிச்சு அனுப்பிவிச்சதாய்ச் சேதி கேழ்க்கப்பட்டுது. ரசா சாயபுக்கு யிவர்களிந்த மரியாதை பண்ணுகிறது அல்ல. முன்னாலே முசே துப்பிளேயிக்சு அவர்கள் ஆராரை யெப்படிக் கொண்டு வரவேணுமோ அப்படிக் கொண்டு வந்தார். அப்பால் முசே கொதே வந்தபோதும் அவருக்கு முசே துப்பிளேயிக்சு சொல்லி அனுப்பிவிச்சது, "ரசா சாயபு முதலானவர்கள் நமக்கு நசர் வைத்துக் காண்பித்ததாக சுவாமி நமக்கு உன்னத ராசயோகம் குடுத்திருக்கிற படியினாலே, அதுக்குத் தக்கதா யிவர்களுக்கெல்லாம் சூசனையாய் நடத்தப் போகாது. யிவர்கள் யெல்லாம் நசர் கொண்டு யென்னண்டைக்கு வந்து காத்திருக்கிற பேர்களுக்கு நீ ரெப்படி மரியாதை பண்ணி யிருபத்தோரு பீரங்கி போடுவீர்கள்?" யென்று சொல்லி அனுப்பிவிச்சதுக்கு, "அப்படியா, அது எனக்கு ஆரும் சொல்லாமல் போனார்களெ," ன்று சொல்லி அனுப்பிவிச்சார். அப்பால் முசே லெறி அவர்களும் அப்படியே நடப்பிவிச்சார்.[1] யிப்போ ராசா மனுஷர் வந்திருக்கச்சேயும் அப்படி நடந்தது. யிந்த ரசா சாயபு வந்து கும்பினீரிலே வருஷம் ஒன்னுக்கு அன்பது ணாயிரம் ரூபாயாய் வாங்கிக் கொண்டு சம்பளத்துக் கிருக்கிறான். அதை யெண்ணாமல் யிப்படி மரியாதை பண்ணிவிச்சது யெங்களுக்குச் சம்மதியில்லை. யென்ன யோசனை யின் பேரிலே நடத்துகிறார்களோ தெரியாது. முன்னாலே ஆற்காட்டிலே நவாபுகள் யிருந்து துரைத்தனம் பண்ணச்சே, அப்போ அவர்கள் அமுல்தாரர்கள் வந்தாலும் யிவ்விடத்திலே பீரங்கிகள் போடுகிற வாடிக்கை யானபடியினாலே நவாபுகள் வந்தால் பீரங்கி யிருபத்தொன்று போடுகிறது. அதுக்கு உன்னத ஸ்தானமாய் சுவாமி தெயவு பண்ணி யிருக்கிற படியினாலே சறுவாத்துமனாக யிந்த ஒசந்த மரியாதை யிவர்களுக்குப் பண்ணுகிறதல்ல. யிது ஆருக்கு சம்மதியில்லாத காரியம்.

***1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 27; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 15; குருவாரம்***

இத்தனாள் முசே (லெ)னுவார் துபாசி அய்யா முதலியும் கனகசபை முதலியும் முசே (லெ)னுவாரண்டைக்குப் போய் வரதராசப் பெருமாளுடனே கூட ஒருக்காலுமில்லாத வாடிக்கை காளிகா தேவியைக் கூட

[1] இங்கே ஆங்கிலப் பதிப்பிலுள்ள சிலவரிகள் விட்டுள்ளன.

யெழுந்தருளப் பண்ணவேணுமென்று கன்னார் வகையிராக்கள் வினாயகப் பிள்ளையுடனே சொல்லி, தொரை அவர்களுக்குச் சொல்லி உத்தாரம் பண்ணிவிச்சார்கள். அதுகளுக்கு நாங்கள் சம்மதிச்சுதும் யில்லை. அதினாலே வரதராசப் பெருமாள் பிறப்படுகிறது நின்று போச்சுது. யிந்தப்பட்டணம் தோணின நாள் முதல் கொண்டு யிப்படி விகாதம் நடந்ததில்லை யென்று, முன்னாலே முசே லபிரிவித்தியேர் (M. Le. Prevostiere) நாளையிலே, முசே (லெ)னுவார் நாளையிலே நடந்த சம்மதிகளெல்லாம் வயணமாய்த் தெரியப்படச்சொல்லி, அவ(ர் மூலம்) தொரைக்குச் சொல்லி, யெப்போதையும் போலே நடக்கத் தக்கதாக உத்தாரம் வாங்கிக் குடுக்க வேணு மென்று சொன்னதுக்கு, முசே (லெ)னுவார் முசேலெறி அவர்களண்டைக்குப் போய் தெரியப்படச் சொன்னதின் பேரிலே, அந்த ஞாயங்களெல்லாம் கேட்டு, "நல்லது காளிகா தேவி பிறப்படக் கவையில்லை: வரதராஜப் பெருமாள், காளத்தீசுவரன் மாத்திரம் யெப்போதையும் போலே யெழுந்தருளப் பண்ணிக் கொள்ளட்டும்," என்று உத்தாரம் குடுத்ததாயும், அதின்பேரிலே கனகசபை முதலி வகையிராக்கள் என்னண்டைக்கு வந்து யிந்த வயணமெல்லாம் சொல்லி பறணி காற்திகை யாயிருக்குதே யிதுபோன பிற்பாடு யெழுந்தருளப் பண்ணுகுறோ மென்று சொன்னார்கள். அதுக்கு நான், "துரைகள் பார்த்து எப்போ உத்தாரம் குடுத்தார்களோ அந்தட்சணம் நடப்பிச்சுப் போடவேணுமே யல்லாமல் ஒரு நிமிஷம் நிறுத்துவார்களா? பறணி யேது, காற்திகை யேது?" யென்று சொல்லி அனுப்பி விட்டேன். அவர்களும் அந்தப்படிக்குப் போயி யெப்போதையும் போலே விசய தசமி பாறு (பரி) வேட்டை யின்றைய தினம் சம்பிறமமாய் வரதராச சுவாமி, காளத்தீசுவரன் யெழுந்தருளிப் பண்ணி உச்சவம் நடப்பிச்சார்கள்.

இது நடக்க வொட்டாமல் கன்னார், தச்சர் வகையிராக்கள் வினாயகப் பிள்ளையுடனே சொல்லி, முசே கலாருடனே (யும்) சொல்லி யினி யில்லாத விகாதங்களுக் கெல்லாம் யெத்தனம் பண்ணிப் பார்த்தார்கள்.

அதுக்கு முசே கலாரு (clare) யிருந்து கொண்டு, கன்னார், கருமார் (அவர்களை)ப்பார்த்து, "நீங்கள் கச்சோறுகள் (கோவேறுக் கழுதைகள்)" நீங்கள் முன்னேதானே தமிழருக்கும் சகல ஞாயத்துக்கும் பெரியவன் ரங்கப் பிள்ளை அவருடனே சொல்லாமல், வூரிலே பல பேருடனே குடியாயிருக்கிற வினாயகப் பிள்ளையுடனே சொன்னீர்களே. அப்போதானே ரங்கப் பிள்ளை யுடனே சொன்னால் அனுகூலமாய்ப் போமே. அப்படிச் சொல்லாமல் நீங்களும் காரியத்தைக் கெடுத்துக் கொண்டு, யிது காரியம் துரையுடனே பேசினேன். யென் முகத்துக்கும் கரியைத் தடவினீர்க," ளென்று ரொம்பவும் கோபிச்சுக் கொண்டு அடிக்க

வந்தான் யென்று கருமார், தச்சர் தானே என்னுடனே வந்து சொன்னார்கள். அதுக்கு நான் உங்கள் தெய்வம் கூட பிறப்பட வேளை வரயில்லை, யெதுக்கும் வேளை வரவேணும் என்று சொல்லிப் போகச் சொன்னேன்.

*1757 வருசம், ஒயித்தோபர் மாசம், தேதி 31; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 19; சோமவாரம்*

இத்தனாள் எனக்கு சரீரம் சுவஸ்தமில்லாமலிருந்த படியினாலே வெளியே போகயில்லை. இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி என்னவென்றால் ஊரிலே தமிழர் வீடுகள் யெல்லாம் கும்பினீர் குடக்கூலிக்கு வாங்கி ராசா மனுஷர் வருகிற பேருக்கும் யிருக்கிற பேருக்கும் குடியிருக்கிற பேருக்கும் குடியிருக்கிறதுக்கு வாங்க வேணுமென்று ஊரிலே காப்பிரா உண்டாக்கி, யித்தனாள் சாவடி மணியக்காரரும் முசே (தெ)புசேத்து மனுஷன் சுத்துக்கோட்டை நயினியப்பன் ஒரு சட்டைக்காரனும் பிறப்பட்டு ஊரிலே சமுசாரம் பண்ணுகிறவர்கள் வீடுகள், சும்மாயிருக்குற வீடுகள் சகலத்துக்கும் வீட்டு வாசலிலே தமிழிலேயும் வெள்ளைக்காரர் எழுத்திலேயும் கும்பினீர் குடக்கூலி யென்று யெழுதி, ஒரு முத்திரையும் போட்டு வீட்டை யெடுத்து யெழுதிக் கொண்டு போனார்கள். யிதுனாலே ஊரிலே காபிராவாய்ப் பணமுள்ள பேர் முசே (தெ)புசேத் தண்டைக்குப் போய் நாற்பது அன்பது அறுபது மட்டுக்கும் குடுத்து வீடுகளைத் திருப்பிக் கொண்டவர்களு முண்டு. பணமில்லாதவர்கள் வீடுகளெல்லாம் கும்பினீர் குடக்கூலியிலே விழுந்து போச்சுது. யிந்தப் படிக்கி காபிராவாய் சனங்கள் சொல்லிக் கொண்டத்தை யெழுதி விச்சேன்.

# நவம்பர் 1757

*1757 வருசம், நவம்பர் மாசம், தேதி 9; ஈசுவர வருசம், அற்பிசி மாசம், தேதி 28; புதவாரம்*

நான் பதினேழு நாளாய்ச் சரீரம் சுவஸ்தமில்லாதபடி யிருந்து, நேத்து சாயங்காலம் நல்ல வேளை யென்று வெளியே சவாரி பிறப்பட்டு யித்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போகவேணுமென்று பிறப்படச்சே, முசே லெறி அழைக்குறாரென்று சேவுகன் வந்து அழைத்து, வீரா செட்டி(யையும்) குண்டூர் பாலி செட்டியையும் அழைக்கச் சொன்னார்க ளென்(றான்). நான் போயி அழைத்து வாறேனென்று சேவுகன் போனான். நான் கோட்டைக்குப் போயி கோவர்ணமா மேலே நடுசாலையிலே உளுக்காந்து கோவர்ணதோர் சமையம் விசாரித்த விடத்திலே உடுத்திக் கொள்ளுகிறார், வெளியே பிறப்படுவார் என்று சொன்னார்கள். அப்பால் அவர் வேலைக்காரன் கந்தப்பன் வந்தான். "யென்ன காணும், ஒருக்காலும் அழையாத பிரபு யின்றைய திணம் அழைத்து அனுப்பின தேது?" யென்று கேட்டதுக்கு, "கும்பினீர் சிலவுக்குப் பணமில்லையே, உங்கள் பேரிலே வர வேண்டிய பாக்கி குண்டூர் பாலி செட்டி பேரிலே வர வேண்டியதுகளும் கேழ்க்கிற நிமித்தியம் அழைக்கச் சொன்னாப் போலே காணுது," யென்று சொன்னவுடனே நேத்து யிவன் தப்பும் தாறும் அவருக்குச் சொல்லி யிருப்பான். அதின் பேரிலே அவரவர் பேரிலே வரவேண்டிய பாக்கியைக் கேட்டால் அடங்கிப் போகுதென்று பின்னையும் யென்ன யென்ன சாடை சொன்னானோ, அழைப்பி யென்று அவர் சொல்லுவார், நல்லதென்று அழைத்து வரச் சொன்னா னென்று யோசனை பண்ணினது மல்லாமல், சீமா மூலம் பணம் ... நம்மைக் கேழ்க்குறதுக்கு ஞாயமுமில்லை, யிது வரையிலே நம்மைக் கேட்டது மில்லை. அவருக்கென்ன அதிலே யிருக்கிற ஞாயம் (தெரியாதவரா?) அந்தச் சம்மதி கேழ்க்கத் தக்கதில்லை. சாராயக் கிடங்கு சம்மதி யொன்று, அதுதான் கேழ்க்க வேணும் என்று யோசனை பண்ணிக் கொண்டு யிருக்கச்சே, கோவர்ணதோர் வெளியே வந்தார் யென்று சொன்னார்கள்.

(அப்போ) அவரும் செனராலாகிய முசே சுப்பீ(ர்) வகையிராக்கள் கீழண்டை பாரிசமாய் ஒலாத்திக் கொண்டிருக்கச்சே, நான் உபயத்திரவர்களுக்கும் ஆசாரம் பண்ணினேன். முசே லெறி சும்மா தானே யிருந்தார். முசே சுப்பீர் ஆசாரம் பண்ணிப் போட்டு அப்பால் ஒலாத்திக் கொண்டிருந்தார். பின்னையும் ரெண்டு நாழிகை தேச காலம் பேசியிருந்து அவரவர் போன பிற்பாடும் காம்பிராவிலே போயி என்னை அழைத்தனுப்பிவிச்சார். நான் போனவுடனே என்னைப் பார்த்து, "சீமா

மூலம் குத்தகைப் படிக்கு உன் அமுல் ரெண்டு வருஷத்துக்கும் நீ யெழுதிக் குடுத்த கணக்குப் படிக்கு நாலு லெட்சம் ரூபா வரவேணுமே, அந்தப் பணத்திலே யிப்போ கும்பினீருக்கும் பணம் அவசர மாயிருக்கிறபடியினாலே, யெட்டு நாளையிலே ரெண்டு லட்சம் ரூபா குடுக்க வேணும். குடாவிட்டால் காவல் வைப்பேன்," யென்று சொன்(னார்). "நான் யெழுதிக் குடுத்தக் கணக்கும் சரிதான். நாலு லட்சம் ரூபாயும் சரிதான். ஆனால் யெனக்கு அஞ்சு வருஷம் குத்தகைக்கு ரெண்டு வருசம் சரியாயி நடக்கவுமில்லை. அப்பாலும் சீர்மை பூமி யென்னைக் கேளாமல் நீங்கள் கட்டிக் கொண்டதுமல்லாமல், உங்கள் ஒரு குமிசேராயிகள் (Commissaries) போயி சீமையிலேயும் குத்தகைக்காரர் பேரிலேயும் விளங்கிக் கொண்டு வந்தபடிக்கு, முன் பதின்மூணு லட்சம் ரூபாய் வரவேணும். அப்படியிருக்க அதுக்கு நாலு லட்சம் போக யின்னம் ஒன்பது லட்சம் ரூபா யெனக்குத்தான் வரவேணும்[1] அப்படி யிருக்க யென்னைக் கேழ்க்கிறதென்ன நியாயமா?" வென்று சொன்(னேன்).

"அப்படியானால் பின்னை யொரு விதம் பார்த்தால் உன் பேரில் பதினெட்டு லட்சம் ரூபா வரவேணும். அதெல்லா மிருக்கட்டும். யிப்போ உன் கணக்குப் படிக்கு நாலு லட்சம் ரூபாய்க்கு யெட்டு நாளையிலே ரெண்டு லட்சம் ரூபா குடாவிட்டால் உன்னைக் காவல் வைப்பேன்," என்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "சுவாமி, லோகத்துக்குப் பேசாத சுவாமி, துரைத்தனம் பண்ணுகிற ராசாவாக வந்து பேசுகுற சுவாமி, ... சத்தியம் தப்பி நடத்த வேணும் யென்றால் அவரைக் கையைப் பிடிக்கிறவர்கள் ஒருத்தர் யிருக்குறார்களா? அப்படிப் போலே யிந்தப் பட்டணத்துக்கு யிப்போ நீர் அதிகாரம் பண்ணுகிறபடியினாலே நீர் ஞாயம் தப்பிதமாய் சத்தியம் தப்பி நடத்த வேணுமென்றால் உம்மைத் தடை பண்ண வேறே ஒரு அதிகார புருஷனில்லாததைத் தொட்டு, யினி யெட்டு நாள் பொறுத்துக் காவல் வைக்குறதை யிப்போ தானே காவல் வைத்துக் கொள்ளும். ஆக்கினை பண்ணும், தெண்டியும். சரிப் போனபடியே செய்து கொள்ளும். நான் ரூபுரூபிலே (நேரிலே தானே) யிருக்குறேன். யினி யெட்டு நாளைப் பொறுத்து, சிறிது காரியம் நடப்பிச்சாப் போலே (தொகை) வருமென்று எண்ணத் தேவையில்லை. ரெண்டு காசளவிலே நான் குடுக்கத் தக்கதில்லை. நீர் வாங்கத் தக்கதுமில்லை. யேதாகிலும் செய்து கொள்ளுகிறதை யிப்போ தானே செய்து கொள்ளும்," என்று சொன்னதுக்கு, "நல்லது, நீ யிப்படித் தானே நாளது வரைக்கம் என்னை யேச்சா யென்று," சொன்னார்.

---

[1] இதை நன்கு கவனிக்கவும். பிள்ளை தமக்குத் தான் கம்பெனி பெருந்தொகை தரவேண்டு மென்கிறார்.

அதுக்கு நான் சொன்னது, "நீர் பிரபுத்தனம் பண்ணுகுறபோது பிதா, தெய்வம், பிரபு யெல்லாம் (நீரே). உம்முடைய தயவு தப்பிச் சென்றும், பொல்லாத வேளை வந்து தென்றும் யோசனை பண்ணிக் கொண்டு குடுக்கல் வாங்கல் ஒரு பேச்சு மூச்சுக்குக் கூட போறதை விட்டுப் போட்டு, வீட்டுக்குள்ளே யிருக்குறதினாலே, நாலஞ்சு நாளைக்கு ஒருதரம் கோட்டைக்கு வந்து உம்முடைய தெரிசனம் பண்ணுகுறதும் செவ்வையாய் வீட்டைப் போய் விடுகுறதும் பொல்லாத வேளை போயி நல்லவேளை யெப்போ வரும் யென்று காலத்தை நிஷ்கருஷை (?) சிச்சுச் கொண்டு யிருக்குறேன். அல்லாமல் யெத்தனை நஷ்ட்டம், யெத்தனை பேர், யெத்தனை வித்தியாசங்கள் நடத்தினாலும், யெது போனாலும் போகுது, யென்ன நடந்தாலும் நடக்கட்டும், பொல்லாத வேளையிலே யென்ன பேசப் போனால் யென்ன பொல்லாப்பு வருதோ வென்று சொல்லிப் போட்டு சும்மாயிருக்கச்சேயும், உங்கள் மனதிலே யிப்படித் தோத்துது பார்த்தால், யென் பொல்லாத வேளை யின்னம் குரூரமாய்த் தானே நிற்கு தென்று யெண்ணிக் கொண்டேன். ஆனபடியினாலே நீ ரென்ன செய்ய வேணுமோ அது செய்து கொள்ளும். ஆசிரா யிருக்குறே (தயாராயிருக்கிறேன்) னென்று சொன்னதுக்கு, "யிப்படித் தான் யேச்சாய். நல்லது, போ," வென்றார்.

அதுக்கு நான் சொன்னது, "நீர் நான் சொல்லுகுற வார்த்தை மெய்யா யெண்ணினாலும் சரி, பொய்யா யெண்ணினாலும் சரி. யெங்கள் தகப்பனார் யிந்தப் பட்டணத்துக்கு வந்து அன்பது வருசம் ஆச்சுது. யென் தகப்பனார் காலம் பண்ணிப் போய் முப்பத்து மூணு வருஷ மாச்சுது. யிந்த மட்டுக்கும் கோவர்ணதோர்த்தனம் பண்ணின கோவர்ணதோர் களிடத்திலே யெல்லாம் நான் தயவு சம்பாதிச்சதே அல்லாமல் கோபம் சம்பாதிச்சதில்லை. அவர்களுக்கும் யென்னைத் தொட்டு கீர்த்தி சம்பாதிச்சதே அல்லாமல் அபகீர்த்தி வந்ததில்லை. உம்முடைய நாளையிலே மாத்திரம் உம்முடைய தயவுக்குப் பாத்திரனல்லாமல், கோபத்துக்கு பாத்திரனானேன். யென்னைத் தொட்டு யுமக்கும் அபகீர்த்தி வாறதாயிருக்குது. அப்படி வாராமல் நடப்பிச்சுக் கொள்ளுகிறதுக்கு சுவாமி உமக்கு அதிகாரம் குடுத்திருக்கிறார். நானென்ன உம்முடைய வேலைக்காரன். யென்னை ஒரு காரியம் நடத்தினாலும், நல்லதாய் ஆனாலும், உம்மைத் தான் ராச்சியத்திலே கொண்டாடிச் சொல்லுவார்கள். பொல்லாப்பு வரும்படி நடத்தினாலும் உம்மைத் தான் அபகீற்த்தியான சொல்லாய்ச் சொல்லுவார்கள் என்கிறது சுவாமி யுமக்கு யோகம் குடுத்திருக்கிற படியினாலே உமக்குத் தோத்தாதது ஒன்றில்லை. அப்பாலும் உம்முட சித்தம், யென்னுட பாக்கியம்," யென்று சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு வெளியே வந்தவுடனே, குண்டூர் ராமாஞ்சுலு செட்டி வந்த யெங்கள் பிரஸ்தாப மேதாகிலும் உண்டா

வென்று கேட்டார். உங்களையும் அழைத்துப் பேசுவார்க ளென்று சொல்லிப் போட்டு தாழவந்து பல்லக்கேறிக் கொண்டு போகச்சே, முசே கில்லியார் அழைத்து உமக்கு சரீரம் ஆரோக்கியமா இருக்குதா வென்று கேட்டு, அப்பால் லோகாபிறமமாய்ப் பேசியிருந்தார். அப்பாலவர் கையிலே அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்து, ராமாசி (?) பண்டிதனை அழைப்பிச்சு முசே லெறி கோவர்ணதோரிடத்தில் நடந்த பேச்சை *சன்ஷெபமாய்க்* (சுருக்கமாய்க்) காரியத்தை யெல்லாம் சொல்லி, முசே புலோவுக்குச் சொல்லி வரச்சொல்லி அனுப்பி(னேன்). மறு உத்திரம் வந்து, “உம்மை அவர் கேழ்க்க ஞாயமில்லை. நீரு் பயப்படாது, உத்தரம் குடும். அவராலே உம்மை ஒன்றும் செய்யக்கூடாது,” யென்று (அவர்) சொல்லி அனுப்பினார் யென்று வந்து சொன்ன சமாசாரம் கேட்டு, அப்பால் பனியிரெண்டு மணி அடிச்ச படியினாலே வீட்டுக்கு வந்தேன்.[1]

***1757 வருசம், நவம்பர் மாசம், தேதி 14; ஈசுவர வருசம், கார்த்திகை மாசம், தேதி 3;***

இத்தனாள் சோமவாரம் கேழ்விப்பட்டது சேதி என்ன வென்றால், மச்சிலிபந்தரிலே கொம்மாந்தாமா யிருக்கிற முசே மொற்சேன் (M. Moracin) காகிதம் முசே லெறி கொவர்ணதோருக்கு வந்ததாயும், அந்தக் காகிதத்திலே யெழுதி யிருந்த வயணம் மேஸ்தர் கிளேவிசு பங்காளத்திலே யிருந்து ஒரு கப்பலின் பேரிலே ரெண்டு லெட்சம் பொன் மோகறும் சிறிது பிடவை சீலைகள் அரிசிகள் கொஞ்சம் சொலுதாதுகள் சிறிது சிப்பாயிகள், பிரான்சுக்காரர் பெத்திரி இங்கிரேசுக் காரர் பிடிச்சுக் கொண்ட போது அதிலே அகப்பட்ட பிரான்சுக்கார சொலுதாதுகள் வகையிராக்களை, காவல் பண்ணி வைச்சிருந்ததே, அதிலே முப்பது பேரைக் கப்பலிலே அடிக்குத்தலிலே (ship's hold) யேத்தி, சென்னப்பட்டணம் கொண்டு போயி யிறக்கச் சொல்லித் திட்டம் பண்ணி அனுப்பிவிச்சதாயும், அந்தக் கப்பல் மச்சிலிபந்தருக்கு நேராய் வரச்சே அந்தக் கப்பலிலே யிருந்த பிரான்சுக்காரரும் யிங்கிரேசுக்காரரும் சேர்ந்து சிறிது உடம்படிக்கை பேசிக் கொண்டு, அந்தக் கப்பலுக்குத் தலைவனாய் வந்த ரெண்டு மூணு பேர் கப்பித்தான் மாரைராத்திரியிலே சரிக்கட்டிப் போட்டு, அந்தக் கப்பலை மச்சிலிபந்தர் துரைத்தனம் பண்ணுகுற முசே மொற்சேன் வசத்திலே ஒப்பிவிச்சதாயும், அவர் அந்த ரெண்டு லட்சம் பொன் மோகராவையும் யிறக்கிக் கொண்டு, பின்னையும் அதிலே வந்த

[1] பிள்ளையின் நியாய உணர்வினையும் அஞ்சாமையையும் மேற்படி வாசகம் தெளிவாக, ஒளிவு மறைவின்றி உணர்த்துகிறது. இதைத்தான் விளக்கமாக சுப்பீருக்கு நவம்பர் 17 அன்று எழுதி அனுப்பினார் பிள்ளை. அது ஆங்கிலத் தொகுதி XI–ன் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது.

தினிசுகள் அரிசி பிடவை வகையிராவும் இங்கிரேசு சொலுதாது சிப்பாயிகளையும் யிறக்கிக் கொண்டு, அந்தக் கப்பலிலே பிரஞ்சுக் காரரைப் போட்டதாயும், அந்தச் சேதியை யிவ்விடத்துக்கு யெழுதி அனுப்பிவிச்சதாயும், அந்தக் காகிதத்தை முசே லெறி வாசித்துப் பார்த்துக் கொண்டு, யிப்படி ஆச்சரியம் ஒருக்காலும் கண்டதில்லை யென்று காகிதத்தைப் பார்த்துப் பாத்து நகைச்சு, முசே பெடுத்தல்மீ வகையிரா கோன்சேலியேர்களை அழைப்பிச்சு யிந்த சேதிகளைச் சொன்னதாயும் சொன்னார்கள். ஆனால் வருகுற காலத்துக்கு சனாயாசமாய் வருமென்றும், போற காலத்துக்கும் அப்படித் தானென்றும் முன் நடந்த அனுபவமும் பெரியோர்கள் சொன்னதும் சரி, ஆனால் செனங்களுக்கு விவேகமில்லாமல் போனபடியினாலே மயங்குறார்கள். அதுக்கு அனுபவம் யென்னவென்றால், முன் யுவ வருசம் தை மாசத்தையிலே (1756) பிரான்சுக்காரருது ஒரு கப்பலிலே அஞ்சு லட்சம் ரூபா ரொக்கமும், யிதல்லாமல் சரக்கும் மயேக்கு அனுப்பிவிச்சபோது, அந்தக் கப்பல் மயேத் துறை பிடிச்சு கிட்ட வருகிறபோது யிங்கிரேசுக்காரர் கப்பல் தலைச் சேரியிலே யிருந்து ஒரு கப்பல் வந்து சுனாயாசமாய் பிரஞ்சுக் கப்பலைப் பிடிச்சுக் கொண்டு போகயில்லையா? அது முதல் கொண்டு பிரான்சுக்காரருக்கு யிறக்கம் கண்டு கொண்டே வந்துதே, யிப்போ நல்ல காலம் பிறந்ததுக்கு சூசகமும் யினிமேல் இங்கிரேசுக்காரருக்கு தாழுகுறதுக்கு யேஷியமும் வருகுற காலம் சமீபிச்சு யிருக்கிறபடியினாலே, கப்பலிலே யிருந்த போதுதானே அதிலிருந்த தலைவரை வெட்டிப் போடவாவது, சூனாயாசமாய் ரெண்டு லட்சம் பொன் மோகராவுக்கு முப்பது லட்சம் ரூபாயாச்சுதே, பிடவை சீலை அரிசி கோதும்பை சாமான் வகையிராக்களும் கப்பலும் வஸ்துவிலேக் (?) கொண்டு வந்து குடுக்கவாவது யிது காலமே அல்லாமல் மத்தப்படியல்லவே. யிதை செனங்கள் யோசனை பண்ணாமல் அவிவேகத்தினாலே சரிப்போனபடி பெனத்துகிறார்கள். ஆனால் தெரிஞ்சவர்கள் நல்ல காலத்துக்கு நல்லதாய் நடக்கும், பொல்லாத காலத்துக்குப் பொல்லாதாய் நடக்கும், யெல்லாம் காலத்துனுடைய கூறேயல்லாமல் மனுஷர் யெத்தனத்திலே ஒன்றுமில்லை யென்று நிஷ்கருஷையாய் யெண்ணிக் கொண்டிருப்பார்கள்.

***1757 வருசம், நவம்பர் மாசம், தேதி 25; ஈசுவர வருசம், கார்த்திகை மாசம், தேதி 14; சுக்கிறவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் : நேத்து ராத்திரி சீமையிலே யிருந்து ஒரு கப்பல் வந்ததாயும், அந்தக் கப்பலிலே

[1] ஒரு பொன் மோகர் = 15 ரூபாய்.

வந்த சேதி லரேன்தெ அங்கேரியார் (the queen of Hungary) அவர்களுக்குப் பிலனாய் பிரான்சுக்காரர் அலமாஞ்சுக்காரர் கூடியிருந்தவர்களுக்குப் பின்னை ஒரு ராசா பேர்விளங்கனும் யிங்கிரேசுக்காரரும் சேர்ந்து லறேன்தெ அங்கேரியார் பேரிலே சண்டை பண்ணினதாயும், ரெண்டு சண்டையிலே லறேன்தெ அங்கேரியார் கெலிச்சதாயும், அப்பாலந்தப் பேர் விளங்கன் ராசாவுக்குக் காயம் பட்டுது, பிழைப்பனோ பிழைப்பானோ தெரியாது என்றும், அந்த ராசாவினுடைய குமாரன் உருத் தெரியாமல் (வெட்டுப்பட்டுப்) போச்சுது யென்றும், யிங்கிரேசுக்காரரிலே முப்பதினாயிரம் பேர் செத்துப் போனார்களென்றும், அதின் பேரிலே தொப்பிக்காரர் ராசாக்களெல்லாம் யேகோபிச்சு போன அற்பிசி மாசம் மாரிக் காலத்துக்குப் பிறகு சண்டை கவையில்லை யென்று சமாதானம் பேசுகுறார்களென்றும் யெழுதி வந்ததாய் வெளியே சொல்லிக் கொண்டார்கள்.

## டிசம்பர் 1757

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 6; ஈசுவர வருசம், காற்திகை மாசம், தேதி 25; செவ்வாய்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி, நானா காகிதம் துரைக்கு பணங்காசு நிமித்தியம் யெப்போது யெழுதுகுற படிக்கு மரியாதையாய் யெழுதாமல், கொஞ்சம் சுறுக்காய்க் யெழுதி அனுப்பினதாயும், சந்தா சாயபுக் குமாரன் பேருக்குக் காகிதம் யெழுதி அனுப்பினதாகவும், அதினாலே ரசா சாயபும் முசே திலார்சும் போய் துரையுடனே பேசி நானாவுக்கும் அவர் தம்பிக்கும் அவர் காரியஸ்தர் பெலவந்த ராயர் முதலான பேருக்கும் வெகுமானம் கட்டி அனுப்ப வேணுமென்று யோசிச்சு, அனுப்பினதுக்கு டாப்பு யெழுதியிருக்குது. அந்த டாப்புப் படிக்கி சேத்துப் பட்டிலே பிடிச்சு வந்த ஆனை நாலையும் சகலாத்து சிப்பங்களும் சுருட்டிகளும் முகமல்லும் சூர்கத்தி ரெண்டு கெடியாரம் துப்பாக்கி பிஸ்த்தோல் முதலானதும் கட்டி அனுப்பிவிக்கிறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 10; ஈசுவர வருசம், காற்திகை மாசம், தேதி 29; சனிவாரம்***

இப்பால் கேழ்வியான சேதி : நானா பிறக்குறபோது அவர் தகப்பனார் பாசி ராயர் அறுபது குதிரைச் சேவுகத்துடனே யிருந்ததாகவும், அப்போ நானா பிறந்த உடனே சோசியாள் சாதகம் பார்த்து யிவர் மகா யோகசாலி டில்லி பார்ஷாவைத் ... தள்ளி யிவர் அந்த (ஸ்தா)னத்திலே போயி யிருக்கத் தக்கன யோகம் யிவருக்கு யிருக்குது யென்று யெழுதிக் கொடுத்தார்களென்றும், யிப்போது நானாவுக்குப் பிள்ளை பிறந்தவுடனே அந்தப் பிள்ளை சாதகம் பார்த்து வெகுதானிய வருஷம் (1758) ஆவணி மாசத்தையிலே நானா போயி டில்லியிலே பார்ஷா தனத்திலே யிருப்பாரென்றும் யெழுதி குடுத்தார்களென்றும், யிப்போதும் நானா அந்த யெத்தனத்திலே யிருக்குறா ரென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 17; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 6; சனிவாரம்***

இத்தனாள் கேழ்வியானது : அய்யண்ண சாஸ்திரி முன்னூறு பேர் பாறுக்காரரும் யிரநூறு பேர் சிப்பாயிகளும் முன்னூறு பீரங்கியும் அழைச்சுக் கொண்டு காஞ்சீபுரம் சமீபத்திலே போய் நெலவெடுத்த (முகாமிட்ட) தாகவும், அப்போது யிங்கிரேசுக்காரர் மனுஷன் முசபறு பேக்கு (Muzaffar Beg) யென்கிறவன் அன்னூறு பாறுக்காரருடனே வந்து வெகு பேரை சேதப்படுத்தி பின்னையும் (அவர்களது ஆயுதங்களைப்)

பிடுங்கிக் கொண்டதாகவும், அதன் பேரிலே அய்யண்ண சாஸ்திரி சண்டை நிறுவாகம் பண்ண மாட்டாமல் யெல்லாத்தையும் பறி குடுத்துத் திரும்பி ஓடி வந்து விட்டா னென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 18; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 7; ஆதிவாரம்***

இத்தனாள் உதயத்திலே கடல்கறை சேவுகன் வந்து பந்தரிலே யிருந்து சுலுப்பு வந்தது, அதிலே பங்காளத்திலே யிங்கிரேசுக்காரர் கையிலே அகப்பட்டிருந்த முசே தெவோ மகனும் மருமகனும் வந்து சேர்ந்தார்கள் யென்று சொன்னான்.

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 21; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 10; புதவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : தெற்கே பிலித்தேவன் கோட்டையிலே யிருந்து மாபூசுக்கானுடைய உடமைகள், ரெத்தினப் பெட்டிகள் முதலானது வந்ததாகவும், அது திருவண்ணாமலை கொம்மாந்தாம் கிட்ட அகப்பட்டு, யெலமாஞ்சூர் (எலவானசூர்) கொம்மாந்தான் கிட்ட அனுப்பினதாகவும் சேதி வந்தது. அது வாங்கி வரத்தக்கதாக சவரிராயப் பிள்ளை தம்பியும் முசியே ஷெவிரோவும் எலமரஞ்சூர் கும்மாந்தா(மை அவன்) அண்டைக்கு அனுப்பினதாகவும் சேதி வந்து சொன்னார்கள்.

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 26; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 15; சோமவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முன்னாலே முசியே துப்பிளேயிக்கு அவர்களுக்கு மன்சுபாவும் சாகீரும் குடுத்தாப் போலே யிப்போது முசியே லெறி அவர்களுக்கும் மன்சுபாவுக்கும் சாகீருக்கும் டில்லியிலிருந்து காகிதம் வரவேணு மென்று யிதுக்கு முன் யிவ்விடத்திலே யிருந்து யெழுதி அனுப்பியிருந்ததாகவும், அதுக்கு யித்தனாள் டில்லியிலே காசத்தின் (காசியுத்தீன்) கான் கிட்ட யிருந்து அவர் மாரிபத்திலே முசியே லெறி அவர்களுக்கு யேழாயிரம் குதிரைக்கும், முசியே திலார்ஷுக்கு அய்யாயிரம் குதிரைக்கும் மன்சுபா காயிதம் வந்த தாகவும், யிதுக்குச் சாகீருகள் கற்னாடக சுபாவிலே வேணுமானால் அங்கே விடுகுறோம், அல்லவென்றால் இந்துஸ்தா(னத்திலே) வேணுமானாலும் அங்கே விடுகுறோம் யென்று எழுதி வந்த தாகவும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு நாலுபேர் வெள்ளைக்காரர் சந்தா சாயபு வீட்டிலே சேவிக்குற துலுக்கன் ஒருத்தன் தலையைப் பிளந்து போட்டதாகக் கேழ்விப்பட்டுது. யிப்போது பட்டணத்திலே வெள்ளைக்காரர் பண்ணுகுறதும் மனுஷரை அடிக்குறதும் பெண்டுகளை அங்கங்கே கெடுக்கிறதும் சொல்லி முடியாது யென்று அவரவர் வந்து சொல்லுகிறார்கள்.

*1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 27; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 16; செவ்வாய்*

இத்தனாள் கேழ்வியான சேதி : யிதுக்கு முன் ஆவணி மாசத்தையிலே சீமையிலே பிரான்சுக்காரருக்கும் இங்கிறீசுக்காரருக்கும் சமாதானம் ஆச்சு தென்று சென்னபட்டணத்திலே சொல்லிக் கொண்டதாகச் சொன்னார்கள். அதுக்கு யிவர்களுக்கு பெலன் வருகுறபடியினாலே இங்கிரேசிக்காரர் (இதைப்) பிறப்பிச்சார்கள். சேதி வர (இன்னும் நாளாகும்), அப்படி வந்தாலும் யிவர்களுக்கும் சேதி வருமே யென்று அவரவர் வெள்ளைக்காரர் சொல்லிக் கொண்டதாகவும் கேழ்வியாச்சுது.

*1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 28; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 17; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே பூந்தோட்டக் கச்சேரியிலே போயிருந்து பனியிரண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிதிலே கேழ்விப்பட்ட சேதி : யிதுக்கு முன் துரையுடனே சந்தா சாயபு குமாரன் போயி யாசம ணாயக்கன் கிட்ட சிவங்கியும் (சிறுத்தையும்) பாது (பருந்து?) யென்கிற பஷிசியும் காசி தேசத்திலே யிருந்து வருகுறது, அது ஒவ்வொன்று அன்னூறு ரூபாய் விலை; அந்த பட்சி (வேட்டையிலே எதைப் பிடித்தாலும்) விடுகுறதில்லை, அதுவும் சிவங்கியும் வேட்டைக்கு மெத்த நேர்த்தியாகையால் நீங்கள் யாசம ணாயக்கனுக்கு யெழுதி அனுப்பிவிச்சு அழைப்பிச்சுத் தரவேணும் யென்று சொல்லிக் கொண்டு, அந்தப்படிக்கு முன்னாலே யாசம ணாயக்கருக்குத் துரை காகிதம் போட்டு யிருந்(தாராம்). அதுக்கு யித்தனாள் சிவங்கியும் மூன்று பாது யென்குற பக்ஷியும் கொண்டு வந்து யாசம ணாயக்கர் ஸ்தானாபதி துரைக்கிட்ட கொண்டு போய் குடுத்தார்கள். (அவற்றை) யினிமேல் தொரை சந்தா சாயபு குமாரனுக்கு யெப்போ குடுப்பாரோ வென்றும் கேழ்க்கப்பட்டுது.

முசே புசி தண்டெல்லாம் மச்சிலிபந்தருக்கு வெளியிலே யிறங்கி யிருக்கிறதென்றும், முசியே புசி மாத்திரம் பந்தருக்குள்ளே யிருக்குறதாயும் பந்தர் துரை முசே புசியை வெளியே போறதுக்கு

உத்தாரம் குடுக்கயில்லை யென்றும், காலி பேச்சாய்க் கேழ்க்கப்பட்டுது. இங்கிரேசுக்காரருக்கும் பிரான்சுக்காரருக்கும் யிதுக்கு முன் ஆவணி மாசம் சமாதானமாகவே, மயே, சூரத்திலே யிருந்து பந்தருக்குச் சேதி வந்து, (அது) யிவ்விடத்துக்கு வந்ததாகக் கேழ்க்கப்பட்டுது. தலைச்சேரி கிட்ட பிரான்சுக் கப்பலும் யிங்கிரீசுக் கப்பலும் சண்டை மேலே வருகுறதாகவும் கூடலூருக்கு அந்தச் சேதி வந்து, கூடலூர் தொரை ஊரிலே ஆரும் யிருக்கத் தேவையில்லை, வலசை போகச் சொன்னதாகவும் சகலமும் முன் போலவே வலசை போறார்களென்று கேழ்க்கப்பட்டுது.

***1757 வருசம், தெசம்பர் மாசம், தேதி 29; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 18; குருவாரம்***

இத்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்குக் கேழ்வியான சேதி: நானா கிட்ட யிருந்து ஒட்டகைக்காரன் ஆற்காட்டுக்கு வந்து காகிதம் குடுத்து யிவ்விடத்துக்கு வந்ததாகவும், அந்தக் காகிதம் நானா வக்கீல் துலுக்கன் பார்த்துக் கொண்டு யிருக்கிறதாகவும், வந்தவன் நானாவுக்கும் சலாபத்து சங்குவுக்கும் அவுரங்காபாத்திலே சண்டை யாகுதென்று சொன்னதாகவும் கேழ்விப்பட்டுது. யிதல்லாமல், தொரைக்கும் முசியே தெலார்ஷுவுக்கும் காசுத்தின் கான் கிட்டயிருந்து மன்சுபா காகிதம் யிதுக்கு முன் வந்தத்திலே ... ஆயிரம் பேர் சொலுதாதுகளும் யிரநூறு பீரங்கி சுடுகிறவர்களும் துப்பாக்கி பீரங்கி மருந்து குண்டு முதலான யுத்த சாமான்களுடனே தம்மண்டைக்கு அனுப்பிவிக்கச் சொல்லியும் யெழுதி வந்துதென்றும் கேழ்க்கப்பட்டுது. யிது நிமித்தியம் (தான்) மன்சுபா காகிதம் காசுத்தின் கான் வாங்கி அனுப்பினாரென்று மனதிலே யெண்ணிக் கொண்டோம்.

## ஜனவரி 1758

***1758 வருசம், சனேரி மாசம், தேதி 8; ஈசுவர வருசம், மார்கழி மாசம், தேதி 28; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு முசியே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனவிடத்திலே முசே பெடுத்தல்மீயும் ரெண்டு பேர் வெள்ளைக்காரரும் பேசிக் கொண்டிருந்தார்கள். அதே சமயம் நானும் போயிக் கண்டு காண்பிச்சுக் கொள்ளச்சே அவரெழுந்திருந்து ஆசாரம் பண்ணி கூட உளுக்கார வச்சுக் கொண்டார். அப்படி யிருக்கையிலே ரெண்டு பேர் வெள்ளைக்காரரும் பேசியிருந்து போன பிறகு, முசியே பெடுத்தல்மீ நம்மைப் பார்த்து, "நேத்து துரைக்கிட்ட உம்முடைய பிரஸ்தாபம் ரொம்ப நடந்தது. யென்ன வென்றால் மகாநாட்டார் பேட்டி பண்ணிக் கொள்ளுகிறதுக்கு முசியே சுப்பீர் வந்திருக்குறாரே, யெப்படி யென்று தொரை உம்மைக் கேட்டதுக்கு, நீர் "மகாநாட்டார் பேட்டி கோவர்ணதோருக்கே அல்லாமல் பிறிகாதியேருக்கு அக்கரையில்லை," யென்று சொன்னதுக்கு, "யேன் அக்கரையில்லை? அதுக்கு நியாயம் யெப்ப?"[1] யென்று கேட்டார்.

அதுக்கு நான் சொன்னது 1701 வருசம் பிப்ரேயிரு மாசம் ஒலாந்தாக்காறர் கையிலே பிரான்சுக்காரர் வாங்கி வெள்ளைக் கொடி போட்டபோது கோட்டைக்கு ராசா மனுஷரும் முசே மற்த்தேன் குவர்ணதோருமா யிருக்கிற போது ராசா மனுஷருக்கும் மகா நாடு பேட்டி நடந்ததில்லை. 1700 (தவறு, 1708) வருசம் முசியே யெபேர் கோவர்ணதோராக வரச்சே, ராசா கடுதாசி வாங்கி வந்து ராசா மனுஷருக்குக் குடுத்து அவர்களைச் சீமைக்கு அனுப்பிப் போட்டு, கோட்டைக்கும் தாங்களே யிருந்தார்கள். முசே (லெ)னுவார் தொரைத்தனத்திலே ராசா மனுஷன் முசியே லபோ (M. Lebo)[2] கோட்டைக்கும் யுத்தத்திற்கும் அதிகாரியாய் 1728 வருசம் வந்தார். அப்போ முசியே (லெ)னுவார் அவர் கையிலே கோட்டையைக் குடாமல் அவரிங்கே யிருந்தால் ஒரு காரியமும் நடவாது யென்று சீமை வரைக்கும் யெழுதி அனுப்பிவிச்சு, ராசா கடுதாசி அழைப்பிச்சுக் கொடுத்து, அவரைத் தள்ளிப் போட்டார். முசே (லெ)னுவார் தொரைத்தனம் முதல் ஆர் துரைத்தனத்துக்கு வந்தாலும் கொம்மாந்தாம் செனரால் என்று போராச்சுது. அப்படி யிருக்க யிவர் பிறுகாத்தியேராய் (பிரிகேடியர்) சண்டைக்கு வந்தவர்,

[1] ஒலாந்துக் காரரிடமிருந்து புதுச்சேரியைப் பிரெஞ்சுக்காரர் திரும்பப்பெற்றது 1699 டிசம்பரில்

[2] இது முசே ல பேரல் (La Farelle) என இருக்க வேண்டும்.

சண்டையிலே யிருக்கிற பேருக்கு முதலாவது மாற்ஷேல் தெ பிரான்சு, அதுக்குக் கீழ் றூ(லூ)யித்தினாந்து செனரால், அதுக்குக் கீழ் மறுஷேரம் தெ–காம்பு (Marechal-de-camp); அதுக்குக் கீழ் பிறகாத்தியேர், அதின் கீழே கொலெனெல், அதன் கீழ் கொம்மாந்தாம், அதன் கீழ் கப்பித்தான்; அதின் கீழ் மயோர்; அதன் கீழ் ஒபிசியால்; யிப்படி படிப்படியாய் சண்டையுடனே கூடின காரியத்துக்கு யிருக்கிற பவுருஷமாகிய பேர்கள், யிவர்களுக்குச் சண்டைக்குப் போறதும் அடிக்கிறது மல்லாமல் சீமை அதிகாரத்துடனே கூடின ... காரியமில்லை. அதிகாரத்துடனே கூடினது ஆருக்கென்றால், முதலாவது மினிஸ்தருது, ரெண்டாவது செனரால், மூணாவது கோவர்ணதோர், நாலாவது கோன்சேலியேர், யிவர்கள் சீமை அதிகாரம் விசாரிக்குற பேர்கள். ஆகையாலே சீமை அமுலுதார், சீமைக் குடிகள், மகாநாட்டார் முதலான பேர் யிவர்களைக் காண வேண்டியது. யிதை ஆலோசனை பண்ணிக் கொள்ளாமல் முசியே லெறி அவர்கள் பிறுகாத்தியே ராயிருக்கிற முசியே சுப்பீரு(வை) அமுல்தாரரைப் போய்க் காண்பிச்சுக் கொள்ளச் சொல்லியும், குடிகளைப் போய்க் காண்பிச்சுக் கொள்ளச் சொல்லியும், யிந்தப் படிக்கிப் பண்ணினார். ஆகையால் துரைத்தனம் பண்ணுகிறவரைத் தொட்டுத் தானே, துரையைத் தொட்டுத் தானே காரியம் கெட்டுப் போச்சுது," யென்று சொன்னதுக்கு, அவர் வெகு சந்தோஷப்பட்டு "நீ யெப்படி யிதெல்லாம் அறிஞ்சாய். பிரான்சு தேசத்திலே பிறந்த யெங்களுக்குக் கூடத் தெரியாது. யிந்த வயணமெல்லாம் முசியே லெறி அறியார். நாளை நான் யிந்த வயணமெல்லாம் போய்ச் சொல்லுகிறேன். முசே லெறியானால் அவரை அன்னியிலே தாம் தானே மகா நாடு பேட்டி வாங்கிக் கொண்டால் அவனெங்கே வந்து குத்திப் போடுகிறானோ வென்று பயப்படுகிறார். ஆகையாலே மகாநாட்டுப் பேட்டி நடவாது. வர்த்தகரை மாத்திரம் இரகசியமாய் (த் துரையுடனே) பேட்டி ஆகவேண்டிய," தென்று சொன்னார். நல்லதென்று அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டைக்குப் போய் தொரையைக் கண்டு ரெண்டு நாழிகை அவர் கிட்டவே யிருந்தோம். அவரும் குளுந்த பார்வையாயிருந்தார். அதன் பேரிலே பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து பனியிரண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், சனேரி மாசம், தேதி 13; ஈசுவர வருசம், தை மாசம், தேதி 4; சுக்கிரவாரம்***

பட்டணத்திலே ராசா மனுஷர் ராத்திரி யெல்லாம் பண்ணுகிற கலும்புனாலே குலஸ்திரீகள், தேவடியாக்கள் ஆரும் வெளியே பிறப்படக்கூடாது.

***1758 வருசம், சனேரி மாசம், தேதி 14; ஈசுவர வருசம், தை மாசம், தேதி 5; சனிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போகயிலே தொரையவர்கள் முசியே சுப்பீர் காம்பிராவிலே போய் பேசிக் கொண்டிருக்கிறாரென்று சேதி வந்த படியினாலே, நல்லதென்று சின்னதுரை வீட்டுக்குப் போயி அவரைக் கண்டு தனிச்சு ரெண்டு பேரும் பேசிக் கொண்டிருக்கையிலே, நாம் சின்ன துரையுடனே நேத்து முசியே லெறி வந்து பேசிக் கொண்டிருந்தாரே, (அப்போ) மகாநாடு பேட்டிச் சமமதியேதாகிலும் பேச்சு நடந்ததா வென்று (கேட்டேன்). அவர் சொன்னது, "அந்தப் பேச்சு ஒன்றுமில்லை. முசியே சுப்பீரும் முசியே லெறியும் சத்தே (உறவு) முறிஞ்சுது. அதினாலே முசியே லெறிக்கு முசியே சுப்பீர் யெங்கே குத்திப் போடுகுறாரோ வென்று ரொம்ப பயம் தோணி கோட்டையை அவர் கிட்ட விட்டுப் போட்டு, தாம் வேறே முசியே துப்பிளேயிக்சு யிருந்த வீட்டிலே[1] வந்திருந்து கொண்டு யிவ்விடத்திலே ஆலோசனை மத்ததெல்லாம் பண்ணிக் கொண்டு சீமை பூமி காரியங்களும் தாம் பார்த்துக் கொள்ள வேணுமென்று யென்னுடனே வந்து யோசனை பண்ணினார். அதுக்கு நான், "உம்மைத் தொட்டு யித்தனையும் வந்தது. ஆதியிலே தானே முசியே சுப்பீருண்டு, கோட்டையும் ராணுவும் உண்டு யென்று ஒதுக்கிவிட்டுப் போட்டு நீர் மைத்ததெல்லாம் பார்த்துக் கொண்டு, அந்தப்படியிலே கொண்டு வரவேணும். நானும் உமக்குச் சொன்னேன். அப்படியிருக்க நீர் தானே அவர் கிட்ட ஒவ்வொன்றாய் காயிதங்களைக் கொண்டு போய்க் காண்பிச்சீர். அதுவே வழியாயி அவர் பிடிச்சு நடத்து குறாரென்று நீ யென்னுடனே சொன்ன சேதிகள் எல்லாம் அவருக்குச் சொன்னேன். அவர் அந்த பயத்தினாலே வேறே (ஆள்) வர வேணு மென்று யோசனை பண்ணிக் கொண்டு யிருக்குறா," ரென்று சொன்னார்.

அதுக்கு நான், யிப்பால் நம்முட சேதிக்கு யெப்படி நடக்க வேணும் யென்று (கேட்டதுக்கு) அவர் சொன்னது, "முசியே லாலி (M. Lally) யிந்த ஊருக்கும் ராசா காரியத்துக்கும் கோட்டைக்கும் சகலத்துக்கும் கோவர்ணதோராய் வருகுறார், அவர் வந்தால் முசியே லெறிக்கும் ஒன்றும் யில்லை. நமக்கும் ஒன்றுமில்லை. பிடவைப் பார்க்குறது (வர்த்தகம்) மாத்திரம் ஆக்கும் உள்ளது. சீமா மூலம், சாகீர் முதலானதுகள், சீமை யென்னப்பட்டது, சகல(த்துக்கும்) கும்பினியாருக்கு உத்திரவாதி தாம்

---

[1] முதன் முதலில் கோட்டைக்கு வடக்கே யிருந்த பழைய மாளிகை.

யென்று முசியே கொதே(யிடம்) யெல்லாம் வாங்கிக் கொண்டு முசியே குலுவேத்தைப் பயணம் பண்ண அனுப்பியிருக்கிறார். ஆகையினாலே சீமா மூலம் காரியத்துக்கு எல்லாம் முசியே குலுவேத்து அல்லாதே ஆருக்கும் காரியமில்லை. முசியே லாலியானால் பணத்து மேலே மெத்த ஆசையா வருகுறார். முசியே குலுவேத்தும் பணத்தாசைக்காரனாலே, முசே தெவோ ஆசைக்குக் குடுத்தால் யெப்படியோ தெரியாது. ஆனால் வந்த உடனே சீமை உன் வசம் பண்ணுவார்கள்," என்று சொன்னார். அதுக்கு, "சீமை யெல்லாம் கெட்டுப் போயிருக்குது. நானெப்படி சீமை யேத்துக் கொள்ளுவேன்," என்று சொன்னதுக்கு, அப்பால் யென்னமோ நடக்குமோ எனக்குத் தெரியாது யென்று சொன்னார்.

***1758 வருசம், சனேரி மாசம், தேதி 20; ஈசுவர வருசம், தை மாசம், தேதி 11; சுக்கிறவாரம்***

இத்தனாள் ராத்திரி வடக்கே கஞ்சத்திலே யிருந்து நமக்கு கணக்குப் படிக்கி முப்பதினாயிரம் ரூபாய் கடன் தர வேண்டிய பீரு மகம்மது, முந்தாம் நாள் லங்கணம் பண்ணி நேத்துப் பத்தியம் வாங்கி, யிந்த நாள் ராத்திரி ஒரு மணிக்கி விழுந்து போனான். அதுக்கு நன்றாய் வெகு சம்பிறமமாய் (சவத்தை) யெடுக்கச் சொல்லி அவன் மச்சினன் வந்து பத்து ரூபாய் கேட்டதுக்கு, அன்பது ரூபாயும் ரெண்டு செல்லாவும் குடுக்கச் சொல்லி, வாசலிலே யிருக்கிற துலுக்கர் சகலமான பேரையும் கூடப் போகச் சொல்லித் திட்டம் பண்ணினோம். நமக்கு மிருத்து தோஷமாய்ப் பிடிச்சிருந்த சனிதோஷம் யுவ வருசம் ஆனி மாசம் 13 (1755 ஜூன் 23) க்கு மேல் வந்த தோஷமாய் ஈசுவர வருசம் தை மாசம் 13 தேதி (1758 ஜனவரி 22) சாயங்காலம் வறையரவாய் (முழுதும்?) விட்டுப் போறபடியினாலே சீவகானி (ஜீவ அபாயம்), ராச்சிகானி (பண நஷ்டம்) (பூமி நஷ்டம்), தனிகானி நினகானி, சரீரத்திலே ரெத்தமாங்கிஷாதி யில்லாத பெலகானி (ரத்தக்கழிச்சல், உடல் பலவீனம்) சகலமும் வந்தது. யிதுவரைக்கும் அனுபவிச்சோம். யிதோடே சகல தோஷமும் போச்சென்று யெண்ணிக் கொண்டோம்.

***1758 வருசம், சனேரி மாசம், தேதி 24; ஈசுவர வருசம், தை மாசம், தேதி 15; செவ்வாய்***

இத்தனாள் ராத்திரி சங்கராபுரம் தலுக்கு குலாமுசேன் கான் பிள்ளைகள் ரெண்டு பேரும், நானா வக்கீல் மீர் நெமுதுல்லா என்கிறவனும் ஆக மூன்று பேரும் நம்முடைய கச்சேரிக்கு வந்து

காண்பிச்சுக் கொண்டு, சங்கராபுரம் சம்மதி தங்களுக்குத் தானே முப்பதினாயிரம் ரூபாயாயித் தீத்து, முசியே லெறி வெகுமதியும் குடுத்து அனுப்பிவிச்சார். உங்களைக் கண்டு அனுப்பிக் கொண்டு போக வேணுமென்று வந்தோ மென்றும் சங்கராபுரத்திலே யிருபது பேர் வெள்ளைக்காரர்கள் ட்டாணயமாய் யெப்போதும் யிருக்கிற தென்றும், யிப்போ குடுக்கிற முப்பதினாயிரம் ரூபாய் அல்லாதே, வருஷம் ஒன்றுக்கு யிருபத்தையாயிரம் ரூபாய் வீதமும் குடுக்கிற தென்றும் சொன்னார்கள். அதுக்கு மெத்த நல்லது ஆச்சு தென்று சொல்லி வந்த மூன்று பேருக்கும் மூன்று சீரொப்பா, யிறநூறு ரூபாய் பேருக்குக் குடுத்து அனுப்பிவிச்சோம்.

## பிப்ரவரி 1758

*1758 வருசம், பிப்ரேயிரு மாசம், தேதி 5; ஈசுவர வருசம், தை மாசம், தேதி 27; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : பொம்பாயிலிருந்து கூடலூருக்குச் சேதி வந்ததாயும், அங்கே காவலிலே யிருக்கிற பிரான்சுக்காரர் ரெண்டு பேருடனே துரைக்குச் சேதி சொல்லி (இவ்விடம்) அனுப்பிவிச்சதாகவும், அவர்கள் வந்து கந்தப்ப முதலியுடனே சொன்ன சேதி : பிரான்சுக்காரருக்குப் பதினாறு கப்பல் பிறப்பட்டு, வெகு சமீபத்திலே வருகுதென்று கூடலூரெல்லாம் அதலகுதலமாய்க் கிடக்குதென்று சொன்னதாகவும், அதை கந்தப்ப முதலி கேட்டு யிவர்களைத் தொரைகிட்டக் கொண்டு போயிவிட்டால் கபுறு விசாரிக்க (உளவு பார்க்க) வந்தார்களென்று அதுக்கேத்த ஆக்கினை பண்ணச் சொல்லுவாரென்று வந்தவர்களை ஒடிப்போகச் சொல்லி விட்டதாகவும் சேதி கேழ்க்கப் பட்டுது.

*1758 வருசம், பிப்ரேயிரு மாசம், தேதி 10; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 2; சுக்கிறவாரம்*

இதல்லாமல் தஞ்சாவூர் சீமையிலே யிருக்கிற குடிகளெல்லாம் பிரான்சுக்காரர் யின்றைக்கு வந்து விழுகுறார்களென்றும், நாளைக்கு வந்து விழுகுறார்களென்றும், யிப்படி நித்தியம் கிலிலே (அச்சத்திலே) யிருக்கிறார்களென்றும், யிதல்லாமல் வயித்தீசுவரன் கோயில் பண்டாரத்தை காடேராயன்[1] மனுஷன் பிடிச்சுக் கொண்டு வந்து சீயாழியிலே வைச்சுக் கொண்டு யிருந்ததாகவும், அந்தப் பண்டாரத்தை விடுவிக்க வேணுமென்று தீவிக் (தேவிக்) கோட்டையார் யெத்தினம் பண்ணினதாகவும், அந்தச் சேதி காடேராயன் அறிஞ்சு அப்படி தீவிக்கோட்டையார் வந்து விழுந்தால் அந்தப் பண்டாரத்தை வெட்டி அவர்கள் முன்னே போடச் சொல்லி தன் மனுஷருக்கு யெழுதி அனுப்பினதாகவும், அப்படி யிருக்கிறத்திலே தீவிக்கோட்டையார் சிறிது பாறுக்காறர் களுடனே பிறப்பட்டுப் போனவிடத்திலே பண்டாரத்துக்கு மோசம் வரும் என்கிறதை அறிஞ்சு காடேராயன் மனுஷர் யிவர்களை யெங்கே வந்தீர்களென்று கேட்டதுக்கு, சும்மா வந்தோம் யென்று சொல்லிப் போட்டு வந்ததாகவும் சேதி கேழ்கப்பட்டுது.

---

[1] இக் காடே ராயன் தஞ்சாவூர் மன்னன் பிரதாப சிங்கின் சிற்றப்பன்.

***1758 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 11; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 3; சனிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : முன்னாலே முசியே சுப்பீர் சீமைகளிலே யெப்படி நடக்குறது, ஞாயமாய் நடக்குதா? அதுகளுக்கெல்லாம் பயாவாராய் (தெளிவாய்) விசாரிக்கத் தக்கதாக ஒரு இஞ்சினீரையும் அதுக்கேத்த தமிழரையும் அனுப்பி விசாரிக்கச் சொன்னதாயும், அவர்கள் வந்தவாசி முதல் கொண்டு செத்துப்பேட்டு (பட்டு), திருவண்ணாமலை, செஞ்சி, திருவீதி, திருக்கோவிலூர், கல்குறிச்சி வகையிரா யிடங்களுக் கெல்லாம் போய் பயாவாராய் விசாரிச்சு யெழுதிக் கொண்டு யிவ்விடத்துக்கு வந்து, முசியே சுப்பீர் கையிலே குடுத்தாகவும், அவர்கள் யெழுதிக் கொண்டு வந்ததை முசியே சுப்பீர் பார்த்துக் கொண்டு முசியே லெறியும் கோன்சேல்க்காரரும் கூட யிருக்குறதிலே முசியே சுப்பீர் அந்த இஞ்சினீரையும் அழைச்சுக் கொண்டு, அவர்கள் யெழுதிக் குடுத்த காகிதத்தையும் யெடுத்துக் கொண்டு போனதாகவும், அப்போ முசே சுப்பீர் முசியே லெறியைப் பார்த்து, "நீர் யென்ன துரைத்தன பண்ணினீர்? யிப்படி துரைத்தனம் பண்ணுகுறது சீமைகளிலே பயிரிடச் சொல்லி ஒருத்தரும் கேழ்க்கக் காணோமே? போறவ னெல்லாம் பணம் பண மென்று போயி குடிகளை அடிச்சுத் தண்ட துரோகம் வாங்குறது, அதனாலே குடிகளெல்லாம் யிறந்து போறதாமே! யிப்படி யானால் சீமையிலே பணம் யெப்படிக் காணும்? நீர் எப்படி கும்பினீருக்குப் பணம் செலுத்தப் போறீர்?" யென்று ரொம்பவும் சொல்லி, கோன்சேல்க்காரர் முன்பாக அந்தக் காகிதத்தை முசியே லெறி கையிலே குடுத்ததாகவும், அதைப் பார்த்துக் கொண்டு விசாரிக்கப் போன இஞ்சினீரை சமாச்சாரம் கேட்டுக் கொண்டு யிருந்த தாகவும், அதன் பேரிலே அந்தக் காகிதத்தை முசியே லெறி முசியே தெவோ கையிலே குடுத்ததாகவும், அதை முசே தெவோ பார்த்து மெத்த விசாரமாயிருந்து, முசியே லெறியும் அவரும் யோசனை பண்ணிக் கொண்டிருந்த தாகவும், அப்போ முசியே தெவோ "யென்னாலே ஆகாது யிந்த சீமை விசாரிக்க. ஆர் கையிலே ஆகிலும் குடுத்து விசாரிச்சுக் கொள்ளுங்கோ," னென்று சொல்லி, ரொம்ப வேசாடையாய் சொன்னதாகவும், யிப்படி யெல்லாம் நடந்துது யென்று சின்ன துரை வாக்கினாலே பிறந்த தாய் கேழ்க்கப்பட்டுது.[1]

இதெல்லாம் (இதல்லாமல்) ராசாவினுடைய ஒபிசியால்மார் சின்ன துரையைப் போய் யெங்களுக்குச் சம்பளம் மூணு மாசத்து(க்கு) வரயில்லை, குடும் யென்று கேட்டவிடத்திலே, முசியே லெறி குடுத்தாலல்லோ நான்

[1] பிள்ளை பலமுறை சொல்லியும் எழுதியும் கொடுத்ததை இது நிருபிக்கிறது.

குடுப்பேன், அவரைப் போய் கேளுங்கோளென்று சின்ன துரை சொன்னதாகவும், யிதல்லாமல் கோட்டையிலே கணக் கெழுதுகுற கிறாணிகளெல்லாம் (?) கூடி தங்களுக்கு மூணு மாசமாச்சுது, சம்பளம் வரவேணும் என்று முசியே லெறியைப் போய்க் கேட்டதாகவும், அவர் கும்பினியிலே பணமானால் யில்லை, வந்தால் தருகுறோ மென்று சொன்னதாகவும், அப்படி யானால் யெங்களுக்கு யெப்படி நடக்கும்? அன்னன்றாடகம் (அன்றாடச் சாப்பாட்டுக்கு) சம்பளம் வந்தால் அல்லோ நடக்க வேணும் யென்று சொன்னதுக்கு, அப்படியானால் உங்களுக்குச் சரிப்போன படியே பாருங்கோ ளென்று சொல்லிவிட்டதாகவும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் ராத்திரி ராசாவினுடைய ஒபிசியால்மார்களுக்குள்ளே ரெண்டு பேர் முசியே லாலி அவர்களுடனே மெத்தப் பழகினவர்கள், முன் கப்பலிலே வந்தவர்கள், அவர்கள் வந்து, ராத்திரி நம்முடனே சொன்ன சேதி யென்ன வென்றால் : "முசியே லாலி வருகுறாரே, அவருடைய புத்தியும் நடக்கையும் அவருடைய திட்ட வட்டங்களும் அன்னியாதிசியம் (மெத்த போற்றத் தக்கவை). நீர் முசே (லெ)னுவாரையும் முசியே துப்பிளேக்சுவை(யும்) மகா சமர்த்தன் யென்று ஸ்தோத்திரம் பண்ணுகிறீரே, யிவர்களெல்லாம் ஒரு பட்டணத்திலே யிருந்து அதிகாரம் பண்ணினவர்கள். அவர்களுக்கு ராசா காரியத்தினுடைய சங்கதி தெரியாது. ஆனால் முசே லாலி யிவ்விடத்துக்கு வரு முன்னே பதினெட்டு மாசம் முசே துப்பிளேக்சுவை கிட்ட வைச்சுக் கொண்டு இந்தியா ராச்சியத்து சம்மதிகளெல்லாம் யெழுதி, டில்லி வரைக்கும் கட்டினால் பணம் யிம்மாத்திரம் காணுமென்றும், அதுக்கு சிப்பந்தி (செலவு) யெம்மாத்திரம் போகும் யென்றும், அதுக்குப் பெலன் யிவ்விடத்திலே யிருந்து கொண்டு போக வேண்டியது யிம்மாத்திரமென்றும், யிதுகளெல்லாம் திட்டமாய் யெழுதிக் கொண்டு, ராசாவுக்குக் காண்பிச்ச விடத்திலே, ராசா அதுகளை யெல்லாம் பாத்து யிதுக்கு யோக்கியம், முசியே லாலியே அல்லாமல் மத்தப் பேராலே ஆகாதென்று யோசிச்சு, அதன் பேரிலே அனுப்புறத்துக்குச் சண்டை சரன்சாமிகள் என்ன வேணுமோ அதுகளெல்லாம் முஸ்தீது பண்ணிக் கொடுத்து அவரையும் அனுப்பி விக்குறார்.[1] அவர் யிவ்விடத்துக்கு வந்தாலப்போ உமக்கு தெரியும். முசியே லாலி ஒரு நியாயத்தைப் பிடிச்சுக் கொண்டு விசாரிச்சால் யிங்கே யிருக்கிற பேர் ஒருத்தரும் உத்தரம் சொல்ல மாட்டார்கள்," என்று யிப்படி முசியே லாலி அவர்களுடைய சாமார்த்தியங்களை அந்த ஒப்பிசியால்மார் சொன்னதிலே அரைக்கால் வாசி ... மட்டும் யெழுதிவிச்சேன்.

---

[1] இவற்றை யெல்லாம் லாலியே தனது நினைவுக் குறிப்புகளில் (memoire) எழுதியுள்ளார்.

***1758 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 13; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 5; சோமவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே, யிதுக்கு முன் கோவளம் வெங்கிடேசச் செட்டி டங்காசாலையிலே நம்முட பாதிக்கு வச்சிருந்தவன்[1] குண்டுராருடனே சேந்துக் கொண்டு நமக்குச் சொல்லாமல் வெகுபணம் மோசம் பண்ணி (விட்டான்). அந்தக் கணக்கெல்லாம் சோதிச்சுப் பார்க்க வேணுமானபடியினாலே கோவளம் வெங்கிடேசச் செட்டியைக் காவலிலே சாவடியிலே கொண்டு போய் வைக்கச் சொல்லி, உடனே சின்ன துரை அவர்களுக்கும் சொல்லி அனுப்பிவிச்சோம்.

அவர்களும் உடனே மனுஷரை அனுப்பிவிச்சு சாவடிக்காரருக்குச் சொல்லி பத்திரம் பண்ணினார்கள். அதன் பேரிலே ராத்திரி யேழு மணிக்கி மேலுகிரி செட்டி வந்து தன்னை ராமய்யப் பிள்ளை அழைச்சு வரவிட்டு தன்னுடனே ராமய்யப் பிள்ளை சொன்ன சேதி யேதென்றால், "நேத்து நாலாந் தேதி மத்தியானம் கொவர்ணமா மெத்தை மேலே முசே சுப்பீரும் முசியே லெறியும் முசியே பெடுத்தல்மீயும் மூன்று பேரும் யேகதேசத்திலே கூடியிருந்து, கும்பினியிலே பணம் யில்லை, யேக கப்பலும் வரயில்லையே, சீமா மூலம் பணம் வருகுறதுக்கும் யிடம் யில்லை யென்று யிப்படியே யோசனை பண்ணிக் கொண்டு யிருக்கையிலே, முசியே சுப்பீர் சின்ன துரையைப் பார்த்து, "நீர் யிந்த வேளைக்கு லட்சம் ரூபா கடன் குடுக்க வேணு," மென்று கேட்டதாகவும், அதுக்குச் சின்ன துரை சொன்னது, "யென் கையிலே பணம் ஏது? ரங்கப்பனுக்கு நான் ரூபாய் கடன் குடுத்து யிருக்குறேன். வேறே யென் கையிலே பணம் வேறேயில்லையே," யென்று சொன்னதுக்கு, முசியே சுப்பீர் சொன்னது, "ரங்கப்பனுக்கு ஒன்று மில்லையாமே அவனுக்கு யேன் கடன் குடுத்தீர்?" யென்று கேட்டதாகவும், அதுக்கு சின்ன துரை சொன்னது, 'என்ன வார்த்தை சொல்லுகிறீர்? அவனுக்குக் கும்பினியார் பேரிலே வெகு பணம் வரவேணும். அந்தக் கணக்கெல்லாம் நான் நன்றாய் அறிவேன். அவன் கணக்கு தயாறு பண்ணி வச்சிக் கொண்டிருக்கிறான். முசியே லாலி வந்தவுடனே அவருடனே சொல்லிக் கொண்டு சீமை மட்டுக்கும் போய் கணக்குப் பேசி கும்பினியார் பேரிலே வரவேண்டிய பணம் வாங்(க) யிருக்கிறான். யிதல்லாமல், முசியே துப்பிளேயிக்சு பேரிலும் அவனுக்கு வெகுபணம் வரவேணும். அவனுடைய பமீலாயிருக்கிற (யிருந்த) முசியே

[1] பெரிய துபாசி என்ற முறையில் முந்திய பெரிய துபாசியான கனக ராய முதலிக்கு டங்கா சாலை வருவாயில் அரை சதம்–அவர் இதற்கான பர்வானாவைப் பெற்றதற்காகக் கொடுக்கப்பட்டது. பிள்ளை பெரிய துபாசியான பின் அவருக்கும் இது தரப்பட்டது. இதை நிர்வகித்து வந்தவர் வேங்கடேசச் செட்டி.

ஷெவல்லியேர் குருவப்பன் சீமை மட்டுக்கும், ராசா மட்டும் அறிஞ்சு அவர்கள் கிட்ட வெகுசாய் மகிமை பெத்து, தன்னுடைய நிசத்தைச் சகல சனங்களுக்கும் அறியப் பண்ணி வந்தவன். அந்தச் சேதி சகல செனங்களுக்கும் தெரிஞ்சு யிருக்குறது. அப்படிப் பெரிய மனுஷர் அவர்கள், சீமை மட்டுக்கும் ராசா மட்டுக்கும் அறிஞ்சவர்கள். அவர்களுக்கு வரவேண்டியது அவர்கள் விடத்தக்கதில்லை. அவன் கணக்குப் படிக்கி கும்பினியார் அவனுக்குப் பணம் குடுக்க வேணுமென்கிற நியாயம் நான் அறிவேன். நானும் சீமா மூலம் சம்மதிக்காகப் பணம் குடுத்திருக்கிறேன். கப்பல் வந்தவுடனே யென் பணத்தை நான் எடுத்துக் கொள்ளுவேன்," என்று சொன்னதாகவும், அதுக்கு முசியே லெறி அவர்கள் சொன்னது, ரங்கப்பன் யெல்லாரையும் நன்றாய் யேச்சுப் போடுவா னென்று சொன்னதாகவும், பின்னையும் வெகு பேச்சாய் நடந்திருக்குது, "அது வெல்லாம் நான் வந்து மகா ராச ராச ஸ்ரீ அவர்களுடனே சொல்ல வேணும். நான் நாளை வருகுறேன். நீர் போயிருந்து யிந்த சந்தோஷத்தை அறிக்கை பண்ணு," மென்று ராமய்யப்பிள்ளை சொன்னா," ரென்று மேலுகிரி செட்டி வந்து சொன்னான்.

அப்போது நாம் யோசனை பண்ணினது, நம்முடைய சாதகத்திலே ராகு தோஷம் வந்து மூன்று வருஷமாச்சுது. யிந்த மாசம் 4 தேதி ராகு மறைஞ்சு போறானென்று சுப்பா சோசியர் சொன்னதுக்கு பவ வருசம் மாசி மாசம் (1755 பிப்–மார்ச்) யிந்த சின்ன துரை தான் முன்னுதாய் பொல்லாத பலன்களுக்கு ஆரம்பமாய் நடத்தினார். அது முதல் முசியே லெறி வந்தவரும் அந்த அடியிலே தானே பொல்லாத பலன்களை யெல்லாம் யிது வரைக்கும் நடத்திப் போட்டார். நேத்து தை மாசத்துடனே தோஷ காலம் மூன்று வருஷமும் ஆயிப் போனபடியினாலேயும் முன் குரோதன வருசம் மாசி மாசம் 4 தேதி (1746 பிப்ரவரி 12) நமக்குச் சத்துரு வாயிருந்த கனகராய முதலியார் விழுந்து போனார். அப்படிக்கு யிது பனிரெண்டாம் வருஷம் அந்தியம் போய் பதிமூணு வருஷம் இதுக்கு ஆதியானதினாலே (முடிவு ஏற்பட்டு) பவ வருசம் மாசி மாசத்திலே பொல்லாப்புக்கு ஆதியாய் நடத்தின சின்னதுரையைத் தொட்டுத் தானே, பிறம்பிலே (பிறகு) முசே சுப்பீரும் முசியே லெறி அவர்களும் யிருக்கையிலே பேச்சு நடந்துது, ராச சம்மதியான தோஷம் அடிபட்டபடியினாலே யிதோடே தோஷம் காலம் நன்றாய்ப் போச்சுது. யினிமேல் அனுகூலமாய் நன்றாய் வருமென்று யோசனை பண்ணிக் கொண்டு யிருந்தோம். முசியே லாலி அவர்களுமிந்த மாசத்திலே சீக்கிரம் வந்து சேருவார். நமக்கு மெத்த அனுகூலங்கள் குடுப்பா ரென்று யெண்ணிக் கொண்டோம்.

***1758 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 17; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 9; சுக்கிரவாரம்***

இத்தனாள் பனி யிரெண்டு மணிக்குக் கேழ்வியான சேதி : சீமைக்கு சுலுப்பு பயணம் யிருக்கிறதினாலே முசியே லெறியும் ஆலோசனைக்காரரும் கூடி மெத்தை வீட்டுக்குக் கீழே யிறங்கி காகிதம் கணக்கு யெழுதுகுற காம்பிராவிலே போய், அவர்(கள்) கையெழுத்துப் போட்டார்களென்றும், அதிலே முசியே கில்லியார் சிறிது காரியங்களுக்குத் தாம் கையெழுத்துப் போடயில்லை என்று வீட்டிலே வந்து சொல்லிக் கொண்டதாகவும் சேதி வந்து சொன்னார்கள். அப்போது நாம் யோசிச்சு முசியே கில்லியார் மாத்திரம் என்ன, சின்ன துரை முசியே புலோ யெல்லாரும் சம்மதியான காரியங்களுக்குக் கையெழுத்துப் போடுவார்கள், சம்மதியில்லாவிட்டால் கையெழுத்துப் போடார்கள். யிது நடக்கிற வாடிக்கை தானென்று யெண்ணிக் கொண்டோம்.

யிப்பால் ஆறு மணிக்கு ஆனந்த தீர்த்தாச்சாரியார் வந்து சொன்ன சேதி : நாணா (மனுஷர்) வகை அமிருதராயர் வானம்பாடி (வாணியம்பாடி), திருப்பாத்தூர் கோட்டை மேலே சண்டைக்குப் போனதாகவும், அந்த கோட்டை பட்டாணிகள் கோட்டை யென்றும், அதிலே யிருக்கிறது நவாயித்தரான்றும் (Navaits),[1] அவர்கள் பிறப்பட்டுச் சண்டைக்கு வருகுறோமென்று அமிருதராயருக்குச் சொல்லி அனுப்பிவிச்சதாகவும், அப்போ அமிருத ராயர் அந்தப் படிக்கே சண்டைக்கு வரச் சொல்லி அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிச்சு, தம்முடைய பவுன்சை மூணு பங்கு மூணு முகத்திலே வைச்சு, தாம் பத்து குதிரையுடனே அப்பாலே ஒரு மறைவிலே போயி யிருந்ததாகவும், அப்படி யிருக்கிற சேதி நவாயித்துக்காரர் கபுறு அழைப்பிச்சுக் கொண்டு (தெரிந்து கொண்டு) யிரநூறு குதிரைக்காரர் பிறப்பட்டு, மலையடி வாரத் தோடே மறைவாய் அமுறுதராயர் யிருக்கிற தாவிலே வந்து காண்பிச்சுக் கொண்டதாகவும், அப்போது அமிருதராயர் யெழுந்திருந்து குதிரைமேல் (ஏறிக்) கொண்டு பத்து குதிரையுடனே வந்து அவர்கள் பேரிலே வந்து விழுந்ததாகவும், அப்போது அவர்களிலேயும் பத்து குதிரை பாடாச்சு (செத்தது) தென்றும், உடனே அவர்க ளிந்தப் பத்துக் குதிரையை(யும்) வெட்டிப் போட்டு அமுருத ராயரையும் வெட்டினதிலே யிருபது முப்பது காயமாய், அவரை யெடுத்துக் கொண்டு திருப்பத்தூர்க் கோட்டையிலே கொண்டு போய் காயம் கட்டி விச்சு, மூணாம் கட்டு அவிழ்க்கிறதிலே அமுருதருயர் விழுந்து போனா ரென்றும், அவர் பவுன்செல்லாம் வாங்கிப் போச்சென்றும் சொன்னார். யிது சேதி.

---

[1] காலஞ்சென்ற நவாப் தோஸ்த்தலியின் குடும்பம் எனப்பட்டது. மகமதலிகானுடைய வாலாஜா குடும்பம்.

***1758 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 24; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 16; சுக்கிரவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்த பேர் அங்கங்கே சொல்லிக் கொண்டதாக சேதி பங்காளத்திலே போயிருந்த மேஸ்தர் கிளேவிசு(சை) வங்காளத்து நவாபு அழைப்பிச்சதாகவும், அப்போ மேஸ்தர் கிளேவிசு அய்யாயிரம் பேரோடே போனதாகவும், வெளியே கூடாரம் போட்டு அதிலே வந்து பேட்டி பண்ணிக் கொண்டு முப்பத்தாறு ஆனை வெகுமானம் குடுத்து, அனேகமாய் முத்துச் சீரா (முத்து பதித்த காலணி) முதலான வஸ்துக்கள் வெகுமதி குடுத்து, அத்தனை பே(ரையும்) அந்தக் கூடாரத்திலே தானே யிருந்து சாப்பிடப் பண்ணி விச்சதாகவும், அவர்க ளெல்லாம் வெகு நேத்தியாய் விருந்துகள் சாப்பிட்டு, கூடாரத்திலே தானே படுத்துக் கொண்டதாகவும், (அப்படி) படுத்தபடியே எல்லாரும் செத்துப் போனார்க ளென்றும், அதிலே நூறு பேர் தப்பி கல்கத்தாவுக்கு வந்ததாகவும், அந்த சேதி சென்னப்பட்டணத்துக்கு வந்து தென்றும் சேதி சொன்னதாகக் கேழ்வியாச்சுது.

***1758 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 25; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 17; சனிவாரம்***

டங்காசாலை (எடை) குறைவு சேதி :[1] இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி : நேத்து 16 தேதி முசியே லெறி அவர்களும் முசே சுப்பீர் அவர்களும் அரியாங்குப்பத்துக்குப் போற நிமித்தியம் பிறப்பட்ட பேர் அரியாங்குப்பத்திலே வெட்டி யெடுத்த விக்கிரகங்களைப் பார்த்துப் போட்டு, அங்கே யிருந்து முன்னூறு பேர் சொலுதாதுகளும் யிரநூறு பேர் பாறுக்காறரும் ஒரு பீரங்கியும் மருந்து(ம்) குண்டு(ம்) முஸ்தீப்புடனே பிறப்பட்டு மரிகிருஷ்ணாபுரம் மட்டுக்கும் சாரி போய், கூடலூர் குண்டுசாலைக்கு யிப்பாலே போயிருந்து நின்று தேவனாம்பட்டணத்தைப் போய்ப்பார்த்து, பீரங்கியிலே குண்டு போட்டு ரெண்டு மூணு வேட்டு சுட்டு துப்பாக்கிக ளெல்லாம் நாலாறு விசை வரிசையாய்ச் சுட்டதாகவும், சுத்து கிராமங்கள் யெல்லாம் கொள்ளையிட்டதாகவும், அப்போது மஞ்சகுப்பம், திருப்பாதிரிபுலியூர், கூடலூரிலே யிருக்கப்பட்ட செனங்க ளெல்லாம் மகா பிரியாய் தட்டுக் கெட்டு தேவனாம்பட்டணம் கோட்டைக் கிட்ட வந்து ஒதுங்கினார்கள் என்றும், அப்போது தேவனாம்பட்டணம் கப்பித்தான் அங்கே யிருந்து நாலு பீரங்கி யிவர்களைப் பார்த்துச் சுட்டதாகவும், அதின் பேரிலே

[1] இது எழுதாமல் விடப்பட்டுள்ளது.

யிவர்கள் திரும்பிக் கொண்டு வந்தார்களென்றும், யின்னம் நாலஞ்சு நாளையிலே தண்டெல்லாம் பிறப்பட்டு தேவனாம்பட்டணம் கோட்டையின் பேரிலே சண்டைக்குப் போறதாயும், எல்லாரும் பெரம்பையிலே போய் யிறங்கப் போனார்கள் என்றும், கூடப்போன ஒபிசியால்மார் சொன்னார்கள். முசே லெறி அவர்கள் சீமைக்கு சீமா மூலம் கணக்கு யெழுதிவிச்ச வயணம் :

1758 வருசம், பிப்ரேயி மாசம், தேதி 21; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 13க்குள்ளாக முசியே லெறி கோவர்ணதோரவர்கள் சீமைக்குப் பாயெடுத்துப் போன சுலுப்பிலே கும்பினி தஸ்திரம் கணக்கு கடுதாசிகள் வகையிரா ... போனதிலே, நம்முடைய கணக்கு கும்பினீ தஸ்திரக்‧கணக்கிலே யெழுதிவிச்சு, கும்பினியாருக்கு அனுப்பிவிச்(சார்). பிடவைக் கணக்கும் செம்மரக் கணக்கும், பத்து வரவு சரியாய் எழுதி யிருக்குது. சீமா மூலம் செல்லு பாக்கிக் கணக்கு யெழுதினதிலே பவ யுவ வருசம் (1854–56) ரெண்டுக்கும் நாம் வாங்கின குத்தகைப் படிக்கிச் செல்லு போக முதல் (அறு)த்திக்கிலேயிலே (Article) நாம் யெழுதின பாக்கி ஆறு லட்சத்து முப்பத்தோராயிரத்து யெழுநூத்து எண்பத்தி ரெண்டு 6,31,782 செல்லு. ரெண்டாம் அறுத்திக்கிலியே, நாம் எழுதின செல்லு (செலுத்தியது) ரெண்டு லட்சத்து நாற்பத்தேழாயிரத்து நூத்தெண்பத் தேழு ரூபாய் (2,47,187) போக, பாக்கி யிட்டு நாமெழுதிக் குடுத்து மூன்று லட்சத்து எண்பத்து நாலாயிரத்து அன்னூத்துத் தொண்ணூத்து அஞ்சு ரூபாய் (3,84,595) ரூபாய். அவர்கள் 6,05,083 பாக்கி யெழுதின படியினாலே, யிப்படி யெழுதின தென்ன வென்று யோசிக்குமிடத்திலே, நாம் யெழுதின முதல் அறுத்திக்கில் பவ யுவ வருஷம் 2 க்கு குத்தகை ரூபாய் 30,15,600 முப்பத்து லட்சத்து பதினையாயிரத்தி அறுநூறு ரூபாய்க்கு ரொக்கம் செல்லு, தானியம் வகையிரா, சிப்பாய்கள் பைத்து கொம்மாந்தாங்கள் (கொள்ளை) பைத்து, முத்தண்டல், கலில் தாலூக்கி உள்பட செல்லு ரூபாய் 23,83,817 இருபத்தி மூணு லட்சத்து எண்பத்தி மூணாயிரத்தி எண்ணுத்திப் பதினேழு ரூபாய் போக பாக்கி ரூபாய் 6,37,782. இரண்டாம் அறுத்திகில் நமக்கு முகரா (எனக்குக் கமிஷன்) வரவேண்டியது, சாமீன்தாரராகிய வெள்ளைக்கா(ரர் பைத்து), பெலவந்தமாய் கொம்மாந்தாம் வாங்கினது, அவர்கள் ரோஷ்ட்டுனாலே வந்த நஷ்ட்டம் ஏரி வாய்க்கால் வெட்டு வகையிராவுமாக ரூபாய் 2,47,187 நமக்கு கூடிவரவேண்டியது. அதிலே 26,699 ரூபாய் செல்லு (மட்டும் பற்று எழுதிக்கொண்டு) கட்டிக் கொண்டு, குறை அவர்கள் பாக்கி எழுதின 6,05,083 ரூபாய் என்று யோசனை பண்ணினோம்.

யிப்போ தாது வருசத்துக்கு (1756–57) சீமா மூலம் குத்தகைப் படிக்கி போய் 18,84,996 (அதில்)[1] ருசுமு சாதல்வார் வகையிராவில் நூத்துக்குப் பத்து விழுக்காடு ரூ.1,88,094 ஆக ரூபாய் 20,73,440 போட்டு யேகத்துக்கு கேத (நிகர) பாக்கி உள்பட ரூபாய் 26,78,523[2] எழுதிக் கொண்டு, அதுக்குச் செல்லு ரூபாய் 7,91,388 போக, நீக்கு தாது வருஷத்துப் பாக்கி 1757ம் வருசம் சூன் மாசம் வரைக்கும் தாது வருசம் ஆடி மாசம் முதல் ஈசுவர வருசம் ஆவணி மாசம் வரைக்கும் ரூ.18,87,735 (எனப்) பாக்கி யிட்டு, கணக்கு சீமைக்கு அனுப்பி(னார்கள்). நாம் யோசித்து தாது வருசத்துக்கு செல்லும் ரூபாய் 13,00,000 என்று சின்ன துரை முதலான கோன்சேல்காரர் சொன்னதினாலேயும் சவரிராயப் பிள்ளை வீட்டிலே யெழுதினதும் செல்லுபடி பதிமூன்று லட்ச மென்று நமக்கு சேதி (கேள்விப்பட்டது. அதற்குக் காரணம்) சீமைக்கு அனுப்பின கணக்கிலே செல்லு ரூபாய் 7,91,388 எழுதின தென்ன வென்று யோசிச்சுப் பார்த்தோம். அப்போது நமக்கு தோணப்பட்டது, தாது வருசத்தைக்கு நம்முடைய குத்தகை ரூபாய் பதினெட்டு லட்சம் சிலுவாணம் ரூபாய்க்கு யிவர் உபரியாய் நூத்துக்கு 10 விழுக்காடு ருசுமு சாதல்வார் கூட்டி யெழுதினாரோ? அந்த விதம் கேதம் பவ யுவ வருசம் 2 வருஷத்துக்கு மூணு லட்சம் ரூபாயும், திருவண்ணைநெல்லூர் அசுப்பூர் குமுசெல்க்காரர் சாகீர் வகையிராவில் வருஷம் 2க்கு ரூபாய் இரண்டு லட்சமும், ஆக யிந்த வழியிலே ரூபாய் அஞ்சு லட்சம் சிலுவாணம் ரொக்கம் சீமா மூலம் சென்ற (செலுத்தின) பணத்திலே கழிச்சு, மத்ததைச் செல்லு வைச்சு, பாக்கி வாங்கிக் கழிச்சப் பணத்தை பிறம்பாய் (extra) கும்பினிக் கணக்கிலே தம்மைத்தொட்டு ஆதாயம் கூடி வந்ததாய்க் கூட்டி யெழுதி அனுப்பியிருக்க வேணும். இல்லாவிட்டால், பதின் மூன்று லட்சம் வந்திருக்க (செலுத்தியிருக்க), யெட்டு லட்சம் ரூபாய் (மட்டும் கணக்கில் காட்டியிருப்பேனேன்) என்று யோசனை பண்ணினோம். யிந்த யோசனைப் படிக்கி அவர்கள் எழுதி அனுப்பின கணக்கு நிசமே யானால், அதுக்கு நான் சொல்லுகுற வயணம்: பவ யுவ வருசம் 2க்கு கொமுசில்லியோர் போய் சீமா மூலம் கணக்கெல்லாம் விளங்கித் தீத்து யெழுதி வந்தபடிக்கி கும்பினீருக்கு சீமா வகையில் செல்லவேண்டிய பாக்கி ரூ 3,84,595 செல்லவேண்டியிருக்க, குமுசாயார் விசாரிச்சு யெழுதி வந்தபடிக்கு கொம்மாந்தாமுகள் சோராவாரியாய் வாங்கினதும் அவர்களாலே வந்த நஷ்டமும் சாமீன்தாரர் சீமையிலே போயிருந்து சகல அமுலும் பண்ணி தங்களுக்கு வேண்டிய பணமெல்லாம் யெடுத்துக் கொண்டு அதுக்கு

[1] ருசுமு, சாதல்வார் என்பன மரபுப்படி சிலருக்குக் கொடுக்க வேண்டியதும், சில்லரைச் செலவினங்களும்.

[2] இவ்விரு தொகைகளும் 20,73,495 என்றும் 26,85,78 என்றும் இருத்தல் வேண்டும்.

குமுசாயர் விசாரிச்சு யெழுதிக் கொண்டு வந்தபடிக்கி நான் பைத்து யெழுதியிருக்க, அது கேளாமல் சாமீன்தாரர் அமுல்தாரர் பேரிலே பணம் வரவேணுமென்று சொல்லிக் கொண்டத்தைக் கேட்டு, மென்னைக் குடுக்கச் சொல்லி பெலவந்தமாய் யென் கையிலே வாங்கிக் குடுத்த சம்மதியும் சீமா மூலம் குஸ்துமாது (ஆண்டு வழக்கப்) படிக்கி யேரிவெட்டு கால்(வாய்) வெட்டுச் சம்மதியும் ரூ,2,47,187 ரூபாயிக்கி குமுசாய் (கொம்மிசேர்கள்) யெழுதிக்கொண்டு வந்திருக்க, அதிலே யிருபத்தாராயிரம் (2,60,00) மாத்திரம் கூட்டிக் கொண்டும், மத்தது எந்த ஞாயத்திலே தள்ளினார்கள்? யிது நமக்குக் கூடி வரவேணும். தாது வருசம் பேரீகூடனே ருகுமு சாதல்வார் சம்மதிக்கூட்டி யெழுதினாரே, அது கூட்டி எழுத வேண்டிய நியாயமில்லை. அது யெதுனாலே யென்றால் முசே கொதே அவர்கள் சீமா மூலம் மெல்லாம் முசே திலார்ஷு வசம் பண்ணி, அவரும் கணக்கு ரங்கப்ப முதலியும் சீமா மூலத்திலே யிருக்கிற .. எல்லாம் விசாரிச்சு, பதினோரு வருஷமாய்க் குத்தகை தீத்து வந்து சொன்ன கணக்கை முசே கொதே அவர்கள் பார்த்து, யென்னை அழைப்பிச்சு, "முசே தெலார்ஷு ஆனால் யிப்படித் துகை எழுதிக் கொண்டு வந்தார். யிது நமக்குக் கொஞ்சமாய்க் காணுது. முன் சீமா மூலம் உம்முடைய வசமாயிருந்தபோது சீமையும் நன்றாய் மாமூராயிருந்தது. அத்தனை கலாபத்திலும் கும்பினி(க்குத்) தாட்சியில்லாமல் பணம் சென்று வந்து தென்று நாம் கேழ்விப்பட்டு யிருக்குறோம். யிப்போவும், கும்பினீர் காரியத்துக் கெல்லாம் நீ பாத்தியனாயிருக்கச்சே, யிந்தக் கவையும் நீரே பார்க்க வேண்டியது. ஆகையாலே யிந்தச் சீமை நீரே யெடுத்துக் கொண்டு கும்பினிக்கு அவர்கள் பண்ணின துகையின் பேரிலே ஒன்றரை லட்சம் ஒசத்தியாய் யேத்துக்கொண்டு, கவை காரியம் பாரு," மென்று சொன்னார். அதுக்கு நான் சொன்ன உத்திரம், "யிந்த சீமையோடே கூடினது (நிர்வாகம்) வெகு பிரயாசை. சொன்னபடி வராது. அதல்லாமல் யிந்தக் கலாபத்தினாலே சீமை யெல்லாம் மெத்த நொந்து போய்க் கிடக்குது. கும்பினிக்குப் பணம் காணுகிறது பிரயாசம். சீமா மாமூராக்க வேணுமானால், முன்பணம் சிலவுக்குப் போட்டு, போன குடிகளை யெல்லாம் அழைப்பிச்சு வார்க்கசார்க்கம் (வாரமும்) குடுத்து, பயிர் சாகுபடி பண்ணிவிச்சு, சீமை யெண்பிக்குறதுக்கு ரெண்டு வருஷம் செல்லும், யிப்படியிருக்கப் பணம் செல்லுகுறது பிரயாசை," யென்று நான் மெத்தவும் சொல்லிக் கொண்டத்தின் பேரிலே, "அப்படி நீ யோசனை பண்ண வேண்டாம். கும்பினி காரியத்திலே நீர் நல்ல மனசுடனே பிரயாசைப்பட்டுப் பார்க்க வேண்டிய பாரம் உம்முடையது. உமக்கு யெந்தக் காரியம் யெப்படி நடத்திவிக்க வேணுமோ அப்படி நடத்திவிக்க வேண்டிய பாத்தியம், யெங்களுது. ஆகையினாலே நீர் ஒன்றுக்கும் ஆலோசனை பண்ணாமல், காரியத்தை யேத்துக் கொண்டு பாரும். யிந்தச் சீமையுடனே கூடினது

யென்றைக்கும் உம்முடய வசமாய்த் தானே நடக்கத் தக்கது ஆகப் பண்ணுகுறோம். யிப்போது அஞ்சு வருஷத்துக்குக் குத்தகையாய்த் தீத்துக் கொண்டு எழுதிக் குடுக்குறோம். அந்தக் குத்தகைப் படிக்குப் பணம் சீமையிலே (ஒரு வருஷம்) வராமல் நின்றாலும், மறுவருஷம் வாங்கிக் கொள்ளுகுறோம். அந்தக் குத்தகைப் படிக்குப் பணமும், அந்தச் சிலவுக்கும் செல்லு பாக்கியும் நீர் பாத்துக் கொள்ளுகுறது அல்லாதே மைத்தப் படிக்கு உமக்கு ஒரு சோலியும் அக்கரையில்லை. சீமா மூலத்திலே யாதொரு ஆதாயங்கள், குஸ்துமாக்கள் (நஷ்டங்கள்) உண்டானால் சகலமும் உம்முடையது. மத்தப்படிக்கு சீமை மாமூல் பண்ணுகிறது, கண்டனை தெண்டனை, குடுக்கல் வாங்கல் சகல எக்குத்தியேரும் (அதிகாரமும்) முன்னாளையிலே சுபா பண்ணுகுற வனுக்கு யெப்படி நடந்துதோ, அந்தப்படிக்கு நீர் நடத்திவிச்சுக் கொள்ளுகிறது. அந்தக் கவை விசாரி(க்க) கோவர்ணதோருக்கு அக்கரையில்லை. கோவர்ணதோர் உமக்கு யென்ன மத்தத்துப் (உதவி) பண்ண வேணுமோ, அந்த மத்தத்தும் அவர் பண்ணுகிறது யிப்படியாக நாம் ஒடுதி குடுத்து யிருக்குறோம். ஆகையாலே நீர் ஒன்றுக்கும் யோசனை பண்ணாமல் கும்பினிக்குக் கூடி வரும்படியாயி, வருஷா வருஷம் துகை ஒசத்தி வைச்சு, யெனக்குக் குத்தகையாயிக் குடுத்தபடியினாலே சகல ஆதாயமும் யென்னுது அல்லாமல் கும்பினிக்குக் கவையில்லை," (என்று சொன்னார்).

அப்படி யிருக்க ருசுமு சாதல்வார் கும்பினியில் கூட்டி எழுத வேண்டிய நியாயமில்லை. அது தள்ள வேண்டியதல்லாமல், யெனக்கு (பிள்ளைக்கு) சீமா மூலம் சம்மதியிலே ஆரார் பேரிலே பணம் வர வேண்டி யிருந்தாலும், யென்னாலே ஆகாமல் நான் வந்து குமுசலிலே சொல்லிக் கொண்டால், அந்தப் பணம் கும்பினியார் வாங்கிக் கொள்ளுகுறது யென்று ஒடுதி குடுத்திருக்கிறது. யிப்படி யெல்லாம் யிருக்க பேரிசுலே (Beriz) கூட்டி யெழுதவும், ரொக்கத்திலே தள்ளவும், யென்ன நியாயம் (இருக்குது?) யெனக்கு முசே தெவோ சொன்னபடிக்கு வருசம் (ஒன்றுக்கு) கும்பினிப் பணம் போக, நமக்கு வருசம் (ஒன்றுக்கு) யிருபத்தோரு லட்சம் (21,00,000) ரூபாயும், முன்பாக்கி 13 லட்சத்துக்கு கும்பினிக்கு 4 லட்சம் போக நமக்கு 9 லட்சமும் ஆக முப்பது லட்சம் வரவேணும். யிந்தச் சீமை தாது வருசம் ஆனி மாசம் முதல் கொண்டு குமுசாயர்கள் போய் சீமையெல்லாம் பார்த்து, நம்முடைய வசம் பண்ணாமல் முசியே தெவோ வசம் பண்ணி, உமக்கு உண்டான ஆதாயம் மாத்திரம் நீர் வாங்கிக் கொள்ளுமென்று சொல்லி, தாது வருசமும் யீசுவர வருசமும் யிந்த இரண்டு வருசமும் அவர்கள் தானே சகல அமுலும் தங்களுடைய மனசுப்படியே பண்ணிக் கொண்டு நம்முட பேர் ஊரிலே உண்டோ

யில்லையோ என்று பண்ணிப் போட்டு, நம்மை அழைப்பிச்சு ஒரு வார்த்தை கூடக் கேழ்க்குறதுக்கும் யில்லாமலும் அவர்கள் மனசுப்படியே சகல காரியமும் ஆதாய சாதாயமும் நம்முட நாள் நிலுவையைக் கூட நாம் கேழ்க்கப் போகாதென்றும் அமுல்தாரருடனே நாம் பேசப் போகா தென்றும், அமுல்தாரன் நம்முடனே சீமைப் பேச்சு யில்லாவிட்டாலும் லோகாபிரமாய் பேச்சாகிலும் பேசக் கூடாதென்றும், காணவும் கூடாது யென்றும், யிப்படி யெல்லாம் அவர்கள் மனசுப்படியே நடப்பிச்சுக் கொண்டு போன படியினாலே, யிருபது லட்சம் குத்தகைக்குப் பதிமூன்று லட்சம் கண்டபடிக்கு முன் பவ யுவ வருசம் 2க்கு நம்முடைய அமுலுக்கு யிந்த விதம் உண்டான உள் நஷ்ட்டமும் ஒத்துத் தரவேணும். ஆனபடியினாலே, யிந்த மூன்று வருசத்துக்கு (21,00,000) இருபத்தோரு லட்சம் ரூபாயும், கேத (பழைய) பாக்கி 13,00,000 உம், நம்முடைய 2 வருசத்துக்கு உள் நஷ்டம் 8,00,000 ரூபாயும், ஆக 42,00,000 ரூபாய் கும்பினியார் (எனக்குக்) குடுக்க வேணும். யிதுக்கு நாம் கும்பினிக்கு 4 லட்சம் (4,00,000) குடுக்க வேணும். அப்படி யெல்லாமிருக்க, யிப்போதுக்கு கும்பினி தஸ்திரத்திலே முன் பவ யுவ வருஷ ஆதாயத்தோடு ருசுமு சாதல்வாரு உசத்தி யெழுதவும், குத்தகை நம்முதாய் வைச்சுச் செல்லு பாக்கி நம்முடைய பேரிலே யெழுதவும் யென்ன நியாய மிருக்குது?

ஆனால் முன்னாலே, (நமக்குக் கொடுத்த) அஞ்சு வருஷ (சீமையிலே), அரையே அரைக்கால் (5/8) வாசி துகை காணுகுற சீமையை முழுசாய் (குமுசாயரிடம்) வாங்கிக் குடுத்து, சீமை அமுல் நடக்க வேண்டிய திட்டப்படிக்கு நடத்த வொட்டாமல் கலீல் பண்ணுகிற பேருக்கெல்லாம் சகாயமாயிருந்து, மத்தலத்துப் பண்ணி கும்பினிருக்கு வருகிற பணத்துக்கு லுக்குசான் (நஷ்டம்) வருகுதென்றும் சீமை அழிஞ்சுப் போகுதென்றும் யோசனை பண்ணிக் கொள்ளாதபடிக்கு மத்தலத்துப் பண்ணியும், குத்தகை எடுத்தவனுக்கு மத்தலத்துப் பண்ணி யல்லவோ குத்தகைப் பணம் விருத்தி விச்சுக் கொள்ள வேணும் யென்று யோசனை பண்ணாமலும், ஞாயத்தை விட்டு விட்டு தங்கள் பிரயோசனத்தைக் குறிச்சு, தங்கள் கையிலே தொரைத்தனம் யிருக்குது (என்று) தங்களுக்குச் சரிப் போனபடிக்கு நடப்பிச்சுக் கொண்டால், தங்களைக் கேழ்க்குறதுக்கு ஒருத்தருக்கும் ... (கேள்வி கேட்க) யென்ன யிருக்குது யென்று, தங்கள் மனசுப் படியே நடப்பிச்சுக் கொண்டு போனபடியினாலே, யிப்போது யிந்தக் கணக்கும் அவர்கள் மனசும் படியே அவர்கள் வீட்டுக்குள்ளே (இருந்து) அவர்கள் எழுதிக் கொண்டார்கள். அதைத் தொட்டு நமக்குச் சரி சமானமா யிருக்கிற பேர் ஒருத்தர் நடப்பிச்சால், நாம் போய் பிரபுக்களுடனே சொல்லவும், அவர்கள் அந்த ஞாயம் விசாரிச்சுத் தீத்துக் கொடுக்கவும், அதுக்கான ஆக்கினை அபராதம்

கூட நடப்பிச்சு வைக்கவும் யிது முதலான சம்மதியும் யெல்லாமும் நடக்கும். பிரபு தானே யிப்படி நியாயத் தப்பிதமாய் நடப்பிச்சுக் கொண்டாரே ஆனால், யிவருக்கு மேலே ஒரு பெரிய வரிருந்தால் அவருடனே போய்ச் சொல்லிக் கொள்ளலாம். யிவருக்கு மேலே ஒருத்தருமில்லை. ஆனதினாலே யிவரே பிரபுவா யிருக்கச்சே அவர் நடத்துகிற காரியத்துக்குத் தெய்வம் கேழ்க்க வேண்டியதல்லாதே மனுஷர் கேழ்க்க வேண்டியதில்லை. அதைத் தொட்டு மனம் பொறுத்துக் கொண்டு காலத்தின் பேரிலே பாரத்தைப் போட்டுக் கொண்டு யிருக்க வேண்டியது.

***1758 வருசம், பிப்ரேயிரு மாசம், தேதி 26; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 18; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : பங்காளத்திலே யிருந்து சென்னப்பட்டணத்துக்கு பத்துக் கப்பல் வெள்ளிக்கிழமை தினம் வந்ததாகவும், அதைக் கண்ட உடனே பிரான்சுக் கப்பல் என்று பிரமிச்சு, பட்டணத்திலே உள்ள சகல செனங்களும் கலைஞ்சு மேற்கே ஓடினதாகவும் வெள்ளைக்காரரும் தட்டுக் கெட்டு பீரங்கிகளெல்லாம் மருந்து போட்டுத் தயாரான தாகவும், அப்படி கலக்கமாயி யிருக்கச்சே கப்பலிலே வட்டக்கொடி போட்டுக் கொண்டு, அடையாளம் காண்பிச்சுக் கொண்டு வந்ததாகவும், அதன் பேரிலே இங்கிரேசுக் கப்பல் யென்று அறிஞ்சு, அப்பால் ஓடிப்போன பேரெல்லாம் திரும்ப அவரவர் வீட்டுக்கு வந்தார்க(ளாம்)... பங்காளத்திலே காச்சல் கண்டு இங்கிரேசுக்காரர்கள் வெகு சனம் பதினாயிரம் பன்னீராயிரம் பேர் விழுந்துப் போனதாயும், மேஸ்தர் கிளேவிசு யிருக்கிறதாயும் சொல்லிக் கொண்டார்களென்று கேழ்விப்பட்டுது.

அப்பால் ஒன்பது மணிக்கு ஒபிசியால்மார் வந்த பேர் சொன்ன சேதி : சீமையிலே யிருந்து சூரத்து சோடா ... வந்தது. (அங்கே) ... காபுரிகளிருந்து கொண்டிருக்கிறவர்கள் கன்னட ராசாவும் (King of Kannada) இங்கிரேசுக்காரரும் ஒன்றாயிருக்குறார்கள் என்று பிரான்சுராசா சண்டை (கனடா) ராச்சியம் கட்டச் சொல்லி தண்டு அனுப்பினாராம். யிங்கிரேசுக்காரர் தங்களுக்குப் பெலனாக புருசு (Prussia) (வைச் சேர்த்துக் கொள்ள, அவரது) பிள்ளை செத்துப்போய், வெகு சனங்கள் சண்டையில் செத்துப் போனபடியினாலே யிங்கிரீசுக்காரரிலே வெகுசனங்கள் மடிஞ்சதாகவும், புருசு ராசா நிறுவாகம் பண்ண மாட்டாமல் போயி விட்டதாகவும், அதின் பேரிலே இங்கிரேசுக்காரர் சமாதானம் ஆச்சு தென்றும், ஆகயில்லை யென்றும் எழுதி வந்ததாகவும் சொன்னார்கள்.[1]

---

[1] இது வெறும் வதந்தியே.

***1758 வருசம், பிப்றேயி மாசம், தேதி 27; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 19; சோமவாரம்***

இத்தனாள் வட்டி தள்ளி (குறைத்து) தமுக்குப்போட்டு நாலு கோட்டை வாசலிலேயும் கடுதாசி ஒட்டி(னார்கள்).

நேத்து 18 தேதி ஆதிவார நான் நடந்த சேதி : முன் முசியே கொதே நாளையிலே வெள்ளைக்காரருக்கு வட்டி குடுத்தால் வருஷம் ஒன்னுக்கு 100க்கு 8 விழுக்காடு வாங்கிக் கொள்ளுகுறது என்றும், தமிழருக்கு வட்டி குடுத்தால் வருசத்துக்கு 100க்கு 12 விழுக்காடு வாங்குறதென்றும், யிந்தப் படிக்கும் அவர் துரைத் தனத்திலே ... நடந்து வந்துது. அப்பால் முசியே கொதே பவ வருசம் மாசி மாசம் 9 தேதி (1755 பிப்ரவரி 17) சீமைக்குக் கப்பலேறிப் போன பிறகு முசியே லெறி அவர்கள் பங்காளத்திலே யிருந்து யிவ்விடத்துக்கு வந்து, துரைத் தனத்துக்கு வந்து, அதன் பிறகு முன் நடந்து வந்த அத்து தப்பி அவரவர் சரிப் போனபடி மாசம் 1க்கு 100 க்கு 12 யிப்படியாக வாங்கிக் கொண்டு வந்தார்கள். அது, யிது வரைக்கும் முன் நடந்த தென்ன, யிப்போ நடக்குற தென்ன வென்று துரைத்தனம் பண்ணுகிறவர் விசாரித்தவருமில்லை. அப்படி விசாரணை பண்ணாமல் யிருந்தது. யித்தனாள் தொரைக்கு யென்னமாய்த் தோணினதோ, என்ன யோசனை பண்ணினாரோ தெரியாது ஒன்பது மணிக்கு கோன்சேல்க்காரரை அழைப்பிச்சு கோன்சேல் கூடிவிச்சு, யினி மேல் வெள்ளைக்காரர்களுக்கு வட்டிக்குக் குடுத்தால் வருஷத்துக்கு 100 க்கு 8 விழுக்காடும், தமிழருக்கு வருஷம் 1க்கு 100க்கு 12 விழுக்காடும், யிந்தப்படிக்கி வாங்குறது. அதிகமாய் வாங்கத் தேவையில்லை யென்று கோன்சேலிலே தீத்துக் கடுதாசிகள் யெழுதி கோட்டை வாசல் படிக்கும் ஒட்டி விச்சு தமுக்கும் போடுவிச்சார்கள்.[1]

[1] இதுவும் ஒரு நிறவெறி பிடித்த சுரண்டல் முறையே.

## மார்ச் 1758

*1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 1; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 21; புதவாரம்*

இத்தனாள் பிறுதிகீசுக் கப்பல்காரன் (Portuguese) சொன்ன சேதி : தான் பங்காளத்திலே யிருந்து இங்கிலீசுக் கப்பலுடனே கூட வந்ததாகவும், அப்படி வருகுறதிலே வழியிலே முசியே லெறி அவர்கள் பைகோ (Peqou) வுக்கு அனுப்பிவிச்ச திலிசியாஸ் (Dilisias) என்கிற கப்ப லொன்று பைகோவுக்குப் போய்த் திரும்பி வருகுற போது இங்கிலீசுக்காரர் கண்ணிலே அகப்பட்டதாகவும், உடனே அவர்கள் அந்த திலியாசு என்கிற கப்பலைப் போய்ச் சுத்திக் கொண்டு, அதைப் பிடிச்சுக் கொண்டு சென்னப்பட்டணம் வந்து சேந்தார்கள் யென்றும், பங்காளத்துக்குச் சீமைக் கப்பல் அஞ்சு கப்பல் வந்து, அங்கே யிருக்கிற சாமான்கள் அரிசி பங்காளத்திலே யிருந்த யேழு கப்பலுடனே சேந்து கொண்டு, ஆக பனிரெண்டு கப்பலும் சென்னப்பட்டணம் வந்து சேர்ந்ததென்றும், பிடுதிசுக் கப்பல் கப்பித் தான் சேதி சொல்லிப் போனதாகவும், அதன் பிறகு முசியே சுப்பீர், முசியே லெறியைப் பார்த்து, "சென்னப்பட்டணத்துக்கு பெலன் வந்து விட்டதே, யிதுக்கு முன் அவர்களுக்குப் பிலனில்லாமல் ரொம்ப பிலகீனமா யிருந்த வேளையிலே நாம் போய் அவர்களைப் பெலகீனப்படுத்தி (யிருக்க) வேணுமென்று சொல்லி, (இப்போது) பணமில்லையே, எப்படி யென்று சண்டைக்குப் போறதுக்குத் தயாறு பண்ணி அனுப்பாமல் பண்ணிப் போட்டியே, இப்போவானால் அவர்களுக்குப் பெலன் வந்ததே, உம்மாலே காரியம் கேட்டுப் போச்சு," தென்றும் சொன்ன(ராம்). அதுக்கு முசியே லெறி யிருந்து கொண்டு "கும்பினியிலே பணம் யிருந்து நான் பணமில்லை யென்று சொன்னேனா? கும்பினியிலே பணம் யில்லாவிட்டால் நானெங்கே யிருந்து குடுப்பேன்," என்று சொன்னதாகவும், அதுக்கு முசே சுப்பீர் சொன்னது, "நீர் சொன்னது மெய்தான். கும்பினியிலே பணம் யெப்படி யிருக்கும்? கும்பினிக்கு ஆசிலாகிற பணம் எல்லாம் (நீங்கள் கும்பலாய்ப் பங்கு போட்டுக் கொண்டீர்கள்,) நீங்கள் (இப்படி) யெடுத்துக் கொண்டால் கும்பினியிலே பணமெப்படி யிருக்கும்? நீர் யிப்போ வந்த பிறகு, புடுதிசுக் கப்பலிலே சீமைக்கு அனுப்பிவிக்கத் தக்கதாக முசியே தெவோ வீட்டிலே விராகன் லட்சத்திருபதினாயிரம் (1,20,000) தயாறு பண்ணியிருக்கிறீரே! அது சேதி யெனக்குக் கபுறு யில்லையா? யிங்கே யானால் சம்பளத்துக்கு ஒரு காசு யில்லையென்று சொல்லுகிறீர். சீமைக்கு (பிரான்சுக்கு) அனுப்பவானால் உமக்குப் பணம் யிருக்குது. சீமையெல்லாம்

அபந்தரை பண்ணி கும்பினிக்குப் பணம் சேராமல் பண்ணினீர். முசியே தெவோவை வைச்சு பேருக்குச் சத்தாய் பணங்களெல்லாம் கையாடிக் கொண்டு போறதும், நடக்குற சேதிகளும் யெனக்கு ஒன்றும் தெரியாது யென்று யிருக்கிறீர். நான் அதுகளெல்லாம் நன்றாய் விசாரிச்சு யிருக்குறேன் யிப்போ தானே 2,40,000 விராகன் குடுக்கிறே," னென்று சொன்ன(ாராம்). அதுக்கு, முசியே லெறி அவர்கள் சொன்னது : "இப்போ நான் பிறிதிகிசுக் கப்பலிலே அனுப்புகிறதாக 1,20,000 வராகன் வச்சுயிருக்குறே னென்று சொன்னீரே, அதுமாத்திரம் நிலவரம் பண்ணினால் நான் யிப்போ தானே 2,40,000 விராகன் குடுக்கிறே," னென்று சொன்னதாகவும், அதுக்கு, "நல்லது. அது மாத்திரம் என்ன? எல்லாச் சேதியும் தகிக்கத் தாகத்தானே வெளியாகிற (வெளியாக்குகிறேன்)," என்று முசியே சுப்பீர் சொன்னாரென்றும், அதன் பேரிலே பிறகு முசியே லெறி அவர்களும் முசே தெவோவும் பேசிக் கொண்டதாகவும், அந்தப் பேச்சு (முசே தெவோ போய்) சவரிராயப் பிள்ளைக்குச் சொன்னதாகவும், அவன் வந்து தாண்டவராயப் பிள்ளைக்குச் சொல்லி, சவரிராயப் பிள்ளையும் தாண்டவராயப் பிள்ளையும் சவரிராயப் பிள்ளை தம்பியும் மூன்று பேரும் யேகதேசமாய் ரொம்ப யோசனையாய் பேசிக் கொண்டதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது.[1]

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 4; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 24; சனிவாரம்***

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே, பனிரெண்டு மணிக்குக் கேழ்வியான சேதி : சென்னப்பட்டணத்திலே யிருந்து இங்கிரேசுக்காரர் கப்பல் ரெண்டு ஓடி வந்து வண்ணாந்துறைக்கு நேரே கிழக்கே கொண்டு வந்து பிடிச்சு ஆலம்புரி, சதுரங்கப்பட்டணம் யிதுகளிலே யிருந்து கட்டக்குச்சிகள், கரிகள், சுண்ணாம்புகள் கொண்டு வருகிற படகுகளைப் பிடிக்குறதாகவும், அதைப் பாத்து குண்டுரார் தங்களுக்கு வடக்கே யிருந்து செம்மரம் முதலான தினிசுகள் வருகுதே யெப்படி யென்று உடனே மனுஷரைப் பயணம் பண்ணி தங்கள் படகுகளை எங்கே கண்டாலும் அங்கே தானே நிறுத்திப் போட்டு, அங்கே யிறக்கச் சொல்லி அனுப்பி விச்சார்களென்றும் கேழ்விப்பட்டுது.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 5; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 25; ஆதிவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருந்து சாயங்காலம் அஞ்சு மணிக்கு குதிரை வண்டி மேலே நாமும் சிரஞ்சீவி அப்பாவு, குழந்தை மங்கத்தாளும்

[1] இந்தக் கையாடல் விஷயமெல்லாம் பிரான்சிலும் பரவலாய்ப் பேசப்பட்டது. சுப்பீர், லாலி போன்ற அனைவருக்கும் இது நன்கு தெரிந்தது. லெறி தனது நினைவுக் குறிப்புகளில் இதைப்பற்றி எழுதியுள்ளார். இக்கொள்கையில் லெறிக்கும் பங்கிருந்தது தெளிவு.

(அப்பாவுவின் குழந்தை), பிறகே குதிரை மேலே அண்ணாசாமியும் சவாரி பிறப்பட்டு வண்ணாந்துறைக்குப் போனவிடத்திலே அங்கே ராசா மனுஷர் பாறுவைச்சு (Parade) சுட்டபடியினாலே அந்த வேடிக்கைகள் பார்த்துப் போட்டு, ஆறரை மணிக்கு வீட்டுக்கு வந்தவிடத்திலே கேழ்வியான சேதி வயணம் :

மைசூரிலே யிருந்து வர்த்தகர் பணம் நிமித்தியம் நந்திராசா (வின்) கடுதாசியும் ரெண்டு சீரொப்பாவும் வந்ததாகவும், அதையும் கொண்டு முன் 22 தேதி வியாழக்கிழமை நாள் மைசூரிலே யிருந்து வந்ததாகவும், அன்றைக்கு துரையிடம் மைசூர் வைக்கீல் வெங்கிட்ட நாரணப்பய்யன் வில்லியநெல்லூரிலே யிருந்து வந்ததாகவும், துரையவர்கள் சமையம் கிடையாததினாலே, 23 தேதி சுக்கிறவார நாள் முசியே லெறி அவர்களும் முசியே சுப்பீரும் கூட யிருக்கையிலே போய் மெத்தை மேலே காண்பிச்சுக் கொண்டு, ரெண்டு பேருக்கு ரெண்டு சீரொப்பாவும் வைச்சு, நந்திராசா காகிதமும் குடுத்து, சேதிகளும் சொல்லி பணம் தரவேணும் என்று கேட்டதாகவும், அதுக்கு முசே லெறி அவர்கள் மறு உத்திரம் சொல்லாமல் கேட்டுக் கொண்டு சும்மாயிருந்தாரென்றும், அதன் பேரிலே வெங்கிட்ட நாரணப்பய்யன் வில்லியநெல்லூரிலே தமக்கு வீடு கட்டவேணும், அதுக்கு யிடமும் சாமானும் வேணும் யென்று சொல்லிக் கொண்டதாகவும், அதுக்கு முசியே லெறி அவர்கள் யெங்கே வேணும் அங்கே கட்டிக் கொள்ளச் சொல்லியும் சாமான்கள் குடுக்கச் சொல்லியும் உத்தாரம் குடுத்ததாக சேதி கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 6; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 26; சோமவாரம்***

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே, பத்து மணிக்கி கேழ்விப்பட்ட சேதி : முசியே லெறி கோவர்ணதோர் அவர்களும் முசியே சுப்பீர் செனரால் அவர்களும் ரெண்டு பேரும் முசே லாலி அவர்கள் பிறகே வருகிற பேருக்கு வீடுகள் ஒழிச்சுத் திட்டம் பண்ணுகுற நிமித்தியம், தாங்கள் தானே பிறப்பட்டு கனகராய முதலி வீடு முதலான பெரிய வீடுகளாயிருக்கிற வீடுகளெல்லாம் பல்லக்கு விட்டு யிறங்கி நுழைந்து போய்ப் பார்த்து, யிந்தப்படிக்கு அந்த வீதியிலே யிருக்கிற வீடுகள், கிடங்குகள் யெல்லாம் சுத்திப் பார்த்து அதின் பேரிலே மீராப் பள்ளிக்குப் போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

யிப்படி யிருக்கையிலே மச்சிலிபந்தரிலே யிரு(ந்து) முசே லெறிக்குக் கடுதாசி கொண்டு வந்த அறுக்காறர் சொன்ன சேதி : முசியே புசி, சலாபத்து சங்கு, நானா யெல்லாரும் சமாதானமாயி ஒன்று பட்டார்கள் என்றும், சுத்துவட்டத்திலே வந்து யிறங்கி கடப்பை ராச்சிய

மெல்லாம் கட்டிக் கொண்டு யிருந்த, பெலவந்த ராயன் என்கிறவனைப் பட்டாணிகள் சண்டையிலே வெட்டிப் போட்டார்களென்றும் சொன்னான். அப்போ நாம் யோசிச்சுது, யிதுவே மெய்யே யானால் நானா வகையிரா காரியஸ்தனாகிய பெரிய மனுஷர் அமுர்தராயரும் விழுந்து போனத்தினாலே நானாவுக்கு யித்தனை நாளும் பனியிரெண்டு வருஷமாயி (பெருமை) மெத்த ஒசந்தது, யினி தாழுகுற காலம் வந்தது என்று யோசிச்சோம். யிதல்லாமல் அவன் சொன்ன சேதி முசே லாசு தம்பி பங்காளம் போன பிறகு காசியிலே போயி சேர்ந்திருந்(தான்). அவ்விடம் விட்டு டில்லிக்குப் போய் பார்சா போட்டியாயி, அங்கே யிருந்தும் பவுன்சு கூட்டிக் கொண்டு பங்காளத்துக்கு வருகுறதாயி சேதி சொன்னான்.[1]

### *1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 8; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 28; புதவாரம்*

இத்தனாள் காலமே விட்டுக் குள்ளே தானே யிருந்தோம். சாயங்காலம் அஞ்சு மணிக்கு சவாரி பிறப்பட்டு அண்ணாசாமி அய்யாசாமி கூட வர, வழுதாவூர் வாச(லாலே) பிறப்பட்டு நம்முட தோட்டத்துக்குப் போய் ஆறரை மணிக்கி வீட்டுக்கு வந்து கச்சேரியே வந்தேன். அங்கே யிருக்கையிலே ராசா ஒப்பிசியால்மார் வந்த பேர் சொன்ன சேதி : இத்தனாள் காலமே முசியே சுப்பீர் செனராலுடனே கூட வந்த ராசா ஒப்பிசியால் மாரிபத்திலே ஒருத்தருக்கு முசியே லெறி கோவர்ணதோர் அன்னூறு ரூபாயிக்கு முசியே தெவோ பேரிலே சீட்டுக் குடுத்ததாகவும், அந்தச் சீட்டை கொண்டு போயி அந்த ஒப்பிசியால் முசியே தெவோ கையில் கொடுத்து ரூபா கேட்டதாகவும், அதுக்கு முசியே தெவோ தம்முடைய கையிலே ரூபாய் யில்லை யென்று சொன்னதாகவும், அதுக்கு அந்த ஒபிசியால், "முசியே லெறியும் நீரும் கூடி கும்பினீர் பணத்தை யெல்லாம் கொள்ளை யிடுகுறது யென்ன? நாங்கள் பணம் கேட்டால் யில்லை யென்கிறதென்ன?" வென்று கேட்டதாகவும், அதன் பேரிலே முசே தெவோவுக்குக் கோபம் வந்து வார்த்தை மிஞ்சிப் பேசினதாகவும், அதன் பேரிலே ராசா ஒபிசியாலுக்குக் கோபம் வந்து பிரம்புனாலே நன்றாய் ரெண்டு அடி அடித்ததாகவும், ... அதன் பேரிலே முசியே தெவோ "யெனக்குச் சீமை தேவையில்லை. முசியே லெறியுடனே சொல்லி விடுகுறோ," மென்று உடனே பிறப்பட்டு கோட்டைக்கு வந்து, முசியே லெறி அவர்களுடனே சொன்னதாகவும், உடனே முசே லெறியும் முசியே தெவோவும் முசே சுப்பீர் கிட்டப் போயி யிப்படி துடுக்காய் நடத்துகுற தென்ன வென்று கோபமாய்க்

[1] பிரெஞ்சுத் தரப்பிலிருந்த ழாக்கே பிரான்சுவா (Jacques Francois) என்பாரின் மூத்தவர்–இளையவரல்ல இந்த ழீன் லா (Jean Law).

கேட்டவிடத்திலே, முசியே சுப்பீருக்கும் கோபம் வந்து ஒசந்த பேச்சாய் நிராகரிச்சுப் பேச, "பணம் குடாமல் யிருந்தால் யிது(வும்) நடக்கும், யின்னம் நடக்கப் போறது வேறேயாக்கும். யிதல்லாம் முசியே லாலி வந்த பிறகல்லவோ தெரியும்?" யென்று பின்னையும் வெகு பேச்சுக்கள் எல்லாம் விஸ்தாரமாகத்தானே வெகு சூப்பாடாயிப் பேசினதாயும், அவர் மெத்த கோபமாயிப் பேசின உடனே முசியே லெறி தாழ்ந்து, போற போது யிருந்த உருட்டும் கோபமும் அடங்கி தம்முடைய காம்பிராவிலே வந்ததாயும், யினி மேல் யென்ன நடக்குமோ வென்றும் சொன்னார்கள்.

யிங்கிலீசுக்காரர் சுலுப்பும் கப்பலும் கிட்டத்திலே வருகுறதும் தூரம் போறதும் மறைவாய்ப் போறதும், திரிந்து திரும்பவும் வருகுறதும் யிந்த அடியிலே திரும்புகுறார்கள்.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 9; ஈசுவர வருசம், மாசி மாசம், தேதி 29; குருவாரம்***

இத்தனாள் வெள்ளைக்காரர் வந்து சொன்ன சேதி : முசியே லாலி (M. Lally), லூத்தினாந்து சென்றல் து ரூவா (Lieutenant Generat du Roi) என்கிறவர் முப்பத்தஞ்சு கப்பலுடனே அச்சக்கு (அச்சை) வந்ததாகவும், அச்சிலே யிருக்கிறவர்களெல்லாம் பயந்து நடுங்கிப் போயி முன்னாலே நம்முடய பேரிலே ஒரு குத்தமிருக்குதே அது நிமித்தியம் வந்தார்களோ தெரியாதென்று யெச்சரிக்கை யாய் யோசனை பண்ணி, முசே லாலி அவர்களண்டைக்கு மனுஷரை அனுப்பிவிச்சுப் பேசின விடத்திலே, "நாம் அப்படி வரயில்லை. நீங்கள் பயப்படத் தேவையில்லை. தீனி, தண்ணிகள் யேத்திவிக்கிற நிமித்தியம் வந்தோ," மென்றும், கவில் குடுத்தார்கள் யென்றும், அதன் பேரிலே தீனி தண்ணீர் யேத்துகிறார்கள் என்றும், அதுவும் யேத்திக் கொண்டு வருகுறார்களென்றும், தலங்கம்பாடி (யிலிருந்து) அச்சு(சை)க்கு சபறப் (பயணம்) பண்ணப் போயிருந்த கப்பல் தலங்கம்பாடிக்கு வந்து யிந்த சேதி சொன்னதினாலே, தலங்கம்பாடி தொரை முசியே லெறி அவர்களுக்குக் காகிதம் அனுப்பிவிச்சு, முசியே லெறி அவர்கள் நிறுத்தி யிருந்த வேலைகளை யெல்லாம் திரும்ப ஆயத்தியம் நடத்துகிறார்கள்.

நேத்து முசியே லெறிக்கும் முசியே தெவோவுக்கும் ராசா ஒபிசியாலுக்கும் கச்சா (கடும் விவாதம்) நடத்தினாலே, யிவர்களுக்கு ஒருத்தருக்கு ஒருத்தர் பேச்சுக்களை வித்தியாசமாய் நடத்தினதானாலே, அவர் காம்பிராவிலே அவர் தீனி வேறே, யிவர் காம்பிராவிலே யிவர் தீனி வேறே யிந்தப்படிக்குப் பிரிஞ்சு ஒருத்தருக் கொருத்தர் பேச்சில்லா மலிருக்குறார்கள். அதினாலே முசியே சுப்பீர் யென்ன செய்வாரோ வென்று முசே லெறி அவர்கள் மனதிலே கலக்கம் பிறந்து, கும்பினி

கொம்மாந்தா மாயிருக்கிற முசே சோபினேயை அழைச்சு, முசியே சுப்பீர் விகாடிச்சு (சண்டையாயி) யிருக்கிறதினாலே அவர் யென்ன மோசம் பண்ணுவாரோ, யெப்படி யென்று கேட்டதுக்கு, முசே சொபினே சொன்னது, நீர் பயப்படத் தேவையில்லை. நான் உம்முட கிட்ட யிருக்கிறேன். கும்பினி தாலூக்கு ஒப்பிசியால் யெல்லாரையும் அழைப்பிக்குறேன். சொலுதாதுக்கார ரெல்லாம் அழைப்பிக்குறேன். அவரப்படி நினைச்சால் ஒரு கை பார்க்குறோம். யிப்போ நம்முட பிலத்து முன்னே முசியே சுப்பீருக்கு பெலன் போராது. உமக்குப் பயம் தேவையில்லை," யென்று தைரியம் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டது.

முசியே லெறிக்கும் முசே சுப்பீருக்கும் நடந்த சமாதானம் (இதுதான்).

*1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 12; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 3; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருந்து, சாயங்காலம் அஞ்சு மணிக்கு வழுதாவூர் வாசலாலே பிறப்பட்டு, காத்து சரீரத்திலே பட்டால் ரெத்தம் புஷ்ட்டி புண்டாமென்கிற நிமித்தியம் சவாரி போய், ஆறரை மணிக்கு வீட்டுக்கு வந்து ஒன்பது மணிக்குக் கச்சேரியிலே நாம் யிருக்கையிலே, ராசா ஒப்பிசியால்மார் பாட்டுக் கேழ்க்கிற நிமித்தியம் வந்தவர்கள் சொன்ன சேதி : யிதுக்கு முன் மாசி மாசம் 28 தேதி (1758 மார்ச் 8) சுப்பீர் அவர்கள் ஒப்பிசியாலுக்குப் பணம் குடுக்கச் சொல்லி தம்முடைய சீட்டு யெழுதிக் குடுத்து முசியே தெவோ அண்டைக்குப் போகச் சொன்ன யிடத்திலே, அந்த ஒப்பிசியால் முசே தெவோ வீட்டுக்குப் போய் அவர் கையிலே சீட்டுக் குடுத்து அவரைப் பணம் கேட்டதுக்கு, முசியே தெவோ சொன்னது, தம்முட கையிலே பணமில்லை யென்றும், தாம் முசியே லெறி அவர்களை அறிவோமே யல்லாமல் முசியே சுப்பீரை அறியோ மென்று சொன்னதாகவும், அதுக்கு அந்த ஒப்பிசியால் சொன்னது, "ராயமன்னியாரா (ராஜமான்யர்) யிருக்கப்பட்ட முசியே சுப்பீரை நீரெப்படி அறிவாய்? ஒரு பிடவைத் தெய்க்கிற சிப்பியன் நீ (tailore). உன் பெண்டாட்டி வண்ணாத்தி. அவளை நீ முசே லெறிக்குக் குடுத்து, கும்பினீர் பணத்தை யெல்லாம் கொள்ளை யிட்டாயி. அப்படிக் கொத்த நீ முசியே சுப்பீரை யெப்படி அறிவாயா? கும்பினீர்ப் பணத்தை யெல்லாம் நீயும் முசியே லெறியும் திருடினதுக்கு, முசே சுப்பீர் உங்களைக் கட்டி அடிச்சு தூக்கிலே போடுவாரே அப்போ முசே சுப்பீரை நீ நன்றாய் அறிவாய்," யென்று சொன்னதாகவும், அதன் பேரிலே முசிசே தெவோவுடன் பிறப்பட்டு கோட்டைக்கு வந்து தம்மைப் பார்த்து ஒப்பிசியால் சொன்ன சேதி யெல்லாம் முசியே லெறியுடனே சொல்லி,

முசியே லெறியும் முசியே தெவோவும் முசியே சுப்பீரும் யெல்லாரும் காம்பிராவிலே வந்ததாகவும், ... அப்போ முசே சுப்பீருடனே முசியே லெறி சொன்னது, "உம்முடைய ஒப்பிசியால் போயி முசே தெவோவை யிப்படியெல்லாம் சொன்னாராம். யிப்படி உண்டா சொல்லுகுற," தென்று கேட்டதாகவும், அதுக்கு முசியே சுப்பீர் சொன்னது, "நீ கேழ்க்க வேண்டியது, நியாயந்தான். கும்பினி பணத்தை யெல்லாம் நீங்கள் அஞ்சு பேராய்த் திருடினீர்கள். யிதிலே ஆதியிலே திருடினவன் திலார்ஷு ஒருத்தன். அவன் அது தக்கினால் போதும் யென்று யிருக்குறான். யிப்போது நீ யொன்று முசியே பெடுத்தல்மீ ஒன்று முசியே தெவோ வொன்று முசியே பொஷேத்து ஒன்று. நீங்கள் நாலு பேரும் யிப்போது திருடிக் கொண்டிருக்கிறீர்கள். முசியே லாலி கையிலே வருகிற ராசா ஒடுதி நீங்கள் அறிகிறீர்கள். திருடின பணங்கள் யெல்லாம் ராசாவைச் சேரவேண்டியது. ஆகையாலே உங்கள் திருட்டுகளெல்லாம் கணக்கு யென் கையிலே யிருக்குது. கும்பினியிலே வாங்கிக் கொண்டு சேவிச்சால், உன் வீட்டிலே யுனக்கு வருகுற சம்பளமென்ன, உன் சிலவு யென்ன, உனக்கு வீடு யெப்படி வந்துது, கண்ணாடிகள் தட்டுமுட்டு சாமான்கள் யெப்படி வந்தது? உனக்கு யித்தனை பணம் எப்படி வந்தது? வியாபாரம் பண்ணீனாயா, யெந்த விதம் உனக்கு வந்தது?" யென்று நன்றாய் விபகரிச்சி, "அதுகளுக்கு எல்லாம் கணக்கு கொண்டு வரச் சொல்லுவோம். அதுக்கு வயணம் சொல்லாமல்ப் போனால் அவன் ஆஸ்தி பாஸ்தி யெல்லாம் எடுத்துக் கொண்டு அவனையும் தூக்கிலே போடுவோம். இப்போது, நீங்கள் திருடுகுறதுக்கு உன்னையும் முசியே பெடுத்தல்மீயையும் ... விலங்கு போட்டு அடிச்சு தூக்கிலே போடுவோம். மத்த பேரை தெற்கு வாசலுக் கப்பாலே தூக்கிலே போடுவோம். உங்கள் கிட்ட யிருந்த துபாசிகளையெல்லாம் கோட்டை வெளியே நாலு பக்கத்திலேயும் சகலரும் பார்க்கத் தூக்கிலே போடுவோம். யிதுக்கு முசியே லாலி வருகிற படியினாலே அவர் வந்தவுடனே யிந்தக் கணக்குகளெல்லாம் அவர் முன்னே வைச்சு யித்தனையும் நடத்திவிப்பேன். அவர் வராமல் போனால் நானே நடத்தி விப்பேன். யிப்போ நான் சண்டைக்குப் பிறப்பட்டால் உங்கள் வீடுகளெல்லாம் சோதிச்சு யிருக்கிற பணங்காசு களையெல்லாம் யெடுத்து சிலவு பண்ணுவேன். ஆனால் வந்தவுடனே யென் புத்திக்கு ஒரு மோசம் போனேன். யேதென்றால் உன் பிறகே திரியுகுறதுமல்ல, முசியே தெவோ வீட்டுக்கு வருகுறதுமல்ல, அது என் புத்திக்கு ஒரு மோசம் வந்தது. யென்ன காரியம் செய்தோமென்று அதுவே என் நெஞ்சிலே யிருக்கு," தென்று முசியே சுப்பீர் சொன்னதாகச் சொன்னார்கள்.

அதுக்கு, "நீங்கள் ராசா மனுஷர். உங்களுக்குச் சரிப்போன படி யெல்லாம் சொல்லுகிறீர்கள். யிங்கே நம்முடைய வீட்டிலே யிருந்து

சொல்லுகுறது நியாயமல்ல," வென்று நான் சொன்னேன். அதுக்கு அவர்கள் சொன்னது, "இதென்ன ஒளிப்பாய் (பேசுகிறது?) முசே லெறி முன்னே தானே நாங்களும் கூட யிருக்கிறதிலே முசே சுப்பீர் கெட்டியாய்ச் சொன்ன பேச்சை நாங்கள் சொல்லலாகாதா? பயமென்ன யெங்களுக்கு? அப்படித் தேவையில்லை, நன்றாய் சொல்லலா," மென்று சொன்னார்கள். அதின் பேரிலே யினி நாம் யிவர்களை சொல்ல வேண்டா மென்றால் யென்ன சொல்லுவார்களோ யென்று நாம் வெறுமனே யிருந்தோம். சுப்பா சோசியர் புத பிலகீனம் வருகுதென்று சொன்னாரே அதுக்கு யேதுவாய்க் காணுதென்று பெண்ணிக் கொண்டோம்.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 15; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 6; புதவாரம்***

முசியே தெவோ முசியே சுப்பீரை சமாதானம் பண்ண வேணுமென்று யிருக்கிறார்.

இத்தனாள் சாயங்காலம் வழுதாவூர் வாசலுடனே பிறப்பட்டுப் போகையிலே முசியே சுப்பீர் வண்டியேறிக் கொண்டு பிறகே வந்தார். அவர் வருகுறதைப் பார்த்து நான் பல்லக்கு விட்டு யிறங்கி ஒதுங்கி நின்றோம். அவர் மேற்கே போனார். அதன் பிறகு நாம் மேற்கே போகையிலே முசே பெடுத்தல்மீயும் முசியே தெலார்ஷும் வண்டியேறிக் கொண்டு முசியே துறுவேத்து (Drouet)வண்டி ஒட்டிக் கொண்டு எதிராக வந்தார்கள். அவர்களைக் கண்டு போட்டு தோட்டம் வரைக்கும் மேற்கே போய், வீட்டுக்கு வந்து ராத்திரி யெல்லாரும் முசியே பெடுத்தல்மீ மனதிலே நாம் பிறகேயும் முசியே சுப்பீர் முன்னுதாகவும் போறதைப் பார்த்து, நாம் யேதோ முசியே சுப்பீருடனே பேசப் போனதாகத் தோணப்பட்டிருக்கும் யென்று யோசனை பண்ணிக் கொண்டிருந்தோம்.

யிப்படி யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசியே சுப்பீர் பகைச்சு யிருக்கிறான், யிவனை மோசம் பண்ண வேணும். அதுக் கெப்படி யென்று முசியே தெவோ யோசனை பண்ணி, முசியே சுப்பீரை அனுசரிச்சுத் தன் வீட்டுக்கு அழைச்சுப் போயி அவருக்கு விருந்து பண்ணி அன்பதினாயிரம் ரூபாய்[1] குடுத்து சமாதானம் பண்ணிக் கொண்டு, முசியே லாலி வருகுறவரைக்கும் நன்மையாகத்தானே கொண்டு வந்து, முசே லாலி வந்ததும் முசே சுப்பீர் யேதாகிலும் தங்கள் பேரிலே குத்தங்கள் சொன்னால், அப்போது முசியே சுப்பீர் பணத்துக்கு ஆசைப்பட்டுச்

[1] முன்பு கம்பெனிச் செலவுக்கு ரூ.500 கூட இல்லை என்று கூறிய தெவோ, இப்பொழுது சுப்பிருக்கு ரூ.50,000 கையூட்டு கொடுக்க முடிந்தது. பணம் சேர்க்க வேண்டும், திருடவேண்டும், கையூட்டு வாங்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாத வெள்ளை அதிகாரியே இல்லை போலும்.

சொல்லுகுறார். முன்னிப்படித் தான் உபாதி பண்ணினார். அதினாலே அன்பதினாயிரம் ரூபாய் குடுத்தோம், அதன் பிறகு வெறுமனே யிருந்தார் யென்று சொல்லுவோம். அதோடே யிவர் பேச்செல்லாம் யெடுத்துப் போமென்று யோசனை பண்ணி, அந்த அடியிலே ரூபாயும் சேகரிச்சுக் கொண்டு சமாதானம் பேசுகுறதாகவும் முசியே சுப்பீரும் யிந்த அடி அறியாமல் சமாதானத்திலே யிறங்கிப் பேசுகுறார்க ளென்றும் ரெண்டு நாளையிலே அப்படி நடக்குமென்றும் முசியே பிளாம் (La Blank) வந்து சொன்னார். பின்னையும் ரெண்டொருத்தர் சொன்னார்கள்.

முசியே லாலி வருகுறபோது புசல் அடிச்சதாகவும், அதினாலே நாலு கப்பல் தெறிக்கட்டு, அங்கங்கே திரிஞ்சு மயேக்கு வந்து சேந்த தென்றும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல், யிப்போது முசியே சுப்பீர் கொவர்ணமாம் மெத்தை மேலே தமிழர் வந்து கூடத் தேவையில்லை யென்று ஒப்பிசியால்மார்களுக்கு ஒடுதி குடுத்ததாகவும், அதினாலே ஒப்பிசியால்மார், கொவர்ணமா கார்க்குற பேர், ஆரையும் அங்கே வரவொட்டாமல் தடுத்து விட்டார்கள் யென்று (கேள்விப்பட்டேன்). அங்கே யிருந்து முசே லெறிக்குக் காகிதம் வந்தால் கோவர்ணமாம் காற்குற செந்தினோர் கொண்டு போயி, ஒப்பிசியால் கையிலே குடுக்கிறதும், அதை வாங்கிக் கொண்டு அந்த ஒப்பிசியால் முசியே சுப்பீர் கிட்டே கொண்டு போய்க் குடுக்கிறதும், முசியே சுப்பீர் முசியே லெறியை அழைப்பிச்சு அவர் கையிலே குடுத்து தம்முட முன்னே அவரை வாசிக்கச் சொல்லி அதன் பிறகு கொண்டு போகச் சொல்லுகி(றார்கள்) என்றும் ஒப்பிசியால்மார் சொன்னார்கள்.

இதல்லாமல், உள் கோட்டைக்குக் கிழக்கு வாசலிலே அன்பது அறுபது வருஷ காலமாய் ஒப்பிசியால் அவ்விடத்திலே யிருக்குறது. அதை யிப்போது முசியே சுப்பீர் அந்த வாசலிலே ஒப்பிசியால் யிருக்கத் தேவையில்லை யென்று போகச் சொல்லி விட்டதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 18; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 9; சனிவாரம்***

இத்தனாள் சாயங்காலம் சாரி போய் ஆறரை மணிக்கு வீட்டுக்கு வந்து விட்டபிறகு கேழ்வியான சேதி : ஏண்டபல்லி கிஷ்ணப்பன் சொன்னது : யிந்த வருஷம் சீமை பதினாறு லட்சம். யிதுக்கு மூணு லட்சம் நிலுவை நின்று போம். பதின்மூன்று லட்சம் காணும். யிதுக்கு மாதம் ஒன்றுக்கு சவரிராயப் பிள்ளை வைச்சிருக்கிற சிப்பந்தி(க்குப்) பதினேழாயிரத்து (17,000) சிலுவானம் குடுக்க வேண்டியது. ஆறு கலம் மாசம் (ஒன்றுக்கு) மூவாயிரத்து (3,000) சிலுவானம் ஆக, மாசம் (ஒன்றுக்கு) யிருபத்தோராயிரம் (21,000 ஆகிறது). கும்பினி பாறு,

சிப்பாயிகள், குதிரைக்காரர் சிலுவானம் மாசம் ஒன்றுக்கு அறுபத்தேழாயிரம் (67,000), ஸ்ரீரங்கம் சிப்பந்தி (செலவு மாதம் ஒன்றுக்கு) பனிரெண்டு ஆயிரம் (12,000) ஆக மாசம் (ஒன்றுக்கு) சிலவு. (இப்படி ரூபாய்) 1,00,000 (மாதம் ஒன்றுக்கு ஆக, வருஷத்துக்கு) பனிரெண்டு லட்சம் (12,00,000) சரியென்று சொன்னான். சீமைப் பணம் யிந்த சிலவுக்குச் சரியாய்ப் போனால், வெள்ளைக்காரர்கள் சொலுதாதுகள் சிலவு யென்ன? துரைகள் சிலவு என்ன? நோவாளிக் கிடங்கு, கூலிச் சிலவு யிதுகள் யெல்லாம் யெப்படி நடக்க வேணுமென்று யெண்ணிக் கொண்டோம்.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 20; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 11; சோமவாரம்***

இத்தனாள் காலமே வீட்டிலே தானே யிருக்கையிலே பனியிரெண்டு மணிக்குக் கேழ்வியான சேதி : அப்துல் வகாபு கான் மனுஷர் ரெண்டு பேர் வந்து பதினைஞ்சு நாளாய் தொரையவர்கள் பேட்டி நிமித்தியம் காத்திருந்தார்கள். அவர்களுடனே கந்தப்ப முதலி முன்னாளையிலே யிருந்தாப் போலே அவர்கள் ஒரு யிடத்திலிருக்கவும், எதிர் கொண்டு அதுக்கேத்த பேர் போய் வெகுமானத்தையும் யெடுப்பிச்சுக் கொண்டு அவர்களையும் கூட்டி வந்து தொரை பேட்டியும் பண்ணிவிச்சு, அவரவர் மரியாதைக்குத் தக்கதாயி பீரங்கிகளும் போடுவிச்சு முன்னாளையிலே யிருந்தாப் போலே அவர்கள் ஒரு யிடத்திலிருக்கவும், எதிர் கொண்டு அதுக்கேத்த பேர் போய் வெனுமானத்தையும் யெடுப்பிச்சுக் கொண்டு அவர்களையும் கூட்டி வந்து தொரை பேட்டியும் பண்ணிவிச்சு, அவரவர் மரியாதைக்குத் தக்கதாயி பீரங்கிகளும் போடுவிச்சு முன் நடந்தாப் போலே நடத்திவிக்கிறே னென்று அவர்களுக்குச் சொல்லி, நாலு சீரொப்பா அழைக்க வருகுற பேருக்குக் குடுக்க வேணுமென்று அ(வை)களை வாங்கி வைச்சுக் கொண்டிருக்கச் சொன்னானாம். அந்தப்படிக்கு அவர்களும் வாங்கி வைச்சுக் கொண்டிருந்ததாகவும், அதன் பேரிலே தொரையவர்கள் யென்ன சொன்னார்களோ, இத்த நாள் அப்துல் வகாபு கான் மனுஷ ரெண்டு பேரும் ரெண்டு சீரொப்பா அன்னூறு ரூபாய் பெறக்கத் தக்கதாக மனுஷர் கையிலே யெடுப்பிச்சுக் கொண்டு தொரை பேட்டி நிமித்தியம் யெட்டு மணிக்குத் தச்சர் வேலை செய்யுற யிடத்திலே வந்து பதினோரு மணி வரைக்கும் காத்திருந்த தாகவும், அதின் பேரிலே கோட்டைக்குள் அழைச்சுப் போனதாயும், அவர்கள் கொண்டு போயி முசியே லெறி கொவர்ணதோர் அவர்களுக்கு ஒரு சீரொப்பாவும் முசியே சுப்பீர் அவர்களுக்கு ஒரு சீரொப்பாவும் வைச்சுக் கண்டார்கள் யென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. பீரங்கி மத்தது போட்டதில்லை.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 23; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 14; குருவாரம்***

இத்தனாள் காலமே வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி : திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலே காவல் பண்ணி வைச்சிருந்த பிரான்சுக்காரருக்கும் வைத்தியம் பார்த்துக் கொண்டு யிருந்த பிரான்சுக்காரரிலே காரியஸ்தனா யிருக்கிற (கெட்டிக்காரராயிருக்கிறவன்) பதினைஞ்சு பேரு(டனே) பேசி, ஒருநாள் நில வாரம் (ராத்திரி) பண்ணி, அன்றைய தினம் ராத்திரி பிரான்சுக் காரரெல்லாரும் வெளியே பிறப்பட்டு இங்கிரேசுக்காரர் கொம்மாந்தாம் முதலான பேரையெல்லாம் வெட்டிப் போட்டு, கோட்டையைக் கட்டிக் கொள்ளுவோ மென்று யோசனை பண்ணி, யெல்லோரும் ஒரு மனதாய் கையெழுத்துப் போட்டு ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பினதாகவும், ஸ்ரீரங்கத்து கொம்மாந்தாம் அந்தக் காகிதத்தைப் புதுச்சேரிக்கு அனுப்பினதாகவும், அதுக்கு முசியே லெறி அவர்கள் ஸ்ரீரங்கத்திலே யிருக்கிற பேரையும், அன்றைய தினம் இராத்திரி சாக்கிறதையா யிருந்து முஸ்தீப்பாய் போகச் சொல்லி யெழுதி யனுப்பிவிச்சதாகவும், யிந்த சமாச்சாரம் பதினைஞ்சு நாளைக்கு முன்னே ஒரு பிரஞ்சுக்காரன் இங்கிரேசுக்காரக் கொம்மாந்தாமுடனே சொல்லி விட்டதாகவும், உடனே அவன் அந்த வைத்தியனையும் அந்த பிரஞ்சுக்காரர் பதினைஞ்சு பேரையும் கொண்டு வரச் சொல்லித் தூக்கிலே போட்டதாகவும் கேழ்க்கப்பட்டது.

இதல்லாமல், இங்கிரேசுக் கப்பல் அஞ்சு கப்பலும் ஒரு சுலுப்பும் கடற்கரை ரேவு சமீபத்திலே பிடிச்சு வந்தபடியினாலே, நம்முட சுலுப்பிலே யிருந்தும் பீரங்கி யெட்டு மணி முதல் கொண்டு பத்து மணி வரைக்கும் போட்டார்கள். தொரைகள் முதலான சகல சனங்களும் கடற்கரையிலே ராத்திரி பனியிரெண்டு மணிவரைக்கும் யிருந்தார்கள். அதின் பேரிலே இங்கிரேசுக் கப்பல் அப்பாலே வாங்கிப் போய்விட்டது.

யிதல்லாமல் முந்தாம் நாள் பறங்கிப் பேட்டை யிலிருந்து ஆனை (ஏற்றிய) கப்பல் வந்த தென்று சேதி வேலாயுதப் பிள்ளை யெழுதியனுப்பிவிச்சான். உடனே மறு காகிதம் நமக்கு வரவேண்டிய விராகனுக்கு விராகனாகிலும் பொன்னாகிலும் பிடிப்பிச்சுக் கொண்டு அவர்களைக் கூட்டிக் கொண்டு வரச் சொல்லி சேவுகன் வெங்கிடபதி நாயக்கனுக்கு உத்தாரம் குடுத்து அனுப்பிவிச்சோம்.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 26; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 17; ஆதிவாரம்***

இப்படி யிருக்கையிலே, ராத்திரி ஆறு மணிக்கு இமாம் சாயபு குமாஸ்தாவாகிய கறுப்பு துலுக்கன் வந்து சொன்ன சேதி, அப்துல் வகாபு

கான் யெழுதி அனுப்பினதிலே தன் கிட்ட ரெண்டாயிரம் குதிரையும் ரெண்டாயிரம் பாறும் யிருக்குது. தன் பேருக்கு ஆற்காட்டு சுபாவுக்கு பற்வானாவும் வந்திருக்குது. ஆகையாலே நீங்கள் தனக்கு சகாயமாய் அன்னூறு பேர் வெள்ளைக்காரரும் யிருபது பீரங்கியும் மருந்தும் குண்டும் அனுப்பிவிச்சால், தான் போயி ஆற்காடும் கட்டுகுறேன், வந்த பேருக்குச் சிலவுக்கு உள்ளதும் குடுக்குறேன். நீங்கள் நவாபு சந்தா சாயபுவுக்கு யெப்படி நடத்தினீர்களோ அந்தப் படிக்கித் தனக்கு நடத்தினால் போரும் என்று யிப்படி யெல்லாம் யெழுதி அனுப்பிவிச்சதாகவும், அதை பிராஞ்சு பண்ணி தொரை கையிலே குடுத்ததாயும், அதை தொரையும் முசே சுப்பீரும் பார்த்துக் கொண்டு யிதுகளுக் கெல்லாம் யோசனை பண்ணிச் சொல்லுகுறோம் யென்று சொன்னதாகவும் சொன்னான்.

அதல்லாமல் நானா வைக்கீல் துலுக்கன் யிவ்விடத்திலே வெகுமானம் குடுத்த ஆனைகளும் முகமல் சகலாத்து முதலான தினிசுகளும் சந்தா சாயபு குமாரன் வசத்திலே வந்திருக்கிறது. அவன் (அவற்றை) அனுப்பயில்லை யென்று பெலவந்த ராயன் கிட்ட ரசா சாயபு (வின்) குமாஸ்தாவாயிருக்கிற (வனை) பெலவந்த ராயன் அழைப்பிச்சுக் கோபம் பண்ணினதாகவும், அந்தச் சேதி ரசா சாயபுவுக்கு அவன் குமாஸ்தா யெழுதி அனுப்பினதாகவும், அந்த சேதி வந்த பிறகு ராசா சாயபுவும் அல்லி நக்கி சாயபுவும் நானா வைக்கீல் துலுக்கன் பேரிலே கோபம் பண்ணினார்கள் யென்றும், யிவர்களுக்கும் நானா வைக்கீலுக்கும் முறிஞ்சுதென்றும், ரசா சாயபு அல்லி நக்கி சாயபு, மனதிலே முசியே லாலி கப்பலிலே (வந்து) சீமா மூலம் சகலமும் தங்கள் வசத்திலே குடுத்து ரசா சாயபுவை ஆற்காட்டுக்கு (நவாபாக) வைக்கச் சொல்லி உத்திரம் வருகுறதாகவும், முசியே லாலி வந்த உடனே யிந்தப்படிக்கு ஆற்காட்டு சுபா தங்களுக்கு வருகுதென்றும் யிவர்களும் முசே திலார்ஷூம் யோசனை பண்ணிக் கொண்டு யிருக்கிறதாகவும் சொன்னான்.

***1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 28; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 19; செவ்வாய்கிழமை***

இத்தனாள் காலமே வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : நேத்து ராத்திரி வெள்ளைக்காரன் ஒருத்தன் தனக்கு யெசமானாகிய கொம்மாந்தானைக் குத்திக் கொன்று போட்டு, சம்பாவுலுக் கோவிலிலே வந்து பூந்து கொண்டதாகவும், சம்பாவுலுக் கோவிலார் அவனைப் பெட்டியிலே போட்டு மண்ணுங் கீழே புதைச்சு வைச்சார்களென்றும், யிந்தச் சேதி தொரையும் முசியே சுப்பீரும் கேட்டு நூறுபேர் சொலுதாதுகளை அனுப்பி விச்சதாகவும், சொலுதாதுகள் வந்து சம்பாவுலுக் கோவிலைச் சுத்திக் கொண்டு கோவிலெல்லாம் சோதிக்கும் யிடத்திலே புது மண்ணாடி யிருக்கிறதைக் கண்டு வெட்டி

சோதிக்கையில் பெட்டிக்குள்ளே அவனிருந்து அகப்பட்டானென்றும், அவனைப் பிடிச்சுக் கொண்டு வந்து அடிச்சு யிழுத்துக் கொண்டு போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல், அஞ்சு பேர் சொலுதாதுகளும் ஒரு ஒப்பிசியாலும் பிறப்பட்டு ராத்திரி பனிரெண்டு மணி வேளையிலே வந்து வீதிகளிலே கண்ட பேரைக் குத்துகுறதாகவும், உருவின கத்தியுடனே திரியுறார்களென்றும், இந்தச் சேதி துரையும் முசியே சுப்பீரும் கேட்டு பாளையக்கார நயினாரைக் கூட்டி வரச் சொல்லி அவனுடனே "யிவர்கள் ஆறு பேரையும் பிடிச்சுக் கொண்டு வரவேணும். அப்படிப் பிடிச்சுக் கொண்டு வந்தால் உனக்கு முப்பது விராகன் குடுக்குறோ, மென்று சொன்னதாகவும், அதுக்கு நயினார் அவர்கள், "உருவின கத்தியுடனே வருகுற பேர்களை வெறுமனே பிடிக்கக் கூடுமா? கய்யாடுவார்களே (கத்தியைப் பயன்படுத்துவார்களே)" யென்று சொன்னதாகவும், அதுக் கப்படி அவர்களை நடத்தினால் நீங்களும் அதுக்கொத்தபடி காயம் பண்ணிப் பிடிச்சு வாருங்கோளென்று சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல், யிங்கிரேசுக்காரர் கப்பல் யிந்த ரேவுலே தானே கிட்ட வருகுது, தூரம் போகிறது, யிந்த வேளை அடுக்கிலே திறிஞ்சுக் கொண்டிருக்குது.

### *1758 வருசம், மார்ச்சு மாசம், தேதி 30; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 21; குருவாரம்*

இத்தனாள் உதயத்திலே மீர் குலாமுசேன் வகையிரா மிறுத்தசா சாகீபு (Murtaza Sahib) யென்கிறவர் தொரை மெத்தை மேலே முன்னூறு ரூபாயிலே ஒரு சீரொப்பாவும் புராணபுரி பாகை நாலு, எண்ணூறு ரூபா பெறும், புராணபுரி சேலை ரெண்டு, அறுபது ரூபாய் பெரும், கல்க்கி ஒன்று யிது வெல்லாம் கொண்டு போய் தொரைக்குக் குடுத்து யென்னமோ பேசியிருந்து வந்தான். பேசின சேதி தெரியாது யென்று சொன்னார்கள். அதுக்கு நாம் யோசனை பண்ணினது, கந்தப்பனுக்கும் துரைக்கும் கையடைக் (கையூட்டு தந்து) கூட்டி சந்தா சாயபு மகனும் யிவனும் கூடி, தம்முடைய பேச்சு (ரசா சாயபுவை நவாபாக்கும் பேச்சு) தொரைக்குச் சொன்னார்கள் யென்று எண்ணிக் கொண்டு, அஞ்சு மணிக்குப் பிறப்பட்டு பெரிய தோட்டத்துக்குச் சவாரி போயி, யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

## ஏப்ரல் 1758

***1758 வருசம், அபிரேல் மாசம், தேதி 3; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 25; சோமவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி மையி (Mahe) தாண்டி முசியே லாலி அவர்களும் கப்பலும் வருகுதென்று துரைக்குச் சேதி வந்ததாகவும், ஆடு மாடுகள் சாமான்கள் வகையிராக்கள் முஸ்தீப்பு பண்ணுகுறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல், வண்ணாந்துறையிலே யிருக்குற ராசா ஒப்பிசியால்மார் அஞ்சாறு பேர் ஒருத்தருக்கொருத்தர் கத்தி உருவி குத்திக் கொண்டார்கள் என்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 4; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 26; செவ்வாய்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருந்து, சாயங்காலம் சாரிப் போய் வீட்டுக்கு வந்தவிடத்திலே கேழ்வியான சேதி.

முசியே லாலி வருகுற நிமித்தியம் மாடு ஆடு கோழி முதலான சாமான்கள் வகையிரா முஸ்தீப்பு பண்ணுகுறதாகவும், முசே லெறி சாமான்கள் (முதலில்) முசியே துப்பிளேயிக்சு யிருந்த வீட்டுக்கு வருகுறதென்றும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் தெட்சின ராச்சியம் அதிகாரம் பண்ணின தளவாய் அழகப்ப முதலி[1] சென்னப்பட்டணம் போறதாகவும், முசியே லெறி அவர்கள் பசுபோடுத்து (Pass-Port) குடுத்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

நேத்து ராத்திரி ராசா வகை ஒப்பிசியால் ஒருத்தன் சொன்ன சேதி : முசே லாலியுடனே ஆரும் உத்தாரம் சொல்லமாட்டார்கள். மெத்த யுத்தி புத்தி யுண்டானவர். நிசஸ்தாளுக்கு நன்றாய் நடத்துவார். சத்தே தப்பிதங் கண்டால் நன்றாய் சிட்சிப்பார். அவரிங்கே கோடி கணக்கிலே கிடக்(கிறதை) வாரி ராசாவுக்கும் அனுப்பிவிச்சு, தாமும் சம்பாதிக்கலாம் என்று வருகுறார். யிதல்லாமல், கணக்கு(களில்) திருட்டுக் கணக்கெல்லாம் யெடுக்கத் தக்கவர் ஒருத்த(ரும் கூட) வருகுறார். யிதல்லாமல், கள்ளக் கணக்குப் புலம் அறிஞ்சவர் குலுவேத்து வருகுறார். பார்க்கப் போறீர்கள். இங்கே யிருக்கிற பேர் அவருக்கு மோசபா (பொய்

---

[1] இவர் மதுரை, திருநெல்வேலி சீமைகளை ஆங்கிலேயர் சார்பில் அமுல் பண்ணி வந்த தீத்தாரப்ப முதலியின் மருமகன்.

வார்த்தை சொல்லி) குடுத்து சுகப்படுகுறது மெத்தக் கடின மென்று சொன்னான்.

*1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 5; ஈசுவர வருசம், பங்குனி மாசம், தேதி 27; புதவாரம்*

இத்தனாள் காலமே வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருக்கையிலே, கேழ்வியான சேதி : கோன்சேல் கூடி யேலம் போடுகுற சம்மதிகள் பேசினதாகவும், பின்னையும் பேசிக்கொண்டிருந்தார் களென்றும் அப்துல் வகாபு கான் அனுப்பிவிச்ச மனுஷருக்குக் கப்பல் வந்தாலல்லாமல் ஒரு சேதியும் நடவாதென்று சொல்லி, தினமானம் அன்பது பேருக்கு படி குடுத்து வருகுறதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது. சாயங்காலம் கோட்டை வெளியே சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

*1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 12; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 3; புதவாரம்*

இத்தனாள் ராத்திரி எட்டு மணிக்கு கேழ்வியான சேதி முந்தாம் நாள் ராத்திரி சூரத்து சோடா வந்ததிலே சீமை கடுதாசி வந்ததாகவும், அதிலே யெழுதி வந்த சேதி சீமையிலே பிறான்சுக்காரருடைய பாளையம் இங்கிரேசுத் தேராக் கோட்டைக்கு பத்து நாழிகை வழியிலே போயி யிறங்கி யிருக்கிறார்களென்று, யிங்கிரேசு ராச்சியத்திலே மூணத்தோரு ராச்சியம் பிறான்சுக்காரர் கட்டிக் கொண்டதாகவும், இங்கிரேசுக்காரருக்கு மத்தலத்தாய் வந்து சண்டை குடுத்த புறுசு ராசா (Prussian King) பின்வாங்கி நிறுவாகமில்லாமல் போய் விட்டதாகவும், அதின் பேரிலே பிறுது கால் ராசா ஸ்தாபதி (Ambassader of the king of Portugal) வந்து ஈசுவர வருசம் ஆவணி மாசத்தையிலே சமாதானம் பேசி, நாளது சித்திரை மாசம் வரைக்கும் ஆரும் கத்தி யெடுத்துச் சண்டை பண்ணத் தேவையில்லை, யிதுக்குள்ளாக சமாதானமானால் நல்லது, அல்லவென்றும் அப்பால் சண்டை பண்ணுகுறதென்று சமாதானம் பண்ணினதாகவும், சீமையிலிருந்து ஒரு வதனிப் பத்துக்கப்பல் ஒரு வதனிப் பத்துக் கப்பல் (squadron), ஒரு வதனி பதினேழு கப்பல் யிந்தப்படிக்கு மூன்று வதனியாயி முப்பத் தேழு கப்பல் பிறப்பட்டு வருகுதென்றும், யிந்தக் கப்பலுக் கெல்லாம் முசியே தாஷே (M. d' Ache) யென்கிறவன் கும்மாந்தாரிடுகுறவர் யென்றும் முசியே லாலியும் அதிலே வருகுறாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 16; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 7; ஆதிவாரம்*

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே நேசனூர்க் காரியம் நிமித்தியம் அண்ணாசாமி மருமகன் வந்தார். அவரையும் கந்தப் பிள்ளை கிட்ட யிருந்து வந்த ராகுவையும் அங்கே நடந்த சேதி ஒன்றுக்கொண்டு பேசிவிச்சு, நாம் சொல்ல வேண்டிய உத்தாரங்களும் சொல்லி அண்ணாசாமி மனுஷர் நாலு பேருக்கும் படிக்கு மூன்று பணம் குடுக்கச் சொல்லிச் சொன்னோம். சாயங்காலம் சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

### *1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 18; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 9;*

அதன் பேரிலே கேழ்வியான சேதி : நேத்து திங்கள் கிழமை மத்தியானத்துக்கு மேல் காரைக்காலிலே யிருந்து கடுதாசி வந்ததாகவும், அதிலே காரைக்காலுக்கு ஒரு சுலுப்பு வந்துதென்றும், அந்த சுலுப்பிலே இஸ்காதுரு (squadroú) வருகுற சேதி வந்து காரைக்காலிலே கடுதாசிகளைக் குடுத்துப் போட்டு, இங்கிரேசுக் கப்பல் வளைய வளைய திரியுறபடியினாலே உடனே போய் விட்டு தென்றும், அதிலே வந்த கடுதாசிகளும் அந்தக் கடுதாசியிலே எழுதிவந்த சேதிகள் ஒன்றும் வெளியே பிறக்கயில்லை யென்றும் (தெரியவந்தது).

முசே லெறி அவர்களுக்கும் செனறால் முசியே சுப்பீர் அவர்களும் யின்று உதயத்திலே தனிச்சு ரெண்டு பேரும் பேசிக் கொண்டிருந்த தாகவும், அதன் பிறகு யித்த நாள் சாயங்காலம் துரையும் செனராலும் ரெண்டு பேரும் ஆறு குதிரை கட்டின வண்டி மேலே யேறிக் கொண்டு வில்லியநெல்லூர் வரைக்கும் சவாரி போனார்கள் யென்றும், அங்கே போனவிடத்திலே கோவில் விசாரிப்பு கணபதி குருக்கள் மாத்திரம் வந்து கோவில் வாசலிலே கண்டு பழங்கள் கொண்டு வருகிறதுக்கு முன்னுதாய் அப்பால் போய் விட்டார்களென்றும், அரும்பாத்தப் பிள்ளைச் சாவடியிலே வினாயகப் பிள்ளை யிருந்ததாகவும், அவன் (அவர்கள்) போறபோதும் திரும்பி வருகுற போதும் காண்பிச்சுக் கொள்ளாமல் ஒளிஞ்சு யிருந்தா னென்றும் கேழ்க்கப்பட்டுது.

அதன் பிறகு ராத்திரி ராசா வகையிரா ஒப்பிசியால்மார் மத்தியானம் தீனி வேளையிலே (வந்து), முசியே சுப்பீர் அவர்கள் முன்னே (கேட்ட) சேதி (ப்படி) இசுக்காதுருகள் (துருசாக) (வேகமாய் வருகிறது). ஆனாலும் யிந்த சித்திரை மாசம் பிசல் அடிக்குற மாச மானதினாலே யிந்த மாசம் வராது. வையாசி மாசம் 4, 5 தேதிக்குள்ளே வருமென்று சொல்லிக்

கொண்டதாகவும் சேதி சொன்னார்கள். யிதுக்கு முன்னே கேழ்க்கப்பட்டுதுக்கும் யிவர்கள் சொன்னதுக்கும் சரியென்று யெண்ணிக் கொண்டோம். யிது சேதி.

### *1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 20; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 11; குருவாரம்*

இத்தனாள் காலமே வீட்டிலே தானே யிருந்து சாயங்காலம் நாலரை மணிக்கு நம்முடைய அக்கிரகாரம் போய்ப் பார்த்து வருவோமென்று வண்டி மேலே பிறப்பட்டுப் போகையிலே, வண்ணாந்துறையிலே பெரிய பாறுவைச்சு யெல்லாரும் அங்கே யிருந்தபடியினாலே அவர்க ளெல்லா மிருக்க நாம் அப்பாலே போறது யுக்தமல்ல வென்று யோசிச்சு, வண்டியை விட்டு யிறங்கினவுடனே அவர்களெல்லாம் வந்து ஆசாரம் பண்ணினார்கள். நாமும் அவர்களுக்கு ஆசாரம் பண்ணிப் போட்டுப் பேசிக் கொண்டிருக்கையிலே, கப்பல் சேதி அறிய வேணுமென்று சொன்னோம். அதுக்கு உடனே செனரால் முசியே சுப்பீர் சக்கிறத்தார், "யிசுக்காதுரு சீமைக்குப் போகயில்லை. மயேயிக்கு இருபத்து ரெண்டு கப்பல் வந்ததுக்குச் சேதி வந்தது. காரைக்காலுக்கும் சுலுப்பு வந்தது. முசியே லாலி இங்கிலீசுக்காரர் ரேவு தலைச்சேரி யென்றும் பின்னை ஒரு ரேவும் ரெண்டு யிருக்கு தாம். அந்த ரெண்டையும் வாங்கிக் கொண்டு யிவ்விடத்துக்கு வருகுறார்கள். அந்தப்படிக்கு நிசமாய் சேதி வந்துது. ஆகையாலே அந்த ரெண்டு ரேவையும் வாங்குறதுக்கு மூணு நாலு நாள் செல்லும். அதின் பேரிலே யிவ்விடத்துக்கு வருகுறதுக்குப் பதினைஞ்சு நாள் செல்லும். ஆகையாலே யின்னம் பத்து நாளையிலே வருவார்க," ளென்று சொன்னான். அதன் பேரிலே நாமும் பேசியிருந்து யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். புத்துப்பேட்டு திருநாளுக்குப் போன அண்ணாசாமி அய்யாசாமி அப்பாவு யெல்லாரும் யேழு மணிக்கி வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

### *1758 வருசம், அப்றேல் மாசம், தேதி 25; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 16; செவ்வாய்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை வீட்டுக்குப் போய் நேத்து சண்டை பண்ணின வெள்ளைக்காரன் யெழுதின (புகாரின்) கொப்பி யெல்லாம் அவருக்குக் காண்பிச்சு, அவன் வந்து நம்முடனே சண்டை பண்ணின சேதி(யைச் சொன்னதையும்) சொன்னோம். அதன் பேரிலே சின்ன துரை தம்முட கணக்குப் பிள்ளையை அழைப்பிச்சு, "நீ அவனை யெடுத்து (தூண்டி) விட்டுக் கலகம் பண்ணி விக்குறாய்," யென்று கோபம் பண்ணிக் கொண்டிருக்கையிலே சண்டைப் பேட்ட வெள்ளைக்காரனும் வந்தான். அவனையும் கோபம் பண்ணி, தம்முடைய

கையிலே யிருந்த இருபது ரூபாய் குடுத்து அவனைப் போகச் சொல்லி விட்டார். அதன் பேரிலே நாமும் அவரும் பேசிக் கொண்டிருக்கையிலே சின்ன துரை சொன்ன சேதி, "முசியே லெறி, முசியே தெவோ பேச்சைக் கேட்டுக் கொண்டு மெத்த சின்ன வேலை செய்துப் போட்டார். யெங்களுடனே யோசனை பண்ணின வருமல்ல. கும்பினி சொலுதாதுகள் ஒப்பிசியாலுமார்கள், ராசா வகையார் வந்திருக்கிறதினாலே அவர்கள் உத்தரவு யில்லாமல் ஆயுதமெடுத்துச் செய்யக் கூடாதென்று, செனரால் (தம்பூறு) கோட்டைக்குள்ளே தானே (தனக்கு அடிக்கச்) செய்யாமல், வெளியிலே போய்ப் பரதேசி பட்சமாய் செய்தார் (அடிக்கச் செய்கிறார்). யிது எங்களுக்குள்ளே மெத்த யிளப்பமான காரியம். பிராணனை விட்டாலும் விடலாம், அத்தனை யிளப்ப மிது. யிதுக்கு முன்னே சகல ரேவுகளிலேயும் யிருக்குற கோவர்ணதோர்களுக் கெல்லாம் யிந்த கபுறு போய் விடும் அவர்களெல்லாம் மெத்த யெகத்தாளி பண்ணுவார்கள்.

யிவர் வெறுமனே போனவரு மல்ல. முசியே சுப்பீர் செனராலைத் தம்முட பேர் பண்டிகைக்கு அவசியம் வர வேணுமென்று அழைச்சுப் போட்டு, அவர் அந்தப் படிக்கிப் பிறப்பட்டு வந்தார். வந்தவரைத் தீனிக்கு அழைச்சார். அதுக்கு முசியே சுப்பீர் சொன்னது, தீனி நம்முடனே நீர் மாத்திரம் யிருந்து தின்னலாம். மத்தப்படி ஆரும் கூட யிருக்கக்கூடாது. அதுனாலே யுமக்கு யெல்லாரும் கூட யிருக்கையில்லையே யென்று மெத்த துக்க மாயிருக்கும். பண்டிகையிலே யுமக்கு ஏன் துக்கம் வரவேணும்? சந்தோஷமாயிரு," மென்று சொல்லிப் போட்டு உத்திரக்ஷணம் (உடனே) யெழுந்திருந்து போயி விட்டார். யிதெல்லாம் யெங்களுக்குள்ளே மெத்த அவமானம். முசியே லெறியினுடைய கபடுக்கும் குடிலத்துக்கும் தெய்வம் அவருக்கு யிந்த அவமானத்தைக் குடுத்து பாதாளத்திலே தள்ளிவிட்டுது," யென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது, "நமக்கு உங்கள் அனியாயம் (வழக்கம்) உங்களுக்குத் தெரிஞ்சாப் போலே தெரியுமா?" வென்று சொல்லிப் போட்டு, வீட்டுக்கு வந்து யிருபது ரூபாயும் குடுத்து சின்னதுரை அண்டைக்கு அனுப்பிவிட்டோம்.

அதன் பேரிலே சாயங்காலம் வண்டி மேலே சாரிப் போனவிடத்திலே, பிசுப்பு பாதிரியார் தோட்டத்திலே யிருந்தார். அவரைக் கண்டு அவரண்டைக்குப் போனோம். அவர் யெதிர் கொண்டு வந்து அழைச்சுப் போய் வைச்சுக் கொண்டு, அவர் சொன்ன சேதி : "முசியே லெறிக்கு மெத்த அவமானம் வந்து போச்சுது. முசியே தெவோ கோட்டைக்குள்ளே வந்தால் பிடிச்சுக் கிடங்குலே போடச் சொல்லி முசியே சுப்பீர் திட்டம் பண்ணி யிருக்குறார். அதினாலே பண்டிகை கோட்டையிலே பண்ணினால் முசியே தெவோவும் அவர் பெண்டாட்டியும்

கோட்டைக்குள்ளே வரக்கூடாதே யென்று யிவர் தோட்டத்திலே வந்து பண்ணினார். கோவர்ணதோர் யென்கிற மகிமை போச்சுது. யிந்த முசியே லெறி முன்னாலே முசியே சுப்பீருடனே தமிழனிலே உம்மையும், பிறிதுகிசுக் காரனிலே நம்மையும், பிரான்சுக்காரனிலே முசே புலோவையும் யிவர்கள் மூன்று பேரும் மெத்த பொல்லாதவர்களென்றும் சொல்லிக் கொண்டு வந்தார். அவர் சொன்ன குடிலம் அவரைத் தானே சுத்தித்து. யிப்போ முசியே சுப்பீருக்கு நம்முட பேரிலே யெல்லாம் பிரீதியாச்சுது. அவர் பேரிலே அப்பிரீதியும் ஆச்சுது. இனிமேல் முசியே லாலி வந்தால் ஆரும் அவரவர் சேதி முசியே லாலியுடனே சொல்லத் தேவையில்லை. முசியே சுப்பீர் சகலமான சேதியும் நன்றாய் விசாரிச்சு யெழுதிக் கொண்டிருக்கிறார். ஆகையாலே முசியே லாலி வந்தவுடனே முசியே சுப்பீர் தானே சகலமும் சொல்லப் போறார். முசே லெறி துபாசி, முசியே தெவோ துபாசி, பின்னையும் ரெண்டு பேர் ஆக நாலு பேரையும் முசியே லாலி வந்தவுடனே கோட்டை வெளியே நாலு பிறத்திலும் தூக்கிலே போடுவார்கள். வெள்ளைக்காரரிலேயும் நாலு பேரை யிங்கே போடுவாரோ, சீமைக்கு அனுப்புவாரோ தெரியா," தென்று சொன்னார். அதுக்கு, ஆரார் வீதி யெப்படி யிருக்குதோ, அப்படி நடக்கு மென்று சொல்லிப் போட்டு யெட்டு மணிக்கு வீட்டுக்கு வந்தவுடனே கேழ்வியான சேதி, வெள்ளைக்காரர் ஆரும் யெட்டு மணிக்கு மேல் ராத்திரி வெளியே பிறப்படத் தேவையில்லை. பிறப்பட்டால் அடிச்சு அபராதம் அறுபது ரூபாயும் வாங்கிக் கிடங்கிலேயும் போடுவோமென்று முசியே சுப்பீர் தமுக்குப் போடச் சொன்னதாகக் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 26; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 17; புதவாரம்***

இதல்லாமல் மறக்கி கொம்பிளாமும் (Marquis de Conflans) முசியே மொர்சேனும் (M. Morcain) சிறிது சிப்பாயிகளும் பயணம் பிறப்பட்டதாகவும் அவர்கள் யிங்கிரேசுக்காரர் கையிலே ரஷதாரி தஸ்ரக்கு (Pass-port) வாங்கிக் கொண்டு பயணம் போறார்களென்றும் யிவர்கள் முன்னுதாய் மச்சிலிபந்தருக்குப் போயி, அப்பால் முசியே புசி அண்டைக்குப் போறதாகவும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல், யேழு பேர் சூர் லூயித்தனாந்துமாரும் (Sous-Lieutenants) யேழு பேர் லூயித்தனாந்து மாரும், யேழு பேர் ஒப்பிசியால்மாரும் முன்னூத் தன்பது சொலுதாதுகளும் ராசா மனுஷர் பயணம் பிறப்பட்டதாகவும், இவர்கள் ஸ்ரீரங்கம், காரைக்கால், சிதம்பரம், திருவீதி, விருத்தாசலம், செஞ்சி, திருக்கோவிலூர், திருவண்ணாமலை, சேத்துப்பேட்டு (பட்டு), வந்தவாசி, உத்தரமநல்லூர் முதலான யிடங்களிலே யெங்கெங்கே கும்பினி மனுஷர் யிருக்குறார்களோ

அங்கே யெல்லாம் போயி கும்பினி மனுஷரை போகச் சொல்லிவிட்டு, (தாம்) யிருக்கிறதாகத் திட்டம் பண்ணி அனுப்பிவிச்சார்களென்றும் அந்தப்படிப் போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் கேழ்வியான சேதி : முசியே சுப்பீர் செனரால் வந்த நாள் முதலாக முசியே லெறி கோவர்ணதோருடனே நாங்கள் வந்து வெறுமனே யிருக்குறோமே, யெங்களுக்கு சரஞ்சாமி பண்ணிக் குடும், நாம் அங்கங்கே செனங்களை அனுப்பிவிச்சு ராச்சியம் கட்டுகுறோமென்று கேட்டபோதெல்லாம், முசே லெறி அவர்களிருந்து, "பணம் கும்பினியிலே யில்லையே? நாங்க ளெங்கே யிருந்து பணம் குடுப்பே," னென்று சொல்லிக் கொண்டு வந்ததாகவும், முசியே சுப்பீர் அப்போதைக் கப்போது தாம் கேட்டதுக்கும் முசே லெறி அவர்கள் சொன்னதுக்கும் அப்போதைக் கப்போது யெழுதி வைச்சுக் கொண்டு வந்தாரென்றும், யிப்போது முன்னிந்த மாசம் பனிரெண்டாந் தேதி முசியே சுப்பீர் முசியே லெறியுடனே "ஒரு காரியம் நடத்த வேண்டியிருக்குது, அது பதினாயிரம் ரூபாய் வேணும் வேணுமென்று கேட்டதாகவும், அதுக்கு முசியே லெறி அவர்கள் பணம் யில்லையே யென்று சொன்னதாகவும், அதன் பேரிலே நாலாம் நாள் பதினாலாந் தேதி முசியே சுப்பீர் தம்முடைய காம்பிராவிலே பணம் கேட்டால் யில்லை யென்குறார், (ஆனால்) யிவர் கையில் பணம் யிங்கே யிருபது லட்சம் சீமையிருக்குது, வடக்கே முப்பது லட்சம் சீமை யிருக்குது, யிதல்லாமல் வர்த்தகர் முதலான பேரெல்லாம் யிவர் கைக்குள்ளே யிருக்கிறபோது யிவர் மூன்று வருஷம் வங்காளத்திலே துரைத்தனம் பண்ணினார், யிப்போ யிங்கே வந்து மூன்று வருஷமாய்த் தொரைத்தனம் பண்ணுகுறார், யிப்படி யெல்லாம் யிருக்க பதினாயிரம் ரூபாய் கேட்டதுக்கு யில்லை யென்றார், நல்ல தாச்சுது, யிப்போது நான் ஒரு காகிதத்திலே மெத்த அவசர காரியம் யென்று பதினாயிரம் ரூபாய் கேட்டதுக்கு, யென் கையிலே ரூபாயில்லை யென்று சொன்னேனென்று யெபதிக் கொண்டு போய் முசியே லெறியைக் கையெழுத்துப் போடச் சொல்லிக் கேட்டு வாங்கறேன்" யென்று பேசியிருந்து, பதினைஞ்சாந் தேதி அந்தப் படிக்கு ஒரு காகிதத்திலே யெழுதிக் கொண்டு போய்க் கையெழுத்துப் போடச் சொல்லிக் கேட்டதாகவும், அதுக்கு முசியே லெறி அவர்கள் ரூபாய் சம்பாதிச்சுத் தருகுறேன் என்று கையெழுத்துப் போடாமல் பணம் தருகுறேன் யென்று சொன்னதாகவும் யிப்படி யெல்லாம் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 28; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 19; சுக்குறவாரம்***

இத்தனாள் சுக்குறவாரம், முசியே லாலி அவர்கள் சீமையிலிருந்து யிவ்விடத்துக்கு வந்து யிறங்கின சேதி :

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கப்பல் காணுதென்று கபுறு வந்தது. அதை விசாரிக்குமிடத்தில் இங்கிரேசுககாரர் கப்பல் யென்று சொல்லிக் கொண்டார்கள். இப்படி யிருக்கையிலே பனிரெண்டு மணி அடிச்ச பிறகு கப்பல் ரேவுக்கு அடுத்து வந்தது. உடனே கரைமேலே யிருந்து யிங்கே நிற்குற கப்பலின் பேரிலே யிருந்து பீரங்கி சுட்டார்கள். குண்டு போட்டு பதினோரு வேட்டு சுட்டார்கள். அந்தக் குண்டுகளை யெல்லாம் போய் முசியே லாலி அவர்கள் குண்டு வந்தவுடன் பதினோரு வேட்டு சுட்டதில் அதிலொன்று முசியே லாலி வந்த கப்பலுக்கு அடுக்கப் பக்கத்திலே போய் விழுந்து, ஒரு குண்டு போய்க் கப்பலிலே விழுந்த தாகவும், உடனே முசியே லாலி அவர்கள் குண்டு போடச் சொல்லி ஒரு பீரங்கி மாத்திரம் சுடச் சொல்லி முன் போட்டிருந்த கொடியை வாங்கி வேறே சிவப்பாயிருக்கிற கொடியை போட்டார்கள். அதின் பேரிலே கோட்டையிலே கறுப்புக் கொடி போட்டார்கள். அதன் பிறகு அவர் கப்பலிலே போட்டிருந்த சிகப்புக் கொடியை வாங்கிப் போட்டு வெள்ளைக்கொடி போட்டு, சதிரக் கொடியும் போட்டார்கள். அதன் பேரிலே யிவர்களும் வெள்ளைக்கொடி போட்டுக் கட்டுமரம் அனுப்பினார்கள். அந்த கட்டுமரக்காரன் கையிலே கப்பலிலே யிருந்து கடுதாசி அனுப்பினார். அந்தக் கடுதாசி கட்டுமரக்காரன் கொண்டு வந்து முசியே சுப்பீர் செனரால் கையிலே குடுத்தான். அவர் காகிதம் கண்டவுடனே தீனியைவிட்டு யெழுந்திருந்து மெத்தவும் வேகமாய் ரேவுலே போய்ப் படகிலே யேறி கப்பலண்டைக்குப் போனார். முசியே லெறி கடலோரத்திலே போய் நின்றார். முசியே சுப்பீர் கப்பல் கிட்ட வந்த உடனே முசே லாலி அவர்கள் படகிலே யெறங்கி வந்தார்கள். அவர் சீக்கிரமாய் வருகுறதைக் கண்டு முசியே லெறியும் படகு மேலே யேறி பாதி தூரம் போய்க் காண்பிச்சுக் கொண்டு கூடவே வந்து, யெல்லாரும் மெத்தை மேலே வந்தார்கள். வரிசை வைக்கவும் வாழை முதலியவைகள் நடவும் தண்ணீர் தெளிக்கவும் கோரை போடவும் ஒன்றுக்கும் சாவகாசமில்லை. பீரங்கி மாத்திரம் யிருபத்தோரு வேட்டு சுட்டார்கள். அவர் வந்து (கரை) யிறங்கி (யதும்) 'தன் பிறகே வருகுற கப்ப(ல்களை) லெல்லாம் தேவனாம்பட்டணத்துப் மேலே போய் யிறங்கி சண்டை குடுக்கச் சொல்லி ஒடுதி குடுத்துப் போட்டு வந்தோம். யிப்போது யிங்கே யிருக்குற வெள்ளைக்காரர், ஒப்பிசியால்மார்கள், சொலுதாதுகள் அலுமாஞ்கிக்காறர், குதிரைக்காரர், பாறுக்காரர் சகலரும் யிந்த ட்சணம் கரைவழியே பிறப்பட்டு, ராத்திரியே தேவனாம்பட்டணத்து மேலே சண்டைக்குப் போகச் சொல்லி ஒடுதி குடுத்து நாலாயிரம் காமாட்டிகளும் (மண் எடுப்போர்), மாடுகளும், யிந்த ட்சணம் வரவேணும். மருந்து குண்டு சாமான்கள் பீரங்கிகள் தீனிகள் சகலமும் யிப்போ தானே போகவேணு மென்றும், முசியே சுப்பீர் செனராலையும் போகச் சொல்லிக் கொண்டே மெத்தை மேலே

வந்தவுடனே, சின்ன துரை முசியே பெடுத்தல்மீ போய்க் காண்பிச்சுக் கொண்டார். உடனே முசியே லெறி நம்மை அழைச்சு பேட்டி பண்ணிவிச்சார். நாமும் யெலுமிச்சம் பழம் குடுத்துக் காண்பிச்சுக் கொண்டவுடனே முசியே லெறியிருந்து கும்பினி குடுத்தியேர் ரங்கப்பனென்று சொன்னார். முசியே லாலி அவர்கள் அதையும் கேட்டு நமக்கு ஆசாரம் பண்ணினார். அதன் பிறகு கும்பினீர் வர்த்தகர் கண்டார்கள். யிப்படி யிருக்கச்சே வினாயகப் பிள்ளை வந்து நமக்கு மறைவாய் முன்னுதாக நின்று கொண்டான். அப்போ நாம் அவன் பேரிலே கோபம் பண்ணினோம். முசியே லாலியும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். வினாயகனும் அப்பாலே போய் நானும் காண்பிச்சுக் கொண்டே னென்று சொன்னான். அதன் பேரிலே கோட்டை வாசலுகளுக் கெல்லாம் ராசா மனுஷரை வைத்து, ஆரும் வெளியே போகாதபடிக்கு ஒடுதி குடுத்து தாம் காம்பிராவிலே போய் யேழு பேர் யெழுதுகுற பேரை வைச்சுக் கொண்டு, கப்பல் பிறகே வந்து தேவனாம்பட்டணத்துக்கு நேரே யிறங்குறதுகளுக் கெல்லாம் நடக்க வேண்டிய சங்கதிகளுக்குக் காகிதங்கள் யெழுதிவிச்சுக் கொண்டு, யிங்கே வந்த கப்பல் ரெண்டு, யிதிலே முசியே குலுவேத்தும் முசே புலோ வும் முசியே தெசோசும் நாம் அறிஞ்ச பேரிலே கூட வந்தார்கள். அதன் பேரிலே நாம் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

முசியே லெறி வினாயக(னையும்) சவரிராயப் பிள்ளையையும் அழைப்பிச்சு, மாடுகள் குதிரைகள் ஆள்கள் சகலமும் செமை பண்ணி பயணத்துக்குச் சீக்கிரம் சரஞ்சாம் பண்ணச் சொல்லி சுறுக்குப் பண்ணினார். வினாயகன் அங்கங்கே மனுஷரை அனுப்பிவிச்சு மனுஷர்கள், மாடுகள், குதிரைகள் பட்டணத்திலே பிடிக்கச் சொல்லி பிடிச்சார்கள். நம்மையும் முசே லாலி அவர்களும் முசியே லெறி அவர்களும் குதிரை கேழ்க்கச் சொன்னாரென்றும் வெள்ளித் தடிக்காரன் வந்து கேட்டான். நாமும் குடுக்கச் சொன்னோம். யிது சேதி.

***1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 29; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 20; சனிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதிகள் : உதிச்ச ஒன்பது மணிக்கு முசியே லெறி அவர்களும் முசியே பெடுத்தல்மீயும் குமுசேல்காரரும் முசே லாலி அவர்கள் திட்டம் பண்ணினது : முசியே லாலி அவர்கள் கப்பலிலே யிருந்து வருகுறதுகளை யெல்லாம் யிறக்கிவிக்குற காரிய(ங்களுக்கு) முசே லெறி அவர்க(ளை) நேமிச்சு, யிதுக ளெல்லாம் கூட யிருந்து காரியங்களைப் பார்க்குறது முசியே பெடுத்தல்மீயையும் யிந்தப்படிக்கு நேமிச்சதாகவும், அந்தப்படிக்கு முசே லெறி அவர்களும் முசியே பெடுத்தல்மீயும் கடல்கரை சாவடியிலே போ யிருந்து கொண்டு

கப்பலுக்கு கிளாசுகள் (Cabbage), கீரைத்தண்டு, முள்ளங்கி, கோழி, வாத்து, அரிசி, தண்ணீர், ரொட்டி முதலான சாமான்கள் யேத்தி விக்குறதும், படகுகள் அனுப்புகுறதும் யிந்த வேலையிலே யிருந்தாரென்றும், சொலுதாதுகள், குதிரைக்காரர், பாறுக்காரர், சண்டைச் சிலவுகள் சகலத்துக்குஞ் சொல்லி, சம்பளம் குடுக்குறது, சிலவு பண்ணுகுறது, யிதுக ளெல்லாம் முடிப்பு கையிலே வைச்சுக் கொண்டு குடுக்குற உத்தியோம் முசியே குலுவேத்துது யென்றும், நாளை மாயு மாசம் முதல் முசியே பெடுத்தல்மீக்குத் தேவையில்லை, முசியே குலுவேத்து யிதுகளுக்கெல்லாம் அதிகாரி யென்றும் கேழ்க்கப்பட்டுது.

திருப்பாதிரிப்புலியூர் மத்ததெல்லாம் நேத்து ராத்திரியே கொள்ளை போச்சென்றும், யின்றைக்குப் பத்து மணிக் கெல்லாம் கூடலூர் கைவசமாயி, கொள்ளையும் யிட்டுத் தீயும் போட்டார்களென்றும் சொன்ன மாத்திரமே அல்லாமல், நடந்ததில்லை யென்றும், மஞ்சக்குப்பம் பிடிச்சு மோர்சா போடுகுறார் களென்றும், தேவனாம்பட்டணம் கோட்டை மேலே குண்டு போயி விழுகு தென்றும், யிங்கே யிருந்தும் மருந்துகள், குண்டுகள், மோர்சாவுக்குத் தழைக்கட்டு, உரைகள் (மணல் மூட்டைகள்) தீனி சாமான்கள் அனுப்புகுறது வெகுதுரு (வேகமாய் நடக்கிறது) சென்றும் வினாயகன் பேரிலே முசியே சுப்பீர் அடிக்கடி கோபம் பண்ணுகுறதும் அடிக்குறதும் யிப்படி யிருக்குதென்றும், மாடுகள், குதிரைகள், கூலி மனுஷர்கள் பிடிக்குறதும் அனுப்புகுறதும் வெகு துருசென்றும், கொத்தளங்களிலே யிருந்த பேரிலே ஓடிப்போன பேர் போக, பத்து பேர் யிங்கிரேசுக்காரரைப் பிடிச்சுக் கொண்டு வந்தார்களென்றும், யேழெட்டு பேர் காயக்காரர்கள் வந்தார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் கூடலூருக்குப் பெலன் வரத்தக்கதாகச் சென்னப்பட்டணத்துக் கப்பல் ஒன்பது மூன்று மணிக்கு வந்துது. அதைக் கண்டவுடனே கூடலூரிலே சண்டை போடுகிற கப்பல் ஒன்பது கப்பலும் இங்கிரேசுக் கப்பலின் பேரிலே போயி பீரங்கிகள் போட்டார்கள், அவர்கள் பீரங்கி போட, யிவர்கள் போட, யிந்த அடியிலே சண்டை குடுத்துக் கொண்டு வடக்கே வருகுறதைக் கண்டு, முசே லாலி அவர்களுடனே வந்த கப்பல் ரெண்டும் உடனே பாய்க் கட்டிக் கீழே சேந்து (பாய் விரித்து) போய் இங்கிலீசுக் கப்பலை மறிச்சு சண்டை குடுத்துக் கொண்டு, அவர்களும் இவர்களும் வெகு தூரம் ஒசந்து போனார்கள். சாயங்காலம் வரைக்கும் குண்டு சத்தம் கேழ்க்கப்பட்டுது. யிப்பால் கேழ்க்கயில்லை. ஒருத்தர் சொன்னபடி ஒருத்தர் சொல்ல யில்லை. நிமிஷ நிமிஷத்துக்கு விந்தை விந்தையாயி பிறக்குது.

முசியே லாலி அவர்கள் சீமைவிட்டுப் போன மாயி மாசம் பிறப்பட்டு தெசம்பர் மாசம் மசுக்கரைக்கு வந்து நாற்பது நாளிருந்து, செனேரி

மாசம் 26 தேதி மகக்கரையை விட்டுப் பிறப்பட்டு, அபிறேல் மாசம் 27 தேதிக்கு சித்திரை மாசம் 8 தேதி மத்தியானம் காரைக்கால் பிடிச்சு, கப்பல் கப்பித்தான் தானே யிறங்கி முசியே புருஷேக்கு சொஸ்தமில்லாததினாலே யிவ்விடத்துக்குச் சேதி தெரிஞ்சு கொண்டு, உடனே பாயெடுத்து பத்தொன்பதாந் தேதி பனிரெண்டு மணிக்கு புதுச்சேரித் துறை வந்து சேர்ந்தார். ஆறு மணிக்கு முசியே சுப்பீர் தேவனாம்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப் போனதாகவும் சேதி கேழ்க்கப்பட்டது.

### *1758 வருசம், அபிறேல் மாசம், தேதி 30; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 21; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : நேத்து ராத்திரி முசியே சுப்பீரும் முசியே லாலியும் பிறப்பட்டுத் தேவனாம்பட்டணத்துப் பாளையத்துக்குப் போனதாயும், போனவிடத்திலே அங்கே யிருக்கிற பேரெல்லாம் யெதிராளி கிட்ட சண்டையிலே சாவோமா? யிங்கே சோறுயில்லாமல் சாவோமா? யென்று கேட்டதாகவும், உடனே முசியே லாலி அவர்கள் பிறப்பட்டு ராத்திரி பனிரெண்டு மணிக் கெல்லாம் மெத்தை மேலே தீவட்டியுமில்லாமல் வந்து, முசியே லெறி அவர்களை அழைப்பிச்சுப் பண்ணின கோபமிதமில்லை யென்றும், அதின் பேரிலே முசியே லெறி அவர்கள் வெளியே வந்து விணாயகனைக் கூட்டி வரச் சொல்லி அவனை ரெண்டு உதை போட்டு மெத்தைவும் கோபம் பண்ணினதாகவும், அவன் உடனே பிறப்பட்டு தண்டுக்குப் போனானென்றும், மறுபடியும் இரவெல்லாம் முசியே லெறியைத் தூங்க வொட்டாமல் அடிக்கடி அழைக்கிறதும் சேதிகள் பேசுகுறதும், யிந்த அடுக்கிலே யிருந்தாரென்றும், அதினாலே முசியே லெறி அவர்கள் முசியே லாலி அவர்கள் பண்ணுகுற கஸ்திக்குத் தாளமாட்டாமல் மெத்தவும் ஒரு நாளையிலே தானே வேசடைப் பட்டுக் கொண்டாரென்றும் கேழ்க்கப்பட்டுது. யிப்படி யிருக்கையிலே மறுக்கி கொம்பிளான் (Marquis de Comblans) வடக்கே பயணமாயிப் போனவரை அழைப்பிச்சு வரச்சொல்லி மனுஷர் போயி, அவரும் யித்தனாள் உதயத்திலே வந்து சேர்ந்தார். யிதல்லாமல் நேத்து உதயத்திலே முசியே லெறி அவர்களும் கோன்சேல்க்காரரும் போனவிடத்திலே முசியே லாலி அவர்கள் முசியே லெறி அவர்களைப் பார்த்துச் சொன்ன சேதி : "நாமே கும்பினியார், நீர் வந்து நம்முடைய சொல்படிக்கு நடக்குறது. சகலமும் நம்முடனே சொல்லி நம்முட ஒடுதிப் படிக்கு நடக்குறது. நீர் சொன்னபடி யெல்லாரும் கேழ்க்குறது," யென்று சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

இங்கிரேசுக்காரர் கப்பல் ரெண்டு அகப்பட்டு தென்றும், மத்ததெல்லாம் பிலகீனமாய் யிருக்கு தென்றும், ஓடிப்போச்சுதென்றும் கேழ்க்கப்பட்டுது.

யிப்படியாக யிருக்கையிலே, முசியே லாலி அவர்கள் கோயிலுக்குப் பிறப்பட்டார். அப்போது அவரையும் காண்பிச்சுக் கொண்டு நாம் பதினோரு மணிக்குப் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம். அங்கே கேழ்வியான சேதி, முசியே லாலி அவர்களுக்கு அரிகைப் (roundel) பிடிக்க வந்ததாகவும், கையிலே யிருக்கிற சாட்டையினாலே அரிகையை அடிச்சு வேண்டாமென்றதாகவும், கோயிலுக்குப் போயி வருகுற போது அறிகை (?) வேண்டா மென்றா ரென்றும், அந்த வெய்யலிலே கால் நடையாகத் தானே முசியே லாலி அவர்கள் நடையும் யிவர் (லெறி) ஓட்டமுமாய் வந்தாரென்றும், திரும்பவும் உடனே பிறப்பட்டு கோட்டைக்குப் போனா ரென்றும், முசியே லெறி அவர்களும் பிறகே வெய்யலிலே நடக்கமாட்டாமல் கஸ்திப்பட்டுக் கொண்டு போனா ரென்றும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் நேத்து முசியே லெறி அவர்களும் மூன்று லெக்ஷம் ரூபாய்க் குடுத்தார் யென்றும், அது பொய் யென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

அதன் பேரிலே பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து, குளிச்சு சாப்பாடு பண்ணிக் கொண்டு படுத்துக் கொண்டோம். உடனே மூன்று மணிக்கு தொரை அழைக்குறா ரென்று ரெண்டு சேவுகர்கள் வந்து அழைச்சார்கள். உடனே பிறப்பட்டுப் போனவிடத்திலே முசியே லெறி அவர்கள் நம்மைப் பார்த்து, "நம்முடைய கப்பல்கள் சண்டைக்குப் போனவிடத்திலே யிங்கிரேசுக் கப்பல் ரெண்டு கப்பல் பிடிச்சுக் கொண்டார்களென்றும், நம்முட கப்பலொன்று ஆலம்புரிக்குத் தெற்கே கரை தட்டித்தது, அதிலே (வெள்ளைக்கார) பெரிய மனுஷரெல்லாம் யிருக்கிறார்கள். ஆகையாலே அவர்களை அழைப்பிக்க வேணும். யிதுக்கு வண்டி குதிரை பல்லக்கு யிதுகள் அனுப்பவேணும். அதெல்லாம் நீர் சரஞ்சாம் பண்ணவேணு," மென்று சொன்னார். நல்லது யென்று வெளியே வந்து பாளையக்காரன் நயினாருக்கும் தாக்கீது பண்ணி, ஊரிலே யிருக்கிற குதிரை, பல்லக்குகள், வண்டிகள் கொண்டு வரச் சொல்லி மனுஷரை அனுப்பிக் கொண்டிருக்கையிலே, கந்தப்ப முதலி வந்து "தன்னை முஸ்தீப்பு பண்ணச் சொன்னார். நான் பண்ணுகிறே," னென்று சொன்னான்.

நல்ல தென்று சொல்லி யிருக்கையிலே, தண்டிலே யெல்லாரும் தீனி யில்லாமல் யிருக்குறாரென்று சேதி சொல்ல வந்தான். அவனை

முசே லாலி அவர்களுடனே சொல்ல வேண்டா மென்று முசியே லெறி அவர்கள் (சொன்னார்) ... அப்படி யிருந்தும் அவன் போயி முசியே லாலி அவர்களுடனே சொன்னான். சொன்ன உடனே அவர் பண்ணின கோபம் சொல்லக் கூடாது. அதின் பேரிலே முசியே லாலி அவர்கள் (சொல்ல முடியாத கோபம் பண்ணி) பிறப்பட்டு குதிரை மேலே யேறி தண்டுக்குப் போகிற பீரங்கிகள், சாமான்கள் முதலானதுகளையும் ... பதினைஞ்சு குதிரையும் பாறுக்காரரும் சொலுதாதுகளும் நூறு பேருக்கு இட்டுக் கொண்டு போனார். யிது சேதி.

## மே 1758

***1758 வருசம், மாயி மாசம், தேதி 1; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 22; சோமவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போகையிலே பாளையக்கார நயினார் கண்டு சொன்ன சேதி : "தன்னுடனே கூட கும்பினீர் சேவுகர் அஞ்சு பேரைக் குடுத்து கந்தப்ப முதலி, அப்பு முதலி, பெரியண்ண முதலி, திருவெங்கிடத்தாப் பிள்ளை யிவர்கள் வீட்டிலே யெல்லாம் வண்டி யிருக்குதாம். மாடுகளை ஒளிச்சு வைச்சுக் கொண்டு யிருக்கிறார்களாம். நீ போயி வண்டியையும் மாட்டையும் வாங்கிவா. ஆராகிலும் குடுக்க மாட்டோமென்றால் அவர்களைச் சாவடியிலே கொண்டு போயி வைக்கச் சொல்லி தொரை சொன்னார். உங்களையும் கேழ்க்கச் சொன்னா"ரென்று வந்து சொன்னான். நல்லதென்று வண்டியையும் மாடுகளையும் குடுக்கச் சொல்லி உத்தாரங் குடுத்துப் போட்டு கோட்டைக்கு வந்தோம்.முசே லெறி அவர்கள் காரிய சுருக்கினாலே சஞ்சாரமாயிருந்தார். நானும் காண்பிச்சுக் கொண்டேன். கூடமாடத் தானே திரிஞ்சு கொண்டிருந்தோம்.

யிப்படி யிருக்கையிலே யித்தனாள் பண்டிகை யென்றும் (கோட்டைக்கு மேலே) கொடி போட்டுக் கொண்டு கோயிலுக்குப் போனார். அந்த மட்டிலே நாம் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

முசியே லாலி அவர்கள் ஆனால் தேவனாம்பட்டணத்து மேலே சக்ணடைக்குப் போயிருக்கிற தண்டிலே நேத்து சாயங்காலம் போனவர் அங்கே தானே யிருக்கிறார். இங்கிரேசுக்காரர் கப்பல் ஒன்றும் அகப்படாமல் பாய்மரங்கள் முறிஞ்சும் கப்பல்கள் வெகுவாய் அலைச்சட்டைப்பட்டும் நிறுவாகமில்லாமல் ஓடிப்போச்சுது யென்றும், பிரான்சுக்காரர் கப்பலிலே ஒரு கப்பல் கரை தட்டியிருக்கிறபடியினாலே, அந்தக் கப்பலிலே யிருக்குற சாமான்களெல்லாம் ஆலம்புரிக் கோட்டையிலே சேர்க்கிறதாகவும், அதிலே யிருக்கிற பெரிய மனுஷரையெல்லாம் யிறக்கி அழைச்சுக் கொண்டு வரச்சொல்லி ஆனைகள் குதிரைகள் வண்டிகள் பல்லக்குகள் சகலமும் பயணம் பண்ணி, பாளையக்காற நயினா(ரையும்) போயி அழைச்சு வரச்சொல்லி அனுப்பினார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

அரும்பாத்தைச் சாவடி வினாயகன் உத்தியோகத்தை முசே லசேலுக்குக் (M. La Selle) குடுத்தது சரியே. முசே லசேல் யெசமானன் அவருடனே கூடயிருந்து காரியங்களைப் பார்க்குறதுக்கு முன்னாலே நம்முட கிட்ட திருக்கோவிலூர் சீமைக்குப் பிணைப்பட்டுக் கொண்டிருந்த

(ஜாமீன்தாராயிருந்த) முசியே பிளாம் யென்கிறவரையும், மலையனென்கிறவனையும் கூட வைச்சுக் கொண்டு காரியம் பார்க்கச் சொல்லித் திட்டம் பண்ணினார்கள்.

திருப்பாதிரிப்புலியூர், புதுப்பாளையம், மஞ்சகுப்பம் யிதுகளிலே அவரவர்கள் போனவர்கள் கொள்ளையிட்(டார்கள்). விக்கிரகங்கள் தவலை சொம்புகள் கட்டில் மெத்தைகள் கத்தி செமுதாடுகள் பிடவைகள் சீலைகள் யெதுத்துச் சீட்டிகள் பின்னையும் நானாவித தினிசுகள் அவரவர்கள் கொள்ளையிட்டுக் கொண்டு வந்து விக்குறார்கள், யென்று கேழ்க்கப்பட்டுது.

யித்தனாள் சாயங்காலம் கோட்டைக்கு வெளியே சவாரிப் போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தவிடத்திலே, வெள்ளித்தடி வைச்சுக் கொண்டிருக்கிற அப்துல் காதர் (என்கிற) சோபுதாரன் வந்து, அங்கே தொரை அவர்கள் உத்தாரம், "நாளை முதல் யிந்த ஊரிலே ஆரும் சாராயம் விற்கத் தேவையில்லை, கொழும்பு சாராயமும் விற்கத் தேவையில்லை, யெல்லாரும் அவரவர் கையிலே யிருக்கிற சாராயங்களை யெல்லாம் கொண்டு முசியே கொற்ணேத்து வசத்திலே அளந்து ஒப்பிவிச்சுப் போடுகுறது[1] யென்று முசியே லெறி கோவர்ணதோர் அவர்கள் ஒடுதிகுடுத்திருக்கிறார்கள். ஆகையாலே உங்களுடனே சொல்லச் சொன்னார்கள். நீங்கள் கொழுப்பு சாராயங்கள் விற்குற போர்களுக்கும் தாக்கீதைப் பண்ணிப் பட்டைச் சாராயம் யிருக்கிறதையும் முசியே கொற்ணேத்து வசத்திலே ஒப்பிவிக்கச் சொல்லிப் பண்ணவேணு," மென்று சொன்னான். உடனே கொழும்பு சாராயம் விற்குற பேரையும் கூட்டிவரச் சொல்லி தாக்கீது பண்ணி அனுப்பி வைச்சோம். சாராயக் கிடங்குக் காரரையும் அழைச்சனுப்பி விச்சு தாக்கிது பண்ணி அனுப்பிவிச்சோம். குழம்பு (கொழும்பு) சாராயம் விற்குற பேருக்கும் அந்த சோபுதாரரையும் கூட்டி அனுப்பிவிச்சு தாக்கீது பண்ணிவிச்சோம். யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 2; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 23; செவ்வாய்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய், முசியே லெறி அவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணிக் கொண்டு, கொழும்பு சாராயம் பட்டை சாராயம் யெல்லாம் முசியே கொற்னேத்து வசத்திலே சேர்ப்பிக்கிற சேதி சொல்லிப் போட்டு யிருக்கையிலே, பட்டணத்திலே ஆடுமாடுகள்

[1] வெள்ளைக்காரப் படைகளுக்கு இவை தேவை என்பதால் பிள்ளையும் சாராய ஆலை வைத்திருந்தார்.

பிடிக்குறது அரும்பாத்தை உத்தியோகத்துக்கு வந்த முசியே லா சேல், (முன்பு லசேல்) கூலிக்காரருக்கு சனம் ஒண்ணுக்கு நாள் ஒன்றுக்கு ரெண்டு பணமும், படிக்கு அரைப் பணமும் ரொக்கத்திலே கையிலே குடுக்கிறபடியினாலே, கூலிக்காரர் வலியத் தானே வெகு பேர் வருகுறார்கள். அதெல்லாம் பாத்து வெளியே வருகுறபோது முசே புலோ கண்டு வலிய அழைச்சு, "உம்முடனே டங்காசாலைப் பேச்சுப் பேசவேணும். நீர் டங்காசாலைக்கு (வரவும்)," என்றார். அங்கே ஆருமில்லாததினாலே முசே புலோ அண்டைக்குப் போனவிடத்திலே, அவர் சொன்ன சேதி : தமக்கு முசே கொதே காகிதம் வந்துது. அதிலே யெழுத்துச் சீட்டிகள் (chitntz) அனுப்பச் சொல்லி எழுதினார். அதல்லாமல் வேறே ஒன்றும் யெழுதவில்லை. முசியே லாலி வருகுறரென்று யெழுதினார். பின்னை வொன்றும் யெழுதயில்லை. முசியே குலுவேத்துடனே யென்ன சொல்லி அனுப்பினாரோ தெரியாது. முன்னாலே முசியே லெறி சீமைப் பணம் செல்ல (வர) யில்லையென்று உன் பேரிலே பிராது யெழுதினார். அது நான் அறிஞ்சு உடனே அதுக்கெல்லாம் வயணம் யெழுதி அனுப்பினேன். அப்பால் சகலமான பேரும் யிவர் (துரை) பேரிலே பிராது யெழுதினார்கள். அதுக்கெல்லாம் யிங்கே நடக்க வேண்டியதுக்கு வயணம், போன வருசம் அற்பிசி மாசம் தை மாசம் பிறப்படுகிற கப்பலிலே சேதி வரும் போலே யெனக்குத் தோணப்படுகுறது. யினிமேல் உன் காரியம் பேசவேண்டியதெல்லாம் யெனக்குத் தெரிஞ்சாப் போலே உனக்குத் தெரியாது. நான் உனக்கு யெல்லாம் (சொல்வேன்). ஆனால் முசியே லாலி யெல்லாத்துக்கும் தூக்கிலே போடுவேனென்று சொல்லுகுறார். யிவர் முன்னாலே சொலுதாதுவாயிருந்து அப்பால் ஒப்பிசியாலாயி அப்படி ஒசந்து யிப்போது யிவ்விடத்துக் கெல்லாம் ஒசத்தியாயிருக்கிற உத்தியோகத்துக்கு வந்தார்.[1] அவர் உத்தியோகத்திலே ஒசந்தவர். ஆனால் சாதியிலேயும் பாரம்பரியத்திலேயும் அதிகாரத்திலேயும் ஒசந்தவர். இந்த கும்பினி காரியங்களுக்கு எல்லாம் காரியதார் ஒருத்தரும் வந்திருக்கிறார்.[2] அவர் கோவர்ணமாமுலே தென் மூலை காம்பிராவிலே யிருக்கிறார். நாளை நீர் மெத்தை மேலே வந்த பிறகு நான் முன்னுதாயி அவரிருக்கிற யிடத்துக்குப் போறேன். நீரும் அறியாது போலே மெள்ள அங்கே வந்து காண்பிச்சுக் கொண்டு சத்துநேரம் யிருந்து போட்டுப்போம். அப்பாலே நான் யெல்லாம் அவருக்குச் சொல்லுகுறேன்," யென்று சொன்னார். நல்லதென்று அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தோம்.

---

[1] பிரபுக் குடும்பத்திலே பிறந்ததால் எட்டு வயதிலேயே ஒரு ரெஜிமெண்டில் காப்டனாக நியமனம் பெற்றார்.

[2] இங்கே குறிப்பிடப்படுபவர் மாண்ட்மோரென்சி பிரபு.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 3; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 24; புதவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போயி முசியே லெறி கோவர்ணதோரவர்களைக் காண்பிச்சுக் கொண்டு அங்கே யிருக்கையிலே, ஒன்பதரை மணிக்கு முசியே குலுவேத்து ஆலம்புரிக்கு யிப்பாலே மணலிலே அடிதட்டின கப்பலிலேயிருந்து யிறங்கி, டோலி மேலே வந்து, கொவர்ணமாவிலே போனார். அந்தச் சேதி(யை) மேலுகிரி செட்டி போய் முசியே புலோவுக்குச் சொன்ன உடனே முசே புலோ பிறப்பட்டு வந்து, கொவர்ணமாவிலே போய் முசே குலுவேத்துவைக் கண்டு யிருக்கையிலே நாமும் அவரண்டைக்குப் போனோம். அப்போ முசே குலுவேத்தும் முசியே புலோவும் வெளியிலே வந்தார்கள். அப்போது நாமும் போயிக் கண்டு கிச்சிலிப் பழம் குடுத்து ஆசாரம் பண்ணினோம். அவரும் வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணி சுகமாயிருக்கிறீரா வென்று கேட்டார். நாமும் சுகமே யிருக்குறோம், (நீரும்) சுக(மா) யென்று கேட்டோம். சுகமாய்த்தானே வந்து சேர்ந்தோமென்று சொன்னார். யிதிலே அவரவர் வெள்ளைக்காரர் வந்தார்கள். அவர்களைக் கட்டி முத்தமிடுகுறதும் ஆசாரம் பண்ணுகுறதும் யிந்தக் காரியத்திலே யிருந்தார். அதின்பேரிலே நாமும் முசே புலோவும் கோவர்ணமாவிலே வடமேல் மூலைக் காம்பிராவிலே யிருக்கிறவர், சீமையிலே பெரிய மனுஷராயிருந்து வந்திருக்கிறவரண்டைக்குப் போயி, அவரைக் கண்டவிடத்திலே அவர் குளுந்த முகத்துடனே மெத்தவும் ஆதரவாகப் பேசிக் கொண்டிருந்தார். அரை நாழிகை நேரம் பேசியிருந்து அப்பால் பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம்.

யிங்கே கேழ்வியானது : வினாயகனுக்கு பிறகரம் (உதை) நடந்ததிலே மாரிலே வலிகண்டு, வீட்டுலே கிடக்கிறாரென்றும், வந்த பேருக் கெல்லாம் கட்டில் குமிழ் பட்டுதென்று சொல்லுகுறதாகவும், அரும்பாத்தை யென்குற பேர் தண்டிலே சொல்லக் கூடாதென்றும், முசியே லசேல் கைமேலே கூலி குடுத்து விடுகுறதினாலே கூலிக்காரர் வெகுவாயி வந்து காத்திருக்கிறார்களென்றும், கூடலூரிலே மோர்சா போடுகிறதாகவும் இங்கிரேசுக்காரனும் பெலனாகத்தானே யிருக்குறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 4; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 25; குருவாரம்***

இத்தனாள் காலமே கேழ்வியான சேதி : நேத்து மூன்று சாமத்துக்குத் தண்டிலே யிருக்கிற பேர் கூடலூரிலே போய் பிரவேசமாயி வெள்ளைக் கொடி போட்டதாகவும், யிங்கிரேசுக்காரரை ஆகட்டும்

அவர்கள் கிட்ட சேவிக்கிற சிப்பாயிகள் ஆகட்டும் கண்டால் வெட்டிப் போடச் சொல்லித் தமுக்குப் போட்டார்களென்றும்,[1] நேத்து உதயத்திலே ஒரு பெரிய மனுஷன் வெள்ளைக்காரனும் முன்னூறு பேர் சொலுதாதுகளும் யிருநூறு பேர் மத்தலோத்துமார்களும் (மாலுமிகள்) வெள்ளிப் பெட்டிகளைக் கப்பலிலே யிருந்தும் யிறக்கிக் கொண்டு வந்து நம்முடைய அக்கிரகாரத்திலே யிறங்கி, தங்களுக்கெல்லாம் சமையல் பண்ண வேணும், அதுக்கு ஆடு கோழி அரிசி நெய் பதார்த்தங்கள் கொண்டு வரச்சொல்லி கத்திகள் உருவிக்கொண்டு குத்துறோம் வெட்டுறோம் யென்று சொன்னதாகவும், அப்போது யெல்லாரும் பயந்து ஓடிப்போனதாகவும் அதிலே வெங்கிட்டராயர் வந்து கண்டு யிந்த ஊர் நம்முடைய அக்கிரகாரமென்று சொன்னதாகவும், அதன் பேரிலே நின்று சாமானெல்லாம் கொண்டு வரச் சொன்னதாகவும், அந்த மட்டுக்கும் சுத்திலே ஒடி அன்பது ஆடும் நூறு கோழியும் முன்னூறு படி அரிசியும் முப்பது சேர் நெய்யும் வேண தட்டுமுட்டுகளும் கொண்டுவந்து கொடுத்தார்களென்றும், அப்படி யிருக்கையிலே தோப்பிலே ஒருத்தன் போயி இளநீர் பிடுங்கினதாகவும், அது வந்து சொன்ன உடனே அவனைப் பிடிச்சு வரச் சொல்லி அன்பது அடி அடிச்சு சாயங்காலம் வரைக்கும் அவனைப் பட்டினிப் போட்டதாகவும், அதன் பேரிலே பிறப்பட்டு வெள்ளிப் பெட்டியும் கொண்டு ராத்திரி யெட்டு மணிக்கு முப்பத்தி ரெண்டு பெட்டி கோட்டையிலே கொண்டு வந்து சேர்த்தார்களென்றும், பெட்டி ஒன்றுக்கு மார்க்கு மூன்னூறு வீதம் வந்துதென்றும் அந்த வெள்ளி யின்றைய தினம் உயத்திலே டங்காசாலையிலே நிறுத்து விச்சார்கள் யென்றும் கேழ்க்கப்பட்டுது.[2]

அதின் பேரிலே முசியே லாலி செனரால் அவர்கள் தண்டுக்குப் போனபோது மூன்று லட்சம் ரூபாய் முசே லெறி அவர்களைக் கேட்டதாகவும் அதுக்கு யிவர் கொஞ்சம் அட்டியாய் சொன்னதாகவும் அதின் பேரிலே கோபிச்சு "யிப்படியெல்லாம் சொன்னால் நாம் ஆரென்றம் பார்க்கத் தக்கதில்லை, அதுக்கேத்தபடி பண்ணுவோம். கும்பினியிலே பணம் யிருந்தாலும் ஆகும். உங்கள் வீடுகளிலே யிருந்தாலும் ஆகும். நாம் கேட்டதுக்கு சகல சரஞ்சாமிகளும் பண்ணிக் குடுக்கிறது நீர். யில்லாவிட்டால் நமக்குக் கோபம் வரும். அப்பால் நம்முட பேரிலே சொல்லத் தேவையில்லை," யென்று சுறுக்காய் சொல்லிப் போட்டு தண்டுக்குப் போனார் என்றும், முந்தானாள் லட்சத்தன்பது னாயிரம்

---

[1] மே 3 ஆம் தேதி கூடலூர் பிடிபட்டது. அப்போது கையெழுத்தான ஒப்பந்தத்தில் யாரையும், யாவரது சொத்துக்களையும் ஒன்றும் செய்யக்கூடாது என்ற ஒரு ஷரத்து இருந்தது.

[2] லாலி வரும்பொழுது சில வெள்ளிப் பெட்டிகள் மட்டுமே கொண்டு வந்தார். பிரெஞ்சு நிதி நெருக்கடி இதனால் குறைந்து விடவில்லை.

ரூபாய் அனுப்புகுறார்களென்றும் யின்றைக்கும் லட்சத்தன்பதினாயிரம் ரூபாயி அனுப்புகுறார்களென்றும் கேழ்க்கப்பட்டது. அதன் பேரிலே பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். போயிகளையும் அனுப்பிவிச்சோம். சாயங்காலம் கேழ்வியானது: அய்யண்ண சாஸ்திரியை வைத்திருக்குறதுக்குக் கோட்டையிலே சேவுகரில்லை என்றும் அதினாலே பாளையக்கார நயினார் வீட்டிலே கொண்டு போய் தொரை அவர்கள் வைக்கச் சொன்னார் என்றும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் முசியே ளுவார் (M. (Le Noir) சொன்னது, முசியே லாலி அவர்கள் வந்தவுடனே யெல்லாருக்கும் சமாதானமாய் (பாரபட்சம் பாராமல்) உள் நுழைஞ்சார். அதினாலே யிங்கே ஒருத்தரும் பிழைக்கத் (ஏமாற்றத்) தக்கதில்லை யென்று[1] சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது யிது சேதி...

***1758 வருசம், மாயு மாசம், தேதி 5; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 26; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போய் முசியே லெறி கோவற்ணதோரவர்களைக் கண்டு போட்டு யிருக்கையிலே முசியே புலோ, முசியே குளுவேத்து வீட்டுக்குப் போயி கண்டு பேசச் சொல்லிச் சொல்லி அனுப்பிவிச்சார். அந்தப்படிக்கி உடனே பிறப்பட்டு முசியே குளுவேத்து வீட்டுக்குப் போயி பல்லக்கை விட்டுக் கீழே யிறங்கின உடனே முசியே புலோவும் அங்கே வந்தார். அவரும் நாமும் கலந்து கொண்டு ரெண்டு பேரும் வீட்டுக்குள்ளே போறபோது முசியே குளுவேத்து தலைவாசல் மட்டுக்கும் யெதிராக வந்து ஆசாரம் பண்ணி வீட்டுக்குள்ளே அழைச்சுப் போயி மூணு பேரும் நாற்காலி மேலே உளுக்காா்ந்தவுடனே முசியே புலோ, முசே குளுவேத்துடனே முசே தெவோ நடத்துகுறதுகளும் சீமை பருவங்களும் பட்டணத்திலே நடந்த சங்கதிகளும் சீமையைப் பிடுங்கிக் கொண்டாலும் கும்பினி குடுத்தியோர் உத்தியோகம் கூட நடவாதபடிக்கி நடத்திக் கொண்டு வந்த சங்கதிகளும் யிதெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாய் அவருக்குத் தோணும்படியாய் சொல்லிக் கொண்டு வந்தார். யிப்படி சொல்லிக் கொண்டு வருகையிலே முசியே குளுவேத்து யெழுந்திருந்து போய் பெட்டியைத் திறந்து கடுதாசி தஸ்தரம் ஒன்று எடுத்துக் கொண்டு வந்து முசே புலோவுக்குக் காண்பிச்சார். அப்போ முசே புலோ அதிலே ஒரு கடுதாசியைப் பார்த்தார். அதின் பேரிலே அவர்கள் ரெண்டு பேரும் குறையும் பார்க்கிற நிமித்தியமம் அந்தப் பேச்சுகளைப் பேசவேண்டியும் நாம் வெறுமனே யிருக்குறமதினாலே நம்மை வீட்டுக்கு அனுப்பினார்கள். அந்த மட்டிலே

---

[1] எல்லாவற்றையும் ஆழ்ந்து பார்க்கிறார் எனவும் ஆங்கிலத்தில் உள்ளது.

நாம் அனுப்பிவிச்சுக் கொண்டு யெழுந்திருந்தோம். முசியே குளுவேத்தும் தலைவாசல் மட்டுக்கும் வந்து ஆசாரம் பண்ணி மரியாதையாயி அனுப்பிவிச்சார். நாமும் ஆசாரம் பண்ணி அனுப்பிவிச்சுக் கொண்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தருக்கையிலே முசியே லாலி அவர்கள் நேத்து ராத்திரியே வந்து இன்றைக்குக் கோன்சேல் கூடினார்கள் யென்று கேழ்க்கப்பட்டுது. கூடின சேதி ஒன்றும் தெரியவில்லை. அதின் பேரிலே பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்து சாப்பிட்டு நித்திரை போகையிலே முசே லெறி கோவர்ணதோர் அவர்கள் குதிரை கேட்டு வாங்கி வரச் சொன்னாரென்று சோபுதார் வந்து கேட்டான். குதிரை யெல்லாம் குடுத்து விட்டோமே, யின்னம் குதிரை யெங்கே யிருக்குது. ரெண்டு நொண்டிக் குதிரையிருக்குது. வேணுமானால் அதையும் கொண்டு போங்களென்று குடுத்தனுப்பினோம். அதைப் பார்த்துத் திரும்ப அனுப்பி விட்டார்கள். அதன் பேரிலே சவாரி போய் யேழு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். யிது சேதி.

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 6; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 27; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் முசியே லாலி செனரால் அவர்களையும் முசியே லெறி கோவர்ணதோர் அவர்களும் யிருக்கச்சே யிருவரையும் கண்டு ஆசாரம் பண்ணிப்போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். நேத்து ராத்திரி டங்காசாலை கபுறு சொல்ல வந்த வெங்கட்டராம செட்டி சொன்ன சேதி முசியே புலோ அவர்களுக்கு கூடலூர் துரைத்தனம் குடுத்தார்கள். ஆனதினாலே முசே புலோ டங்காசாலைக் கணக்கு சாவி சகலமும் முசே லெனுவார் (M. Le Noir) வசத்திலே ஒப்பிவிச்சுப் போட்டுப் போனார். யின்று ராத்திரி பனியிரெண்டு மணிக்கி பிறப்பட்டு கூடலூருக்குப் போராரென்று வந்து சொன்னான். அதன்பேரிலே சிரஞ்சீவி அப்பாவுவை அழைப்பிச்சு முசே புலோ அண்டைக்குப் போய் உமக்கு கூடலூர் துரைத்தனம் குடுத்தார்களென்று சேதி கேட்டு யென்னைப் போய் உங்களுக்கு சந்தோஷம் சொல்லி, யெங்கள் காரியத்துக்கெல்லாம் நீங்கள் அன்றோ முசியே கொதே அவர்களுடைய புரோக்குறதோராயிருந்தீர்கள் (Agent). யெங்கள் காரியத்துக்கு யினிமேல் நடக்க வேண்டியதென்னவென்று கேட்டுக் கொண்டு வரச்சொல்லி அனுப்பினவுடனே, அந்தப்படிக்கி அப்பாவு போயி வந்த சேதி சொல்லி யானவுடனே யிருக்கச் சொல்லி அனுப்பிவிச்சு அவரவர் வெள்ளைக்காரர் வந்த பேரெல்லாம் தீனி தின்று போன பிறகு அப்பாவுவை அழைப்பிச்சு நான் கூடலூருக்கு துரைத்தனமாய்ப் போகயில்லை, கூடலூரிலே ரேவுக்காரர் தட்டுமுட்டுகள் யிருக்குறதுகளை யெல்லாம் யெழுதிக் கொண்டு வருகுறதுக்குப் போறேன். அஞ்சாறு நாளையிலே வந்துடுவேன். உங்கள் காரியத்துக்கு யோசனை

யென்னயிருக்குது. யிப்போதானே முசியே லாலி செனராலுடனே கும்பினி குடுத்தியோரல்லவோ யிந்தக் காரியமெல்லாம் பார்க்க வேணும் யென்று சொன்னேன். உங்கள் தகப்பனாருக்கு யிதிலே திரிஞ்சு பிரயாசைப்படுகிறதுக்குத் தேகத்திலே பெலன் போதாதே, அதினாலே யாக்கும் நான் வெறுமினே போறேன். போய் அஞ்சாறு நாளையிலே வந்தவுடனே யெல்லாம் சொல்லி பண்ணி விக்குறேனென்று சொன்னதாக சிரஞ்சீவி அப்பாவு ராத்திரி பனியிரெண்டு மணிக்கு வந்து சேதி சொன்னான். அதின் பேரிலே நாம் யோசனை பண்ணினது: முசே குளுவேத்து கையிலே கொண்டு வந்த காகிதம் முசியே புலோ பார்த்துக் கொண்டபடியினாலேயும் முசியே புலோ சொல்லி அனுப்பிவிச்ச உத்திரத்தினாலேயும் யேதோ சத்தை (விஷயம்) யிருக்குதென்று யெண்ணிக் கொண்டோம். இன்றைக்கு சின்னதுரை முசே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனவிடத்திலே முசியே பெடுத்தல்மீ சொன்னசேதி: முன்னாலே நாம் கேழ்விப்பட்டதுக்கு யிப்போ முசியே லாலி அவர்கள் யெல்லாருக்கும் சரியாய் சாபாயி நடத்துகுறார் அல்லாதே வித்தியாசங்களாய் நடத்தயில்லை. ஆனால் முசியே லாலி குமிசேலிலே ஒரு சேதி சொன்னார். யேதென்றால் தேவனாம்பட்டணமும் சென்னப்பட்டணமும் வாங்கினால்லாமல் நாம் உங்களுடனே ஒன்றும் பேசுகுற தில்லை யென்று சொன்னார். அதுலே யென்னமோ யிருக்குதோ அப்போது அறிய வேண்டியதென்று சொன்னார். அதன் பேரிலே அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்து சாயங்காலம் வெளியிலே சவாரி போனவிடத்திலே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அது யேது யென்று விசாரிக்குமிடத்தில் கப்பலுகளுக்கெல்லாம் கொம்மாந்தாமாய் யிருக்குறவர் நேத்து யெட்டுக் கப்பலுடனே இங்கிலீசுக்காரரை சண்டை பண்ணித் துரத்திவிட்டவர், முன்னாலே முசியே (லெ)னுவார் தூரத்திலே (காலத்திலே), ஒரு பேர் விளங்கன் கப்பலுக்கு மூணாவதாய் வந்தவர் யின்றைக்குக் கீழே யிறங்கி வந்ததினாலே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள் யென்று கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 7; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 28; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போயி பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்திருக்கையிலே கேழ்வியானது; முசியே லாலி செனரால் அவர்களும் முசே சுப்பீரவர்களும் முசியே குளுவேத்தும் மூன்று பேரும் மெத்தை மேலே காம்பிராவிலே யேகதேசத்திலே பேசிக் கொண்டிருந்ததாகவும் பழய குமுசேலியோர்கள் யெல்லாரும் கோயிலுக்குப் போயி பூசை கேட்டு கோவற்ணதோர் கோவற்ணமாவுக்குக் கீழே வெளியிலே தானே பத்து மணி மட்டுக்கும் யிருந்தார்களென்றும்

கேழ்க்கப்பட்டுது. அதின் பேரிலே பனியிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். சாயங்காலம் சவாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிதிலே மயோர்கள் (Majors) அஞ்சாறு பேர்கள் வந்து தங்களுக்கு யிருக்குறதுக்கு வீட்டுக்கு முசே லாலி அவர்களும் முசியே லெறி அவர்களும் காகிதம் குடுத்தார்களென்று காகிதமும் கொண்டு வந்தார்கள். அவர்களுக்கு பாலையப்ப முதலி கிடங்கிலே கொண்டு போயி விடச்சொல்லி சோபுதாரரைப் பிறகே கூட்டி அனுப்பி விச்சோம். அந்தப்படிக்கு அவர்கள் போயி பாலையப்ப முதலி கிடங்கிலே யிறங்கினார்கள். இதின் பேரிலே கேழ்வியானதுக்கு, முசியே தாஷே (M. d'Aehe) வந்ததாகவும் யெல்லாரும் கண்டு கோட்டையிலே ஆசாரம் பண்ணின தாகவும் கப்பலெல்லாம் வந்தபடியினாலே கப்பலிலே யிருந்து பெரிய மனுஷர் சொலுதாதுகள், காரியக்காரர்கள், வெள்ளிப் பெட்டிகள் யிறங்கினதாகவும் முசியே (தருஷே) கோட்டையிலே யிருக்கிற பல்லக்குகளை யெல்லாம் பார்த்து யெல்லா பல்லக்குகளையும் கொண்டு போய் காயக்காரரை யெல்லாம் யெடுத்துப்போய் நோவாளிக் கிடங்கிலே கொண்டு போய் போடச் சொன்னார் யென்றும், முகம் போனவனும் கை போனவனும் கால் போனவனும் யிந்த யடியிலே பெகு சனங்கள் காயக்காரரைக் கொண்டு போய் நோவாளிக் கிடங்கிலே போட்டார்களென்றும் கோட்டையிலே விசேஷமாய் சொலுதாதுகளில்லாமல் யெல்லாரும் சண்டை முகத்திலே போயிருக்கிற படியினாலே வழுதாவூர் வாசலை சாத்திப் போட்டு வைக்கச் சொல்லி ஒடுதி குடுத்ததாகவும் அந்தப்படிக்கு சாத்தியிருக்குதென்றும் கேழ்க்கப்பட்டுது...[1]

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 9; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 30; செவ்வாய்*

இத்தனாள் சாயங்காலம் யிங்கிறேசுக் கப்பல் ஆறேழுக் கப்பலுகள் வந்து கிழக்கே காணுகிற தென்று கேழ்வியாச்சுது. முசியே சுப்பீர் தேவனாம்பட்டணத்துக்குப் போறதாக யிருக்குறாரென்று கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 10; வெகுதானிய வருசம், சித்திரை மாசம், தேதி 31; புதன்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போன விடத்திலே அஞ்சு மணிக்கு முசியே லெறி கோவர்ணதோர் ஒண்டியாப்ப் பிறப்பட்டு கடற்கரைக்குப் போயி ராமச்சந்திரய்யனை அழைப்பிச்சு பட்டணவரையெல்லாம் அழைப்பிச்சு வரச்சொன்னார். பட்டணவரெல்லாம்

---

[1] அன்றே புதுவைமனை பெரியதாக இருந்தது தெரிகிறது. தாஷேயின் சொல்தாதுகள் 1274 பேர். அதில் சேர்க்கப்பட்டிருந்தனர்.

வந்தவுடனே கப்பலுகளுக்கு ஆடுகள் கோழிகள் மாடுகள் வகையிராக்கள் சாமான்கள் யேத்தி அனுப்பிவிக்கச் சொல்லி அனுப்பிச்சுக் கொண்டு யிருக்கச்சே யேழு மணிக்கி முசியே பெடுத்தல்மீ வந்தார். அவரை வைச்சுப் போட்டு முசியே லெறி அவர்கள் ஒண்டியாய் ரெண்டு சோபுதாறருடனே தச்சக்கூடம் வந்து விசாரிச்சுப் போட்டு யெட்டு மணிக்குமேல் வீட்டுக்கு வந்தார். இதிலே நானும் மேல் வீட்டிலே யிருந்து அவரைக் கண்டு ஆசாரம் பண்ணிப் போட்டு அங்கே தானே யிருக்கையிலே முசே பெடுத்தல்மீ கடற்கரை ஓரத்துக் காரியங்கள் எல்லாம் திட்டம் பண்ணிப் போட்டு அவரும் முசே திலார்சும் மேல் வீட்டின் பேரிலே முசே லாலி செனராலவர்களைக் காணவந்தார். அவர் காம்பிராவினுள்ளே யிருந்த படியினாலே யிவர்கள் வெளியிலே தானே யிருந்தார்கள். யிப்படி யிருக்கையிலே ஆலம்புரவியிலே யிருந்து பாறு கொம்மாந்தாம் இருநூறு சிப்பாயிகளுடனே வரிசை வைச்சுக் கொண்டு கோட்டைக்குள்ளே வந்தார்கள். அதைப் பார்க்குற நிமித்தியம் முசியே லாலி செனராலவர்கள் ஒரு கமிசும் குல்லாயும் கலசோமுடனே (slippers) கையைக் கட்டிக் கொண்டு வெளியே வந்தார். அப்போ முசியே பெடுத்தல்மீ முசே திலார்சும் மத்தமுள்ள வெள்ளைக்கார ரெல்லாரும் ஆசாரம் பண்ணினார்கள். அவர்களைப் பாராதபடிக்கு பேப்பறவாயாய் கையைக் கட்டிக் கொண்டு நின்றார். அப்பால் திரும்பிப் பார்த்தவுடனே யெல்லாரும் ஆசாரம் பண்ணினார்கள். அதுக்கும் சும்மாயிருந்து முசியே பெடுத்தல்மீயும் முசியே திலார்ஷுவையும் கண்ணைக் காட்டி அழைச்சுப் போட்டு உள்ளே போனார். யிவர்களும் போனார்கள். பத்துமணி அடிக்கிற வேளையாச்சுது யிந்தமட்டுக்கும் பேசிக் கொண்டிருக்குறார்கள். என்ன பேச்சோ தெரியாது. அந்த மட்டிலே நாம் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே வந்தோம். அங்கே யிருக்கையிலே கேழ்வியான சேதி, சந்தா சாயபு மகன் பதினாயிரம் ரூபாயிக்கி பல்லக்கும் குதிரையும் உடமையும் முஸ்தீப்பு பண்ணி முசியே லாலி செனரால் அவர்களுக்குக் குடுத்து ஆற்காடு தனக்குக் குடுக்கச் சொல்லி ராசவட்டம் பண்ணிக் கொண்டிருக்கிறதாகவும், யிப்படி யிருக்கையிலே ஒரு சோபுதாரன் வந்து பறங்கிப்பேட்டை பிடவை உங்கள் கிட்டயிருக்கு தாம் அதை முசியே அபேல் (M. Abeille) வசத்திலே ஒப்புவிக்கச் சொல்லி துரையவர்கள் சொன்னார் யென்று சொன்னான். அதுக்கு நம்முட வசத்திலே பறங்கிப் பேட்டை பிடவை யேது? முசே அபேல் வசத்திலே ஒப்பிவிக்குறதேது? ஒன்றும் தெரியவில்லையே. நீ போய் முசே அபேலைக் கேட்டு அறிஞ்சுக் கொண்டு வரச்சொல்லி கண்டால் குருவப்பச் செட்டியை அனுப்பிவிச்சோம். இத்தனாள் சாயங்காலம் கப்பல் துறைமுகம் பிடிச்சது. அதிலே முசியே லெறி போய் சாமான்கள் ஏத்தினார். யிப்படி தினப்பிரதி நடக்குறது. சீமா மூலத்திலே குதிரைக்காரரையும் பாறுக்காரரையும் அனுப்பிவிச்சு மாடுகள் ஆடுகள் சாச்சுக் கொண்டு வருகுறார்கள்.

*1758 வருசம், மாயு மாசம், தேதி 11; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 1; குருவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போகையிலே முசியே லாலி அவர்கள் நேத்து ராத்திரியே தேவனாம்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப் போயிருக்கிற தண்டுக்குப் போனாரென்று கேழ்வியாச்சுது. அதின்பேரிலே பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்திருக்கையிலே ஒன்பது மணிக்கு முசே லெறி அவர்களும் குமுசேல்க்காரரும் குமுசேல் கூடி பேசிக் கொண்டிருக்கிறதாகச் சேதி கேழ்க்கப்பட்டுது. அவர்கள் கூடி யென்ன பேசினார்களோ தெரியயில்லை. கப்பலுகளுக்குச் சாமானுகளும் சேலம் முதலான தினிசுகளும் திரளாய் யேத்துகுறார்கள். தேவனாம்பட்டணத்திலே யானால் சண்டைகள் நடக்கயில்லை. இங்கிரேசுக் கப்பல்களானால் ஒசுரத்திலே காண்பிக்குறதும் போறதும் யிந்த அடுக்கிலே யிருக்குது. முசியே லாலி (M. Lally) அவர்கள் மனோபாவமும் வந்த காரிய சங்கதிகளும் கூட வந்த பேர் ஆருக்கும் சொல்லாமல் கட்டு பண்ணிக் கொண்டு வந்ததினாலே யினிமேல் யிங்கே முசியே லாலி அவர்கள் நடப்பிக்கப் போற காரிய சங்கதியள் ஒன்றும் வெளியாகயில்லை. அதன் பேரிலே பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து சாயங்காலம் சவாரி போய் ராத்திரி யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

*1758 வருசம், மாயு மாசம், தேதி 12; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 2; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலமே ஆறு மணிக்குக் கேழ்வியான சேதி: அவுரங்காபாத்துக்கு வடக்கே பனிரெண்டு கோசிலே தவுலத்தாபாத்து யென்கிற கில்லாயிருக்கிறது. அதிலே பார்சா கசானாயிருக்கிறது. அது ஒத்தைக் கல்லு மேலே கோட்டை யேறுகிற வழி ஒன்று முன்னாலே பார்சாவுக்கு அசக்கியமாயி ஆசப் சாவுக்கும் (Asaf jah) அசக்கியமாயிருந்தது. அதை சா நவாசு கான் உபாயமாயி வாங்கி தன் மனுஷரை வைச்சு அவன் கைக்குள்ளே யிருந்துது. அதை யிப்போது முசியே புசி சா நவாசு கானுடனே பேசி அந்த துற்கம் பார்க்க வேணுமென்று சா நவாசு கான் காகிதம் அதிலே யிருக்கிற பேருக்கு அனுப்பிவிக்கச் சொல்லி தான் பிறப்பட்டுப் போயி அந்த துறுகத்தின் பேரிலே யேறி வேடிக்கை பார்த்து அதிலே யிருக்கிற பேரைப் பத்திரம் பண்ணி அதிலே வெள்ளைக்கொடி போட்டு அதிலே யிருந்த கசானா வெல்லாம் யெடுத்ததாகவும் அதிலே கோடி ரூபாயும் பிடவை சீலை உடைமை தட்டு முட்டு ரெத்தின பொடி பொன் வெள்ளி பாத்திரங்கள் வகையராக்களிலே கோடி ரூபாயிக்கும் ஆக ரெண்டு கோடி ரூபாயிக்கு

யிருந்ததென்றும் அதெல்லாம் முசியே புசி யெடுத்துக் கொண்டு சலாபத்து சங்குக்கு பத்து லட்சம் ரூபாயி மாத்திரம் அனுப்பிவிச்சதாகவும் அந்த சேதிகளெல்லாம் முசியே புசி முசியே லாலி செனரால் அவர்களுக்குக் காகிதம் அனுப்பினதாகவும் உடனே பணம் காசுகள் அனுப்பச் சொல்லி முசே லாலி செனரால் அவர்கள் காகிதம் யெழுதி மறக்கீ கொம்பிளானையும் (Marquis de Conflans), முசே பசேன் (M. Bazin) ரெண்டு பேரையும் பயணம் பண்ணி பாராக்கறரையும் கூட்டி அனுப்பினதாகவும் கேழ்வியாச்சுது.

மறுக்கி கொம்பிளாம் நேத்து சாயங்காலம் நாம் கோட்டை வெளியே சாரி போயிருக்கிற போது பயணமாய்ப் போறவர் நம்மைக் கண்டு அனுப்பிவிச்சுக் கொண்டு போனார். யிதல்லாமல் சென்னப்பட்டணத்திலே யிருந்து காகிதம் தேவனாம்பட்டணத்திலே வந்ததாகவும் அந்தக் காகிதத்தின் மேலே தேவனாம்பட்டணம் துறை தவிர குமுசெல்க்காரர் பிறம்பாய் (அனைவரும்) வாசித்துக் கொள்ளுகுற தென்று புடாஷ்சாம் (?) யெழுதி வந்ததாகவும் அந்தப்படிக்கு குமுசேல்க்காரர் வாசித்துக் கொண்டு தொரைத்தனம் பண்ணுகுறவரைக் காவலிலே வைச்சு வேறே ஒருத்தர் குமுசேல்க்காரரிலே வைச்சு நம்முடையவர்களுக்குச் சண்டைக்கு வரச்சொல்லி அனுப்பினார்களென்றும், நேத்து ராத்திரி முதல் சண்டை நடப்பிச்சு வருகுறதாகவும் கூடலூர் வடகீழ் மூலை கொத்தளத்திலே போட்ட குண்டு தேவனாம்பட்டணம் கோட்டையிலே போய் விழுந்ததாகவும், அதின் பேரிலே அவர்கள் ஆத்துக்குத் தெற்கே மோற்சா போட்டுத் திட்டம் பண்ணினதாகவும் கேழ்க்கப்பட்டது. இத்தனாள் பனியிரெண்டு மணிக்கு முசியே லாலி செனரால் அவர்கள் தண்டிலே யிருந்து பிறப்பட்டு முசே புலோவும் கூடத் தானே புதுச்சேரிக்கு வந்தார்கள். யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 13; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 3; சனிவாரம்***

இத்தனாள் முசியே கோந்துதே மும் மற்சேனும் (M. Le Comte de Montmorency) முசியே குளுவேத்தும் சின்ன தோட்டத்திலே வந்து கண்டு பேசின சேதி ... இத்தனாள் காலமே நான் பிறப்பட்டுக் கோட்டைக்குப் போய் துரை அவர்களைக் கண்டுப் போட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தோம். நேத்து நடந்த சேதி : பனிரெண்டு மணிக்கி முசியே குளுவேத்து மனுஷன் வந்து கும்பினீர் திரெக்குதேர்களுக்கு (Directors) யெசமான்களாய் யிருக்கிற நாலு பேரிலே ஒருத்தர் முசே கோந்துதே மமராசன்சி[1] கும்பினீர் சேந்திக்கா திறேக்குதோர்

[1] மோமொரன்சி.

(Syndicate-Directors) வந்திருக்குறரே அவரும் முசியே குளுவேத்தும் வருகுறோமென்று சொல்லிப் போட்டு வரச்சொன்னார்களென்று சொன்னான். நல்லதென்று சொல்லி உடனே சிரஞ்சீவி அப்பாவுவை அழைப்பிச்சு சின்ன தோட்டத்திலே கனப்பை (Sofa) நாற்காலிகள் வகையரா சகலமும் அனுப்பிவிச்சு முஸ்தீது பண்ணி வைக்கச் சொல்லி திட்டப் படுத்தி அப்பால் நாம் குளிச்சு சாப்பாடு தீத்துக் கொண்டு கொஞ்சம் நித்திரை போகையிலே மனுஷர் வந்து யெழுப்பி முசியே கோந்து தேம மறுசேன் அவர்களும் முசியே குளுவேத்தும் வந்தார்கள் யென்று சொன்னார்கள். உடனே நாம் போஷாக்கல்லாமலிந்தத்தினாலே நாம் தோட்டத்திலே போயிருக்குறோ மென்று அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிச்சு, உடனே அப்பாவுவையும் முன்னுதாயப் போகச்சொல்லி நாமும் அங்கி போட்டுக் கொண்டு நாலரை மணிக்குத் தோட்டத்துக்குப் போய்க் கண்டு ஆசாரம் பண்ணினோம். உடனே அவர் பெரிய மனுஷனாதினாலே மெத்த ஆசாரம் பண்ணி மெத்தவும் பிறீதியுடன் யோகக்ஷேமங்களெல்லாம் நன்றாய்க் கேட்டார். நாமும் எல்லாம் சொன்னோம். அப்போது முசியே குளுவேத்து யிருந்து கொண்டு யிவர்களுக்கு ரெண்டு பேர் பிள்ளைகளுண்டு, அவர்கள் மெத்த யோகவான்கள் யென்று முசியே கொதே வெகு பிறீதி பண்ணினாரென்று சொன்னார். அதுக்கு கோந்து தேம்மறுசேன் சொன்னது, அவர்களும் யோகசாலிகள்? யிவருடைய பேரும் நிறுவாகமும் நாம் சீமையிலே கேட்டு யிருந்ததுக்கு யிப்போ பார்த்தவுடனே நூறத்தனை அதிக மாயிருக்குது. யிவர் கும்பினீர் காரியங்களிலே வெகு பிரயாசைப்பட்டுது, யிவர் பண்ணினதும், மேலும் நாம் ரொம்ப சீமையிலே தானே அறிஞ்சு யிருக்கிறோமென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது யெல்லாம் பிரயாசத்துக்கு நியாயமில்லாமல் போச்சுதென்று சொன்னோம். அதுக்கு யேன் அப்படிச் சொல்லுகிறீர்? கொஞ்ச நாளையிலே யெல்லா நியாயமும் நடக்கப் போறதுயென்று சொன்னார். யிப்படி பேசிக் கொண்டு யிருக்கையிலே பழவகைகள் மிட்டாயிகள் பழங்கள் அத்தர் முதலானது களெல்லாம் கொடுத்து சங்கீதங்கள் கேழ்ப்பிச்சு மெழுகுவத்தி முதலானது களெல்லாம் வேடிக்கையாயி வைப்பிச்சு வெகு சம்பிறமமாயிருக்கிற வேளையிலே பிடவை சீலை சுருட்டுகள் முதலானதுகள் கொண்டுவரச் சொல்லிக் குடுத்த விடத்திலே, இது நம்முட வீடு நீர் நம்முட வராயிருக்க யிதுகளெல்லாம் யென்னத்துக் கென்று யெத்தனை சொல்லியும் வாங்காமல் மெத்த மெத்த உபசாரங்கள் சொல்லி யெட்டு மணி அடிச்சு பிறகு அனுப்பிக் கொண்டு போனார்கள். அதின் பேரிலே நாம் வீட்டுக்கு வந்தோம்... இது நேத்து நடந்த சேதி.

இத்தனாள் சாயங்காலம் கோட்டையிலே முசே லசேல் கூடிப் பேசிக் கொண்டிருக்கையிலே வண்ணாந்துறையிலே யிருக்கிற

ஒபிசியால்மார் ராசா மனுஷராயிருக்கிற பேர்கள் தங்களுக்குப் பதினெட்டு மாதம் சம்பளம் வரவேணும், அது தந்தால் நாங்கள் சண்டைக்குப் போவோமென்று சொல்லி அனுப்பினார்களென்றும் அதிலே முசியே லாலி செனரால் அவர்கள் வண்ணாரந்துறைக்குப் போகிற நிமித்தியம் பல்லக்கு கொண்டு வரச்சொல்லி வெளியே வந்ததாகவும் அவர் ஏறுகிற பல்லக்கு தயாரா யில்லாததினாலே ஆறு குதிரை கட்டின வண்டியைக் கொண்டு வந்தார்களென்றும் அதைக் கண்டவுடனே வெகு கோபம் வந்து கந்தப்பனை அடிக்கப் போறதும் மச்சுமேலே போகப் போறதும் திரும்ப பல்லக்கு களிருக்கிற விடத்திலே வருகுறதும் வெகு கோபம் பண்ணுகுறதும் யிந்தப்படிக்கு நாலு தரம் ஆறு தரம் ஓடித்திரியுறதும் யெல்லாரையும் தூக்கிலே போடுகுறேனென்குறதும் முசியே லெறி அவர்கள் பல்லக்கைக் கொண்டு வந்து வைச்சதாகவும், வரத்தக்கன பல்லக்கா கொண்டு வாரதென்று அந்தப் பல்லக்கிலே ஒருஅடி போட்டதாகவும் அதன் பேரிலே அவர் பல்லக்கு வந்ததென்றும் அப்பால் அதிலே யேறிக் கொண்டு வண்ணாரந்துறைக்குப் போனாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 14; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 4; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை முசியே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் யெப்போதும் போலே உச்சாகமாயிருக்குறதுக்கு யில்லாமல் வீட்டுக்குள்ளே தானே யிருந்தபடியினாலே அந்த சங்கதி தெரிஞ்சு கொண்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்தவிடத்திலே நேத்து ராத்திரி அப்பு முதலிக்கு லுயித்துனாந்து செனராலாயிருக்கிற (Lieutenant General) முசியே லாலி அவர்கள் தம்முடைய சொந்த துபாசித்தனம் குடுத்து தம்முடைய கிட்டயிருக்கிற மனுஷர் சோபுதாரர்கள் யெல்லாரையும் அப்பு முதலி சொன்ன படிக்கிக் கேட்டு நடந்து கொள்ளச் சொன்னாரென்றும் கேழ்விப்பட்டுது. முசியே லாலி அவர்களானால் குமுசேல் கூடி பேசியிருந்து சகல சாமானும் யெருது மேலும் வண்டி மேலும் மனுஷர் மேலும் ஆனைகள் மேலும் யெடுப்பிச்சு அனுப்பிவிச்சுப் போட்டு தாமும் பல்லக்கு மேலேறிக் கொண்டு முப்பது நாற்பது குதிரைக்காரர் கூடப்போக தேவனாம்பட்டணம் தண்டுக்கு அஞ்சு மணிக்குப் பிறப்பட்டு போனார். ஊரிலே நெல்லு காய் தானியங்கள் ஒன்றும் வருகுறதுயில்லை. வந்த பொதி மாடுகளை யெல்லாம் பிடிச்சுப்போய் தண்டுக்கு சாமான் கொண்டு போறதினாலே ஆரும் பொதி மாடு கொண்டு வருகுறதில்லை. அதினாலே ஊரிலே அரிசி நெல்லு கொள்ளக் கிடைக்குறதில்லை பெண்டுகள் ஆண் பிள்ளைகள் ஆரைக் கண்டாலும் பிடிக்குறபடியினாலே ஊர் தத்தளிக்குறது. யிதல்லாமல் லுத்தினாந்து செனரால் (Lieutenent

General) முசியே லாலி அவர்கள் வருகுறபோது தமிழர் கூடிப்பார்த்துக் கொண்டிருக்கிறதைப் பார்த்து யிவர்கள் வந்து கூடிப்பார்க்குறது யென்ன, நாம் யினிமேல் கோபம் வந்தால் சுட்டுப் போடுவோமென்று சொல்லி நாம் அழைச்சவன் மாத்திரம் வருகுறதன்றியிலே மைத்தவன் யெல்லாம் வரக்காரிய மென்னவென்று சொல்லி பிஸ்தோலிலே ரெவ்வெண்டு குண்டு போட்டு கெட்டிச்சுக்கொண்டு வரச்சொல்லி பக்கத்திலே வைத்து வைக்கச் சொல்லிச் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது. கூட வந்த சொலுதாதுகள் ஒபிசியால்மார் முதலான பேர்களுக் கெல்லாம் பத்து மாசத்துக்குச் சம்பளம் பதினேழு லட்சம் குடுக்க வேணுமென்றும் கேழ்க்கப்பட்டுது. தேவனாம்பட்டணம் செயிச்சு வந்த பிறகு பணத்து நிமித்தியம் யென்ன நடத்துவாரோ தெரியாதென்று வெள்ளைக்காரர் முதலான சகலமான பேர்களும் மெத்த விசாரத்தை அடைஞ்சு யிருக்குறார்கள். நாமும் சாயங்காலம் சாரிபோய் யேழு மணி வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 15; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 5; சோமவாரம்***

இத்தனாள் காலமே கேழ்வியான சேதி: தேவனாம்பட்டணத்துக்கு வட பிறத்திலேயும் உலாந்தாக்காரர் பெத்திரியும் மணல் மேடும் யிருக்கிற யிடமும் தென் பிறத்திலே அவர்கள் கைக்குள்ளாக யிருந்த மோர்சாவும் நம்முடவர்கள் கைவசமாச்சு தென்றும் சண்டை நடக்குதென்றும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் வடக்கே குதிரைக்காரர் போயி திருவள்ளூர் வீரராகவ சுவாமி கோயில் மாடும் மறுபடி அனேகம் மாடுகளும் சாச்சுக் கொண்டு வருகுறதாகவும் கேழ்க்கப்பட்டுது. நாமும் பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்து சாயங்காலம் சாரி போய் யேழு மணிக்கு வீடு வந்து சேர்ந்தோம்.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 16; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 6; செவ்வாய்***

இத்தனாள் காலமே பிறப்பட்டுக் கோட்டைக்குப் போகையில் முசியே லெறி கோவற்ணதோரவர்கள் கூடலூரிலே யிருந்து குந்தாணி பீரங்கி (mortars) அனுப்பச் சொல்லி முசியே லாலி செனரால் அவர்கள் அறுக்காறர் ஒட்டகமும் அனுப்பிவிச்சபடியினாலே முசியே லெறி கோவர்ணதோரவர்கள் பிறப்பட்டு கோட்டை வாசலுக்குப் போய் பிராமணாள் முதல் கொண்டு சகல சனங்களையும் பிடிச்சுக் கொண்டு வரச்சொல்லித் திட்டம் பண்ணிப் போட்டு வரப்போனார்களென்றும் சொன்னபடியினாலே நாம் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து யிருக்கையிலே கேழ்வியான சேதி: பனிரெண்டு மணி வரைக்கும் முசியே லெறி அவர்கள் பீறங்கி அண்டையிலே வெய்யிலிலே தானே யிருந்து கொண்டு

மூன்று பீறங்கி அனுப்புகுறதுக்கு மனுஷர் சேகரிச்சு விட்டுப் போற மனுஷருக்கெல்லாம் ரெண்டு பணம் செனத்துக்குக் குடுத்து மூன்று மணிக்குக் கொண்டு போயி சேர்த்தால் அன்பது ரூபாய் இனாம் குடுக்குறோமென்று சொல்லி ஆள் போறதினாலே சிப்பாயிகளை யெல்லாம் துப்பாக்கிகளைக் கீழே வைக்கச் சொல்லி சனத்துக்கு அரை ரூபாய் வீதம் குடுத்து மூன்று பீரங்கியும் தயாறு பண்ணியும் அனுப்பி விச்சாரென்று கேழ்க்கப்பட்டுது. சாயங்காலம் பிராமணன் தெருவுள்பட தெருவுக்குத் தெருவும் மனுஷர் பிடிக்குறார்கள்.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 17; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 7; புதவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி: நேத்து ராத்திரி தேவனாம்பட்டணத்திலே பீரங்கி வேட்டு வெகுசாய் யேழரை மணிக்குத் துவக்கின வேட்டு யித்தனாள் உதிக்கும் யேழு மணி மட்டுக்கும் விடாதபடி நாதம் கேழ்க்கப்பட்டுது. அத்தனை வேட்டும் தேவனாம்பட்டணம் கோட்டையிலே யிருக்குறவன் சுட்டதேயல்லாமல் யிவர்கள் சுட்டதில்லை யென்றும், யெதுனாலே யென்றால் நேத்து சாயங்காலம் முசியே லாலி அவர்கள் யிருக்கிற பவுன்சை மூன்று பிரிவாகப் பிறிச்சு ஒரு முகனைக்குத் தாமும் ஒரு முகனைக்கு முசியே சுப்பீரும் ஒரு முகனைக்கு கும்பினியார் வகையரா லாசு, சொபினே யித்தனை பேரும் யிந்த அடுக்கிலே பிறப்பட்டு சக்கிலிக் கொத்தளத்தின் மேலே கும்பினியார் பவுன்சு போனதாகவும், உப்பிலவாடி கொத்தளத்துக்கு மேலே முசியே லாலி அவர்களுடைய பவுன்சு போனார்களென்றும் மாடுகளுடைய கொம்பிலே பந்தங்கள் கட்டுகுறதும் வெளிச்சம் காண்பிக்கிறதும் உடனே அவிக்குறதும் வெளிச்சம் காண்பிக்கிறதும் இந்த அடுக்கிலே முசியே சுப்பீர் பவுன்சுகள் மாடுகளையும் ஒட்டிக் கொண்டு போனார்களென்றும் யிப்படி மூன்று முகமாய்ப் போனவிடத்திலே கும்பினியார் போய் விழுந்து சக்கிலிக் கொத்தளத்தைப் பிடிச்சு அதிலே யிருந்த பேர் நாற்பது பேர் சொலுதாதுகளும் சிப்பாயிகளும் யிருந்த பேரையும் வெட்டிப் போட்டு, அதிலே தப்பின பேர் பதினைஞ்சு யிருபது பேர் சொலுதாதுகளும் நாலு ரெண்டு ஒபிசியால்களையும் பிடிச்சுக்கொண்டதாகவும், யிதிலே யிவர்களிலேயும் வெகுபேர் செத்தார்களென்றும் முசே ஒமோவுக்கும் (M. Airmont) முசியே லாசுக்கும் முசியே சொபினேக்கும் லொறேன் ஒபிசியால்[1] மாரிலே ரெண்டு பேருக்கும் ஆக யிவர்கள் அஞ்சு பேருக்கும் துப்பாக்கிக் காயம் பட்டு எலும்பிலே

---

[1] லாலியும் தஹேயும் கூடத் தமது நினைவுக்குறிப்புகளை எழுதியுள்ளனர். லாலியுடன் சென்ற இரு ரெஜிமெண்டுகளில் லேறேன் ரெஜிமெண்ட் (Lorraine Regiment)–உம் ஒன்று.

படாமல் சதைகளிலே பட்டு அப்பாலே குண்டுகள் ஓடிப் போனபடியினாலே சாவுகாயம் அல்லவென்றும் முசியே லாலி அவர்கள் பிறப்பட்டு உப்பிலவாடிக் கொத்தளத்துக்கு வருகுறதிலே தேவனாம்பட்டணம் கோட்டையிலே யிருந்து நூறு பேர் சொலுதாதுகளும் யிருநூறு பேர் சிப்பாயிகளும் பிறப்பட்டு உப்பிலவாடிக் கொத்தளத்துக்கு வருகுறதிலே தேவனாம்பட்டணம் கோட்டையிலே யிருந்து நூறுபேர் சொலுதாதுகளும் யிருநூறு பேர் சிப்பாயிகளும் பிறப்பட்டு உப்பிலவாடிக் கொத்தளத்துக்கு மத்தத்து போகயிலே நடுவே போய் மறிச்சு அவர்களை யெல்லாம் சின்னா பின்னமாய் வெட்டினதாகவும் அதிலே சிறிதுபேர் தப்பிக்கோட்டைக்குள்ளே ஓடிப்போனார்களென்றும் அதன்பேரிலே பிறப்பட்டு உப்பிலவாடிக் கொத்தளத்திலே வந்து விழுந்து அதிலே யிருந்த பேர் நாற்பது பேர் சொலுதாதுகளையும் முன்னூறு பேர் சிப்பாயிகளும் யிருந்த பேர்களையெல்லாம் வெட்டிப்போட்டு உப்பிலவாடிக் கொத்தளத்தைப் பிடிச்சுக் கொண்டார்கள் யென்றும், வெகுசனங்கள் படாச்சுதென்றும் ரெண்டு கொத்தளமும் யிவர்களுக்கு கைவசமாச்சுது யென்றும், கோட்டைக்கும் யிவர்களிருக்கிற யிடத்துக்கும் நடுவிலே யின்னம் ரெண்டு கொத்தளம் யிருக்கு தென்றும் கேழ்க்கப்பட்டுது.

இதல்லாமல் முந்தாம் நாள் கொள்ளையிலே வடக்கத்தி வாணியன் ஒருத்தன் வீட்டிலே யிருனுறாயிரம் வராகனும் யிதல்லாமல் நாலஞ்சு வீட்டிலே அய்யாயிரமும் பதினாயிரமும் வராகனும் கொள்ளை அகப்பட்டு தென்றும் கேழ்க்கப்பட்டுது. முசியே லெறி அவர்களுக்குப் பதிலாயி அந்த யிடத்துக்கு முசியே கோந்து தேமும் மறுசேன் (Le Comte Montmorency) வந்திருக்குற தாகவும் கேழ்க்கப்பட்டது... இத்தனாள் உதையத்திலே பிராமணரையும் கடை போடுகிற பேரையும் பிடிக்க வேண்டாமென்று சொன்னதாக கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் சாயங்காலம் அஞ்சு மணிக்கு குமுசேல் கூடி யேழு மணி மட்டுக்கும் குமுசேல் பண்ணினார் களென்றும் சொன்னார்கள். அதன் பேரிலே முசியே புலோவானால் தமக்கு நாம் குடுக்க வேண்டிய ரூபாய் குடுக்க வேணுமென்று கேட்டனுப்பினார். அதுக்கு உம்முட வசத்திலே காங்குப் பிடவைக்கட்டு யீடு வைச்சிருக்குறோமே யிப்போ கலகமாயிருக்குறத்தினாலே சமயமல்லவே யிது தீந்த உடனே நீராகிலும் வித்துப்போடலாம் நாமாகிலும் விலை பண்ணி உமக்குக் குடுக்க வேண்டிய ரூபாயி குடுத்து விடுகுறோம். அதுவரைக்கும் மனம் பொறும் யென்று சொல்லி அனுப்பிவிச்சோம். குமுசேல் கலைஞ்சவுடனே யிவர் பணம் கேட்டனுப்பின படியினாலே குமுசேலிலே பணப் பேச்சுப் பேசி அவரவர் குடுக்கிறதாய் ஒப்பினதாக வேணும் யென்று யெண்ணிக் கொண்டோம். யித்தனாள் வண்டில் மாடுகளெல்லாம் கொண்டு வரச்சொல்லி கொண்டு போய் சாமானேத்தி அனுப்புகிறார்களென்றும்,

முசியே லாசு காயத்தோடே வந்த தாகவும் கொத்தளத்திலே யிருந்து பிடிச்சு வந்த ஒப்பிசியால்களைக் கோட்டைக்குள்ளே காவல் வைச்சதாகவும் மத்த சொலுதாதுகளை வில்லியநெல்லூர் வாசலிலே கிடங்கிலே காவல் வைச்சார் களென்றும் கேழ்க்கப்பட்டுது. இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு தேவனாம்பட்டணத்திலே ஆரம்பிச்ச பீரங்கி வேட்டு பனியிரெண்டு மணி மட்டுக்கும் விடாத நாதமாய்க் கேழ்க்கப்பட்டுது. யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 18; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 8; குருவாரம்***

இத்தனாள் காலமே வீட்டிலே யிருக்கையிலே பத்துமணிக்கு முசியே லெறி அவர்கள் அழைக்கச் சொன்னார்களென்று சோபுதாறர் வந்து அழைச்சான். உடனே பிறப்பட்டு துரைகிட்டப் போய் கண்டு ஆசாரம் பண்ணிப்போட்டு கிட்டத்தானே நின்றோம். ஒரு நாழிகை பொறுத்து றெங்கப்பன் வந்தானா யென்று கேட்டார். வந்து ரெண்டு நாழிகையாச்சு தேயென்று கந்தப்ப முதலி சொன்னான். அதன் பேரிலே நம்மைப் பார்த்து ஊரிலே யிருக்கிற பேர் யெல்லாரையும் சாயங்காலம் கடற்கரையிலே வந்தாலாச்சுது, யில்லாவிட்டால் சாவடிக் கம்பத்திலே கட்டி அன்பது அடி அடிச்சு வீடுவாசல் யேலம் போட்டு அன்பது விராகன் அபராதம் வாங்குவோமென்று தமுக்குப் போடச்சொல்லி சொன்னார். நல்லதென்று வெளியே வந்து சாவடிக்காரருக்குச் சொல்லி ஊரிலே தமுக்குப் போடச்சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்து ரெண்டு மணிக்கெல்லாம் சாப்பாடு தீத்துக் கொண்டு மூன்று மணிக்கு கோட்டைக்குப் போய் தொரையைக் கண்டவித்திலே, கடலோரத்துக்கு வருகுறோம் நீர் முன்னுதாய் போயிரும் யென்று சொன்னார். நல்லதென்று கருங்கல்லும் மண்டபத்து செல்வே (அருகே) வந்து யிருக்கையிலே பட்டணத்திலுள்ள சகலசெனங்களும் வந்திருந்தார்கள். பீரங்கியள் வெம்பாக்கள் குண்டுகள் மருந்து பெட்டியள் பலகையள் தழைக்கட்டுகள் பின்னையும் அனேகம் சாமானகள் யெல்லாம் ஒரு கப்பலின் மேலேயும் ஒரு சுலுப்பின் மேலேயும் யேத்திக் கொண்டு யிருந்தார்கள். யிப்படி யிருக்கையிலே தொரை வந்தார். அவர் பிறகே நாமும் கடலோரத்துக்குப் போனவிடத்திலே யெல்லாரையும் போய்த் தழைக்கட்டு யெடுக்கச் சொல்லிச் சொல்லென்று சொன்னார். அதுக்கு யிங்கே யாராகிலும் கூலிக்காரர் வேலை ஆள்கள் வந்திருக்குறார்களா?. அப்படிக் கொத்த பேரையெல்லாம் தண்டிலே போய் யிருக்குறார்கள். யிப்போ யிங்கே யிருக்கிற உத்தியோகஸ்தர் கணக்கு யெழுதுகுறவர்கள் செட்டியள் வர்த்தகர் யிப்படிப்பட்ட பேர் பிராமணர் யிவர்கள் அல்லாதே ஆர் வந்திருக்குறார்களென்று சொன்னோம். அதுக்கு நானெடுக்குறேன். நீயும் யெடுயென்று சொன்னார். வேளை வந்தால்

யெடுக்குறது தான் என்று சொன்னோம். அதுக்கு மனுஷர் ஆருமில்லாவிட்டால் எப்படி யென்று சொன்னார். "அது யென்ன செய்யுறது? யிது வரையிலே யித்தனை துரைத்தனத்திலே யிப்படிப் பட்டணம் அலங்கோலப்படதில்லை. யிதினாலே பட்டணத்திலே யிருக்கிற செனங்களெல்லாம் ஓடிப்போவார்கள். அதுனாலே உமக்கு அபகீற்தி. அது சொல்லுகிறது யெனக்கு கடனானத்தினாலே நான் சொல்லுகுறேன்" யென்று சொன்னேன். அதின்பேரிலே யிறநூறு பேர் மாத்திரம் சேகரிச்சு விடு மெத்த பேரை போகச்சொல்லென்று சொன்னார். நல்லதென்று யெல்லாரையும் வைச்சுக் கொண்டு பிராமணரை மாத்திரம் போகச்சொல்லி யிருக்கிற பேரிலே இறநூத்து முப்பது பேர் மட்டுக்கும் அனுப்பிப் போட்டு யிருக்கையிலே திரும்பவும் அழைக்கச் சொல்லி நாளைய உதையத்துக்கெல்லாம் ஆயிரம் பேர் வரவேணும். யில்லாவிட்டால் உன்கிட்ட பதினாயிரம் விராகன் வாக்குவேனென்றார். இங்கே யார் யிருக்குறார்கள். ஆன மட்டுக்கும் பார்க்குறேனென்று சொல்லிப் போட்டு வெளியே வந்து சாவடியாரை அழைப்பிச்சு சாதிக்கு ரெண்டு பேர் பெரியதனக்காறரை அழைப்பிச்சு அவரவர் யித்தனை ஆள்கள் கொண்டு வருகுறதென்று கையெழுத்து வாங்கி ராத்திரியே ஆயிரம் பேர் சேகரமாக வேணுமென்று சொல்லி திட்டம் படுத்திப் போட்டு வீட்டுக்கு வந்த விடத்திலே கேழ்வியானது யித்தனை ஆள்கள் நாள் ஒன்றுக்கு தண்டுக்கு சிலவுக்கு முசேலாலி அவர்களைக் கண்டு அவரண்டைக்கு லட்சம் ரூபாய் அனுப்பிவிச்சதாகவும் யின்னம் அனுப்பி விக்கப்போறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 19; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 9; சுக்கிறவாரம்*

இத்தனாள் உதயத்திலே நேத்து ராத்திரி கூடியிருந்த ஆள்கள் முன்னூறு பேரை கோட்டைக்கு அனுப்பிவிச்சு முசியேலாலி வசத்திலே ஒப்பிவிக்கச் சொல்லிப்போட்டு நாமும் கோட்டைக்குப் போய் துரையைக் கண்ட விடத்திலே ஆசாரம் பண்ணிப்போட்டு வந்து பிறகு பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்திருக்கையிலே துரை அழைக்குறார்களென்று சோபுதாறர் வந்து அழைச்சான். உடனே பிறப்பட்டு கோட்டைக்குப் போனோம். அப்போது முசியே லெறி அவர்களும் முசியே லசேலும் பார்க்குற சாலையிலே யிருக்கையிலே போய்க் காண்பிச்சுக் கொண்ட உடனே ஆளில்லை யென்று சொன்னார். அதுக்கு முன்னூறு ஆள் அனுப்பிவிச்சேனே யென்றும் சொன்னதுக்கு கும்பினியிலே வேலை செய்யுறபேரை பிடிச்சு அனுப்பினீர் அவர்ரெல்லாம் கும்பினீர் வேலைக்குப் போனார்கள் யென்று சொன்னார். அதுக்கு மத்தப்படி ஊரிலே யிருந்த

கூலி ஆள்களெல்லாம் தண்டிலே போயிருக்கிறார்களே. யிங்கே கூலியாள்கள் ஆரிருக்குறார்கள் யென்று சொன்னதுக்கு முசியே லசேலிருந்துக் கொண்டு பாா்ப்பார வீடுகளிலே நாலுபேர் ரெண்டு பேர் யிருக்கிறார்கள் யென்றும் சொன்னார். அதொன்றும் யில்லை. யெல்லாரும் கும்பினீர் வேலைக்காறர்தான் அவர்கள் மாத்திரம் யிருக்குறார்கள். பிச்சைக்கு வந்தபேரெல்லாம் ஒடிப்போயிவிட்டார்கள். யிருக்கிற பார்ப்பார் பெண்டுகள் சமைச்சுப் போட சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள் யென்று சொல்லி சாவடியாரையும் அழைப்பிச்சு தாக்கீதைப் பண்ணிப்போட்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தவுடனே மூன்று மணிக்குத் தொரையவர்கள் திரும்பவும் நம்மை அழைப்பிச்சு ஆள் வரவில்லை யென்று கேட்டார். "ஆள் யெங்கே யிருக்கிறார்கள்? யிது வரைக்கும் போன ஆள் யெல்லாரும் இந்த ஊர் ஆளாச்சுதே. போன ஆள் திரும்ப வருகுறதில்லையே. அப்படி யிருந்தும் யிப்போ எழுபது ஆள் வந்தார்களே," யென்று சொன்னதுக்கு, அபராதம் வாங்குவோமென்று சொன்னார். வேணதை வாங்கும் யென்று சொல்லிப் போட்டு யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.[1]

இதல்லாமல் ராத்திரி கேழ்வியான சேதி: தேவனாம்பட்டணம் கோட்டையிலே யிருந்து ரெண்டு பேர் வெள்ளைக் கொடி பிடிச்சுக் கொண்டு பாளையத்திலே வந்து முசே லாலி அவர்களுடனே சமாதானம் பேசு (வதற்குத் தாங்கள் வந்ததாகவும்), தங்கள் ஆயுதங்கள் தங்கள் தட்டுமுட்டு பணங்காசுகளுடனே போறோம், கோட்டை(யை)யும் கும்பினீர் தட்டுமுட்டுகளிருக்கிறதை (யும்) நீங்கள் எடுத்துக் கொண்டு யெங்களைப் போகச் சொன்னால் போறோமென்று கேட்டதாகவும், அதுக்கு முசே லாலி அவர்கள் சொன்னது, "பெண்டுகளிருந்தால் அவர்களைச் சுகமாய்ப் போகச் சொல்லுங்கோள் அவர்கள் வழி நாம் போகயில்லை, மைத்தப்படி ஆயுதங்களை வைச்சுப் போட்டுக் காவலாயிப் (காவலாளிகள்) போறதனால் அந்தப் படிக்குக் கோட்டையை விட்டுப் போட்டு வரச் சொல்லுங்கோள். அப்படி அன்றியிலே ஆயுதங்களும் தட்டு முட்டுகளும் கொண்டு போயி செயமாய்ப் போறதானால் நாம் விடுகுறதில்லை," யென்று சொன்னதின் பேரிலே, வந்தவர்கள் ரொம்ப மன்றாடிப் பார்த்து அதன் பேரிலே கோட்டைக்குப் போனார்களென்றும், முந்தாம் நாள் கோட்டைக்குள்ளே ஒரு வேம்பா போய் விழுந்து ஒரு வீட்டை யிடிச்சுப் போட்டுதென்று ரெண்டு வேம்பா (Shell) குண்டு கோட்டைக்குள்ளே சேத்திலே விழுந்து தென்றும் பின்னையொரு வேம்பா குண்டு கொளத்திலே விழுந்து

---

[1] அப்போது லசேலும் லெறியுடனே பிடவை பார்க்கும் கிடங்கிலே இருந்தனர் என ஆங்கிலப் பதிப்பில் உள்ளது.

தென்றும் கோட்டையிலே யிருக்கிற பேர் உத்தியோகஸ்தர் பிராமணர் நாற்பது பேருக்கு உண்டென்றும், சிப்பாயிகள் பாராக்காரர் ஆயிரம் பேருக் குண்டு யென்றும், வெள்ளைக்காரர் யிருநூறு பேர் யிருந்தார்கள்." அதிலே அன்பது பேர் அறுபது பேர் செத்துப் போனார்களென்றும், நூத்தன்பது பேருக்கு யிருக்கிறார்களென்றும், நூறு பேர் சட்டைக்காரர் யிருக்கிறார்களென்றும் யிந்தப்படிக்கு ரங்கோ பண்டிதர் கிட்டயிருக்கிற மனுஷன் வந்து சொன்னதாகக் கேழ்க்கப்பட்டுது. இன்றெல்லாம் பீரங்கி வேட்டு மட்டாகக் கேழ்க்கப்பட்டுது. நாமும் நம்முட சேவுகருக்கெல்லாம் உச்சிதம் ரூபாய் குடுத்து வெளியே போய் அங்கங்கே யிருக்கிற ஆள்களை யெல்லாம் பிடிச்சு வரச் சொல்லி அனுப்பிச்சு, பட்டணத்திலேயும் அந்தந்தச் சாதி பெரியதனக்காரரையும் அழைப்பிச்சு, மனுஷர் கொண்டு வரச் சொல்லி தாக்கீதைப் பண்ணி, நயினார் சாவடிக்காரர் யெல்லாருக்கும் தாக்கீதைப் பண்ணி அனுப்பிவிச்சோம். யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 20; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 10; சனிவாரம்***

இத்தனாள் காலமே நேத்து இரவு அங்கங்கே சேவுகரை அனுப்பிவிச்சு வெளியிலே யிருந்து பிடிச்சு வந்த ஆள்கள் நூத்திருபது பேர் சேர்ந்தவர்களைக் கூட்டிக் கோட்டைக்கு அனுப்பிப் போட்டு, நாம் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்கு போயி பனிரெண்டு மணி வரைக்கும் அங்கே யிருந்து கொண்டு மனுஷரை சேகரம் பண்ணச் சொல்லிக் கொண்டு அந்த வேலையிலே யிருக்கையிலே பதினோரு மணி மட்டுக்கும் தேவனாம்பட்டணத்து மேலே வேம்பா குண்டு போட்டதாகச் சத்தம் கேட்டு அதன்பேரிலே நின்றுது. நாமும் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து சாப்பாடு பண்ணிக் கொண்டு அஞ்சு மணிக்குச் சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிப்போ யிது வரைக்கும் குண்டு சத்தம் கேளாதபடியினாலே நேத்து வந்து பேசினாப் போலே யின்றைக்கு சமாதானம் பேசுகுறார்களோ வென்று யெண்ணிக் கொண்டோம். யிதல்லாமல் முந்தாம் நாள் பட்டணத்திலே தமுக்குப் போட்டு சகலமான பேரையும் கூட்டிப் பண்ணின அலம்பல், நேத்து முசியே லாலி அவர்கள் கேட்டு கூலிக்காரரை (மட்டும்) பிடிச்சு அனுப்ப வேணும், அல்லாமல் பட்டணத்தை அலம்பல் (பண்ணக்கூடாது) யென்று யெழுதி அனுப்பினதாக முசியே லெறி அவர்களுக்குக் காகிதம் வந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் ஊரிலே யிருந்த பிராமணர் வர்த்தகர் செட்டிகள் வெகு சனங்கள் பிறப்பட்டுப் போனார்கள் யென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 21; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 11; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : சாவடியிலே செனங்களைச் சேரப் பிடிச்சு அனுப்பிவிச்சார்கள். அதன் பேரிலே வில்லியநெல்லூர் வாசலிலே மனுஷரை வைச்சு ஆள்களும் பிடிச்சு மூன்று பீரங்கி தண்டுக்கு அனுப்பினார்கள். இதல்லாமல் முசியே லாலி அவர்கள் "ஸ்ரீரங்கம் ட்டணாயிருக்கிறார்களே, அதினாலே ஆதாயமென்ன?" வென்று (லெறியிடம்) கேட்டதாகவும், அதுக்கு "ஆதாயமில்லை, அங்கே யிருக்கிற சிப்பந்திகளுக்குப் போறாமல் யிருக்கு" தென்று சொன்னதாகவும், "அப்படிப்பட்ட காரியம் செய்வானேன்? ஸ்ரீரங்கத்தைப் பிடித்துப் போடச் சொல்ல"ச் சொன்னதாகவும், அதுக்கு ஸ்ரீரங்கம் யெழுதி யிருக்கிற படத்தைக் காண்பிச்சு வைச்சதாகவும், அதன் பேரிலே நந்திராசாவுக்குக் காகித மெழுதி யனுப்பச் சொல்லி நீர் வந்து ஸ்ரீரங்கம் யேத்துக்கொள்ளும், யெங்களுக்குக் குடுக்க வேண்டிய ரூபாய் குடுத்துவிடும் யென்று காகிதம் யெழுதி அனுப்பிவிக்கச் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது. தேவனாம்பட்டணத்து மேலே நாலஞ்சு அப்போதைக்கப் போது யிவர்கள் போடுகிற வேம்பா குண்டல்லாதே கோட்டையிலே யிருக்கிற பேர் பீரங்கி சுடயில்லை. தண்டுக்குப் போன சாமான்கள் மிதமில்லை. முசியே லாலி அவர்களும் யுத்தத்திலே வெகு சாகிறதையாயி நடத்துகிறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 22; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 12; சோமவாரம்*

இத்தனாள் வீட்டிலேதானே யிருக்கையிலே பத்து மணிக்கி ஒரு ஒப்பிசியால் வந்து சொன்ன சேதி : உம்முடைய உத்தியோகமும் சீமையும் உமக்குத் தானே குடுக்கத்தக்கதாக முசியே கில்லியார் முதலான பேர்கள் சொல்லிக் கொண்டார்களென்று சொன்னான். அதுக்கு யிப்படித் தானிந்த ஊரிலே யிருக்கிற பேர்கள் இல்லாத தெல்லாம் பிறப்பிப்பார்கள் யென்று சொன்னோம். யிப்பால் பனியிரெண்டு மணிக்குமேலே மேலுகிரிச் செட்டி வந்து சவரிராயப் பிள்ளை வீட்டிலே யிருந்த கணக்குச் சுருணை யெல்லாம் சுங்கடு சுத்தமாயி தாம் யெடுப்பிச்சுக் கொண்டு கோட்டைக்குக் கொண்டு போனதாகச் சொன்னான். அதுக்கு யெதுனாலே கொண்டு போனானோ வென்று நாமா யோசனையும் பண்ணினோம். யிப்பால் ஆறு மணிக்கு மேலுகிரிச் செட்டி விசாரிச்சு வந்து சொன்ன சேதி : முசியே குளுவேத்து பத்து மணிக்கி வந்து முசே லெறி அவர்களுடனே பேசிக்கொண்டதாகவும் அவர் உடனே

முசே தெவோவை அழைப்பிச்சு கணக்குக் கொண்டு வரச் சொன்னதாகவும் அதின் பேரிலே சவரிராயப் பிள்ளை கணக்கெல்லாம் யெடுப்பிச்சுக் கொண்டு போனதாகவும் சீமைக்கு நம்முடைய குத்தகை யெத்தனை, அதுக்கு செல்லு பாக்கி யென்ன வென்று கேட்டதாகவும், அதுக்கு கணக்கு யெழுதிப் பார்த்துச் சொல்ல வேணும், நாலஞ்சு நாளையிலே கணக்கு யெழுதிக் கொண்டு வந்து கணக்கெல்லாம் கொண்டு வந்து சொல்லுகுறேன் யென்று திரும்பவும் கொண்டு வந்த கணக்கெல்லாம் யெடுத்துக் கொண்டு திரும்பவும் வீட்டுக்குக் கொண்டு வந்த கணக்கெல்லாம் பார்த்துக் கொண்டு சொன்னான்.

இதல்லாதே, சொலுதாதுக(ளுக்கும்) பாறுக்காரர் யெல்லாருக்கும் யிது வரைக்கும் சம்பளம் குடுத்து வந்த முசியே பெடுத்தல்மீ (யின்) இந்த உத்தியோகத்தை முசியே குளுவேத்துப் பாரிசமாயிக் குடுத்தார்களென்றும், அதினாலே முசியே பெடுத்தல்மீ ரெண்டு நாளாயி வீட்டிலேதானே யிருக்கிறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

சாயங்காலம் யிங்கிறேசுக்காரக் கப்பல் மூன்று கப்பல் வந்து மேலாகக் காண்பிச்சு உடனே மறைஞ்சு போச்சுது. அதினாலே ஒரு கப்பல் தேவனாம்பட்டணத்திலே கொடி போட்டதாகவும், அந்தக் கொடி கண்டவுடனே வந்த கப்பல்காரன் மேலாகப் போயி விட்டதாகவும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் நாலு மணி துவக்கி தேவனாம்பட்டணத்திலே வேட்டுகள் ரொம்ப யெழும்புது. யிந்த ஊரிலேயும் மனுஷரைப் பிடிக்குறது கொஞ்சம் மட்டுப்பட்டு, அவரவர் கடை கண்ணி போடுகுறார்கள். ஊரிலே யிருக்கிற பேரிலே பாதி பேர் வெளியே போயிவிட்டார்கள். யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 23; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 13; செவ்வாய்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருந்தோம். யிங்கே கேழ்வியான சேதி, சீமா மூலம் யெல்லாம் முசியே குளுவேத்து (M. Glouet) பாரிசம் யென்று அவரவர் சொல்லிக் கொள்ளுகுறதாகவும், தேவனாம்பட்டணம் சமீபத்திலே நம்முடவாள் கிட்ட யிருக்கிறதாகவும் சீமா மூலத்திலே யிருந்து வருகிற பேரையும் சில்லரைகளிலேயும் கூலிக்காரரையும் பிடிச்சு தண்டுக்குச் சாமான்கள் போகுறதென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 24; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 14; புதவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசியே லெறி அவர்கள் ஆறு மணிக்குக் கடலோரத்திலே போயி ஒன்பது

மணி வரைக்கும் யிருந்து கப்பல் மேலே சாமான்களை யேத்தி விக்கச் சொல்லித் திட்டம் பண்ணிப் போட்டு கோவர்ணமாவிலே வந்து காம்பிராவுக்குள்ளே போனவர், சாயங்காலம் வரைக்கும் வெளியே வரவில்லை. சின்ன துரை முசியே பெடுத்தல்மீ மூன்று நாளாய் வீட்டைவிட்டு வெளியே வரவே யில்லை. யிப்போது முசே லசேல் மாத்திரம் கோட்டையிலே வளைய வளைய வருகுறதாயும் மத்தப் பேரெல்லாம் அவரவர் அசந்து போய் யிருக்குறார்கள் யென்றும் சீமா மூலம் முசியே குளுவேத்து பாரிசமாச்சுது யென்றும், ஆனி வரையான பிறகு முசியே குளுவேத்து விசாரிச்சுக் கொள்ளுகுறதென்றும், யிந்த ரெண்டு வருஷத்துக்குக் கணக்குக் கொண்டு வரச் சொன்னதாகவும் முசியே தெவோ மெத்த அசந்து போயி யிருக்கிறதாகவும், சவரிராயப் பிள்ளையும் வந்தவாசி திருவேங்கிட பிள்ளையும் கந்தப்ப முதலியும் யேகமா ஆலோசனையாயி கந்தப்பன் தம்பி நயினாத்தே (வையும் கலந்து) கேத (பொய்க்) கணக்கும் மார்க்கப்படுத்திக் கொண்டு (எழுதிக்கொண்டு).... சவரிராயன் முசியே குளுவேத்து மாரிபத்திலே சீமை மேலே(ப் பொறுப்பை) வாங்கவும், அதுக்கான யோசனையிலே யிருக்குறதாகவும், பாப்பய்யப் பிள்ளை தண்டிலே முசியே சுப்பீர் கிட்ட மனுஷரை வைச்சு, அப்பு முதலி முகாந்திரமாய் அதின் (அவருக்குப்) பிரிதி மாம்பழம் அனுப்புகுறதாகவும், தனக்கு யிந்த மாதம் யிருபத்தி ரெண்டாம் தேதி வெகுமானம் குடுத்து சீமா மூலம் குடுக்கப் போறார்களென்று பாப்பய்யப் பிள்ளை சொல்லிக் கொள்ளுகிறதாகவும், முசியே துப்பிளேயிக்சு சாகீர் கட்டப் போறதாகவும், அதினாலே முசியே புஷேத்தும் பெரியண்ண முதலியும் மெத்தவும் விசாரமாயிருக்குறார்களென்றும், நேத்து தேவனாம்பட்டணம் கோட்டைக்குள்ளே யிருந்து சிறிது மாடும் சிறிது குதிரைகளும் கோட்டைக்கு வெளியே ஓட்டி விட்டதாகவும், அந்த மாடும் குதிரையும் வெளியிலே வந்ததை யிவர்கள் போய் ஓட்டினபோது கோட்டையிலே யிருந்து பீரங்கி மயமாயிப் போட்டதாகவும், அதினாலே யிவர்களிலே வெகு பேர் சேதப்பட்டுப் போனார்களென்றும் அதினாலேயும் தேவனாம்பட்டணம் யித்தனை நாள் பிடிபடாததினாலேயும் முசியே லாலி அவர்கள் மெத்த விசாரமாயிருக்குறார் என்றும் தீவிக் கோட்டை மேலே முசியே ஒம்மோவும் சிறிது குதிரைக்காரரும் சொலுதாதுகளும் பாறுக்காறரும் போயி ஆச்சாபுரம் கொள்ளை அடிச்சார்களென்றும் காரைக்காலிலே யிருந்தும் வெள்ளைக்காரரும் பாறுக்காறரும் அன்னூறு பேர் வந்து தீவிக்கோட்டை மேலே யிறங்கினார்களென்றும், காடே[1] ராயன் குதிரையும் தன் சீமையைக் கொள்ளை அடிக்காமல் யிவர்களுக்குப் பிரீதி வரும்படியாயி (நானூறு அன்னூறு குதிரை வந்து யிவர்கள் தண்டுக்குச் சமீபத்திலே யிறங்கி யிருக்குறார்களென்றும்),

[1] காடைராயன்

தேவனாம்பட்டணம் கோட்டைக்குள்ளே ஒண்ணரைக் (ஒருசில) குண்டு விழுந்து கொஞ்சம் நாலு பேர் ரெண்டு பேர் சாகீறார்களென்றும், சுரங்கம் வெள்ளைக்காரார் தோண்டுகுறார்களென்றும், வெகுபேர் வெகுதூரம் சுரங்கம் தோண்டினதாகவும் கேழ்க்கப்பட்டுது. இன்றெல்லாம் பீரங்கி சத்தம் கேழ்க்கயில்லை.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 25; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 15; குருவாரம்***

இத்தனாள் காலமே வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : ஸ்ரீரங்கத்திலே யிருந்து வந்த வீரராம ராசா சொன்ன சேதி: யிவ்விடத்திலே யிருந்து முசியே லெறி அவர்கள் யெழுதியனுப்பின காகிதத்திலே ஸ்ரீரங்கத்திலே யிருநூறு பேர் பாறுக்காறரையும் சக்கரை சுப்பனையும் வைச்சுப் போட்டு மத்தப்பேரை யெல்லாம் யிவ்விடத்துக்கு வந்துவிடச் சொல்லி யெழுதி யனுப்பினதாகவும், அந்தப்படிக்கு யெல்லாரும் பயணமானவுடனே சர்க்கரை சுப்பையன் தான் மாத்திரம் யிருக்கிற தெப்படி யென்று கும்மாந்தாமுடனே சொல்லிக் கொண்டதுக்கு கும்மாந்தான் யிறுநூறு பேர், பாறுக்காரரை மாத்திரம் ஸ்ரீரங்கத்திலே வைச்சு சர்க்கரை சுப்பையனையும் கூட்டிக் கொண்டு வருகையிலே, பாதி வழியிலே கேழ்வியான சேதி : திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலே யிருக்கிற இங்கிலீசுக்காரார் பிறப்பட்டு யிவர்கள் வசத்திலே யிருக்கிற சீமையெல்லாம் அவர்கள் தோரணம் வைச்சுக் கட்டிக் கொண்டதாகவும் கேழ்க்கப்பட்டுது யென்றும், யிந்த வருஷத்துக்கு ஸ்ரீரங்கம் சீமை யெல்லாம் யிது வரைக்கும் கண்டது லட்சத்து யெழுபதினாயிரம் ரூபாயென்றும், யின்னம் ஆனி வரைக்கும் யிருந்தால் நிலுவைகளிலே முப்பதினாயிரம் வருமென்றும், மத்தப்படி சீமையிலே ஒழக்கு நெல்லாய் ஒழுக்கு தானியங்களாய் யிருப்பு யில்லை யென்றும் சொன்னான்.

ஸ்ரீரங்கம் சீமை நந்திராசா நாளையிலே குத்தகை எட்டு லட்சம். அதன் பிறகு பிளாக்கூறு அஞ்சு லட்சமாயிக் (குறைத்திருந்தார்கள்) யேத்திருந்தார். அதின் பிறகு கங்கிபாடி விரராகவ செட்டி நாலு லட்சமாயி வாங்கியிருந்தான். யிப்பால் முசியே (லெ)னுவார் விசாரிச்சு லட்சத்து யெழுபதினாயிரம் யென்று கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் முசியே லெறி அவர்கள் கப்பலுகளுக்கு சாமான் யேத்துகுறதும் தண்டுக்கு சாமான் அனுப்புகுறதும் யிந்தக் காரியத்திலே யிருக்குறார். யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 26; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 16; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலமே வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி ஸ்ரீரங்கத்திலே யிருந்த பிரான்சுக்காரார் யெல்லாரும் யிவ்விடத்துக்கு வந்த

பிறகு, யிங்கிலீசுக்காரர் திரிச்சிராப்பள்ளிக் கோட்டையிலே யிருந்த பேர், பிறப்பட்டு வந்து ஸ்ரீரங்கத்தைக் கட்டிக் கொண்டு அதிலே யிருந்த பீரங்கி 125, லட்சம் விராகன் மருந்தும் குண்டுகளும் சக்கிராட்(?) போட்டிருந்ததுகளும் சகலமும் யெடுத்துக் கொண்டதாகவும், யிப்போது திரும்பவும் யிங்கே யிருந்து வெள்ளைக்காரரை அனுப்பப் போறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. சேத்துப்பேட்டு, திருவரங்கம், கல்லக்குறிச்சி முதலான யிடங்களெல்லாம் கோட்டைகளை ஒரு பறங்களை (பகுதிகளை) யிடிச்சுப் போட்டு அங்கே யிருந்த பேர்களெல்லாம் வந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.[1] முசியே புலோவானால் டங்காசாலையிலே குண்டூர் செட்டி வகையிரா குடுக்க வேண்டியதாகவும் அது நிமித்தியம் பேசவேணும் யென்று நம்மை டங்காசாலைக்கு வந்து தம்மைக் கண்டு பேசச் சொல்லி சொல்லி அனுப்பினார். அதுக்கு நாளை வருகுறோமென்று சொல்லி அனுப்பினோம். நேத்து இரவு முதல் தேவனாம்பட்டணத்து மேலே யிவர்கள் குண்டு போடுகுறார்கள். நேத்து ராத்திரி தண்ணீர் நிமித்தியம் (கொண்டு போக)[2] கோட்டையிலே யிருந்து பிறப்பட்டு மோர்சாவிலே வந்து விழுந்ததாகவும், அப்போது துப்பாக்கி யுத்தம் நடந்ததிலே அவர்களிலேயும் யிவர்களிலேயும் வெகு சனம் சேதமும் காயமுமாச்சு தென்றும், காயங்காரரை யெடுத்து வருகுறதுக்கு யிங்கேயிருந்து பல்லக்குகள் கொண்டு போயிருக்கிறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 28; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 18; ஆதிவாரம்***

இத்தனாள் ராத்திரி கேழ்வியான சேதி : மத்தியானம் ஒரு மணி வரைக்கும் கோட்டையிலே கோன்சேல் கூடிப் பேசியிருந்து சாயங்காலத்திலே முசியே குளுவேத்தும் முசியே புலோவும் முசியே லாலி அவர்களண்டைக்குப் போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. போன காரியம் இன்னதென்று தெரியவில்லை. தண்டிலே முசியே லாலி அவர்கள் மோர்சா வெல்லாம் போட்டு ஆச்சு தென்றும், நாளை முதல் சண்டை விசேஷமாயி நடத்தப் போறார்கள் யென்றும் மூன்று நாள் சண்டை குடுத்து நாலாம் நாள் லெக்கை யேறப் போறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 29; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 19; சோமவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை முசியே பெடுதல்மீ

---

[1] கர்னாடகத்தில் இவ்வாறு 200 கோட்டைகளுக்குமேல் இடித்துப் போடப்பட்டன.

[2] அக்கோட்டையிலிருந்த நன்னீர்க் கிணறு குண்டுகள் விழுந்து இடிந்து விட்டன. பிற எல்லாம் உப்பு நீர்க் கிணறுகளே.

வீட்டுக்குப் போய் அவரைக் கண்டு பேசிக் கொண்டிருக்கையிலே அவர் சொன்ன சேதி : "சீமையிலே யிருந்து சீமா மூலமெல்லாம் முசியே குளுவேத்து பாரிசம் (விடப்பட்டது என்றும்), சீமா மூல்ம் சம்மதி யிங்கே துரைத்தனம் பண்ணுகுறவருக்கும் குமிசெல்காரருக்கும் அக்கரையில்லை யென்றும் யெழுதி வந்தது. அந்தக் காகிதம் முசியே குளுவேத்து கொண்டு வந்து குமுசலிலே குடுத்தார். அதைப் பார்த்துக் கொண்டு முசியே லெறியிருந்து சீமா மூல மெல்லாம் நீர்தானே பார்த்துக் கொள்ளும். யிது வரைக்கும் உள்ள கணக்கெல்லாம் உம்முடக் கிட்ட ஒப்புவிக்கச் சொல்லுகுறோமென்று சொன்னார். அதுக்கு முசியே குளுவேத்து யிருந்து, நமக்கு சீமா மூலம் சம்மதி யெல்லாம் தெரியுற மட்டுக்கும் குமிசெல்க்காரரிலே ரெண்டு பேரும் நேமியும் யென்று கேட்டார். அப்போது முசியே லெறி யிருந்து யிந்த சீமை சேதி யெல்லாம் முசியே தெவோவுக்கு நன்றாய்த் தெரியும். ஸ்ரீரங்கம் சேதி யெல்லாம் முசியே (லெ)னுவாருக்குத் தெரியும். அவர்கள் ரெண்டு பேரையும் வைச்சுக் கொள்ளுமென்றும் சொன்னார். அதுக்கு நல்லது தமிழனிலே ஒருத்தன் நம்முடகிட்ட யிருக்க வேணும், ஒருத்தனையும் வைய்யுமென்றும் கேட்டார். அதுக்கு சாவடி துபாசி தைரியனாதனிருக்கிறான். அவனை வைச்சுக் கொள்ளுமென்று சொன்னார். அதுக்கு நல்லது யென்று அவரும் சம்மதிச்சுக் கொண்டார். அப்போது நான் வெறுமினே யிராமல் யென்ன பிறக்குதோர் பார்ப்போமென்று யோசிச்சு, ரங்கப்பனை அழைப்பிச்சு நிலுவைக் கேழ்க்க வேண்டாமா வென்று சொன்னேன். அதுக்கு ஆரும் ஒன்றும் சொல்லயில்லை. முசியே லெறி யிருந்து அதுக்கு சமயம் வரவேணும் யென்று சொல்லி அந்த வார்த்தையை அங்கே அடக்கிப் போட்டார்" யென்று சொன்னார்.

அதுக்கு மேல் நான் சொன்னது "யிப்படி நடந்துதே, யினிமேல் நம்முடைய செய்திக்கு யெப்படி யென்று கேட்டேன். அதுக்கு கோன்சேலுக்கு யெழுதின காகிதம் உம்முடைய கிட்டயிருக்குதே, அதை வைச்சுக் கொண்டிருந்து சமையத்திலே கோன்சேல் காகிதத்தைக் குடும் யென்று சொன்னார். குடுத்தால் நீரல்லவோ பேசவேணும், நமக்கு வேறே ஆரும் யில்லை யென்றும் சொன்னதுக்கு, நானே பேசுகுறேன், முசியே புலோ யென்ன சொல்லுகுறா"ரென்று கேட்டார். அவர் முந்தாம் நாள் நடத்திவிச்சதும் நேத்து நடத்திவிச்சதும் அவர் மனோபாவமும் சொன்னதுக்கு, அவருக்கு நியாயமில்லை யென்று, சொல்லி (பெடுத்தல்மீ) யெந்த பேச்சுக்கும் ஒவ்வொரு வார்த்தை சொல்லுகுறதும், வேறே யோசனையாயி முகத்தை வாடப்பண்ணிக் கொண்டு வெறுமினே யிருக்கிறதும், யெனக்கு ஒன்றும் தோணயில்லை யென்குறதும், யிந்த அடுக்கிலே யிருந்தார். பின்னையும் யிப்படி நானும் ஒவ்வொரு விசேஷமாயி பேசிக் கொண்டிருக்கையிலே முசியே லாலி அவர்கள் சீமா மூலக்காரியம் யெல்லாம் பார்க்கத் தக்கனவனாயிக்

கெட்டிக்காரனாயி ஒருத்தன் வேணுமென்றும் விசாரிக்குறாரா யென்று சொன்னார். யிப்படி யெல்லாம் ஒன்பது மணி மட்டுக்கும் பேசியிருந்து பூந்தோட்டக் கச்சேரிக்கு அவரை அனுப்பிக் கொண்டு நாம் வந்திருந்து பனியிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து சேர்ந்தோம்.

திரும்பவும் சாயங்காலம் சவாரி போய் யெட்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். இதுகள் யெல்லாம் கேட்டு நாம் பண்ணின யோசனை, முசியே லாலி அவர்கள் கொண்டு வருகுற அடக்கும் காரியத்துக்கும், கும்பினியிலே பணங்கள் யில்லாததினாலே நிறுவாகம் பண்ணக் கூடாது. முசே லாலி அவர்கள் வந்த காரியமும் விடத்தக்கதில்லை.[1] அப்பால் சேதியளும் காரியங்களும் யெப்படி நடக்குமோ? காரியமானால் பிடதை யாயிருக்கு (மகா பீடையாய்) தென்று யோசனை பண்ணினோம்.[2]

முசியே குளுவேத்தும் முசியே புலோவும் நேத்து முசியே லாலி அவர்களண்டைக்குப் போன பேர் யிது வரைக்கும் வரயில்லை. சண்டை சேதியளும் யின்னம் மோர்சா வெல்லாம் போட்டுத் தீரவில்லை. யிது சேதி.....

### *1758 வருசம், மாயு மாசம், தேதி 30; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 20; செவ்வாய்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை முசியே பெடுத்தல்மீ அண்டைக்குப் போய் அவரைக் கண்டு பேசிக் கொண்டு யிருக்கையிலே, அவர் சொன்ன சேதி: "முசியே குளுவேத்து தான் சீமைக்கெல்லாம் அதிகாரமாயி வந்த பல வருஷத்துக்குக் கையாலே ஆகாமல், அவர்கள்[3] மாயையிலே தானே விழுந்து, முசியே தெவோ தானே வைச்சுக் கொண்டாரென்றும், குமிசலிலே நடந்த சமாசாரமும் நேத்து சொன்னபடி தானே யின்றைக்கும் சொன்னார். அவருக்கு மனதிலே உச்சாகமில்லை. நம்முடைய பேச்சுகள் ஒன்றும்" நடக்கயில்லை யென்று சொன்னார். அதுகளெல்லாம் தெரிஞ்சு கொண்டு பூந்தோட்டக்கச்சேரிக்கு வந்து சுப்பா சோசியனை அழைப்பிச்சு அவருடனே பேசிக்கொண்டிருக்கையிலே கேழ்வியான சேதி, இங்கிரேசுக்காறர் கப்பல் வந்து மேலாகத் திரியுறபடியினாலே முந்தாம் நாள் யெல்லாரும் யிப்போது முசியே லாலி அவர்கள் பிறகே வந்த பத்துக் கப்பலுக்கும் கொம்மாந்தாமாயிருக்கிற முசியே குளுவேத்து யிருக்கிற விடத்திலே போய் குமுசேல் கூடி, அந்த யிங்கிலீசுக் கப்பல் மேலே போறதுக்கும் சென்னப்பட்டணத்து மேலே

[1] எந்தக் காரியத்தையும் அவசரமின்றி நிதானத்துடன் நடத்துகிறது என்று ஆங்கிலத்தில் உள்ளது.

[2] இங்கு சில வரிகளில் ஆங்கிலப் பதிப்பு மாறுபடுகின்றது. ஆயினும் தெளிவாக இருக்கிறது.

[3] தெவோ, லெநாயிர் (Le Noir)

போறதுக்கும் குமுசேல் பண்ணி, அதின் பேரிலே முசியே லாலி அவர்கள் உத்தாரம் வேணுமே யென்று முசியே குளுவேத்தையும் முசே புலோவையும் அனுப்பியிருந்தார்களே, அவர்கள் போய்க் கண்டு பேசிக் கொண்டு நேத்து வந்ததாகவும், யித்தனை நாள் முசியே லாலி அவர்கள் வந்தார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. இங்கிரேசுக் கப்பலானால் மேலாக ஒன்று காணுது. ஆலம்புரிக்கு நேராகப் பத்துக் கப்பல் காணுது யென்று கேழ்க்கப்பட்டுது. நாமும் பனியிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து சாயங்காலம் அஞ்சு மணிக்குச் சாரி போய் யேழரை மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

நேத்து சாரி போய் வருகுறதிலே கப்பலிலே வந்த ஒரு கப்பித்தான் ஒரு கடுதாசி கொண்டு வந்து குடுத்தான். அது சீமையிலே ராசாவினுடைய தோட்டத்திலே காவலாயிருக்கிற சொலுதாதுகளுக்கெல்லாம் கப்பித்தானாயிருக்கிறவன் நமக்கு யெழுதின காகிதம். அதிலே யெழுதியிருந்த வயணம், தான் முன்னாலே யிவ்விடத்துக்குக் கபுறு வந்தபோது நமக்கும் தனக்கும் சினேகமென்றும், நாம் தனக்குச் சிறிது தினிசுகள் கூட்டிக் குடுத்திருக்குறோமென்றும், யிப்போ யிந்தக் காகிதம் கொண்டு வந்து தந்தவர் தனக்கு சினேகிதரென்றும், யிவருடனே நம்முட திராணியும் காரியமும் நம்முடய பெருமையும் நம்முட குணங்களும் சகலமும் தான் சொல்லி யிருக்குறதாகவும், அவர் உம்மண்டைக்கு வருவார், அவருக்கு வேண்டிய காரியம் அனுகூலம் பண்ணிக் குடுத்தனுப்ப வேணுமென்றும் நமக்கு சீமையிலே கும்பினியார் மின்ஸ்தர்கள் ராசா யிவர்களாலே ஆகவேண்டிய காரியங்களுண்டானால் தமக்கு எழுதி அனுப்பிவிச்சால் தான் அவர்களுக்குப் போயி சொல்லி காரியம் சேகரம் பண்ணி அவர்கள் காகிதம் வாங்கி அனுப்பிவிக்குறோ மென்று யெழுதி யிருந்தது. யிது சேதி.

***1758 வருசம், மாயு மாசம், தேதி 31; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 21; புதவாரம்***

இத்தனாள் காலமே வீட்டிலே தானே யிருக்கையிலே சோபுதாரர் வந்து முசியே லாலி அவர்கள் முசே ரெங்கப்பிள்ளையை அழையென்று பத்து வாட்டி சொன்னார்கள் யென்று சொன்னான். உடனே பிறப்பட்டுக் கோட்டைக்குப் போனோம். அப்போது கந்தப்பன் (சொன்னது) : “யென்னமய்யா! முசியே லாலி அவர்கள் துரையை லெறி எனக் கூப்பிடுயென்குறார், சின்னதுரை முதலான பேர்களை யெல்லாம் அவரவர் பேர் சொல்லுகிறது அல்லாதே முசே என்றும் ஆரையும் அழைக்குறதில்லை. அப்படிக் கொத்தவர் நேத்து நாலு மணிக்கி வந்தவர், ராத்திரி பத்து மணி வரைக்கும் குமுசேல் பண்ணி கப்பலுக்கெல்லாம் எசமானாய் வந்திருக்குற முசியே தருஷே (துஷே) யென்குற வரை

சமாதானம் பண்ணி கப்பல்களை யெல்லாம் கூட்டிக் கொண்டு யிங்கிலீசுக்கப்பல் மேலே சண்டைக்குப் போகச் சொல்லிப் போட்டு தீனி திங்குற போது பத்து தரமுண்டு முசியே றெங்கப்பிள்ளை முசியே றங்கப்பிள்ளை யென்று சொன்னார். அதன் பேரிலே படுத்துக் கொண்டார். உடனே முசே லெறி கோவற்ணதோர் அவர்கள் பிறப்பட்டு ராத்திரியெல்லாம் நித்திரையு மில்லாமல் கப்பலுக்குச் சாமான்கள் யேத்துவிச்சுக் கொண்டு ரேவுலே தானே யிருந்தார். நாலு மணிக்கு முசியே லாலி அவர்களும் யெழுந்திருந்து ரேவுலே யிருந்து கப்பல் சாமான்களை யேத்திவிச்சு ஆறு மணிக்கு முசியே றெங்கப்பிள்ளையை அழையென்று பத்து தரம் உண்டு. அடிக்கடி உங்கள் பேச்சு சொல்லி யிதிலே நீங்கள் வராததினாலே வண்டிலி(யி)ன் பேரிலே யேறின பிறகு கூட துரையுடனே உங்கள் பேரைச் சொல்லி அவசியமாய் உங்கள் ஆனையை தம்மண்டைக்கு அனுப்பிவிக்கச் சொல்லிப் போட்டுப் போனா," ரென்று சொன்னான்.

அந்த வார்த்தையைக் கேட்டுப் போட்டு கோவர்ணமாவிலே யிருக்குற முசே லெறி கோவற்ணதோரண்டைக்குப் போய் அவரைக் கண்டு ஆசாரம் பண்ணினோம். அவர்கள் யின்றைய தினம் சுகமாய்த் தானே ஆசாரம் பண்ணி, "ஆரையும் முசியே யென்று அழையாத முசியே லாலி அவர்கள் உம்மை முசியே றெங்கப்பிள்ளை யென்று பத்து தரம் யிருபது தரம் சொல்லி, உம்முடைய ஆனையை உம்முடனே சொல்லி வாங்கி அனுப்பச் சொல்லிச் சொன்னார். ஆகையாலே நாம் உம்மண்டைக்கு ஆள் அனுப்பினோம். யிப்போவும் நீர் ஆவசியகமாய்ப் பெரிய ஆனையை அனுப்பிவிக்க வேணுமென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது, "நல்ல காரியமாச்சுது. அந்த ஆனை மதம் கொண்டு சிறிது நாளிருந்து அப்பாலே சொஸ்தமில்லாமல் சிறிது நாள் யிருந்து அதினாலே வில்லியநெல்லூரிலே அனுப்பிவிச்சு யிருக்குறோம். சாபுதாரர் வந்து சொன்னவுடனே மனுஷர் அனுப்பினவுடனே மூன்று மணிக்கெல்லாம் வந்தவுடனே உங்களண்டைக்கு அனுப்பிவிக்கிறேன்," யென்று சொன்னேன். நல்லதென்று சொல்லிப் போட்டு ராத்திரி யெல்லாம் நித்திரை யில்லாம லிருந்தவரானதினாலே உடனே போய் படுத்துக் கொண்டார். நாமும் அந்த மட்டுக்கும் பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து பனிரெண்டு மணிக்கி (வீட்டுக்குப் போனோம். ஆனை மூணு மணிக்கு வந்தது). நாலு மணிக்கெல்லாம் தொரை அண்டைக்கு அனுப்பிவிச்சுப் போட்டு சாரி போய் யேழு மணிக்கி வீட்டுக்கு வந்தோம்.[1]

---

[1] பெரும்பாலான இடங்களில் தெருஷே, இங்கிரேசுக்காரர், பிரெஞ்சுக்காரர், கோவற்ணதோர் போன்ற நிறைய வார்த்தைகளைத் திருத்தாமல் விட்டுள்ளேன். பிரதியைப் பற்றி வாசகர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக.

## ஜூன் 1758

### *1758 வருசம், சூன் மாசம், தேதி 1; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 22; குருவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரிக்குப் போய் யிருந்து பனியிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். யிதிலே கேழ்வியான சேதி : கப்பலெல்லாம் பாயெடுத்து சண்டைக்குப் போனார்கள். இங்கிலீசுக்காரர் வந்து கப்பலை அடுத்து ஆலம்புரிக் கோட்டையைப் பார்த்துக் குண்டு போட்டதாகவும் தேவனாம்பட்டணம் கொடி மரத்திலே வெம்பா குண்டு (shells) போயி விழுந்து ஒடிச்சுப் போட்டு தென்றும் கோட்டைக்குள்ளே யிருக்கிற மெத்தை மேலே ரெண்டு குண்டு போயி விழுந்து யிரண்டு யிடத்திலே மெத்தை யிடிஞ்சு போனதினாலே கோட்டையிலே யிருக்கிறவன் தானே குறை மெத்தையு மிடிச்சுப் போட்டதாகவும் போடுகிற குண்டு தென்புறத்து மதிலை யெல்லாம் இடிக்குறதாயும், கூடலூரிலே யிருந்து நாளை முதல் கொண்டு மோற்சாவிலே (batteries) யேத்தின பீரங்கிக ளெல்லாம் போடப்போறானென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், சூன் மாசம், தேதி 2; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 23; சுக்கிறவாரம்*

தேவனாம்பட்டணம் கோட்டை பிடிச்ச சேதி: இத்தனாள் காலமே பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியே போயிருக்கச்சே மசுக்கரையிலே யிருந்து சுலுப்பு வந்து தென்றும் அதிலே வந்த சேதி சீமையிலே யிருந்து யெட்டுக் கப்பல் வந்த சேந்து தென்றும், யின்னம் பத்துப் பதினைஞ்சு நாளையிலே யிங்கே வந்து சேரும் யென்று கேழ்க்கப்பட்டுது. அதின் பேரிலே பனியிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்தோம்.

சாயங்காலம் நாலு மணிக்கி யெழுந்திருந்தவுடனே கேழ்வியான சேதி, தேவனாம்பட்டணம் கோட்டைக்குள்ளே முந்தாம் நாள் விழுந்த குண்டுலே மருந்து பத்திக் கொண்டு வெகு சனம் செத்துப் போனதாகவும் கோட்டைக்குள்ளே முந்தாம் நாள் குடிக்கத் தண்ணீரில்லாமல் உப்புத் தண்ணீர்க் குடிக்க மாட்டாமல் யித்தனாள் காலமே ஒன்பது மணிக்கி கோட்டைக்குள்ளே வெள்ளைக் கொடி போட்டு வெள்ளைக் கொடி பிடிச்சுக் கொண்டு சாவியும் கொண்டு வந்து குடுத்து கோட்டையை விட்டுவிட்டார்கள் யென்றும், யிவர்கள் மனுஷர் முன்னூறு பேர் கோட்டைக்கு உள்ளே போயிருக்கிறார்களென்றும், யிந்த சேதிக்கு முசியே சொபினே(வுக்கு)க் காகிதம் வந்துதென்றும் முசியே பெடுத்தல்மீயும்

முசியே புலோவும் தேவனாம்பட்டணத்துக்குப் பயணமாய்ப் போறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. பீரங்கி போடயில்லை. வெடிஞ்சு சாமத்துக்கு மேலே பீரங்கி சத்தமில்லை. ஆகையாலே கோட்டை பத்தேதா னென்று தோணப்பட்டது. யிதல்லாமல் காரைக்காலிலே யிருந்து கட்டுமரம் வந்ததென்றும் அங்கே பனிரெண்டு கப்பல் வெள்ளைக் கொடியுடனே காணப்படுகிறது யென்றும் கேழ்க்கப்பட்டுது. நாமும் சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

### *1758 வருசம், சூன் மாசம், தேதி 3; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 24; சனிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனயிலே முசியே லெறி கோவற்ணதோர் அவர்கள் நாலு மணிக்கிப் பிறப்பட்டு முசியே லெறி (அல்ல, லாலி) அவர்கள் அண்டைக்கு தேவனாம்பட்டணத்துக்குப் போனார் யென்று கேழ்க்கப்பட்டுது. பூந்தோட்டக் கச்சேரியே வந்திருக்கையிலே தேவனாம்பட்டணம் கோட்டையிலே முசியே புலோ முதலான பேர் போய் அங்கே யிருக்கிற பணம் காசு தட்டுமுட்டு சகலமும் பாத்து யெடுத்து யெழுதுகுறார்களென்றும், தேவனாம்பட்டணத்திலே யிருந்து சண்டை குடுத்தவனை (படைத் தலைவனைக்) காவலில் வைச்சு மைத்த பேர்கள் கையிலே எல்லாம் கையெழுத்து வாங்குறார்களென்றும், தீவிக்கோட்டை மேலே ஆயிரம் பேரைக் கூட்டிக் கொண்டு முசியே ஒம்மோ போனார் யென்றும், மூன்று கப்பல் போச்சுதென்றும் கேழ்க்கப்பட்டுது. அதின் பேரிலே பனியிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்து சாப்பிட்டு நித்திரை போகையிலே முசியே லாலி அவர்களும் பாளையமும் வருகுறார்களென்றும் சேதி வந்துது. உடனே எழுந்திருந்து அங்கி போட்டுக் கொள்ளுகுறதுலே சிரஞ்சீவி அப்பாவு பெண்சாதி நொந்து படுகுறாளென்று சொன்னார்கள். உடனே கோபாலசுவாமியை அழைப்பிச்சு வீட்டிலே யிருக்கச் சொல்லிப் போட்டு நாமும் பிறப்பட்டு வில்லியநெல்லூர் வாசல் வழியே யெதிர் கொண்டு போகையிலே முசியே கில்லியார் பிறப்படுகுறரென்று கேட்டு, அவர் வீட்டுக்குப் போன உடனே அவர்கள் வண்டியேறிக் கொண்டு போனார். உடனே மழை வந்துது. மழைக்கு அங்கே நின்று அப்பால் பிறப்பட்டு மேலுகிரிப் பண்டிதன் சாவடிக்கி அப்பாலே முசியே கில்லியாருடனே யிருக்கையிலே வினாயகப் பிள்ளை வந்து யிற்றைக்கு முசியே லாலி அவர்கள் வரயில்லை யென்று சொன்ன உடனே, முசியே கில்லியார் நம்மைப் பார்த்து ஆனாலும் யெட்டுமணி மட்டுக்கும் நீர் மேலுகிரிப் பண்டிதன் சாவடியிலே யிருமென்று சொல்லிப்போட்டு அவர் வீட்டுக்குப் போனார். யெட்டு மணி மட்டும் நாம் அங்கே யிருந்து ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தோம். வீட்டுக்கு வருமுன்னே சிறஞ்சீவி அப்பாவுக்கு, ராத்திரி யெட்டு மணியும்

பத்து மினித்தும் ஆனவுடனே தனுசு லக்கினத்திலே ரெண்டாம் பெண் புத்திரி பிறந்தாளென்று கோபால சுவாமியும் சுப்பா சோசியரும் வந்து சொன்னார்கள். மனதுக்கு மெத்த சந்தோஷமாச்சுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 4; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 25; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு மேலுகிரிப் பண்டிதன் சாவடிக்கிப் போய் யிருந்தவிடத்திலே தண்டுலே யிருந்து உறல் (mortar) கொண்டு வருகுற பேரும் தலைகாணி, செம்மரம், ஒலக்கை, நாற்காலி, மேசைப்பலகை கொண்டு வருகுற பேருமா யிருந்தது. அதைப் பார்த்துக் கொண்டிருக்கையிலே சவரிராயப் பிள்ளைக்குத் தண்டிலே யிருந்து சேதி (வந்த) தென்ன வென்றால், தேவனாம்பட்டணத்துக் கோட்டையிலே அறுபது லட்சம் அகப்பட்டுதென்றும் கல்லெழைச்ச ஆனை அகப்பட்டுதென்றும் யின்னம் ரெண்டு கசானா வீடு பார்க்கயில்லை யென்றும் வெகு திரவியம் அகப்பட்டுதென்றும், முசியே லாலி அவர்களானால் யிதோ வருகுறார் அதோ வருகுறார் யென்றும் யிது முதலான சேதிகள் அறுக்காறுகள் அடிக்கடி வந்து சொல்லுகுறதை நாமும் கேட்டுக் கொண்டிருந்தோம். யிப்படி யிருக்கையிலே அஸ்தமிச்சவுடனே முசே லெறி அவர்கள் பிறப்பட்டு வருகுறதுக்கு முன்னுதாய் நாலு மாடு கட்டின வண்டியிலே மருந்து போடுகுற பொட்டியிலே கசானா போட்டு வந்துது. மாடு லகுவாய்த் தானே யிழுத்துக் கொண்டு வந்துது. ஆகையாலே லெட்சம் லெட்சத்தன்பதினாயிரம் ரூபாய்க்கு உண்டென்று யெண்ணிக் கொண்டோம். அப்பால் முசியே லெறி அவர்கள் சோதனைக் (சோதனைச் சாவடி) கிட்ட வந்தவுடனே யிருக்கிற பேர் பொதி வண்டிகளைக் கொளுத்தியும்[1] மத்தள தாளங்களை அடிச்சு சத்தம் கேட்டவுடனே, முசியே லெறி அவர்கள் கூப்பிட்டு தீவட்டிகளை அவிச்சுப் போடச் சொல்லிப் போட்டு தாம் யிருட்டிலே பிறப்பட்டு வந்து விட்டவுடனே நாமும் பிறப்பட்டு வீட்டுக்கு வந்தவுடனே கசானா சேதி விசாரிக்குமிடத்திலே, நம்முட வீட்டுக்கு யெதிர் கோயிலிலே யிருக்கிற முசியே லாலி அவர்கள் கோன்சேலியேர் மறுக்கி யென்கிறவர் (Marquis) சொன்னது, விராகனும் ரூபாயும் நானா விதமும் லக்ஷத் தன்பதி னாயிரம் ரூபாயிக் குண்டு, யின்னம் சாமான்களிருக்குது, யின்னம் யெடுத்து யெழுதயில்லை, கசானா மாத்திரம் யெழுதிக் கையெழுத்துப் போட்டோம் யென்று சொன்னார். யிதல்லாமல் முசியே திலார்ஷு தோட்டத்திலே யிருக்கிற வெள்ளைக்காரன் சொன்னது, லக்ஷத் திருபத் தையாயிரம் ரூபாயிக்கு உண்டென்று சொன்னான். அதுக்கும்

[1] வண்டிகளின் கூடாரம் ஏதோ காரணத்தினால் தீப்பிடித்திருக்க வேண்டும்.

யிதுக்கும் இருபத்தையாயிரம் ரூபாய் தபாவத்து யிருக்குதென்று யெண்ணிக் கொண்டோம். மத்தப்படி முசியே லாலி அவர்களானால் தீவிக் கோட்டைக்குப்[1] பவுன்சுக் கூட்டிக் கொண்டு நேத்து மத்தியானம் தீனி தின்னவுடனே பயணம் போனார்களென்று சொல்லிக் கொண்டார்கள். யிது சேதி.

*1758 வருசம், சூன் மாசம், தேதி 5; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 26; சோமவாரம்*

இத்தனாள் காலமே வீட்டிலே யிருக்கையிலே பதினோரு மணிக்கு முசியே லெறி கோவர்ணதோர் அவர்கள் அழைக்குறார்களென்று சோபுதாரர் வந்து அழைச்சான். உடனே பிறப்பட்டு கோட்டைக்குப் போய் அவரைக் கண்டவிடத்திலே, அவர் சொன்ன சேதி, கூடலூருக்கு அனுப்பிவிச்ச சாமான்களெல்லாம் திரும்பவும் வந்து சேர வேணுமே. சாவடிக்காரர், நயினாருக்குச் சொல்லி கூலிக்காரரைச் சேகரிக்க வேணுமென்று சொன்னார். நல்லது ஊரிலே யிருக்கிற கூலிக்காரரை யெல்லாம் பிடிச்சு வரச் சொல்லுகுறோம் யென்று சொல்லி அந்த மட்டிலே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்த பிறகு கேழ்வியான சேதி: தேவனாம்பட்டணத்திலே யிருந்து ஒரு சுலுப்பு வந்துதென்றும், அதிலே தேவனாம்பட்டணம் தொரை மேஸ்தர் ஒஞ்சும் (Mr. Wynch) கூடலூர் தொரை[2] மேஸ்தர் சோபரும் (Mr. Sloper) பின்னையும் கோன்சேலியோர்களும் ஒப்பிசியால்மார் வகையிரா யிருபது பேருக்குண்டு வந்து யிறங்கி, மேல் வீட்டின் பேரிலே வந்த பிறகு அலுமுசு சாப்பிட்டு அந்த யிருபது பேர் கையிலேயும் கையெழுத்து வாங்கி, பழைய குவர்ணமாவிலே விடுதி போட்டுவிச்சு அனுப்பினார்க ளென்று சொன்னார்கள். சாயங்காலம் சாரி போய் யேழு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். சாவடியாரையும் நயினாரையும் தாக்கீதை பண்ணிக் கூலி ஆளுகள் பிடிக்கச் சொல்லித் திட்டம் பண்ணினோம்.

*1758 வருசம், சூன் மாசம், தேதி 7; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 28; புதவாரம்*

இத்தனாள் காலமே பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்திருக்கையிலே பன்றி அறுக்குறதுக்கு வேறே யிடமில்லை, பூந்தோட்டக் கச்சேரியை விடச் சொல்லி தொரை சொன்னாரென்றும், ஆள் வரயில்லை கூலி ஆளும் வேணு மென்றும் சொன்னாரென்றும் வந்து சொன்னார்கள்.

---

[1] தீவுக்கோட்டை என்றும் இது அழைக்கப்பட்டது.

[2] கூடலூருக்கென்று ஆளுநர் தனியாக இல்லை. ஸ்லோப்பர் அங்கே யிருந்த கடல்—தரை சுங்க அதிகாரி (Eng. Vol. P.191),

கூலி ஆள் எல்லாம் வந்தார்கள். இன்னம் ஆளுக்குத் தாக்கீது பண்ணி யிருக்குறோம். பூந்தோட்டக் கச்சேரியை விடுகுறதெப்படி? வேறே ஒரு செட்டி கிடங்கு யிருக்கு," தென்றும் காகிதம் யெழுதி அனுப்பி விச்சு யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசியே லாலி அவர்கள் பாளையம் கோட்டை மேலேயும் தீவிக் கோட்டை மேலேயும் பவுன்சு அனுப்பிவிச்சு தாமும் சிதம்பரம் மட்டுக்கும் போய், திரும்ப மஞ்சகுப்பம் வந்து சேர்ந்தாரென்றும், பாளையம் கோட்டையிலே யிருந்த துலுக்கச்சி ஒடையார் காட்டிலே ஒடிப் போனதாகவும், பாளையம் கோட்டையிலே யிவர்கள் போய் வெள்ளை நீசான் போட்டார்களென்றும், தீவிக்கோட்டையிலிருந்த யிங்கிலீசுக்காரன் சாவியை யிவர்கள் போகு முன்னே வருகுற சேதிக் கேட்டு, யெதிராக அனுப்பிவிட்டு யிங்கிரேசுக்காரர் அதிலே யிருந்தவர்களும் ஒடிப்போனார்களென்றும், தீவிக் கோட்டையிலே வெள்ளைக் கொடி போய் விழுந்ததென்றும் திருச்சிராப்பள்ளியிலே யிருந்த யிங்கிலீசுக்காரரெல்லாரும் கோட்டையைத் தொண்டமான் வசம் பண்ணிப்போட்டு தீவிக்கோட்டைக்கு வந்த பிறகு, தொண்டமான் அங்கே காவலாயிருந்த பிரான்சுக்காரருடனே பேசிக் கொண்டு அவர்கள் வெளியிலே வந்து கோட்டையிலே வெள்ளைக் கொடி போட்டார்கள் யென்றும், ஆற்காட்டுக் கோட்டையிலே யிருந்த யிங்கிரேசுக்காரரெல்லாம்[1] சென்னப்பட்டணத்துக்குப் போனார்களென்றும், திருவண்ணாமலையிலே யிருந்த பிரான்சுக்காரர் ஆற்காட்டுக்குப் போய் வெள்ளைக் கொடி போட்டார்களென்றும், சென்னப்பட்டணத்திலே யிருந்த பேரெல்லாம் பயந்து முஸ்தீப்பா யிருக்கிறார்களென்றும், தஞ்சாவூர் (ராசா), தொண்டமான் மறவன் ஸ்தானாபதிகள் வந்து முசியே லாலி அவர்கள் கிட்ட காத்திருக்கிறார்களென்றும், முசியே லாலி செனரால் அவர்கள் யின்று சாயங்காலம் புதுச்சேரிக்கு வருகுறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. அதினாலே குண்டுசாலை முதல் கோட்டை வரைக்கும் தோரணம் கட்டி வாழை மரங்கள் கட்டி தென்னை ஒலைகள் நட்டு தண்ணீர் தெளிச்சுக் கோரைகளைப் பரப்பி விச்சு எல்லாம் தயாராச்சுது. நாமும் அஞ்சு மணிக்கிப் பிறப்பட்டு குண்டுசாலை மட்டுக்கும் போய் மேலுகிரிப் பண்டிதன் சாவடியிலே எட்டு மணி வரைக்கும் யிருந்து பார்த்தவிடத்திலே யின்றைக்கும் வரயில்லை யென்று கேழ்க்கப்பட்டுது. அதின் பேரிலேயும் பிறப்பட்டு வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 8; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 29; குருவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே ஒரு மணி வேளைக்கி

---

[1] இங்கிலீசுக்காறர், பிரெஞ்சுக்காறர் என்றே பிரதி முழுவதும் எழுதப்பட்டுள்ளது, ஒரு சில இடங்கள் தவிர.

முசே லெறி குவற்ணதோரவர்கள் துபாசி கந்தப்ப முதலி வந்து தொரை அவர்கள் சொல்லி வரச்சொல்லிச் சொன்னாரென்று சொன்னார். அந்த சேதியே தென்றால், நாளைய 30 தேதி சாயங்காலம் முசியே லாலி செனரால் அவர்கள் புதுச்சேரிக்கு வருகுறார்கள், ஆகையாலே மகாநாட்டார், வர்த்தகர், உத்தியோகஸ்தர்கள் சகல செனங்களும் செனவரி பண்டிகைக்கு யெப்படி நசற் கொண்டு வருவார்களோ அந்தப்படிக்குச் சகலமான பேரையும் அழைப்பிச்சு நசர் (?) திட்டம் பண்ணி நாளைய சாயங்காலத்துக்குத் தயாராய் வைச்சுக் கொண்டு யிருக்கச் சொன்னார்களென்று வந்து சொன்னான். அதின் பேரிலே நாமும் சேவுகரை அனுப்பிவிச்சு சகலமான பேரையும் கூட்டி வரச் சொன்னோம். அந்தப் படிக்கு சாயங்காலம் ஆறு மணிக்கெல்லாம் யெல்லாரும் வந்தார்கள். அதன் பேரிலே சனேரி பண்டிகை டாப்புக் காகிதத்தை யெடுத்துக் கண்டால் குருவப்பச் செட்டி கையிலே குடுத்து ராச கோபால நாயக்கனையும் கூட்டி மகாநாட்டார், குண்டு கிராமத்தார் முதல் சகலருக்கும் சொல்லித் திட்டம் பண்ணிவைக்கச் சொல்லி விச்சு நாளைய சூரிய உதையம் முதல்க் கொண்டு சகலமான பேரும் மேலுகிரி பண்டிதன் சாவடியிலே போயிருக்கச் சொல்லித் திட்டப் படுத்தி, நயினாரையும் அழைப்பிச்சு பத்திரமாய்ச் சொல்லி, யிதல்லாமல் ஆள்கள் ஒட்டகைகள் யெல்லாம் சேத்து நீசான் நவபோத்து சகலமும் முஸ்தீது பண்ணி வைக்கச் சொல்லி, பயிராக்கு மேளதாளம் தாசிகள் பாடகர், மத்தப்படி ஆலிம்வாலி (சாதாரண) சகலமான பேரையும் சேகரிச்சுக் கொண்டு போய் யிருக்கச் சொல்லி, யிதிலே யாராகிலும் சொன்னபடிக்கு நடவாமல் போனால் உடனே தெண்டிச்சு சாவடியிலே வைக்கச் சொல்லித் திட்டப் படுத்தி அனுப்பி விச்சோம். முசியே லெறி கோவர்ணதோர் அவர்கள் யின்று நாலு மணிக்குத் தானே அரியாங்குப்பத்திலே போயிருந்து நாளை முசியே லாலி செனரால் அவர்கள் அவ்விடத்துக்கு வந்தவுடனே அங்கே தீனி மைத்தது முஸ்தீப்பு பண்ணி விருந்து பண்ணிவிச்சு சாயங்காலம் அழைச்சு வருகுறதாகவும் நாம் முதல் சகலமான பேரும் குண்டுச் சாலையிலே காண்பிச்சுக் கொண்டு கூட வருகுறதென்றும் குமுசெல்க்காரரிலே நாலுபேர் வில்லியநெல்லூர் கெவனி வாசலிலே யிருந்து காண்பிச்சுக் கொள்ளுகுறதென்றும், வீதிகள் யெங்கும் தண்ணீர் தெளிச்சும் தோரணங்கள் கட்டி வாழை தென்னை மட்டைகள் நட்டு கோரை தெளிச்சு வாசலுக்கு வாசல் விளக்குகள் வைச்சு அலங்காரம் பண்ணி யிருக்க வேணு மென்றும் யிந்தப்படிக்கெல்லாம் திட்டம் பண்ணி அரியாங்குப்பத்துக்குப் போனார். யிது சேதி.

முசியே லாலி அவர்கள் தேவனாம்பட்டணம் செயிச்சு யிவ்விடத்துக்கு வந்த சேதி

*1758 வருசம், சூன் மாசம், தேதி 9; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 30; சுக்கிரவாரம்*

இத்தனாள் உதைய முதல் மூணு மணி மட்டும் முசியே லாலி சனரால் அவர்கள் சகல செயத்துடனே வருகுற படியினாலே உத்தியோகஸ்தர் ஸ்தானாபதிகள் வர்த்தகர் மகானாட்டார் குண்டு கிராமம் வில்லியநெல்லூர் சில்லரைக்காறர்(?) சகலமான பேரும் (பேரையும்) அழைப்பிச்சு, அவரவருக்கு நசர் கொண்டு வர யிடமில்லாத பேருக்கெல்லாம் பட்டு சுருட்டுகள் சீறொப்பாக்கள் ரேக்குகள் வராகன்கள் ரூபாய்கள் யிதுகளெல்லாம் அவரவருக்குக் குடுத்து, நவபத்து பயிராக்கு மேளதாளம் தாசி மேளம் முதலானதுக ளெல்லாம் ஆனை ஒட்டகைகள் நீசான் சகல பிருதுகளும் கொண்டு வரச் சொல்லி நாமும் சிரஞ்சீவி அப்பாவும் சிரஞ்சீவி அண்ணாசாமி அய்யாசாமி யெல்லாரும் வேடிக்கை யாயிப் பிறப்பட்டு நாலு மணிக்கிக் குண்டு சாலை வழியிலே யெதிராகப் போனோம்.

அப்போது முசியே லாலி அவர்கள் அரியாங்குப்பத்திலே யிருந்து சாப்பிட்டு நாலு மணிக்கிப் பிறப்பட்டு வண்டி மேலே பிறப்பட்டார். உடனே அரியாங்குப்பத்திலே யிருபத்தோரு வேட்டு பீரங்கி போட்டார்கள். அஞ்சு மணிக்கி முசியே லாலி அவர்களுக்கு முன்னுதாய் யிருநூறு காடுதே குதிரைக்காரன் உருவின கத்தியுடனே வர, மைத்தப்படி சொலுதாதுகள் பாறுக்காறர் தம்பூறுகள் அடிச்சுக் கொண்டு யிங்கே யிருந்து போன பேரும் அங்கே யிருந்து வந்த பேரும் யெல்லாரும் மெத்த நேத்திகளாய் உடுப்புகள் உடுத்திக் கொண்டு முன்னும் பின்னும் நெருங்கி வர, யிந்தப்படிக்கு உச்சாகமாக வந்தார்கள். அப்போது நாமும் சகல வேடிக்கையுடனே யெதிரே போய் பல்லக்கை விட்டுக் கீழே யிறங்கி சிரஞ்சீவி அண்ணாசாமி அய்யாசாமி அப்பாவு மூன்று பேரும் கூட வர நாமும் கிட்டப் போனோம். அப்போது முசியே லாலி சனரால் அவர்கள் நம்மைக் கண்டவுடனே வெகு சந்தோஷத்துடனே வண்டியை விட்டு யிறங்கினார். உடனே நாம் கிட்டப் போய் பொன்பூ, வெள்ளிப்பூ மேலே யெல்லாம் சோமிக்கத் தக்கதாகப் போட்டு பூச்செண்டும் கையிலே குடுத்து வச்சிர மோதிரமும் நூத்தன்பது விராகன் பெறுகிறதும் கையிலே குடுத்து, சிரஞ்சீவி அண்ணாசாமி அய்யாசாமி அப்பாவு மூன்று பேரும் முப்பது விராகன் வீதம் தொண்ணூறு விராகன் குடுத்து ஆசாரம் பண்ணினோம். உடனே அவர்களும் மெத்த சந்தோஷத்துடனே நம்மைப் பல்லக்கேறிக் கொண்டு முன்னுதாகப் போகச் சொல்லி தாமும் குதிரை யேறினார். உடனே நாமும் சிரஞ்சீவி அண்ணாசாமி அய்யாசாமி அப்பாவு யெல்லாரும் பல்லக்கு மேலேயும் குதிரை மேலேயும் யேறிக் கொண்டு முன்னே பிறப்பிட்டோம். நமக்கு முன்னுதாய்ப் பட்டணத்திலுள்ள சகல

சனங்களும் மேளதாளங்கள் தாசிகள் பிருதுகள் பயிராக்குகள் சகலமும் வர, நமக்குப் பிறகே காடுது குதிரைக்காரர் உருவின கத்தியுடனே வர, அவர்களுக்குப் பிறகே செனரால வர்கள் குதிரை மேலே வர, அவருக்கு பிறகே ஒப்பிசியால்மார்கள் பெரிய மனுஷர்கள் வர, அதன் பிறகே நவபத்து வர யிந்தப்படிக்கி வெகு வேடிக்கையாயி வருகுறதிலே பட்டணமெல்லாம் வீதி வீதி தப்பாமல் தோரணங்கள் கட்டி, வாழைகள் தென்னை மட்டைகள் நட்டு சனங்கள் தண்ணீர் தெளிச்சுக் கோரைகள் பரப்பி வெகு வேடிக்கையாயி யிருக்க, யிப்படி பட்டண மெல்லாம் சிங்காரிச்சு யிருக்கிறத்தைப் பார்த்துக் கொண்டு வெகு சந்தோஷமாய் உள்ளே வந்தவுடனே கெவுனி வாசலிலே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அதின் பேரிலே நாலு பேர் கோன்சேல்க்காரர் வந்து கண்டார்கள். அதன் பிறகு டங்காசாலைக் கிட்டப் போய்க் கொண்டிருக்கச்சே முசே லெறி கோவற்ணதோர் அவர்களும் முசியே பெடுத்தல்மீயும் மைத்த கோன்சேலியேர்களும் வந்து கப்புசுக் கோயிலிலே அழைச்சுப் போயி பூசைக் கேட்டார்கள். அப்போது யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அதன் பேரிலே பிறப்பட்டு கோட்டைக்குள்ளே வந்தவுடனே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். மெத்தை மேலே போயி காம்பிராவிலே போய் உடுப்பெல்லாம் வாங்கிப் போட்டு தேத் தண்ணீர் குடிச்சுக் கொண்டுயிருந்தார். வாசலிலே ரெண்டு பிறத்திலும் முசியே லெறி கோவற்ணதோர் ஒரு பிறமும், முசியே சுப்பீர் ஒரு பிறமும் நின்று கொண்டு, வந்த வெள்ளைக்காரர் பாதிரிமார் கபுறுகள் அடிக்கடி உள்ளே போயி சொல்லி வருகுறதும் இந்த அடுக்கிலே யிருந்தது. வந்த வெள்ளைக்காரர் பெண்டுகளெல்லாம் வெளியிலே தானே யிருந்தார்கள். மத்தப்படி தமிழர் உத்தியோகஸ்தர் வர்த்தகர் மகாநாட்டார் சகலமான பேரையும் மெத்தையின் கீழே தானே நிறுத்திப் போட்டார்கள். யிப்படி யிருக்கையிலே நாம் மெத்தை மேலே தானே யிருந்தோம். அப்போது பாதிரிமாரும் முசியே லெறி அவர்களும் தைரியனாதனை அழைச்சுக் கொண்டு வந்து மெத்தை மேலே யிருந்தார்கள். ஆருக்கும் சமையமில்லாததினாலே அவரவர் தானே யிறங்கிப் போனார்கள். அதன் பிறகு முசியே லெறி அவர்கள் சொன்னது, "யினிமேல் சமையமில்லை. யெல்லாருக்கும் நாளைய உதயத்திலே பேட்டி," யென்று சொன்னார்கள். அதன்பேரிலே நாம் வெளியே வந்து யெல்லாரையும் நாளைய உதையத்திலே பேட்டிக்கி வரச்சொல்லிப் போட்டு நாமும் சிரஞ்சீவி அண்ணாசாமி அய்யாசாமி அப்பாவு யெல்லாரும் வீட்டுக்கு வந்தோம். நாம் குண்டு தாழை அண்டையிலே பேட்டியான போது அப்போது பேட்டி கண்டவர்கள் கோந்து தே மோமுறசன் (மோமொரன்சி) முதலான ராச வங்கிஷத்தாராயிருக்கிற பேர்கள் பேட்டி ஆனார்கள். அப்போது மோமமுறசானிருந்து (?) கும்பினி குடுத்தியோர் றங்கப்பன் யென்று

சொன்னார். நாம் நசர் குடுக்கிற போது முசியே சுப்பீர் சொன்னது, "யிவ்விடத்து தஸ்ரத்தூரியாக்கும் (வழக்கமாகும்), வாங்கிக் கொள்ளுங்கோள். யிவர் பெரிய மனுஷன் யிவர் சேதி களெல்லாம் நான் பயாவாரியாயி சொல்லுகுறேன்," யென்று சொன்னார். யிது அங்கே நடந்தது. பட்டணமெல்லாம் ராத்திரி வீட்டுக்கு வாசல்களெல்லாம் விளக்குகள் வைச்சு பண்டிகை பண்ணினார்கள். முசியே லெறி அவர்களும் முசியே லாலி அவர்களுக்கு ஒரு துறாய் குடுத்தார். அது நேத்தியாயிருந்தது. அன்னூறு விராகன் பொறும். ராத்திரி பத்து மணிக்கு ரசா சாயபுவும் அல்லி நக்கி சாயபுவும் போய்க் கண்டு நூறு அசற்பீ (மொகர்) குடுத்ததாகவும், உள்ளே போனது கண்டு சலாம் பண்ணினது, அசறபி (?) வைச்சது, உடனே வெளியே வந்து விட்டதும் யிந்த அடுக்கிலே நடந்துதென்றும், அதன் பிறகு பாப்பய்யப் பிள்ளையும் அவன் மகனும் அரண்மனைக்காரன் முகாந்திரமாய் வந்துக் கண்டு யிருபத்தோரு அசரபி(?) குடுத்ததாகவும், அதன் பேரிலே காவல் தேவையில்லை[1] யென்று முசியே லாலி செனரால் அவர்கள் சொன்னதாகவும், அதன் பிறகு அஞ்சு அசரபி வைச்சு முசே லெறியைக் கண்டதாகவும், அவர் "புத்தியாய் நடந்து, கோ" வென்று சொல்லிப் போகச் சொன்னதாகவும், அதன் பிறகு அந்த சந்தி பண்ணின அரண்மனாக்காரனுக்கு ஏழு அசரபி வைச்ச கண்டு உபசாரஞ் சொன்னதாகவும் அதன் பேரிலே வீட்டுக்குப் போனானென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 10; வெகுதானிய வருசம், வையாசி மாசம், தேதி 31; சனிவாரம்***

முசியே லாலி அவர்கள் தேவனாம்பட்டணம் கோட்டை செயிச்சதுக்கு மகாநாட்டார் சகலமான பேருக்கும் பேட்டி பண்ணிவிச்ச சேதி :

இத்தனாள் முசியே லாலி செனரால் அவர்களுக்கு மகாநாடு பேட்டி பண்ணிவிக்குற நிமித்தம் பிறப்பட்டு பூந்தோட்டக் கச்சேரியிலே ஒன்பதரை மணி வரைக்கும் அங்கே யிருந்து கொண்டு அவரவருக்கு மனுஷரை அனுப்பிவிச்சு வர்த்தகர் மகாநாட்டார் மணியக்காரர் சகலமான பேரையும் ஆலிம்வாலி (சாதாரண மனிதர், ஏழைகள் உள்ளிட்ட) மேளதாளம் தாசியள் யெல்லாரையும் அழைப்பிச்சு அவரவர் முன் பின் அந்தப்படிக்கி நசர் கொண்டு வந்த பேர் போக, கொண்டு வராத பேருக்கு யெல்லாம் வராகனில்லாதவனுக்கு வராகன் வஸ்திரம் யில்லாதவனுக்கு வஸ்திரம் குடுப்பிச்சுக் கோட்டைக்கு மனுஷரை அனுப்பிவிச்சுக் கபுறு

[1] அவரை மேலும் காவலில் வைக்க வேண்டாம், என்பது பொருள். கொதே காலத்திலிருந்து அவர் காவலில் இருந்து வந்தார்.

விசாரிக்குமிடத்திலே, முசே லாலி செனரால் அவர்கள் நேத்து இரவெல்லாம் நித்திரையில்லாமல் கூத்தும் வேடிக்கையுமாயிருந்ததினாலே நித்திரை போறாரென்று சொன்னார்கள். அதின்பேரிலே யெல்லாரையும் வைச்சுக் கொண்டு சிரஞ்சீவி அப்பாவை அங்கே யிருக்கச் சொல்லிப் போட்டு நாம் பிறப்பட்டு கோட்டைக்குப் போய் மெத்தை மேலே யிருக்கிற முசியே லெறி அவர்களைக் கண்டு அங்கே யிருக்கிறபோது அவர் மகாநாட்டார் வந்தார்களாயென்று கேழ்க்கிறதுக்கு யிடமில்லாமல் உள்ளே போறதும் வெளியே வாறதுமாக யிருந்தார். யிப்படி யிருக்கையிலே பாதிரிமார்கள், சின்ன முதலியார், தைரியனாதன் முதலாகிய கிறிஸ்துவரை யெல்லாம் சேகரிச்சுக் கொண்டு பேட்டி பண்ணி விக்குற நிமித்தியம் அவர்களும் மெத்தை மேலே வந்து காத்திருந்தார்கள்.

யிப்படி யிருக்கையிலே முசியே லாலி செனராலவர்கள் நித்திரை யெழுந்திருந்ததாகவும் அதன் பேரிலே பாதிரிமாரும் கிறிஸ்துவரும் பேட்டிக்கி வந்திருக்கிறார்களென்று சொன்னதாகவும், அதுக்கு செனராலவர்கள் யிப்போ கூடாது, நாலு மணிக்கி வரச் சொல்லென்று சொன்னதாகவும், அந்தச் சேதி வந்து பாதிரிமாரோடே சொன்னார்கள். உடனே பாதிரிமார் யெல்லாரையும் கூட்டிக் கொண்டு கீழே யிறங்கிப் போய் விட்டார். அதன்பேரிலே நாம் யோசனை பண்ணி முசியே லாலி அவர்களண்டைக்குப் போய் மகாநாடு வந்து கூடுகிறது மெத்தப் பிரயாசை யெல்லாரும் வந்து கூடி யிருக்கிறார்கள். அவர்களைப் பேட்டி வையாமல்ப் போனால் திரும்பவும் வந்து கூடுகுறது மெத்தப் பிரயாசம் யென்று சொன்னோம். உடனே அவர் முசியே லாலி செனறால் கிட்ட யிருக்கிறவர் ஒருத்தர் அவருடனே சொன்னார். அவர் போய் செனராலுக்குப் போய்ச் சொல்லி யெல்லாரையும் வரச் சொல்லி உத்தாரம் வாங்கி முசியே லாலீ அவர்களுக்குச் சொன்னார். அவர் வந்து நமக்குச் சொன்னார். உடனே நாம் மனுஷரை சிரஞ்சீவி அப்பாவண்டைக்கு அனுப்பிவிச்சு யெல்லாரையும் கூட்டி வரச் சொன்னோம். யெல்லாரும் மெத்தை மேலே வந்தவுடனே நாம் முன்னுதாய்ப் போய் செனராலவர்களுக்கு யிருநூறு விராகன் நசர் வைச்சு காண்பிச்சுக் கொண்டு ஒருத்தர் ஒருத்தராய் உத்தியோகஸ்தர், மகாநாட்டார், வர்த்தகர் எல்லாரையும் வரிசைப்படிக்குப் பேட்டி பண்ணி விச்சோம். அவரவர் நசர் வைச்சதுக்கு டாப்பு யிருக்குது. அந்த டாப்புப் படிக்கி கீழே யிருக்குது. யிதல்லாமல் சீமா மூலத்துக்கு ஆயிரம் விராகன் நசர் வைச்சு சவரி ராயன் (சீர்மை நிர்வாகத்துக் கென்று) கண்டான். வில்லியநெல்லூருக்கு நதிர் விராகன் 100. முசியே துப்பிளேயிக்கு சாகீருக்கு விராகன் 100. பாசி ராயன் வைக்கீல் மகம்மோதி சீரொப்பா 1–க்கு ரூபாய் 300. முராரி ராயர் வைக்கீல் ரூ.11, விராகன் 21, நசிமுல்லாக்கான் வக்கீல் சனம் 1க்கு விராகன் 21 ஆக சனம் 2க்கு விராகன் 42. மாபூசுகான் வக்கீல் விராகன் 21. அப்துல் பாபு (வகாபு)

கான் வக்கீல் விராகன் 11[1]. யிந்தப்படிக்கி அவரவரைக் கர்ண்பிச்சுக் கொண்டு நசர் வைப்பிச்சு யெல்லாருக்கும் பன்னீர் பாக்கு வெத்திலை குடுப்பிச்சு அதின் பேரிலே மகாநாட்டார் சகலசெனங்களும் சந்தோஷமாயிருக்குறார்கள். யிந்த சந்தோஷத்திலே காவலிலே யிருக்குற பேரையும் விட்டுவிடவேணு மென்று சொன்னோம். அதுக்கு முசியே தெவோயிருந்து சிறிது பேரை விடக்கூடாதென்று சொன்னதுக்கு, சிறிது பேரை முன்னாலே சென்னப்பட்டணம் வாங்கினபோது முசியே துப்பிளேயிக்சு யெல்லாரையும் விட்டு விடயில்லையா? அப்படி விடவேணுமென்று சொன்னோம். அப்போ செனராலவர்கள் மச்சிலி பந்தரிலே ஒரு மனுஷனைக் கொன்று போட்ட பறையனைக் காவலிலே வைச்சு யிருக்குதே, அவன் தவிர நயினார் வீட்டிலே யிருக்கிற பேர், சாவடியிலே யிருக்கிற பேர், யெல்லாரையும் காவல் விட்டு விடச் சொல்லி உத்தாரம் குடுத்தார். அந்த சந்தோஷத்திலே நாம் முசியே லாலி அவர்களுக்கு உபசாரமாய் ஒரு காயிதம் யெழுதி கையிலே வைச்சு யிருந்தோமே, அந்தக் காகிதத்தை முசே லாலி அவர்கள் கையிலே குடுத்தோம். அவர் அதைப் பார்த்துக் கொண்டு மெத்த சந்தோஷமாய் மூணு தரம் ஆசாரம் பண்ணி, "யுமக்கு பிரான்சு தெரியுமா?" வென்று கேட்டார். தெரியுமென்று சொன்னோம். அதன் பேரிலே நல்லதென்று வீட்டுக்குப் போகச் சொல்லி அனுப்பிவிச்சார். அந்த மட்டிலே அவரை அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தோம். சகல செனங்களும் மேளவாத்தியத்துடனே நம்முடனே கூட யெல்லாரும் வீட்டுக்கு வந்தார்கள். அதன்பேரிலே யெல்லாருக்கும் பாக்கு வெத்திலை குடுத்து அவரவர் வீட்டுக்கு அனுப்பி விச்சோம்.

அதன் பேரிலே யித்தனாள் காலமே கேழ்வியான சேதி : நேத்து ராத்திரி பத்து மணிக்கி சந்தா சாயபு மகன் ரசா சாயபு பேட்டிக்கி வந்ததாகவும், முசியே லெறி அவரைக் கூட்டி வந்து பேட்டி பண்ணி விச்சதாகவும், அப்போது செனராலவர்கள் கட்டிலிலே படுத்துக் கொண்டிருந்ததாகவும், அப்போ வந்து சலாம் பண்ணிப் போட்டு ரசா சாயபும் அல்லி நக்கி சாயபும் ரெண்டு பேரும் நின்று கொண்டு யிருந்ததாகவும், அதன் பேரிலே முசே லெறி போய் கிட்ட போயி கொஞ்சம் மரியாதை பண்ண வேணுமென்று கேட்டதாகவும், அதன் பேரிலே படுத்திருந்தவர் எழுந்திருந்தாரென்றும், அப்போது அவர்கள் ஒரு பதக்கமும் ஒரு துராயும் நதிர் வைச்சார்களென்றும், அதின் பேரிலே நின்ற வயணத்திலே ரெண்டு வார்த்தையும் உபசாரமாய்ச் சொல்லி அனுப்பிவிச்சாரென்றும், அவர்கள் வெளியிலே வந்தவுடனே பாப்பய்யப் பிள்ளை பேட்டிக்குப் போயி பதினோரு மோகரா நதிர் வைத்து அவனும்

[1] ஆங்கிலப் பதிப்பில் இதில் பலாது வெகுமதிகள் விடுபட்டுள்ளன.

அவன் மகனும் கண்டதாகவும், காவல் வேண்டாமென்று உத்தாரம் குடுத்ததாகவும், அதன் பேரிலே பாப்பய்யப் பிள்ளை சுப்பீருக்கு அஞ்சு மோகரா, முசியே லெறி அவர்களுக்கு அஞ்சு மோகரா, முசியே சம்போலுக்கு அஞ்சு மோகரா வைச்சு மூணு பேரையும் கண்டு அனுப்பிக் கொண்டு வீட்டுக்குப் போனானென்றும், யின்றைக்குக் கோட்டை வெளியிலே போய் ஸநானம் பண்ணி வந்தாரென்றும், ரசா சாயபும் யித்த நாள் மத்தியானம் பனியிரெண்டு மணிக்கி தேவனாம்பட்டணம் பத்தே ஆன நிமித்தியம் வீதியிலே சர்க்கரை வழங்கினதாகவும் கேழ்க்கப்பட்டுது.

மகா ராச ராச ஸ்ரீ முசியே லாலி அவர்களுக்கு மகாநாட்டார் சந்திப்பு டாப்பு வயணம் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நயினார் | | பூவிராகன் | | | 21; |
| கைக்குளர் | | பூவி | | | 10; |
| வெள்ளாழர் | | 11; | முத்தியாலுபேட்டை | | |
| செட்டிகள் | பூவ | 16; | கைக்குளர் | பூவ | 6 |
| கோமுட்டிகள் | பூவ | 11; | வண்ணார் | ரூ | 50 |
| யெழுத்துக்காறர் | பூவ | 4 | தச்சர்; கருமார் | ரூ | 38 |
| தட்டார் | ரூ | 40; | வாணியர் | ரூ | 21 |
| கன்னார் | ரூ | 40; | இலவாணியர் | ரூ | 11 |
| சாணார் | ரூ | 15 | | | |

| | | |
|---|---|---|
| ஒழுகரைக் குத்தகைக்காரர் | ரூ | 21 |
| குண்டு கிராத்தார் குத்தகைக்காரர் | பூவி | 21 |
| அரியாங்குப்பம் குத்தகை (தாரர்) பூவி | | 8 |
| வில்லியநெல்லூர் குத்தகை ராமானுஜுலு செட்டி | பூவி | 100 |
| புது கும்பினி வர்த்தகர் | பூவி | 100 |
| பழய கும்பினி வர்த்தகர் | பூவ | 11 |
| புகையிலைக் கிடங்கு பாபுராயன் | பூவி | 21 |
| காரைக்கால் வர்த்தகர் | பூவ | 11 |
| பவழக்காரர் | பூவ | 7 |
| சுங்கு சேஷாசல செட்டி | பூவ | 21 |
| சுலுது வெங்கிடாசல செட்டி | பூவ | 11 |
| அகமுடையர் | பூவ | 11 |
| நீலக்காரர் | ரூ | 20 |
| கெட்டணைக்காரர் | ரூ | 20 |
| குசவர் | ரூ | 20 |
| சவளிக் கடைக்காரர் | ரூ | 15 |
| குழம்பு சாராயக் குத்தகைக்காரர் | பூவி | 15 |
| முசியே துப்பிளேயிக்சு சாகீர் பெரியண்ணன் | பூவ | 100 |

| | |
|---|---|
| சீமா மூலம் சவரிராயப் பிள்ளை வகையரா | பூவி 1000 |
| சேத்துப்பட்டு திருவண்ணாமலை பெரியண்ண | |
| முதலி வகையரா | பூவ 100 |
| சின்ன முதலியார் | பூவ 11 |
| சாராயக் கிடங்குக்காரர் | பூவ 21 |
| காசுக்கடை வர்த்தகர் | பூவ 11 |
| பலசரக்கு வர்த்தகர் | பூவ 10 |
| அப்துல் (வ) பாபு கான் வக்கீல் | பூவ 11 |
| மாபூசுகான் வக்கீல் | பூவ 11 |
| முராரிராயன் வக்கீல் ரூபாய் 11 | பூவி 21 |
| நசிமுல்லா கான் சனம் 2–க்கு சனம் 1–க்கு 21 வீ ஆக | 42 |
| பாசி ராயர் வக்கீல் மகமோதி, சீரொப்பா 1–க்கு | ரூ 300[1] |
| துறையூர் வக்கீல் கோனேரி நாயக்கன் ... | |
| மயிசூர் வெங்கிட்ட நாராயணப்பய்யர் ... | |
| டங்காசாலை பாப்புராயர் ... | |
| எச்சம னாயக்கன் வக்கீல் ... | |

***1758 வருசம், சூன் மாசம், தேதி 12; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 2; சோமவாரம்***

சந்தா சாயபு மகன் முசியே லாலி அவர்களுடைய பேட்டி பண்ணிக் கொண்ட வயணம் : முசியே மோமொரன்சி பெரிய தோட்டத்திலே வந்து கண்டு பேசின சேதி[2].

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போயி பூந்தோட்டக் கச்சேரியிலே போயிருக்கையிலே முசியே லெறி அவர்கள் அழைக்கச் சொன்னார்க ளென்று வந்து அழைச்சான். நல்லதென்று கோட்டைக்குப் போன விடத்திலே பூந்தோட்டக் கச்சேரியை யேன் பன்றி அடிக்க யின்று குடுக்கயில்லை யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது, "முன்னாலே கிட்டயிருக்குறதுக்கும், அடிக்கடி நான் வரவேணும் யென்றும் அந்த நாளையிலே முசே லெனுவார் தயவு பண்ணிக் குடுத்தார். யிப்போது நான் உங்கள் கிட்ட வந்து போக மத்த நேரம் அங்கே யிருக்கிறது. அது தேவையில்லை யென்று உங்களுக்குத் தோணினால் குடுத்து விடுகுறேன். கீழ் வீட்டு வெள்ளைக்காரனுக்கு யிதைச் சேத்துக் கொள்ள வேணுமென்குறது ரொம்ப யிருக்குறது. கடற்கரை யோரத்திலே ஒரு மாளிகையும் வீடும் வெகு நேத்தியாயிருக்கிற விடம் காண்பிச்சேன்.

---

[1] இத்தொகைகள் ரூபாயா, பூவராகாடை என்பது பிரதி எடுத்தோரால் விடப்பட்டுள்ளது.
[2] எழுதப்படவில்லை.

அதுவும் சம்மதியில்லை. யிதைக் குடுவென்று, யிதைக் கட்டிக் கொள்ள வேணுமென்று யிதிலே கண் போட்டுக் கொண்டிருக்கிறான். உங்களுக்கு அப்படியே யிருந்தால் மெத்த நல்லதுதா," னென்று சொன்னேன். அதுக்கு, "நீ குடுக்க வேண்டாம். நீ யிருக்கிற யிடம் ஆச்சுதே. நான் முசியே கொற்னேத்துக்குச் சொல்லி விடுகுறேன்," யென்று சொன்னார்.

அப்படி யிருக்கையிலே சந்தா சாயபு மகன் ரசாசாயபும் அல்லி நக்கியும் தங்களுதாய் ஒரு பல்லக்கு வெள்ளி மேலே பொன் முலாம் பூசுவிச்ச குமிழ்கள் பட்டைகள் தலாடம் யிதுகள் வைப்பிச்சு, சருகை தையல் வேலையாயி தைப்பிச்சு ஒரு பல்லக்கும் ஒரு குதிரையும் மூன்று சீரொப்பாவும் தங்களு தென்றும் சாத்துக்கடை யாரு தென்று தக்கே சாயபு அனுப்பிவிச்சதென்றும் மூன்று சீரொப்பாவும் ஒரு குதிரையும் தக்கே சாயபு தென்றும் போளூர் மமுதல்லிது யென்றும் கொண்டு வந்து பனிரெண்டு சீரொப்பாவும் நாலு குதிரையும் ஒரு பல்லக்கும் கொண்டு வந்து குடுத்தார்கள். அதெல்லாம் முசே லாலி றூ(லு)யித்தினாந்து செனராலவர்கள் பல்லக்கும் பார்த்து, குதிரையளையும் ஒட்டம் விட்டுப் பார்த்து, சீரொப்பாக்களையும் பார்த்து பத்தொன்பது பீரங்கி போடச் சொல்லி பாக்கு வெத்திலை குடுத்து அனுப்பி விச்சார்.

யிப்படி யிருக்கையிலே பாப்பய்யப் பிள்ளை மெத்தை மேலே வந்திருக்கிறவன் கண்டால் குருவப்ப செட்டியுடனே மெத்த நயிச்சியமாயி (உபசாரமாயி) நாளைக்கு நம்முடைய வீட்டுக்கு வருகுறெனென்றும் அதுக்கான உபசாரமாயிச் சொல்லி அனுப்பி விச்சான். அதுக்கு நாமும் நல்லது தானென்று சொல்லி அனுப்பிவிச்சுப் போட்டு பனிரெண்டு மணிக்கி வீட்டுக்கு வந்து சாப்பாடு தீத்துக் கொண்டு அஞ்சு மணிக்கு பெரிய தோட்டத்துக்குப் போனோம். அதுக்கு முன்னுதாய் ரெண்டு மணிக் கெல்லாம் சிரஞ்சீவி அப்பாவுவை அனுப்பிவிச்சு யிருந்தோம். நாலு மணிக்கு கோந்து தே மொமமருசான் என்குறவரும் மாா்ஷெல் தெலாப்பேர் என்குறவரும் (Marechal de La Faire), மயோா்செனரால் முசியே மேல் (மயோர் செனரால் முசே பூமெல்) Major-General M. Frumel) என்கிறவரும் வந்திருந்தார்கள். நாமும் போயி அவர்களைக் கண்டு வேடிக்கையாயி கேளிக்கை மத்ததும் ஆடச்சொல்லி தீனிகளும் வைப்பிச்சு நாமும் கோந்து தே மும்மராசனும் பேசிக் கொண்டிருக்கையிலே அவர் சொன்ன சேதி : "யிவ்விடத்திலே பணமு மில்லை, செனமும் போறாது. ஆகையினாலே முசே லாலி அவர்கள் தம்மை சீமைக்கு அனுப்பி விக்குறேன் யென்று சொன்னதாகவும், தாம் ஒரு மாதத்துக்கெல்லாம் சீமைக்குப் போறோ னென்றும் சொன்னார். அங்கே போயி மினிஸ்தருக்குச் சொல்லிப் பணமும் மனுஷரும் விசேஷமாயி அழைச்சு வரவேணும்," யென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது, "மெத்த நேத்தியாய் யிருக்குது.

யிங்கே பணமில்லாவிட்டால் அங்கே யிருந்துதான் வரவேணு," மென்று சொன்னோம். அதின்பேரிலே சந்தா சாயபு மகன் ஆற்காட்டுக்கு நவாபு பர்வானா ஆனதினாலே முசியே லாலி மரியாதை பண்ணினாரே, அப்படி மரியாதை பண்ண வேண்டியதான் அல்லோ?" வென்று (நம்மைக் கேட்டார்). அதுக்கு நாம் சொன்னது, "முன் துலுக்கர் நாளையிலே அவர்கள் ராச்சியத்துக்கு நவாபாயிருந்தபடியினாலே பீரங்கி போட்டது சரி. யிப்பால் முசியே துப்பிளேயிக்சு துலுக்கரையெல்லாம் அடிச்சு, யிதாயத்து மொய்தின் கான் யேழு சுபைக்கும் யிவரே நவாபு யென்று யெழுதி குடுத்ததினாலே அது முதல் ஆற்காடு கடப்பை கந்தனூர் முதலான சுபா நவாபுகளெல்லாம் வந்து முசியே துப்பிளேயிக்சுக்கு நசர் வைச்சுத் தூர நின்று சலாம் பண்ணி நின்றுக் கொண்டிருக்கிறது. யிப்படி வந்த பவுருஷத்தை முசே கொதே அறியாமல் பீரங்கி போட்டுப் பண்ணினார். அதுவே வழியாயி முசே லெறியும் நடத்தினார். அவர்களைப் போலேயுமல்லா யிவர் றூ(லூ)த்தியினாந்து செனராலானத்தினாலே யிவர்களெல்லாம் தூரக் கைகட்டி நிற்க்க வேண்டியது," யென்று சொன்னதுக்கு, அவர்களுக்குப் பணமுண்டோ யென்று கேட்டார். வெகு பணமுண்டு. முப்பது லட்சம் நாற்பது லட்சம் கேட்டால் குடுப்பான் என்று சொன்னோம். ஆனாலவனைப் பணம் கேழ்க்க வேணும் யென்று யிருக்குறோமென்று சொன்னார். யிப்படி பேசிக் கொண்டிருந்துப் போட்டு ராத்திரிப் பத்து மணிக்கு அவர்களும் அனுப்பிக் கொண்டு வீட்டுக்குப் போனார்கள். நாமும் வீட்டுக்குப் பிறப்பட்டு வந்தோம்.

இத்தனாள் உதையத்திலே கந்தப்பிள்ளை மேலுகிரிப் பண்டிதன் சாவடியிலே யிருந்து வீட்டுக்கு வந்தான்.

இதல்லாமல் கேழ்விப்பட்ட சேதி : தவுலத்தாபாத்திலே யிருந்த திரவியம் முசியே புசிக்கு ஒரு பங்கும் கும்பினியாருக்கு ஒரு பங்கும் சலாபத்து சங்குவுக்கு ஒரு பங்கும் பின்னையும் பேர் விளங்கன் ஒரு பங்கும் யிந்தப்படிக்கி நாலு பங்காகப் போச்சு தென்றும், முசியே புசிகிட்ட யிருந்த அயிதர் சி(ச)ங்குவை சா நவாசு கான் வெட்டிப் போட்டதாகவும், அயிதர் சி(ச)ங்கு பெண்டுகள் குஞ்சுகளையும் வெட்டிப் போட்டதாகவும், அந்தச் சேதி முசியே புசிகேட்டு சா நவாசுக் கானையும் அவன் பெண்டுகள் குஞ்சுகளையும் வெட்டிப் போட்டதாகவும் அதினாலே முசியே புசியைத் துலுக்கர் வெட்டிப் போடுகிற தாயிருக்கிறதென்றும் முசியே புசி யிவ்விடத்துக்கு வெகு சுருக்காய் வருகுறோனென்று யெழுதி அனுப்பினதாகவும் கஞ்சத்திலே யிருந்த பிரான்சுக்காரன் முசியே அசான் (ஆசம்) (M. Azam) என்குறவனையும் அன்பது பேர் சொலுதாதுகளையும் அவ்விடத்திலே யிருக்கிற பாளையக்காரன் வெட்டிப் போட்டானென்றும் கேழ்க்கப்பட்டுது. யிது சேதி.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 14; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 4; புதவாரம்***

மைசூர் வெங்கிட்ட நாராயணப்பய்யன் முசே லாலி செனரால் அவர்கள் பேட்டி பண்ணிக் கொண்(டார்). சந்தா சாயபு மகன் முசே லெறிக்கும் முசே தெவோ முசே திலார்ஷு வகையராக்களுக்கும் பெகுமானம் (குடுத்தான்).

இத்தனாள் காலமே வெளியே போறதுக்குச் சரீரத்திலே அசட்டையாயிருந்ததினாலே வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருந்து சாயங்காலம் அஞ்சு மணிக்கிப் பிறப்பட்டு யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிதிலே கேழ்வியான சேதி : முத்து மல்லா ரெட்டி மகன் கலியாணத்துக்கு சவரிராயன், தாண்டவராயப் பிள்ளை மத்தும் யிந்த ஊரிலே யிருந்து வெகுபேர் கலியாணத்துக்குப் போறார்கள் யென்றும், பாப்பய்யப் பிள்ளை பெரியண்ண முதலி வீட்டுக்குப் போயி அவனையும் கூட்டிக் கொண்டு முசே தெவோ அண்டைக்குப் போனாதாகவும், மத்தப்படி பரமானந்தப் பிள்ளை முசே மேன்வில் (M. Mainville) கிட்டப்போயி ஊரிலே அவரவர் சொல்லிக் கொள்ளுகுறது பாப்பய்யப் பிள்ளைக்குச் சீமா மூலம் குடுக்கப் போறார்களென்றும், யிப்படி அவரவருக்குத் தோணினபடிக்குச் சொல்லிக் கொள்ளுகுறார்களென்று சொன்னதாகவும், அதுக்கு முசே மேன்வில் சொன்னது : "யென்ன பேச்சு சொல்லுகுறாய்? சீமையிலே ராசா முன்பாகத் தீந்தபடிக்கி நடக்குமே அல்லாமல் யிங்கே வேறே நடத்தப்போமா? அங்கே தீந்தது ஏதென்றால் பழயசீமை புதுச்சீமை சகலமும் முசே றெங்கப்பனுது. யிதல்லாமல் குமுசேலிலே கூடயிருந்து சகல காரியமும் பார்க்குறதும் முசே றெங்கப்பனுது. அப்படி தீந்திருக்குது. சந்தா சாயபு மகனுக்குச் சாகீர் குடுத்து வைச்சு வைக்கத்தக்கதாகத் தீர்ந்திருக்குது. மத்தவனுக்கெல்லாம் நிமித்திய மென்ன? பிறப்படுகிற போது பாப்பய்யப் பிள்ளையைக் காவல் விடவேணுமென்று முசே துப்பிளேயிக்சு கேட்டுக் கொண்டார். ஆகையாலே காவல் விட்டதன்றிலே மத்தப்படி யென்ன யிருக்குது?" என்று சொன்னதாகக் கேழ்க்கப்பட்டுது.

நம்முடைய கப்பல் நாகப்பட்டணத்துக்குச் செவ்வனே போனவுடனே நாகப்பட்டணத்திலே யிருக்கிற பேரெல்லாம் வலசை வாங்கினதாகவும், சக்குலு நாயக்கன்[1] கூட பணங் காசுகளை அப்பிறம் தாண்ட வைச்சதாகவும் கேழ்க்கப்பட்டுது. காஞ்சிபுரம் சனங்களும் வலசை வாங்குறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

[1] இவன் முன்பு தஞ்சாவூர் அரசரின் அமைச்சன்.

முந்தாம் நாள் மைசூர் வெங்கிட்ட நாராயணப்பய்யர் சம்பாவுலு கோயில் பெரிய பாதிரி வழியாலும் முசியே மே(ன்)வில் வழியிலும் போயி முசியே லாலி செனரால் அவர்களுக்கு கார்சூபி (எம்ராய்டரி போட்ட) சீரொப்பா—அறுநூறு ரூபாயிலே பரமானந்தப் பிள்ளை கிட்ட வாங்கிப் போயிக் குடுத்துக் கண்டதாகவும், அது (உண்மையில்) நானூறு ரூபாய் பொறும் யென்றும், முசே மெவிலுக்கு (மேன்வீல்) ஒரு சீரொப்பாவும் முசே சம்போலுக்கு ஒரு சீரொப்பாவும் பரமானந்தப் பிள்ளைக்கு ஒரு சீரொப்பாவும் யிதுவும் பரமானந்தப் பிள்ளை கிட்டத் தானே வாங்கி மைசூர் வெங்கிட்ட நாராணப்பய்யன் குடுத்த தாகவும் கேழ்க்கப்பட்டுது. முசே லாலி அவர்களுக்கு யிந்தப் பேட்டியிலே ரொக்கத்திலே ஆயிரத்து தொளாயிரத்து அறுபத்தஞ்சு விராகன் வந்ததாகவும், அப்பு முதலி சொல்லிக் கொண்டிருக்கிறதாகக் கேழ்க்கப்பட்டுது. சந்தா சாயபு மகன் முசே லெறிக்கு ஆயிரம் ரூபாயு(க்கும்), முசே தெவோவுக்கு முன்னூறு ரூபாய்க்கும் மகதாயி (பொன் சரிகை போட்ட) சீரொப்பாவும், முசே சம்போலுக்கு ஒரு சீரொப்பாவும் முசே திலார்ஷுக்கு ஒரு சீரொப்பாவும் பின்னையும் யேதோ ஒரு நகை குடுத்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

முந்தனாள் சாயங்காலம் முசே லாலி அவர்கள் பிறகே வந்த பாதிரியார் போயி முசே லாலி அவர்களுடனே பேசி யிருந்து திரும்பவும் வெளியே போய், தேவனாம்பட்டணம் சின்ன துரையை அழைச்சுக் கொண்டு முசே லாலி அழைகளண்டைக்கு வந்ததாகவும், அவர்களைக் கண்டவுடனே முசே லாலி அவர்கள் வெகு கோபம் பண்ணி அலறி அந்தப் பாதிரியாரைப் பிடரியிலே கையைக் குடுத்து மெத்தையிலே யிருந்து யிறங்குற வரைக்கும் கொண்டு வந்து தள்ளிவிட்டதாகவும், தேவனாம்பட்டணம் பெரிய துரை, சின்ன துரையைச் சென்னப்பட்டணத்துக்கு அனுப்பயில்லை யென்றும், யிப்படித் தள்ளுகுற போது முசே லெறி அவர்கள் நகைச்சுக் கொண்டு தம்முட காம்பிராவிலே யிருந்தா ரென்றும் நேத்து சாயங்காலம் சம்பா கோயில் பெரிய சேஷ்ட்ட பாதிரியார் போய் முசே லாலி அவர்களுடனே பேசிக் கொண்டிருந்ததாகவும், அப்போ முசே லாலி அவர்கள் கோபமாயி ஒசந்த பேச்சாய் பேசிப் போகச் சொன்னதாகவும், சேஷ்ட்டர் வெளியே வருகுறபோது முகத்தை வாடப்பண்ணிக் கொண்டு சம்பாவுலுக் கோவிலுக்குப் போனதாகவும் கேழ்க்கப்பட்டுது.

நேத்து ராத்திரி வெள்ளைக்காரர் வந்த பேர் ரெண்டு மூணு நாளையிலே ஒரு பெரிய மனுஷனைக் காவலிலே வைக்கப் போறாரென்றும் சாடையாயி பேசிக் கொண்டிருந்தார்கள். அது இன்னாரென்று தெரியவில்லை.

இத்தனாள் உதிச்சு ஒன்பது மணிக்கு முசே லாலி அவர்களும் குமுசெல்காரர்களும் குமுசேல் கூடி பதினென்றரை மணி வரைக்கும் குமுசேல் பண்ணினார்கள் யென்றும், பணத்து நிமித்தியம் முசே லாலி அவர்கள் ரெண்டு நாளாய் வெகு கோபமாயிருக்குறரென்றும் அதுனாலே, வெள்ளைக்காரர் தமிழர் ஆரும் மெத்தை மேலே போகக்கூடாது யென்றும் கேழ்க்கப்பட்டுது. காரைக்காலிலே பாவாடை நாயக்கன் திருவாலூரிலே பிரமஹத்தி ஸ்திரிகத்தி பண்ணினதினாலே (ஒரு பிராமணையும் ஒரு பெண்ணையும் கொன்று விட்டதினாலே) ராசா பீரங்கி வாயிலிலே (அவனை) வைக்கச் (சுட்டுப்போடச்) சொன்னதாகவும், யிது நிமித்தியம் சீனப்பய்யன் முகாந்திரமாய் காரைக்கால் துரைக்கு ராசவட்டம் பண்ணினதாகவும், லட்சம் பொன்னும் கொண்டு காரைக்காலுக்கு வந்து சீனப்பய்யன் தோட்டத்திலே யிருக்கிற தாகவும், காரைக்கால் துரைக்கு ரெண்டாயிரம் பொன்களும் கொடுத்ததாகவும், சின்னப்பய்யனுக்கு நாலாயிரம் ரூபாயென்றும் நயினியப்ப முதலிக்கு ரெண்டாயிரம் ரூபாயும் குழந்தையப்ப முதலிக்கு ரெண்டாயிரம் ரூபாய் குடுத்ததாகவும், பாவாடை நாயக்கனுக்கு அஞ்சாறு லட்சத்துக்குண்டு யென்றும் கேழ்க்கப்பட்டது.

### *1758 வருசம், சூன் மாசம், தேதி 15; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 5; குருவாரம்*

இத்தனாள் முசே லாலி லுயித்தினாந்து அவர்கள் ஆராகிலும் காரியம் வேண்டிய துண்டானால் மெத்தைமேலே வருகுறதும், மத்தப்பட்டவர் வரத் தேவையில்லை, தாம் அழைச்சுபோது வருகுறதென்றும் திட்டம் பண்ணினபடியினாலேயும் அவர் சென்னப்பட்டணத்து மேலே சண்டைக்குப் போற நிமித்தியம் பணங்காசு சாமான்கள் சேகரமாகிற நிமித்தியமும் முசே லெறி கோவற்ணதோர் முதலான பேர்களையும் அழைச்சனுப்பிக்குறதும் கோபதாபங்கள் பண்ணுகுறதும் மகுக்கரையிலே யிருந்து வந்த கப்பல் திரும்ப சீமைக்குப் பயணம் பண்ணுகுறபடியினாலே அதுக்கு சரஞ்சாம் பண்ணிக் குடுக்கிறதும் காகிதம் யெழுதுகுறதும் யிந்த வேலையிலே யிருக்குறபடியினாலே நாமும் அழைச்சு விட்டால் போவோமென்று வீட்டிலேதானே யிருந்தோம்.

இப்படி யிருக்கையிலே கேழ்வியான சேதி : வினாயகப் பிள்ளை (முசியே லாலியிடம்) பேட்டிக்குப் போயி அன்பது விராகன் நசர் வைச்சுக் கண்டா னென்றும் அவன் மக்கள் ரெண்டு பேரும் யிருபது விராகனும் அவன் மச்சான் குப்பய்யப் பிள்ளை யென்கிறவன் பத்து விராகனும் பெரிய பரசுராமப் பிள்ளை பத்து விராகனும் பின்னையும் ரெண்டு பேர் பேர் விளங்கன் பத்து விராகனும் ஆக நூறு விராகன் நதிர் வைச்சுக் காண்பிச்சுக் கொண்டார்களென்றும் யிங்கிறேசுக்காறர் கப்பல் ஒன்றும்

சுலுப்பு ஒன்றும் நாகப்பட்டணத்துக்கு வந்ததைத் துடந்து நம்முட கப்பல்க்காரர் ஒரு சுலுப்பு பிடிச்சுக் கொண்டு யிவ்விடத்துக்கு அந்த சுலுப்பு யிவ்விடத்துக்கு அனுப்பிவிச்சார்களென்றும், யித்தனாள் சாயங்காலம் அந்த சுலுப்பு யிவ்விடத்துக்கு வந்தது. அந்த சுலுப்பிலே சக்கரையும் அரிசியும் வந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 16; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 6; சுக்கிறவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி: சங்கராபுரத்திலே யிங்கிறேசுக்காறர்[1] தரப்பிலே யிருந்து கிருஷ்ண ராயனென்குறவன் ரெண்டாயிரம் பாறுக்காறருடனே வந்து மக(கா)தேவய்யன் மருமகன் அங்கே யிருந்தவனையும் பிடிச்சுக் கொண்டு வெகுபேரையும் சேதம் பண்ணி, திருவண்ணாமலை சேத்துப்பட்டு யெங்கும் வந்து கலகம் பண்ணுகுறதாகவும், அன்னூறு பேர் வெள்ளைக்காறர் யிங்கே யிருந்து பயணமாய்ப் போனார்கள். யின்ன யிடத்துக்குப் போனார்களென்று தெரியாமல் போச்சுது யென்றும், முசே ஒம்மோவும் முன்னூறு பேர் வெள்ளைக்காரரும் பாறுக்காறரும் வந்தவாசிக்கும் போய்ச் சேர்ந்ததாகவும் சென்னப்பட்டணத்திலே யிருந்து ஒரு சோபுதாரரும் அறுக்காறும் காகிதம் கொண்டு முசே லாலி அவர்கள் அண்டைக்குச் சாயங்காலம் வந்ததாகவும் சேதி.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 17; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 7; சனிவாரம்***

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசே பெடுத்தல்மீ வாசலிலே சருவகாலமும் காத்துக் கொண்டிருக்கிற சந்தினேரை யித்தனாள் வேண்டாமென்றும், வெள்ளைக்காறர் சகலமான பேருக்கும் சம்பளம் குடுக்குறது முசே குளுவேத்து பாரிசமானதினாலே யிந்த சந்தினேரை முசே குளுவேத்து வாசலிலே காறகச் சொல்ல, யிங்கே யிருந்த சந்தினோர் முசே குளுவேத்து வாசலிலே போய்க் காற்கிறதாகவும், தேவனாம்பட்டணம் செயமானபிறகு அங்கே போயிருந்த கப்பல் யெல்லாம் தெற்கே நாகப்பட்டணம் வரைக்கும் போயிருந்துது. யித்தனாள் மூன்று மணிக்குப் பத்து கப்பலும் ரேவு வந்து சேந்துதென்றும் கேழ்விப்பட்டுது.

யிப்படி யிருக்கையிலே ராத்திரி பத்து மணிக்குக் கேழ்வியானது: பீப்பாய்[2] வெள்ளைக்காறன் பின்னை ஒரு வெள்ளைக்காறனையும் பத்து

[1] 'ற' எழுத்து நிறைய பிரயோகப்படுத்தப் பட்டுள்ளதைக் காட்டுவதற்கு, திருத்தம் செய்யாமல் அப்படியே விடப்பட்டுள்ளது. நூல் முழுவதும் இதே கதைதான்.

[2] சாராயப் பீப்பாய்களுக்குப் பொறுப்பானவன், அதாவது முசே லெனுவார்.

பேர் சிப்பாயிகளையும் அழைச்சுக் கொண்டு, நம்முட பூந்தோட்டக் கச்சேரிக்கு வந்து வாசல் கதவை யிடிச்சுத் திறந்து உள்ளே போய், அங்கே பெலவந்தமாய் பாறுக்காறரையும் வைச்சுக் கொண்டு யிருக்குறதாகச் சேதி வந்தது. அது நமக்கு ஆச்சரியமாச்சுது. முன் முசே(லு)னுவார் முசே தும்மா யிந்த வீடு கட்டுகிறபோது அங்கே நமக்கும் நிலமிருந்தது. சில்லரைக்காறரும் குடிசைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர் நாம் வந்தால் யிருக்குறதுக்கென்று யிந்த நிலமும் வீ(டும்) நம்முடைய நிலத்துக்கும் சில்லரைக்காறர் குடிசைக்கும் உண்டான கிறயம் குடுத்து, அவர்களுக்கும் யிடமும் காட்டி, யிப்படிப் பட்டணத்தைப் பரிபாலனம் பண்ணின படியினாலே அன்று முதல் பட்டணம் விறுத்தியாயி வந்தது. அதுக்கிப்பால் முசே தும்மா முசே துப்பிளேயிக்சு யிந்த தொரைத்தனங்களெல்லாம் யிந்தப்படியே நியாயம் தப்பாமல் நடந்து வந்தது. யிப்போது ஆர் வீட்டை ஆர் கட்டிக் கொண்டாலும் கேழ்வியன்னியிலே நடக்குது. யிந்த வீட்டு நிமித்தியம் யெட்டு நாளைக்கு முன்னே நாம் போய் முசே லெறி கோவற்ணதோருடனே போய் சொல்லிக்குக் கொண்டதுக்கு நீர் வேறே யிடம் காட்டிவிடும், அந்த யிடம் விடவேண்டாம், நாம் முசே கொற்ணேத்துக்குச் சொல்லி விடுகுறேனென்று சொன்னார். அப்படி யிருக்க யிப்போது பெலவந்தமாயி நம்முட சரக்கு, பீங்கான் கிண்ணங்களை மூவ்வாயிரம் ரூபாயிக்குக் கிடக்க யிதல்லாமல் தட்டு முட்டுகளும் கிடக்க பெலவந்தமாய்க் கட்டிக் கொண்டார்கள். யிது சேதி.

### *1758 வருசம், சூன் மாசம், தேதி 18; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 8; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே நாம் வீட்டிலே தானே யிருக்கையிலே முசே கெலிக்கு (M. Clegg) யென்குற வெள்ளைக்காறன் பூந்தோட்டக் கச்சேரி நிமித்தியம் குமுசேலுக்குப் பித்திசாமெழுதிக் கொண்டு வந்தான். அதை நாம் பாத்துக் கொண்டு அதிலே கையெழுத்துப் போட்டு முசியே பெடுத்தல்மீ அண்டைக்கு அனுப்பிவிச்ச விடத்திலே, அவர் பார்த்துக் கொண்டு யெல்லாத்துக்கும் நம்மை வரச் சொல்லச் சொல்லி அனுப்பினார். அப்படி யிருக்கையிலே பூந்தோட்டக் கச்சேரியிலே நேத்து ராத்திரி வந்து பூந்த பீப்பாய் வெள்ளைக்காரன் அதிலே யிருந்த புளியமரங்கள் வாழை பூஞ்செடிகள் மாதளம் செடிகள் மரங்கள் முதலானதுகளை யெல்லாம் வெட்டி ... செடிகளைக் கொண்டு போகச் சொல்லியும் மரங்களை யெடுத்துப் போகச் சொல்லியும் அதிலே யிருக்கிற சாமான்களை யெடுத்துப் போகச் சொல்லியும் சொல்லச் சொல்லி அனுப்பிவிச்சான். அதுக்கு நாம் சொல்லி அனுப்பினது. “நீ பெலவந்தமாயி பூந்து வெட்டிக் கொண்டு போறதிலே நாம் யெடுக்க வேண்டியது யென்ன யிருக்குது? உனக்கு சரிப்போனபடி (செய்)” யென்று சொல்லி அனுப்பிவிட்டோம்.

அப்படி யிருக்கையிலே கேழ்வியான சேதி : வேலூரிலே முசே மாலயா (M. Mallet) வந்தவாசிக்கு வந்ததாகவும், முசே லக்கிப்பாடி (M. Lakkipady) திருவத்தியூரை சுபுத்தி பண்ணிக் கொண்டு அங்கே யிருக்கிறா னென்றும், முசே ஒம்மோ (M. Aumont) வந்தவாசியிலே யிருக்குறாரென்றும், திண்டிவணத்திலே ஆயிரம் பேர் வெள்ளைக்காறர் போய் சேர்ந்து யிருக்குறார்களென்றும், யித்தனாள் வெள்ளைக்காறர் யிவ்விடத்திலே யிருந்து அவ்விடத்துக்குப் போறதாகவும், உடையார்பாளையம், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மேலே தண்டு போறதாகவும் ஆற்காட்டு மேலே போறது யென்றும் சென்னப்பட்டணத்துக்கு முசே லாலி போறாரென்றும், வந்திருக்கிற பனிரெண்டு கப்பலுக்கும் சாமான்கள் யேத்துகுறர்களென்றும் கருமார் வெள்ளைக்காரனை அழைச்சு மூவாயிரம் விலங்கு யெட்டு நாளையிலே ஆக வேணு மென்று முசே லாலி சொன்னதாகவும், அதுக்கு அவன் யெட்டு நாளையிலே பண்ணக்கூடுமா யென்று சொன்னதாகவும் அதுக்கு ராப் பகல் சாகிறுதை யாயிருந்து அதுக்கேத்தப் பேரை விட்டு செய்விக்கச் சொன்னதாகவும், அதுக்கு யெட்டு நாளையிலே ஆகிறது பெகு பிரயாசை யென்று அவன் சொன்னதாகவும், உடனே கோபம் வந்து அவர் தானே யெழுந்திருந்து அவர் கைப் பிரம்புனாலே ஏழெட்டு அடி அடிக்குறதினாலே அவன் அடி பொறுக்க மாட்டாமல் வேசடையாய்க் கீழே விழுந்து விட்டதாகவும், மெத்தைக்குக் கீழ்ப் பக்கத்திலுள்ள வழியின் மேலே பக்கத்து வழியும் சேவகர் வைச்சுப் போடச் சொல்லியும் வாசலிலே ஒருத்தரையும் விடத்தேவையில்லை, வெள்ளைக்காறர் வந்தால் சொல்லி அனுப்பி வரச்சொன்னால் வருகுறது, யில்லாவிட்டால் வரத்தேவையில்லை யென்றும், தமிழர் வந்தால் சுட்டுப் போடச் சொல்லியும் சொல்லிப் போட்டு அவர் காம்பிராவிலே போயி ஒண்டியாயிருக்கிறாரென்றும் முசே லெறி அவர்களும் காம்பிராவிலே யிருக்குறாரென்றும் கேழ்க்கப்பட்டுது. யிது சேதி.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 19; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 9; சோமவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் சொன்ன சேதி : யிப்போ பூந்தோட்டக் கச்சேரி நிமித்தியம் குமுசேலுக்குப் பித்திசாம் குடுக்குறத்திலே சாரமில்லை, யிதினாலே பொல்லாப்பாய் யெல்லாருக்கும் தோணப்படும். நாங்கள் கூட பாதிரிமார் கூட வீடு குடுக்க யில்லையா? அப்படிக் கொத்த வேளை வந்திருக்குது. உம்முட வீடு யெங்கே போறது? மனம் பிடியும்," என்று ரொம்பவும் சொன்னபடியினாலே அந்த மட்டிலே அவர்கிட்ட பித்திசாமையும் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்திருக்கயிலே, முசே

துறுவேத்து (M. Drouet) சாராயக் கிடங்குக்கு முன்னே சின்னதுரைக் கிட்ட குடுத்திருந்த ரசீதுகளை யெல்லாம் வாங்கிக் கொண்டு யெல்லாத்துக்கும் ஒரு ரசீதாய் எழுதிக் கொண்டு பதினோரு மணிக்கி நம்முடைய வீட்டுக்கு வந்து, நம்மைக் கண்டுதான் ரசீது குடுக்க வந்தேனென்று சொல்லி, ரசீதையும் தந்து பேசிக்கொண்டு யிருக்கையிலே அவர் சொன்ன சேதி : முசே லாலி றூ(லூ)யிரத்தினாந்து செனரால் வந்த கப்பலிலே ஒன்பது லட்சமெல்லாம் வந்தது. தேவனாம்பட்டணத்திலே லட்சத்தன்பதினாயிரம் வந்தது. ஆக பத்து லட்சத்து அன்பதினாயிரத்துக்குச் சிலவு யிது வரையிலே ஒன்பது லட்சம் சிலவாச்சுது. யின்னம் லட்சத் தன்பதியாதியாரமிருக்குறது. மத்தப்படி பணமில்லை," யென்று சொன்னார். அதன் பிறகு யிவர் பிரயோசனத்திலே ஆசை வைச்சு வந்தாரென்று ஆலோசிச்சு அவருக்கு ரெண்டு சுருட்டு முகமல்லும் ஒரு ரேக்கும் குடுத்தனுப்பி விச்சோம்.

அதன் பிறகு கேழ்வியானது: சம்பா கோவில் பாதிரிமார் வழியிலே தஞ்சாவூர் காடிகை பேசினது, தஞ்சாவூர் கட்டிக் கொடுத்தால் நாற்பது லட்சம் குடுக்க வென்றும் தண்டுச் சிலவுக்குக் குடுக்க வென்றும், உடையார்பாளையம் கட்டிக்குடுத்தால் அங்கே யிருந்து வந்திருக்குற முத்தையாரைக் கிறிஸ்துவராக ஆகுறோமென்றும், ரெண்டு லக்ஷம் குடுக்குறோமென்றும், ஆக்குறோமென்றும், ரெண்டு லக்ஷம் குடுக்குறோமென்றும், தண்டு சிலவுக்குக் குடுக்குறோமென்றும், அரியலூர், துறையூர் காரியம் பாப்பு ரெட்டி கூட்டத்துக்குப் பண்ணிக் குடுக்க லட்சத்தன்பதினாயிரம் குடுக்கவென்றும் பெரிய பாதிரியார் போய்ப் பேசினதாகவும், அதுக்கு முசே லாலி அவர்கள் சம்மதிச்சு பயணம் தெற்கே போறதாகவும் முசே துறுவேத்து நயினாத்தை துபாசிக்குப் பொன்னும் கடகமும் போட்டுக் கடுக்கனும் போட்டு பல்லக்கும் வாங்கிக் குடுக்குறோமென்றும் சொல்லி முசே புலோ துபாசி முத்தய்யனை அவர் கிட்ட போகச் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 20; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 10; செவ்வாய்***

இத்தனாள் வீட்டிலேதானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : மருதனாயக முதலி யென்கிறவன் திருமங்கலத்திலே நம்முடைய (பிள்ளையின்) கம்பத்தம் யிருந்ததை வேண்டாமென்று கொண்டு போகச் சொல்லி, தன்னுடைய கம்பத்தம் போட்டுக் கொண்டதாகவும், வில்லியனூரிலே கட்டியிருந்த நம்முடைய பெரிய ஆனைக்குக் குண்டுரார் தீனிச் சிலவு வில்லியனூரிலே யிதுவரைக்கும் குடுத்துவந்த பேர் யின்று முதல் குடுக்குறதில்லை யென்றும் சொன்னார்கள் யென்றும் சேதி வந்தது.

இத்தனாள் சாயங்காலம் முசே லாலி அவர்களும் முசே சுப்பீரும் தெற்கே உடையார்பாளையம், தஞ்சாவூரின் பேரிலே பயணம் போனார்களென்றும் சேதி வந்தது சொன்னார்கள். நாமும் சாயங்காலம் சாரி போய் ஏழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 21; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 11; புதவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசே லெறி கோவர்ணதோரவர்கள் உதயத்திலே எட்டு மணி வரைக்கும் கோவர்ணமாவிலே தானிருந்து அஞ்சாறு பேர் வெள்ளைக்காரருடனே பேசியிருந்ததாகவும், அதின் பேரிலே பிறப்பட்டு தேவனாம்பட்டணம் தொரையா யிருந்த மேஸ்தர் ஒன்சி (Mr. Wynch) அண்டைக்கு வந்து அவரை விசாரிச்சுப் போட்டுப் போனாரென்றும், தேவானம்பட்டணம் கோட்டையை யிடிக்குறத்துக்கு யெங்கும் மருந்துப் பீப்பாய் வைச்சு யிருக்குதென்றும், அதுக்கு றஞ்சகம் வைச்சு அது பிடிபடுகிறதைப் பார்க்கிறதுக்காக முசே லாலி அவர்களும் அங்கே யிருக்கிறதாகவும், முசே லெறி அவர்களும் போறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.[1] முசே லாலி அவர்கள் தலங்கம்பாடியாரைச் சுத்துக்கோட்டைப் போட்டுக் கொள்ளச் சொல்லியும் உத்தரவு குடுத்து அங்கே சிறிது செனங்களையும் மத்தத்து வைத்து அனுப்பினதாகவும் தலங்கம்பாடியார் சுத்துக்கோட்டை போடுகுறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 24; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 14; சனிவாரம்***

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி : யின்றைக்கு பண்டிகையானதினாலே முசே லெறி அவர்கள் கோன்சேலியோர்கள் யெல்லாரும் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு வந்தார்கள் யென்றும், அவர்கள் தீவுக்கோட்டைக்குப் போனார்களென்றும், காவேரிப் பிரவாகம் ரொம்ப வருகுறதினாலே போன தண்டுகள் திரும்ப வந்துதென்றும், முசே லெறி அவர்கள் ஒட்டகைகளெல்லாம் கொண்டு வரச்சொல்லி நயினாரை அழைப்பிச்சு கூலி ஆள்கள் பிடிக்கச் சொன்னாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 26; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 16; சோமவாரம்***

இத்தனாள் முசியே லெறி அவர்கள் மத்தியானம் பிறப்பட்டு முசே

[1] இப்படி டேவிட் கோட்டையை இடித்ததற்குக் கைமாறாகவே 1761இல் புதுச்சேரியை ஆங்கிலேயர் இடித்தனர்.

சுப்பீர் காட்டு மேட்டுலே இறங்கியிருக்கிற வரண்டைக்குப் போனாரென்றும் அவர் யிவரைக் கண்டு பேசிக் கொண்டு ஆற்காட்டுக்குப் பயணமாய்ப் போனாரென்றும், முச லாலி அவர்கள் காரைக்காலுக்குப் போனாரென்றும் தண்டெல்லாம் வழி முட்டிலும் யிருக்குதென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 27; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 17; செவ்வாய்***

இத்தனாள் உதயத்திலே யேழு மணிக்கு கோந்து தே முமாராசன் (மோமெரன்சி) வீட்டுக்கு வந்தார். அவர் வந்தவுடனே அவரும் நாமும் கூடத்திலே போயி யிருந்து, முன்னாலே நாம் கும்பினிக் காரியத்திலே பிரயானசப்பட்டு வந்த தெல்லாம் முசே கொதே அவர்கள் கிட்ட யெழுதிக் குடுத்து சீமைக்கு அனுப்பிவிச்சு யிருந்தோமே, அதுக்கு நகல் யிங்கே யிருந்ததை யெடுத்து அவருக்குக் காண்பிச்சு விச்சதுக்கு, அவர் அதையெல்லாம் பார்த்து நீர்பிரயாசைப்பட்டதுக்கு செங்கல்பட்டு சாகீரை இங்கிரேசுக்காறர் கிட்ட யிருக்கிறதை வாங்கி கும்பினியார் உமக்குக் குடுக்க வேணும். அந்தப்படி குடுப்பார்கள் யென்று சொன்னார். அதன் பேரிலே அவரும் முன் கேட்டிருந்த படியினாலே அவருக்கும் கம்முதி சீரொப்பா, ஒரு சோடு குடுத்தனுப்பினோம். சாயங்காலம் அவர் பாப்பய்யப் பிள்ளை தோட்டத்துக்குப் போனாரென்றும் முசே லசேல் முகாந்திரமாய் நாலஞ்சு நாளாயி ராச வட்டம் விட்டு அவரை அழைச்சுப் போய் அன்னூறு ரூப்பாய்க்கு வெகுமானமும் குடுத்ததாகவும்...

முசியே லாலி றாயித்துனாந்து (?) செனராலவர்கள் காரைக்காலுக்குப் போயி சின்னப்பய்யனை ராசவட்டத்துக்கு அனுப்பிவிச்சதாகவும், அப்போது பாதிரியார் முகாந்திரமாயி கடுதாசி ராயப்பிள்ளை முதலான கிறஸ்துவர்கள் யெல்லாம் நாலு ரெண்டு பேர்கள் நாங்கள் போறோமென்று சொன்னதாகவும், அதுக்கு முசே லாலி அவர்கள் சம்மதியாமல் சீனப்பய்யனைத் தானே ராசவட்டத்துக்குத் தஞ்சாவூருக்கு அனுப்பிவிச்சாரென்றும் கேழ்க்கப்பட்டுது. முசே சுப்பீர் செனரால் வழுதாவூருக்கு அப்பால் போயிறங்கி யிருக்கிறாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 28; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 18; புதவாரம்***

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசே சுப்பீர் பெருமுக்கலிலே விருந்து சாப்பிடப் போனதாகவும் அப்பால் பயணம் போறதாகவும், நாரிலே போயி வெள்ளைக் கொடி போட்டு குடிகள் வர்த்தகர்களுக்கெல்லாம் கவில் குடுத்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 29; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 19; குருவாரம்***

இத்தனாள் வீட்டிலே கேழ்வியான சேதி : பங்காளத்திலே யிருந்து பிரான்சுக்காரரை (போர்க் கைதிகள்) யேத்திக் கொண்டு ஒரு சுலுப்பு வந்து அவர்களை யிங்கே யிறக்கி, அவர்களுக்குப் பதிலாக தேவனாம்பட்டணத்திலே பிடிச்ச பேரை ஆளுக்கு ஆள் (இருதரப்பாரும்) விடுவிச்சுக் கொண்டு போறதுக்கு வந்தது. சுலுப்புக்காரன் தாங்கள் வருகுறதிலே சதுரங்கப்பட்டணத்துக்கு நேரே வெகுதூரத்திலே மசுக்கரை விட்டுப் பிறப்பட்டு வருகிற கப்பலைக் கண்டோமென்று சொன்னார்கள் யென்றும் கேழ்க்கப்பட்டுது. நாமும் சாயங்காலம் சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், சூன் மாசம், தேதி 30; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 20; சுக்கிறவாரம்***

இத்தனாள் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசியே (புசி) கோல்கொண்டையிலே யிருந்து வெள்ளைக்காரர் ஒருத்தரையும் அங்கே வைக்காமல் படி யெல்லாரையும் கூட்டிக் கொண்டு கிஷ்ணா தீரத்துக்கு வந்ததாகவும், யிவ்விடத்துக்கு வருகிறதாகவும் 'முசே புசிக்கு[1] நடந்த சீமையெல்லாம் விசையராம ராசா குமாரனும் அங்கே யிருக்கப்பட்ட பாளையக்காரர் யெல்லாரும் யேகமாயிக்கூடி அங்கங்கே யிருந்த பேர்களை யெல்லாம் அடிச்சு சீமை யெல்லாம் கட்டிக் கொண்டார்களென்றும், முசியே லாசு (M. Law) தமயன் டில்லிக்குப் போய் பார்சா பேட்டி வாங்கி பட்டாணியன், சாட்டுகள் (Jats) யிவர்கள் பேரிலே போகிற பார்சா தண்டிலே கூடப்போயி அவர்களை யெல்லாம் அடிச்சதினாலே பார்சா சந்தோஷப்பட்டுத் தண்டு கூட்டினதாகவும், அந்தத் தண்டையும் கூட்டிக் கொண்டு பங்காளத்துக்கு வந்து சுத்திக் கொண்டதாகவும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் யின்றைக்கு முசே மலையா (M. Mallet) வந்து முசே லெறி அவர்களுடனே அய்யாயிரம் ஆடும் ரெண்டாயிரம் மாடும் ரெண்டு நாளையிலே கொண்டு வருகுறோமென்று சொல்லிக் கொண்டு போனதாகவும் கேழ்க்கப்பட்டுது. யித்தனாள் சாயங்காலம் சாரிபோய் ஏழுமணிக்கு வீட்டுக்கு வந்தோம் யிதுசேதி...

---

[1] ஸ்ரீரங்கத்தை பிரெஞ்சுக்காரர் விட்டுப் புதுச்சேரி திரும்பியதும் அச்சீமையை ஆங்கிலேயர் கைப்பற்றிக் கொண்டனர். புசி ஆந்திரக் கடற்கரையை விட்டுச் சென்னை நோக்கிப் புறப்பட்டதும் பிரெஞ்சு ஆதிக்கம் ஒழிந்தது. லல்லியின் ஆணைகள் இவை.

# ஜூலை 1758

***1758 வருசம், சூலை மாசம், தேதி 1; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 21; சனிவாரம்***

இத்தனாள் சாயங்காலம் கேழ்வியான சேதி, தஞ்சாவூர் சம்மதி யெட்டு லட்சமாய்த் தீந்து முசியே லாலி வருகுறாரென்று கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 3; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 23; சோமவாரம்***

இத்தனாள் முசே லெறி அவர்கள் ரேவுலே போயிருந்து கப்பல் மேலே சண்டை சாமான்கள் யேத்திவிக்கிறதாயும், யேதென்றால் தஞ்சாவூர் சமாதானம் முறிஞ்சு, சண்டைக்கு ஆயத்தமாயி முசேலெறி அவர்கள் யெழுதி அனுப்பினார்கள் யென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 4; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 24; செவ்வாய்***

இத்தனாள் உதயத்திலே பிறப்பட்டு முசே குளுவேத்து வீட்டுக்குப் போயி அவரைக் கண்டு ஆசாரம் பண்ணினத்துக்கு அவரும் மெத்த ஆசாரம் பண்ணி ரெண்டு பேரும் யிருந்து பேசுகையிலே அவர் சொன்னது : யிசுராப்பட்டா கொண்டு வந்தீரா வென்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது, "அது சக்கிறத்தார் கிட்டவுமிருக்கிறது. யிதல்லாமல் தஸ்த்திரத்திலேயு மிருக்குது. அதுக்கு நகல் நம்முடைய கையிலே யுமிருக்குது. யிதைப் பாரு," மென்று கொடுத்தோம். அதை வாங்கிப் பார்த்து, "யிது நாலு நாழிகைக்கு என் கையிலேயே யிருக்கலாமா? நான் அதிலே பார்த்துக் கொண்டு முத்திரை போட்டு உம்மண்டைக்கு அனுப்பிவிக்குறோ," மென்று சொன்னார். அதுக்கு நல்லது, அப்படியே ஆகட்டுமென்று சொன்னோம். கணக்குச் சேதி யென்ன வென்று கேட்டார். அதுக்கு, "கணக்கு யெழுதி முசே னுவார் (லெனுவார்) கையிலே குடுத்திருக்குறது. அவரும் முசே தெவோவையும் வைச்சுக் கொண்டு விளங்கினார். அவர் கேட்டதுக்கெல்லாம் சம்மதிகளும் சொன்னோ," மென்று சொன்னதுக்கு, நல்லது யிந்த சேதி கோந்து தே முமராசனுக்குச் (?) சொன்னீரா வென்று கேட்டார். உம்முடைய உத்தாரமானால் சொல்லுகுறோமென்று சொன்னோம். அவர் கும்பினீர் யெசமானச்சுதே, அவருக்குச் சொல்ல வேணு மென்று சொன்னார். நல்லது யினிமேல் சொல்லுகுறோ மென்று சொன்னோம். அதன் பேரிலே வீட்டுக்குப் போறீரா வென்று கேட்டார். நல்லதென்று உபசாரமாய் நாலு வார்த்தை சொல்லிப்

போட்டு அவரை அனுப்பிக் கொண்டு, முசியே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போய் அவரைக் கண்டு முசே குளுவேத்து அண்டைக்குப் போனதும் காகிதம் குடுத்தை மாத்திர விட்டு மத்தப்படி நடந்ததையும் பேச்சும் சொன்னதுக்கு, முசே பெடுத்தல்மீ சொன்னது, "முசே குளுவேத்து சொன்ன சேதி நீர் கேழ்க்கயில்லையா? முன்னாலே முசே தெவோ(வும்) முசியே (லெ)னுவாரும் வேணுமென்றும் கேட்டு வந்து வாங்கிக் கொண்டவர், நேத்து குமிசலிலே அவர்கள் ரெண்டு பேரும் தேவையில்லை, முசே புலோவும் முசே துப்பிளாமும் ரெண்டு பேரையும் நம்முடைய கிட்ட நேமிக்க வேணு மென்று கேட்டார். அதுக்கு முசியே லெறி அவர்களுக்குச் சம்மதமில்லாததினாலே ஒன்றும் சொல்லாமல், அனேகம் பொழுதாச்சு தென்று யெழுந்திருந்து விட்டார். யிப்படி யிருக்கிறது அவர் சேதி," யென்று சொன்னார்.

அதன் பேரிலே சந்தா சாயபு குமாரனுக்கு சாகீர் விட்டார்கள் யென்று சேதி கேட்டேனென்று சொன்னதுக்கு, மெய்தான் சந்தா சாயபு குமாரன் யிருநூறு குதிரை வைக்குறது ... தண்டுக்குக் கூடப் போறது. அவருடைய குதிரைக்கும் பாறுக்கும் அவர் சொந்த சிலவுக்குமாக திருவண்ணாமலை, செங்கமா, சேத்துப்பட்டு யிவ்வளவும் குடுத்ததென்று சொன்னார். அதன்பேரிலே, "பங்காளத்திலே முசே லாசு பார்சா உத்தாரம் வாங்கி வெகுசனத்துடனே பங்காளத்தைச் சுத்திக் கொண்டதாகச் சேதி கேட்டோம். அதென்ன," வென்று சொன்னதுக்கு, "அது ஒன்றுமில்லை. காசு வேண்டாமா?" வென்று சொன்னார்.

யிப்பால் கேழ்வியான சேதி : முசே லாலி அவர்கள் காரைக்காலிலே யிருக்கிறதாகவும் தஞ்சாவூர் சம்மதி சின்னப்பய்யன் போனது முறிஞ்சுதென்றும், மானோசி ரெண்டாயிரம் குதிரை அய்யாயிரம் பாறுடனே வந்து வழி கட்டினதாகவும், பாளையக்காரரை வழி (மறித்து) கண்ட விடமெல்லாம் குத்துறதும் வெட்டுறதும் யிப்படி நடக்குறதென்றும், முசே லாலி அவர்களுக்குச் சிலவுக்குக் கூட யில்லை யென்றும் கேழ்க்கப்பட்டுது. இதல்லாமல் மயிசூரிலே தளகர்த்தமாயிருந்த தேவராச உடையார் விழுந்து போனாரென்றும் அவர் வளத்துக் கொண்ட நந்திராசா மகனுக்குத் தளகர்த்தர்த்தனம் குடுத்து நடக்கிறது யென்றும், அந்தப் பிள்ளைக்குக் கலியாணம் பண்ணப் போறதாகவும் மைசூர் வெங்கிட்ட நாராயணப்பய்யனுக்கு எழுதி வந்த தென்றும் சேதி கேழ்க்கப்பட்டது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 5; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 25; புதவாரம்***

இத்தனாள் காலமே நாளை 26 தேதி சௌபாக்கியவதி பொன்னாச்சிக்குச் சீமந்தமான படியினாலே அதுக்கு வேண

சரஞ்சாமிகளெல்லாம் முஸ்தீது பண்ணச் சொல்லிக் கொண்டு வீட்டிலே தானே யிருந்தோம். யிப்படி யிருக்கையிலே கோந்து தே மும்மரான்சி நம்முட வீட்டுக்கு வந்தார். உடனே அவருக்கு நாற்காலி போடச் சொல்லி ரெண்டு பேருமிருந்த உடனே அவர் சொன்ன சேதி : நீர் விலை யெழுதி அனுப்பிவிச்சீரே, அந்த விலைக்கு அன்றியிலே பிடவை நயமாய்க் கிடைச்சுது. வாங்கினோமென்று சொன்னார். அதுக்கு நாம் சொன்னது, பிடவைக்குத் தக்கதாயிருக்கும், யிந்தப் பிடவை பார்த்தால் அப்போ உமக்குத் தெரியும் யென்றும் சொன்னோம். அதுக்கு யினி யென்ன, வாங்கிப் போட்டோம் யென்று சொல்லி, அதின் பேரிலே முசே லாலி யேழெட்டு நாளையிலே யிங்கே வருகுறார். நீர் காகிதங்களெல்லாம் தயாராய் வைச்சிரும். சீமைக்குக் கொண்டு போறதுக்கும் ஒரு படி யெழுதிவிய்யும். நாம் முசியே லாலி அவர்கள் வந்தவுடனே அவருக்குச் சொல்லி யிந்தக் காகிதமும் குடுப்பிச்சுப் பேசுகிறோம். அப்பால் சீமைக்கும் கொண்டு போய்ப் பேசுகிறோம். நீர் நம்மை உம்முடவராய் மனதிலே வையுமென்றும் சொல்லி, அதன் பேரிலே காரைக்காலிலே யிங்கிரேசுக்காரர் வெள்ளைக் கொடி போட்டுக் கொண்டு மூன்று கப்பல்க்காரர் வந்தார்கள். யிவர்களும் காரைக்காலிலே வெள்ளைக்கொடி போட்டார்கள். அதின் பேரிலே அவர்கள் தலங்கம்பாடி ரேவுலே போய்க் கப்பலை நிறுத்தி உலாந்தாக் கொடி போட்டுக் கொண்டிருக்கிறார்கள். முசே தருஷே(துஷே)யானால் பத்துக் கப்பலுகளையும் வைச்சுக் கொண்டு அவர்களிப்படி துள்ளிக்கொண்டு திரிய யிவர் வெறுமினே யிருக்குறாரென்று விதனமாயி சொன்னரார். அதுக்கு நாம் அப்படியாவென்று சொல்லிப் போட்டு வெறுமினே யிருந்தோம். அதின் பேரிலே அனுப்பிக் கொண்டு பிறப்பட்டு ரேவு மத்த யிடங்களெல்லாம் போயி சுத்திப் பார்த்து (துரை) கொவர்ணமாவிலே வந்திருக்குறா ரென்றும் கேழ்க்கப்பட்டுது. நரசிம்மச் செட்டி டங்காசாலைக்கு வந்து முசே தெவோ, சவரிராயப் பிள்ளை யிவர்களுக்கு சீமை அதிகாரம் போயிவிட்டது. யினிமேல் ஆர் வசத்திலே வருமோயென்று சொல்லிக் கொண்டதாகக் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 7; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 27; சுக்கிறவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி முந்தாம் நாளும் நேத்தும் குமுசேல் கூடினதாகவும் பணங்காசு நிமித்தியம் பேசினதாகவும் ரெண்டு லட்சம் ரூபாயி முசே தெவோ முஸ்தீப்பு பண்ணுகுறதாயும் முசே லாலி அவர்கள் திருவாலூருக்குப் போயிறங்கி யிருக்கிறாரென்றும், தஞ்சாவூரார் சமாதானமில்லை யென்றும் கேழ்க்கப்பட்டுது. பாப்பய்யப் பிள்ளை, முசே

சுப்பீர் பாளையத்துக்குப் போறதாகவும் கேழ்க்கப்பட்டது. கோந்து தேமும் மரான்சி[1] முந்தாம்நாள் வந்தவர் யெட்டு நாளையிலே முசே லாலி வருவாரென்றும் சொன்னார் யிதுசேதி.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 8; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 28; சனிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : தஞ்சாவூரார் சம்மதி சமாதானமாக யில்லை யென்றும், முசே லாலி அவர்கள் திருவாலூருக்குப் போயிறங்கி சுலுமு சாஸ்தி நடக்கு தென்றும், தஞ்சாவூராரும் அங்கங்கே கூட்டக்காரருக்கு (சனங்களுக்கு) உத்தாரம் குடுத்து யெங்கும் வழி நடவாமல் கலாபம் பண்ணுகுறதாகவும், திரிச்சிராப்பள்ளியிலே யிருந்த யிங்கிரேசுக்காரர் மத்தத்து அழைச்சுக் கொண்டு, மானோசி பாளைய(த்தோடே) கோட்டைக்கு வெளியிலே வந்து யிறங்கி யிருக்கிறாரென்றும் சீனப்பய்யன் தானும் வெகுமானம் வாங்கிக் கொண்டு முசே லாலி அவர்களுக்கு வெகுமானம் பிடிப்பிச்சுக் கொண்டு வந்ததாகவும், முசே லாலி அவர்கள் கோபம் பண்ணி வெகுமானம் வந்ததைத் திருப்பிவிட்டு சண்டைக்குப் போறதாகவும் கேழ்க்கப்பட்டுது. வடக்கே யிங்கிறேசுக் காரர் பிறப்பட்டு திருவத்தூர் முதலான யிடங்கள் யிவர்கள் கட்டின யிடங்களெல்லாம் வந்து அங்கங்கே யிருந்த போர்களைத் துரத்திவிட்டு தாங்கள் தோரணம் வைக்குறதாகவும், முசே சுப்பீர் கிடக்கையனாட்டுக்கு (இடக்க நாட்டுக்கு) அப்பாலே போகாம லிங்கே தானே யிருக்கிறதாகவும் பாப்பய்ய பிள்ளையும் அவரண்டைக்குப் போனதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 9; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 29; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி: முசே லெறி கோவர்ணதோருக்கு தேகம் சொஸ்தமில்லாமல் கோயிலுக்குப் போய் பூசை கேழ்க்கயில்லை யென்றும், வெளியிலே வல்லை (வரவில்லை) என்றும் கேழ்க்கப்பட்டுது. யிங்கே யிருந்தும் பத்துக் கப்பலிலே யேழு கப்பல் முன்னாலே பயணமாய்க் காரைக்காலுக்குப் போச்சுது. யிப்போதும் மூன்று கப்பலிலேயும் சகலசாமான்களையும் யேத்தி யிந்தக் கப்பலும் போனதாகவும், உடனே முன்போன கப்பலிலே ரெண்டு கப்பல் வந்து தென்றும் கேழ்க்கப்பட்டுது. அதிலேயும் தெரளாய் (திரளாய்ச்) சாமான்கள் யேத்துகுறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

---

[1] இந்தப் பெயரினை எப்படி எப்படி எல்லாம் பிரதி செய்துள்ளனர்.

நேத்து முத்து வெங்கிட்ட ராம ரெட்டி வந்து பேசிக் கொண்டிருக்கையிலே கேழ்வியான சேதி : ரெண்டு நாள் குமுசேல் கூடினதிலே முசே குளூவேத்து சொன்னது, பழய சீமையாகட்டும் புதுச்சீமையாகட்டும் சீமை யெல்லாம் முசே றெங்கப்பன் வசத்திலே குடுத்து யென்னைப் பணங்காசு றங்கப்பன் கையிலே வாங்கி சிலவு பண்ணச் சொல்லி கும்பினியார் உத்தாரம் யிங்கே நடக்க வேண்டிய காரியங்களுக்கெல்லாம் கும்பினியார் யெழுதிக்குடுத்த காகிதப் பெட்டி னான்(நான்) கொண்டு வந்தேன். யென் கப்பல் ஆலம்புரிக்கு நேரே முழுகிப் போச்சுதே, அதிலே அந்தக் காகிதப் பெட்டியும் முழுகிப் போச்சுது. ஆனால் என் கையிலே நகல் யிருக்குதென்று சொன்னதாகவும், அவர் சொன்னது முசே லெறி அவர்களுக்குச் சம்மதமில்லாதத்தினாலே, அவர் (திரட்டும் பணத்தை) சிலவு பண்ணிப் போடுவாரென்று (போடலாம் என்று) சொன்னதாகவும், அதுக்கு முசே குளூவேத்து சொன்னது, "அவர் (பிள்ளை) வசமாய்ப் பார்த்த ரெண்டு வருஷத்திலே அவர் செலுத்தின பணமென்ன? அதைப் (குத்தகையைப்) பிடிங்கி வேறே (ஆட்களிடம்) குடுத்தீரே, யிவர்கள் செலுத்தின பணமென்ன?" வென்று கேட்டதாகவும், அதுக்கு (வந்த) பணம் (எலலாம் செலவாகி விட்டது) என்று முசே லெறி சொன்னதாகவும், அவர் (பிள்ளை) "பணம் சம்மதி பண்ணுகுறறேனென்று சொல்லிக் கொண்டு வர, அந்த வார்த்தையையும் கேளாமல் அவர் வந்து பிராது யெழுதிக் குடுத்ததுக்கும் ஒன்றும் விசாரிச்சு தாக்கீது பண்ணாமல், அவருக்கும் சொல்லாமல் பிடிங்கிப் போட்டீரே? அப்படி யிருக்க சீமையிலே, யிது தான் கண்டு தென்றும் யெப்படிச் சொல்லுகுறீர்?" யென்று கேட்டதாகவும், யிப்படி யெல்லாம் நடந்து தென்றும் கேழ்க்கப்பட்டுது.

முசே லாலி அவர்கள் தண்டு தஞ்சாவூருக்குப் போனதாகவும் கிழக்கே பத்து நாழிகை வழி அம்மாப் பேட்டை மட்டுக்கும் போனதாகவும், அங்கே ஒருநாள் சண்டையாச்சு தென்றும் தஞ்சாவூராரும் துணிஞ்சுவந்து விழுந்ததிலே அவர்களிலும் யிவர்களிலும் சேமாச்சு (உயிர்விட்டனர்) தென்றும், முசே ஒம்மோ விழுந்து போனதாகவும், அதிலே அவர்கள் தெறிச்சுப் பின் வாங்கினதாகவும், யிவர்கள் போய் மாரியம்மன் கோயிலுக்குக் கிட்டப் போய் பாளையம் இறங்கினார்களென்றும், முசே லாலி அவர்கள் தஞ்சை நகரம் வாங்காமல் வரத்தக்கதில்லை யென்று சொல்லிக் கொண்டிருக்கிறதாகவும் கேழ்க்கப்பட்டுது. (இது) நிசம் (என்று) சொல்லக் கூடாது. யின்னம் சேதி அறியவேணும்.[1]

சென்னப்பட்டணத்துக்கும் நாலு மனவார் கப்பல் (Man of war) வந்ததென்று சொல்லுகுறார்கள் அறிய வேணும்.

---

[1] ஆங்கிலேயரின் முழு உதவி இருந்ததால் தான் தஞ்சாவூர் இவ்வளவு துணிச்சலோடு எதிர்க்க முடிந்தது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 10; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 30; சோமவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி, முசே புசி யிவ்விடத்துக்குச் சிலவுக்குத் தறுவாடி[1] வழியிலே அன்பதினாயிரம் ரூபாய் அனுப்பினதாகவும், அந்த ரூபாய் டங்கா சாலைக்கு வந்து தென்றும் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல் கேழ்வியான சேதி, கப்பல் கொம்மாந்தாம் முசியே தருஷே (Commandart De Roche)[2] சொன்ன சேதி : முசியே தெருஷேவுக்கு ஒரு வெள்ளைக்காரன் விருந்து கொடுத்தபோது பணமே இல்லாமல் நீர் எப்படிச் சமாளிக்கிறார் என்று கேட்டார். அதற்கு முசே தெஷே(?) சொன்ன சேதி : "மெய்தான் நீர் சொன்னது. ஆனால் சொல்லுகுறேன் கேளும். நாங்கள் பிறப்படுகுறபோது, ராசா அவர்கள் சொன்ன சேதி நமக்குக் கப்பல் சிலவுக்கும் மூன்று வருஷத்துக்கும் யேகமாயி சிலவுக்குக் குடுப்பிச்சார். அதினாலே நமக்குச் சிலவுக்கு ஆரையும் கேழ்க்கத் தேவையில்லை. முசே லாலிக்கு மட்டாய் (ராஜா என்னைக்) குடுக்கச் சொல்லி, அவரை அழைச்சு அங்கே பணம் யிருக்குது. நீர் போன யிருபது நாளைக்குள்ளே தேவனாம்பட்டணம் வாங்க வேணும் ... யிப்படியாயி உம்முடைய பிறகாலே ஒரு யிசுக்காதுரு பயணம் பண்ணிச் சிலவுகளுக்கும் போட்டு அதுருக்கான பெரிய மனுஷனையும் பயணம் பண்ணி அவ்விடத்துக் காரியங்கள் பார்க்கவும் உமக்குத் தண்டுச் சிலவுக்கும் குடுக்கவும் அனுப்பிவிக்குறோம். நீர் முன்னுதாயிப் போயி தேவனாம்பட்டணம் வாங்கச் சொல்லி அனுப்பிவிச்சார். ஆகையாலே பிறகே வருகுற இசுக்காதுருலே பணமும் ஒரு பெரிய மனுஷனும் வருவாரெ"ன்று சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது. யிது சேதி.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 11; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 31; செவ்வாய்***

இத்தனாள் காலமே வீட்டிலே தானே யிருக்கையிலே, முந்தனாள் குமுசேல் கூடி தேவனாம்பட்டணத்திலே யிருந்து யெடுத்துக் கொண்டு வந்ததுகளை விலை மதிச்சு யெழுத வேணுமென்று பேசினதாகவும், அப்போது நாம் விலை மதிச்சப்படிக்கு யெழுதிக் கொண்டார்கள். யிந்தப்படிக்கிக் குமுசலிலே பேசிக் கொண்டு நம்முடைய பேருக்கு குமிசெல் கடுதாசி யெழுதி யெல்லாரும் கையெழுத்தும் போட்டு நேத்து

[1] இவர் ஒரு பாங்கர்.
[2] முசியே தெஷே (d' Ache) என்று ஆங்கிலத்தில் உள்ளது.

மத்தியானம் காகிதம் அனுப்பிவிச்சார்கள். அதின் பேரிலே நாமும் கும்பினீர் வர்த்தகர் காரைக்கால் வரத்தகர் யெல்லாரையும் ஏழு மணிக்குத் தானே கோட்டைக்கு வரச் சொல்லி தாககீது சொல்லி அனுப்பிவிச்சு, யித்தனாள் காலமே நாமும் கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி கோவர்ணதோருக்குத் தேகம் சொஸ்தமில்லாமல் முந்தனாள் நேத்து ரெண்டு நாளும் லங்கணம் பண்ணினாரென்றும் யின்றைக்கு சூப்பு வாங்கிக் கொண்டு காம்பிராவிலே தானே யிருக்கிறார். ஆரும் போகக்கூடாது யென்று சொன்னதினாலே நாம் பிடவை பார்க்குற சாலையிலே தானே போனவிடத்திலே முசியே புலோ யிருந்தார்.

அவரைக் கண்டு அவரும் நாமும் பேசிக் கொண்டு யிருக்கையிலே அவர் சொன்னது: நமக்குப் பணத்துக்கு அவசரமாயிருக்குது. காங்குப்பிடவை சம்மதி தீத்துப் போட்டு பணம் சேரப் பண்ண வேணுமென்று கேட்டார். அதுக்கு நாம் அந்த வேலையில் தானிருக்குறே னென்று சொன்னதுக்கு, கோந்து தே முமமராசன் உன் வீட்டுக்கு வந்தாரா வென்று கேட்டார். வந்தார் அவரும் மார்ஷெல் தெ மரேஷால் தெ (கேம்ப்) யென்குறவரும் (Marchel de Camp) மயோர்செனரால் முசே புமேஸ்திரி என்குற வரும் நம்முடய தோட்டத்துக்கு வந்தார்கள். அன்றைக்குப் பழங்களும் ரெண்டு போட்டுலு சிகப்புச் சாராயமும் குடுப்பிச்சு ஆட்டம் பார்ப்பிச்சு அனுப்பிவிச்சேன். யிப்பால் தமக்குப் பிடவைத் தினிசுகள் வேணு மென்று ஒரு சாப்பித்தா யெழுதிக் குடுத்து அனுப்பிவிச்சுத் தாமும் வீட்டுக்கு வந்தார். அவருக்கும் ஆயிரம் ரூபாய் மட்டுக்கும் வெகுமானம் குடுத்தேன். அதன் பேரிலே பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் கடனாகப் பிடவை தரவேணுமென்று (தெ மோமொரன்சி) கேட்டார். யிப்போவானால் வர்த்தகர் வியாபாரம் நடக்கயில்லை, மூணு வருஷமாச்சுது யென் கையிலே வேறே பணங் காசில்லை யென்று சொன்னேன். அதின் பேரிலே அவர் வேறே வாங்கினாரென்று சொன்னோம். அதுக்கு அவருடனே நடந்த சேதி யெல்லாம் சொன்னீராவென்று கேட்டார். சொல்லி காகிதமும் காண்பிச்சேன். பார்த்துக் கொண்டு, "உம்முடைய விபகாரம் செயிக்கும் நாமும் சீமைக்குப் போறோம். நாமும் முசே கொதேயும் பேசிக்கொண்டு உம்முடய காரியமெல்லாம் அனுகூலம் பண்ணிப் போடுறோம்," யென்று சொன்னாரென்று சொன்னதுக்கு, முசே புலோ சொன்னது: சேதியானால் சொல்லுகுறேன். யிவர் பெரிய மனுஷர், கும்பினிக்கு யெசமானாய் விசாரிக்குறவர். ராசவங்கிஷம் அதிலே யெல்லாம் தப்பிதமில்லை. அதினாலே நாம் உம்மைக் கூட்டிப் போய் அவருக்குப் பேட்டி பண்ணிவிச்சோம். அவருக்குக் கையிலே காசுயில்லை. அதினாலே முசே லெறியும் முசே தெவோவும் முசே புஷேத்தும் அவருக்குப் பத்துப் பணம் குடுத்து பிடவைக்கு யெத்தனம் பண்ணினார்கள். அதினாலே அவர்கள்

மாயத்திலே அவர் விழுந்தார். ஒரு நாள் யிவரும் கூட யிருக்கையிலே முசே லெறி நம்மைப் பரியாசமாயி ஒரு சேதி சொன்னார். அதினாலே நான் முசே லெறியைப் பார்த்து, "நீர் சொந்த துபாசியை வைச்சுக் கொண்டு கும்பினிக் காரியமெல்லாம் நடத்துகி(றது சரியில்லை). உமக்கு துபாசி பேரிலே குத்தமிருந்தால் அவரை அழைச்சு கோன்சேலிலே கேட்டு குத்தம் சுமத்த வேணும், யில்லாவிட்டால் அவரைக் கொண்டு யெல்லாக் காரியமும் பண்ணிக் கொள்ள வேணும். முன் தொரைத்தனம் பண்ணின பேர்களெல்லாம் அறியாமலா கும்பினி துபாசியைக் கொண்டு யெல்லாக் காரியமும் பண்ணி விச்சுக் கொண்டார்," யென்று சொன்னேன். அதுக்கு முசியே லெறி வாயை மூடிக் கொண்டிருந்தார். கோந்து தே முமராசனும் வாயை மூடிக் கொண்டிருந்தார்.

அதன் பேரிலே பின்னை ஒரு நாள் கண்டு நீர் கும்பினிக்கு யெசமானாச்சுதே, அங்கே பேச்சுவந்த விடத்திலே கண்டிச்சுப் பேச வேண்டாமா யென்று கேட்டேன். அதுக்கு அவருக்கு அவர்கள் ஆசை குடுத்ததினாலே மறு உத்தாரம் சொல்லுகுறத்துக்கு வாயின்றி போச்சுது. யிப்படிக் கொத்தவர் யிவர், யென்ன காரியம் பண்ணப் போறார். யிவருக்கு நீர் குடுத்தது தெண்டந்தான். முசே லாலி அவர்களுக்கு யென்ன குடுத்தீ"ரென்று கேட்டார். அவருக்கும் மோதிரமும் நதிரும் முசியே லெறி தான் குடுக்கச் சொன்னார். அன்னூறு விராகனுக்குக் குடுத்தே னென்று சொன்னேன். அவ்வளவு குடுக்கவும் வேண்டியது தான். முசே லாலி வரட்டும், முசே குளுவேத்துக்குப் புத்தியில்லை. முசே மும்மராசன் யென்கிறவரும் ஆசையிலே விழுந்தார். ஆகையாலே நாம் முசியே லாலியோடே பேசி உன் காரியமெல்லாம் திட்டம், பண்ணுகுறேன்," யென்று சொன்னார். நல்லதென்று சொல்லி அதின் பேரிலே வர்த்தகரை வைச்சுக் கொண்டு தேவனாம்பட்டணத்திலே யிருந்து எடுத்து வந்த சலவை, ஒலாந்தா சிலம்புரி[1], படதிகாரி யிருபது அது சலவைக் கூலி கூட கோடி 1—க்கு முதல் தரம் யிருபத்தி மூணு, ரெண்டாந்தாரம் இருபத்திரெண்டு வீதம் விலை வைச்சோம். அப்போ யிதிலே மூணில் ஒன்று முசே லாலிக்குக் குடுக்க வேணும். ஆகையாலே கும்பினியாருக்கு நஷ்டம் வரும். அதினாலே விலை மார்க்கமாய்ப் பார்க்கச் சொன்னார். அந்தப்படிக்கு வர்த்தகருனே சொன்னோம். அதின் பேரிலே பதினஞ்சு குஞ்சம் வைச்சு யேழரைக்கால் சிலம்புரி வைச்சு கோடி 1—க்கு யிருபது விராகன் கிறையம் யெழுதிவிச்சு யிருபது கட்டும் போட்டார்கள். அதன்பேரிலே நாம் பிறப்பட்டு பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

[1] salampore துணி.

இப்பால் கேழ்வியான சேதி : முசியே லாலி அவர்கள் நாகூருக்குக் கவில் குடுத்து, வெள்ளை நிசான் போட்டிருந்தவரைக் கவிலை விட்டு விட்டு நாகூரிலே யிருந்த வர்த்தகர், செட்டிகள், குடிபடை யெல்லாருடைய வீடுகளையும் கொள்ளையிடச் சொல்லி பிடவை சீலை கொட்டைப்பாக்கு முதலான சரக்கு களெல்லாம் யேகமாயிக் கொண்டு வந்து குமிச்சதாகவும், அதெல்லாம் மூணு பேர் வெள்ளைக்காரர் விலைக்கு வாங்கினார்களென்றும், யெங்கே பார்த்தாலும், கொள்ளை அடிக்குறார்களென்றும் கீழ்வளுர் (கீவளூர்), திருவாலூர் யிதிலே யிருந்த விக்கிரகங்களை யெல்லாம் யெடுக்குறார்களென்றும், சீனப்பய்யனைக் கொண்டு ரெண்டு லட்சம் ரூபாய் குடுக்கச் சொல்லிக் கேட்டார் யென்று, அதுக்கு அவன் யென் கையிலே ஒன்றுமில்லை யென்று சொன்னதாகவும், அவனைத் தண்டோடே கூட வரச்சொல்லிக் கூடவே போறானென்றும், நாகப்பட்டணம் ஒலாந்தாக்காரர் லட்சம் விராகனும் குடுத்து அவன் கேட்ட சரன்சாமியெல்லாம் அனுப்புகிறார்கள் யென்றும், தலங்கம்பாடி யாரும் அவர் கேட்ட சரன்சாமி யெல்லாம் அனுப்புகிற தாகவும் கேழ்க்கப்பட்டுது. தஞ்சாவூரார் மாரியம்மன் கோவிலிலே வந்து யிறங்கி யிருக்குறதாகவும் யிவர்கள் அம்மாப்பேட்டையிலே யிறங்கினார்களென்றும் முசியே சுப்பீர் போகப் போறாரென்றும் பாப்பய்யப் பிள்ளை முசியே சுப்பீரண்டைக்குப் போனவன் காரியமில்லாமல் வீடு வந்து சேர்ந்ததாகவும், நாகூர் கொள்ளை யிட்டதிலே ஆதியந்தம் ஒன்பது லட்சத்துக்குக் கண்டுது யென்றும் கேழ்க்கப்பட்டுது. யிது யிப்படி, யினிமேல் நடக்குமென்று தெரியவில்லை. யிது சேதி.

### *1758 வருசம், சூலை மாசம், தேதி 12; வெகுதானிய வருசம், ஆனி மாசம், தேதி 32; புதவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போய் பிடவை பார்க்கிற சாலையிலே யிருந்து கொண்டு கும்பினி வர்த்தகர் காரைக்கால் வர்த்தகர் யிவர்களைக் கூட வைச்சுக் கொண்டு தேவனாம்பட்டணத்திலே யிருந்து யெடுத்து வந்த பிடவைகளை விலை தீத்துக் கட்டுப்போடச் சொல்லி முசியே புலோவும் முசே சொற்னேத்தும் சொன்னார்கள். அதின் பேரிலே நேத்து கட்டுப்போட்ட சன்ன உலாந்தா சிலம்புரி நேத்து யெழுதிவிச்சபடிக்கு கோடி 1—க்கு வி 22 க்கு (ப் பதில்) 20 வீதம் யெழுதி விச்சு முப்பத்தொன்பது கட்குப் போட்டது. அதின் பேரிலே சலவை உலாந்தா நெடுமுழம் கோடிக்கு (குறைந்த பட்சம்) வி 45, க்கு வி 43 ஆகிலும் போட வேண்டியதுக்கு வி 38 ஆகக் கணக் கெழுதிக் கட்டு முப்பத்தி ரெண்டு போடப்பட்டுது. ஆக யின்றைக்கு 71 கட்டு போடப்பட்டுது. நேத்து போட்டது (சேர்த்து) 91 கட்டு ஆச்சுது. சிலம்புரி கட்டு 1 க்கு கோடி நாலாகவும் நெடுமுழம் கட்டு ஆச்சுது. கட்டு

1 க்குக் கோடி ஒண்ணரையாகவும் போடப்பட்டது. யிப்படி போட்டுக் கொண்டிருக்கையிலே கோந்து தே மும்மகராசன் (?) வந்தார். அவர் வந்தவுடனே யிவர்கள் போயி மட்டத்தரம் பிடவைகளை எடுத்து அவருக்குக் காண்பிச்சு விலையும் பேசினார்கள். அதைக் கேட்டுக் கொண்டு அவர் போனார். அதிலே பார்த்தால் முசியே லாலி அவர்கள் பங்கிலே யிவருக்கும் பங்குண்டு ஆகையாலே யிவர்கள் யிவருக்கு யிப்படிக் காண்பிச்சுப் போட்டார்களென்று யெண்ணிக் கொண்டோம். அவர் போன பிறகு நம்மைப் பார்த்து, "நாங்கள் முசியேக்கள் யெல்லாம் குமிசேலிலே பேசிக் கொண்டோம். நீர் விலை போடுகுறது. முசியே லாலி அவர்கள் வந்து விலை சரியா சத்தியமா வென்று கேட்டால், நீர் சத்தியமென்று சொல்லுகிறது யென்று பேசிக் கொண்டோம்," யென்று சொன்னார்கள். உடனே நான் முசியே புலோவையும் முசியே கொற்னேத்தையும் பார்த்து, "நானேன் சத்தியம் யென்று சொல்லுவேன். அவரானால் சண்டை முகத்திலே போயி சீவனைக் குடுத்துப் பங்கு வாங்குறார். யிதிலே என்ன ஆதாயம் வரப்போறது? யிதொரு காரியம் போலே விலையைக் குறிச்சு யென்னைச் சத்தியம் பண்ணிக் குடுக்கச் சொல்லுகிறதென்ன? அப்படி நான் ஒருக்காலும் பொய்யான சத்தியம் பண்ணத் தக்கதில்லை," யென்று கெட்டியாயிச் சொன்னேன். அதுக்கு, "அத்தனை மட்டுக்கும் வராது. ஆனாலும் நடந்த சேதி சொன்னோ," மென்று சொன்னார்கள். அதுக்கு நாம் சொன்னது, "அத்தனைக்கு வந்தாலும் ஆகும், வராவிட்டாலும் ஆகும். நான் மாத்திரம் பொய்ச் சத்தியம் பண்ணுவேன் என்று நீங்கள் மனதிலே யெண்ணத் தேவையில்லை. கெட்டியாயி யெல்லாருடனேயும் சொல்லி விடுங்கோ," ளென்று சொல்லிப் போட்டு பனியிரெண்டு மணிக்கிப் பிறப்பட்டு வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 14; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 2; சுக்கிறவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : தண்டிலே முசியே சோபினே சொலுதாதுகளை அடித்ததாகவும் அவர்கள் போயி முசியே லாலி செனறாலுடனே சொல்லிக் கொண்டதாகவும், அவர் முசியே சொபினேயை அழைப்பிச்சுக் கோபம் பண்ணி, "யினிமேல் ஆறாகிலும் சொலுதாதுகளை அடிச்சார்களே யானால் அவர்களைக் கொண்டு உன்னை அடிக்கச் சொல்லுவேன்," யென்று சொல்லிப் போகச் சொன்னதாகவும், அந்த வார்த்தை பொறாமல் முசியே சொபினே தானிருக்கிற யிடத்திலே போயி பிஸ்தோலாலே சுட்டுக் கொண்(டதாகவும்) கேழ்க்கப்பட்டுது.[1]

[1] இந்தக் காலத்திற்குப் பிறகும் அவர் பிழைத்து, பல போர்களில் ஈடுபட்டார்.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 18; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 6; செவ்வாய்வாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : தஞ்சாவூர் குதிரையிலே ரெண்டாயிரம் குதிரையும் பதினாயிரம் ராணுவும் தஞ்சாவூருக்குக் கிழக்கே அம்மாப்பேட்டை அண்டையிலே வந்து யிறங்கினதாகவும், முசியே லாலி அவர்கள் பாளையம் அம்மையப்ப(னையும்) பாச்சக்கடையும் தாண்டி ஆயிரம் சொலுதாதுகளும் ரெண்டாயிரம் பாறுக்காறரும் அம்மாப்பேட்டைக்குக் கிழக்கே நாலு நாழிகை வழியிலே யிருக்கிற கோவில்வண்ணி (கோவில் வெண்ணி) யென்குற கிராமத்திலே போயி யிறங்கியிருக்கிற தாகவும், ரெண்டாம் தேதி வெள்ளிக்கிழமை நாள் அம்மாப்பேட்டையிலிருந்த ரெண்டாயிரம் குதிரைக்காரரும் பாறுக்காரரும் சண்டைக்கு வந்ததாகவும், அப்போது கோவில் வண்ணியிலே யிறங்கியிருக்கிற சொலுதாதுகளும் பாறுக்காறரும் யெதித்து பீரங்கிபோட்டதாகவும், அவர்கள் வானத்தைக் (rockets) காச்சி எறிஞ்சதாகவும், யிவர்களிலே அஞ்சாறு பேருக்குக் காயம்பட்டதாகவும், அவர்களிலே பதினைஞ்சு குதிரை கையறமாயி விழுந்து (செத்துப்) போச்சுதென்றும், பதினைஞ்சு குதிரைக்குக் காயம் யென்றும், அதிலே சிறிது மனுஷரும் பாடுகளாயி (செத்தபின்) அவர்கள் தண்டு முறிஞ்சு ஓடிப்போனதாகவும், அதிலே ரெண்டு பீரங்கியும் முப்பது துப்பாக்கியும் யிவர்கள் கிட்ட அகப்பட்டதாகவும், தஞ்சாவூர் குதிரையிலே அஞ்சாறு[1] குதிரையும் சொக்கலிங்கமும் வந்து விழுந்து திருமலைராசன் பட்டணமெல்லாம் கொள்ளை அடிச்சானென்றும், நாலு மகாணமும் கொள்ளையிட்டுக் கொண்டு போனதாகவும், மயிசூரிலே யிருந்து அயிதரு நாயக்கனும் ரெண்டாயிரம் குதிரையும் கருவூர் நெடுவூர் (நேரூர்) தோட்டியம் யிவ்விடங்களுக்கு வந்ததாகவும், முசியே லாலி அவர்களுக்கு பிலானாய் வருகுதென்று கேழ்க்கப்பட்டுது. யிங்கே யானால் ரசா சாயபு குதிரையும் பாறும் சேவுகரும் வைக்குறதாகவும் தேசாய் சாமா ராயனும் குதிரை வைக்குறதாகவும், வேலூர் முர்த்திசல்லி கான் குதிரை வைச்சு முசே லாலி அவர்கள் தண்டுக்கு அனுப்பிவிக்குறதாகவும் மமுதல்லி கானும் குதிரை வைக்குறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 23; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 11; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்வியான சேதி : காரைக்காலிலே யிருந்து வரதப்ப நாயக்கன் வந்து சொன்ன சேதி: முசியே லாலி செனராலவர்கள் பாளையம் அம்மாப்பேட்டையிலே யிருந்து மாரியம்மன் கோயிலடியிலே

[1] 500 என்று ஆங்கிலத்தில் உள்ளது.

போயி யிறங்கினதாகவும், அதன் பேரிலே தஞ்சாவூரிலே யிருந்து குதிரைக்காரரும் ஒரு சமேத்தும் (சமேதார்) ராசவட்டம் பேச வந்தவர்களை முசியே லாலி அவர்கள் தம்முடைய பாளையத்திலே நிறுத்திக் கொண்டு, தாம் சின்னப் பய்யனையும் ஒரு பாதிரியையும் தஞ்சாவூருக்கு அனுப்பிவிச்சதாகவும், அங்கே ராசவட்டம் பேசி முப்பது லட்சமாய்த் தீந்து பத்து லட்சம் ரொக்கத்திலே குடுத்ததாயும், இதல்லாமல் முசியே லாலி அவர்கள் திருக்காட்டுப்பள்ளிக் கோட்டையைக் கேழ்க்குறதாகவும், அதுக்கு தஞ்சா(வூரார்) குடுக்கச் சம்மதியில்லை யென்றும், முசியே லாலி அவர்கள் யெந்த விதமாகிலும் திருக்காட்டுப்பள்ளிக் கோட்டையை வாங்காமல் விடத்தக்கதில்லை யென்று கேழ்க்கப்பட்டுது. யினி மேல் அறிஞ்சு யெழுதவேணும்.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 25; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 13; செவ்வாய்***

இத்தனாள் தஞ்சாவூர் சேதி : மானோசிஅப்பா அல்லாதே, ராசா தானே ராசவட்டம் அனுப்பினதாகவும் சமாதானம் பேசுகுறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் கேழ்வியான சேதி : முசியே லெறி அவர்கள் கோயிலுக்குப் போயி பூசை கேட்டு வந்து மெத்தை மேலே வெள்ளைக்காரருடனே பேசிக் கொண்டிருக்கையிலே முசியே குளுவேத்து வந்து தேவனாம்பட்டணம் சீமை விசுவனாத ரெட்டியார் வருசம் ஒன்றுக்கு விராகன் 13,000 வீதம் குத்தகையாயிப் பேசினதுக்கு ஒரு கிஸ்தி நிறுத்தி மறுவருஷம் வாங்கிக் கொள்ள வேணுமென்று பேசவந்தார். அதன் பேரிலே மூன்று பேர் கிறிஸ்துவர்கள் சம்பா கோயில் பாதிரிமார் சேஷ்ட்டர் முகாந்திரமாயி வருசம் ஒன்றுக்கு விராகன் 14,000 வீதம் குடுக்குறது, கிஸ்தி நிறுத்தவும் தேவையில்லை யென்று பேசினார்கள். ஆகையாலே அவர்களைக் கூட்டி வந்தேனென்று சொல்லி, அவர்களை அழைப்பிச்சு அவர்களுக்கு ரெண்டு கெசம் சகலாத்தும் வெகுமானம் குடுப்பிச்சு, சீமை அவர்கள் வசமாயிக் குத்தகை குடுத்து அனுப்பிவிச்சதாகவும், முசே புலோவுக்கு உப்பிசரோகம் அதிகமாயி உரத்த சுவாசம் கண்டு மெத்தவும் உபாதியாயிருக்குதென்றும், அதுக்கு ரெத்தம் வாங்கிறதும் பேதிக்குக் குடுக்கிறதும் யிந்த அடியிலே நடக்குதென்றும் முசியே புலோ மருமகனுக்கும் யிந்தச் சேதி யெழுதிப் போச்சுது யென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 26; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 14; புதவாரம்***

இத்தனாள் சாயங்காலம் பிறப்பட்டு சாரி போய் ஏழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிதிலே கேழ்வியான சேதி : இங்கிலிசுக் கப்பல்

தூரத்திலே காணப்படுகிறதாகவும் ரேவிலே யிருந்த சீமைக் கப்பல் யெல்லாம் வடக்கே போறதென்றும், அது நிமித்தியம் கப்பலிலே யிருந்து யிறங்கின ஒப்பிசியால்கள் சொலுதாதுகள் யெல்லாரும் கப்பல் யேறுகுறார்கள் யென்றும் தேவனாம்பட்டணம் சீமை ஞானப்பிரகாச முதலியும் நாலுபேர் கிறிஸ்துவர்களுமாயி வருடம் ஒன்றுக்கு 13,000 ஆக விசுவனாத ரெட்டியார் பேசின படிக்கே வாங்கிக் கொண்டார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

சவரிராயனுக்கும் தைரியனாதனுக்கும் ஒன்றுக்கொன்று ஆகயில்லை யென்று கேழ்க்கப்பட்டுது யிது சேதி.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 27; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 15; குருவாரம்***

இன்றைய தினம் கேழ்வியான சேதி : யிங்கிலீசுக்காரர் கப்பல் ஆலம்புரிக்கு நேரே வந்து பிடிச்சு கோட்டையைப் பார்த்து ரெண்டு குண்டு போட்டு, அங்கே ஒரு சுலுப்பு மேலே கட்டக்குச்சி யேத்தி யிவ்விடத்துக்கு வருகுறதாயிருந்ததையும் பிடிச்சுக் கொண்டு அஞ்சாறு பண்ணைகளிலே கட்டக்குச்சி யேத்தியிருந்ததையும் சுட்டதாகவும், அதன் பேரிலே முசியே லெறியினுட பெண்சாதி முதலான பேரெல்லாம் பிறப்பட்டு யிவ்விடத்துக்கு வந்தார்களென்றும், முசியே சுப்பீரும் தம்முட தண்டெல்லாம் கூட்டிக்கொண்டு ஆலம்புரிக்கு வரச்சொல்லி அனுப்பிப் போட்டு அவர் மாத்திரம் நேத்து ராத்திரி கோட்டைக்குள்ளே வந்திருக்குறாரென்றும், நேத்து சாயங்காலம் சவரிராயன் அரியாங்குப்பம் போயி வண்டி மேலே வருகுறதிலே ராசா ஒப்பிசியால் ஒருத்தன் குதிரை மேலே வருகுறவனுக்கும் யிவன் மனுஷருக்கும் சச்சரவு ஆயி, அவன் குதிரை விட்டு யிறங்கி வண்டிக்காரனையும் அடிச்சு சவரிராயனையும் அடிச்சதாகவும், அதன் பேரிலே சவரிராயன் வண்டியை சுறுக்காய் விட்டுக்கொண்டு வீட்டுக்கு வந்து வீட்டிலே யிருக்குற சேவுகரையும கூட்டிக் கொண்டு போய் அவனைப் பிடிக்கச் சொன்னதாகவும், அவன் யிறங்கி ஒரு துலுக்கன் கத்தியை பிடிங்கிக் கொண்டு துரத்தின உடனே யெல்லாரும் ஒருத்தன் பேரிலே ஒருத்தன் விழுந்து ஒடுகிறதினாலே அவன் துடர்ந்து போய் நாலஞ்சு பேரை அசல்க் காயமாய் (இறக்கும்படி) வெட்டினதாகவும் கேழ்க்கப்பட்டுது. முசியே லாலி.

அவர்கள் (லாலி) தண்டு தஞ்சாவுருக்குக் கிழக்கே ஆனந்தவல்லி அம்மன் கோயிலு, மானோசி சத்திரம் (இங்கே) யிறங்கியிருக்கிறதென்றும், சுத்து வட்டங்களிலே தஞ்சாவூர் குதிரைகள் அங்கங்கே யிருந்து கொண்டு றஸ்து வராமல் தடை பண்ணுகுறதினாலே தண்டிலே முற்றுகை ரொம்ப வென்றும், மோருசா (பள்ளம் வெட்டுதல்) போடுகுறதாகவும் சமாதானமில்லை யென்றும் கேழ்க்கப்படுகுறது.

அந்த ஒப்பிசியால் பயம் நிமித்தியம் சவரிராயன் வீட்டிலே பத்து பேர் சொலுதாதுகளும் பாறுக்காறரும் யிருக்குறதாகவும் சவரிராயனுக்கும் தைரியனாதனுக்கும் சமரசமாய் யிருக்கயில்லை யென்று கேழ்க்கப்பட்டுது.

*1758 வருசம், சூலை மாசம், தேதி 28; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 16;*

இத்தனாள் சுக்கிறவாரம் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே இங்கிலீசுக் கப்பல் ஒன்பது கப்பல் வந்து ஈசானிய மூலையிலே காண்பிச்சு நின்ற படியினாலே முசியே லெறி அவர்கள் பிறப்பட்டு ரேவு துரையிலே போயிருந்து கொண்டு பத்துமணி வரைக்கும் யிருந்து கப்பலுகளுக்கு வேண்டிய சகலசரஞ்சாமிகளும் யேத்திவிச்சு, அதன்பேரிலே கோட்டைக்கு வந்து நின்ற நிலையிலே குமுசேல் கூடிப் பேசி சண்டைக்குப் போறதாயித் தீத்துக் கப்பல் கொம்மாந்தாம் முசியே தெருஷேக்குப் (தெஷே) பயணம் சொன்னார்கள். அவரும் பதினோரு மணிக்குப் பிறப்பட்டு கப்பல் மேலே போயி ஒரு பீரங்கி போட்டு வெள்ளைக் கொடி சிகப்பு கொடி கறுப்புக் கொடி மூன்றும் போட்டு கொடி முறுக்கி ஒரு பீரங்கிபோட்டு, ஒன்பது கப்பலும் பாயெடுத்தார்கள். பயணமாய் சண்டைக்குப் போன கப்பலுக்கு வயணம் : கொம்மாந்தாம் முசியே தெருஷே (?) யிருக்கிற சோதியாக்கு (Zodiaque) யென்கிற கப்பல் மேலே யேறின சனம் 770 ரெண்டாங் கப்பல் கோந்து தே மும் புறுவாசு (Comte de Provenee) என்கிற கப்பலிலே யேறினசனம் 710.

3. வாஞ்சோர் என்குற கப்பலின் மேலே யேறின சனம் 670 (Vengeur)

4. நாலாங்கப்பல் தூக்கு தே ஒர்லியான்சு என்கிற கப்பலின் பேரிலே யேறினசனம் 580 (Duke de Orleans)

5. அஞ்சாங் கப்பல் துக்கு தே பூறுகோங்கி யென்குற கப்பலின்மேலே யேறின சனம் 510 (Duce de "Bourgogne")

6. ஆறாங்கப்பல் சேன் லுயி யென்குற கப்பலின் மேலே யேறின செனம் 500

7. ஏழாங்கப்பல் மோரான்சு என்குற கப்பலின் மேலே யேறின சனம் 450 (Moras)

8. எட்டாங் கப்பல் வத்து விஷாம் யென்குற கப்பலின் மேலே யேறின சனம் 160 (Vathuvioham)

9. ஒன்பதாங் கப்பல் கோந்துதே என்கிற கப்பலின் மேலே யேறின சனம் 450. (Conde)

ஆக யிந்த ஒன்பது கப்பலின் பேரிலே யேறின சனம் நாலாயிரத்தெண்ணூறு, 4800 யேத்திக்கொண்டு சகலசரஞ்சாமுடனே சண்டைக்கு ஆயத்தமாயி தெற்கு நோக்கிப் பிறப்பட்டு கிழக்கே ஓடினார்கள். அதினாலே இங்கிலீசுக்காரர் கப்பலும் யிவர்கள் பிறப்பட்டவுடனே அவர்களும் கப்பலுகளைக் கிழக்கே ஓட்டினார்கள். அதின் பேரிலே நாம் வீட்டுக்கு வந்தோம்.

யிப்பால் கேழ்வியான சேதி : முசியே சுப்பீர்கிட்ட யிருக்கிற ஒபிசியால் லொறென் (Lorrain)[1] என்கிற (ஒருவரிருக்கிறாராம்). அவருக்கு முசியே லாலி அவர்கள் காகிதம் தண்டிலே யிருந்து அனுப்பினதாகவும், அந்தக் காகிதத்திலே தஞ்சாவூர் சம்மதி தீந்து தென்று யெழுதியிருந்ததென்றும், அதிலே துகை வகை ஒன்றும் எழுதி வரயில்லை யென்றும், யிவ்விடத்துக்குக் காகிதம் பிறகே வருகு தென்றும் கேழ்க்கப்பட்டுது. யிப்படிக்கு ஆருக்கும் காகிதம் யெழுதாமல் யிவருக்கு மாத்திரம் யெழுதி வந்ததினாலே தஞ்சாவூர் சம்மதி சுவாரச்சியமாய் தீந்ததில்லை யென்று நமக்குத் தோணித்து யின்னம் ரேவிலே யிருக்கிற கப்பல் சத்தம்பி (Sathamkien) என்குற கப்பலின் பேரிலே 40–50 பேர் யேறி யிருக்கிறார்கள், இங்கிலீசுக்காரர் வருகுறாா்க ளென்று முசியே சுப்பீர் நேத்து ராத்திரியே ஆலம்புரிக்குப் போனார். சவரிராயனுக்கு முந்தா நாள் ஒபிசியால்மார் கப்பல்க்காரர் அடிச்ச அடியினாலேயும் காயத்தினாலேயும் அவர்களின்னம் யென்ன செய்வார்களோ யென்குற பயத்தினாலேயும் ரெண்டு நாளாய் கச்சேரி யில்லாமல் வீட்டிலே யிருக்கிறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 29; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 17; சனிவாரம்***

இத்தனாள் சனிவாரம் முசியே லெறி அவர்கள் மெத்தை மேலே காம்பிராவிலே யிருந்தார். அந்தச் சேதி கேட்டு பிடவைப் பார்க்குற சாலையிலே போனவிடத்திலே அங்கே முசியே சுப்பீர் கிட்டயிருந்து கோட்டைக் காவலுக்கு வந்த வெள்ளைக்காரர் அன்பது பேர் யிருந்தார்கள். அதினாலே அங்கே யிருக்கிறதுக்கு சங்கதியாய் யிராத்தினாலே சின்ன துரை வீட்டுக்கு வந்து அவரைக் கண்டு பேசிக் கொண்டிருக்கையிலே, தஞ்சாவூர் சம்மதி சமாதானம் ஆச்சுதென்றும்

[1] லொறேன் ரெஜிமென்டைச் சேர்ந்தவன்.

சேதி கேட்டோமென்று சொன்னோம். அப்படி சமாதானமானால் யெழுதி வராதா? சமாதானம் ஆனதில்லை யென்று சொன்னார். அந்த மட்டிலே அனுப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்து சாயங்காலம் சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம், சூலை மாசம், தேதி 31; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 19; சோமவாரம்***

இத்தனாள் தஞ்சாவூர் தண்டுச் சேதி நானா விதமாயி கேழ்க்கப்படுகுறது, நிலவரமாயி சேதி வரயில்லை.

# ஆகஸ்ட் 1758

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 1; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 20; செவ்வாய்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போனவிடத்திலே சந்தா சாயபு குமாரன் ரசா சாயபு தஞ்சாவூரிலேயிருந்து கொண்டிருக்கிற முசியே லாலி அவர்கள் தண்டுக்குப் போற நிமித்தியம் யிறு நூறு குதிரையும் யிறு நூறு முன்னூறு பாறும் நவபத்து முதலான சாமான்களும் முஸ்தீது பண்ணிக் கொண்டு பயணம் அனுப்பிவிச்சுக் கொள்ளுகுறதுக்கு முசியே லெறி அவர்களண்டைக்கு அஞ்சாறு ரூபாயிலே ரெண்டு சீரொப்பாவும் அஞ்சாறு ரூபாயிலே[1] ஒரு குதிரையும் கொண்டு வந்து குடுத்து பயணம் அனுப்பிவிச்சுக் கொண்டார். அதிலே முசியே லெறி அவர்கள் பீரங்கியும் போடச்சொல்லி பயணம் அனுப்பிவிச்சார். அதன்பிறகு முசியே தெவோவும் முசியே (லெ)னுவாரும் முசியே லெறி அவர்களண்டைக்கு வந்தார்கள். நாமும் அந்த மட்டிலே பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

இன்றைக்குக் கேழ்வியான சேதி : முசியே லாலி அவர்கள் தண்டிலே யிருந்து அப்பு முதலியும் சின்னப்பய்யனும் காரைக்கால் பாதிரியாரும் ராசா முத்திரை போட்ட வெள்ளைக்காரன் பெரிய மனுஷன் ஒருத்தனும் பிறப்பட்டு தஞ்சாவூர் கோட்டைக்குள்ளே போனதாகவும்[2] மானோசியைக் கண்டு சமாதானம் பேசி யேழு லட்சத் தன்பதினாயிரம் பொன்னு குடுத்து போன பேருக்கும் பிடவை சீலை குடுத்து, முசியே லாலி அவர்களுக்கும் பெகுமதி குடுத்து திருச்சிராப்பள்ளி மேலே போறதுக்கு அன்னூறு குதிரையும் ஆயிரம் பாறும் அனுப்பிவிக்குறோமென்று சொல்லி, அரிசி தட்டு முட்டுகளும் யெடுப்பிச்சு கூட அனுப்பிவிச்சதாகவும், அதெல்லாம் கொண்டு அவர்கள் வந்தவுடனே முசியே லாறி அவர்களும் வாங்கிக் கொண்டு அங்கே யிருந்த பாளையம் பேந்து மானோசி யப்பா ஒட்டை மண்டபத்திலே வந்து பாளையம் யிறங்கின தென்றும் கேழ்க்கப்பட்டுது. ரசா சாயபுவை சம்பா கோவில் பாதிரியார் அழைப்பிச்சு உடையார்பாளையத்திலே யிருந்து வந்திருக்கிற பொன்னியர், முத்தய்யா யென்கிற ரெண்டு பேரையும் அவர் கையிலே ஒப்புவிச்சு கூட அனுப்பினதாகவும், அவரும் தமக்கு வேண்டிய பேரையெல்லாம் அனுப்பிக்கொண்டு யித்த நாள் சாயங்காலம் பயணம் பிறப்பட்டு அரியாங்குப்பத்திலே போயிறங்கினதாக கேழ்க்கப்பட்டுது.

---

[1] இவை 500 ரூபாய் ஆக இருத்தல் வேண்டும்.

[2] காலங்கடத்தும் இந்தப் பேச்சுவார்த்தைகளி லெல்லாம் ஆங்கிலேயர் தஞ்சாவூராருக்கு அறிவுரை சொல்லி வந்தனர்.

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 2; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 21; புதவாரம்***

இத்தனாள் காலமே வெளியே போகாமல் வீட்டிலே யிருக்கையிலே கேழ்வியான கேதி : தஞ்சாவூர் சம்மதி யேழு லக்ஷத்தி அன்பதினாயிரம் ரூபாயாயி தீந்து தென்றும், அப்பால் தண்டு திரிச்சிராப்பள்ளி மேலே போறதாகவும் சந்தா சாயபு குமாரன் தண்டுக்குப் போறதாய் அரியாங்குப்பத்திலே போய் யிறங்கியிருக்கிறவரைப் பயணம் அனுப்புவிக்கிற நிமித்தியம் முசியே லெறி அவர்களும் ஆலோசனைக்காரரும் போயிருக்கிறதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 4; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 23; சுக்கிரவாரம்***

இத்தனாள் காலமே வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசியே சுப்பீர் தண்டெல்லாம் கூனிமேட்டுக்கு வந்து தென்றும் முசியே சுப்பீர் மாத்திரம் உதிச்சு ஒன்பது மணிக்குக் கோட்டைக்கு வந்து முசியே லெறி அவர்களுடனே அரை நாழிகை பேசியிருந்து உடனே பிறப்பட்டு நம்முட அக்கிரகாரம் நில்லாமலும் கூனிமேடு பாத்துப் போனாரென்றும், முசியே லாலி அவர்கள் தண்டுச் சேதி ஆருக்கும் யெழுதி வராததினாலே நானாவிதமாய்ச் சமாதானமாச்சுதென்றும், ஆகயில்லை யென்றும் வெகுசண்டை நடந்துதென்றும் யில்லையென்றும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் குண்டு கிராமத்தாரையும் ஒழுகரையாரையும் அழைப்பிச்சு முசியே (லெ)னுவார் மூன்று சாக்கு ஆறாயிரம் ரூபாய் கொண்டு வந்து, முசியே துருவேத்து (Drouet) வசத்திலே குடுத்ததாகவும் கேழ்க்கப்பட்டுது. அது பார்த்தால், தொரைக்குக் குடுத்த நாலாயிரம் ரூபாயும் முசியே னுவாருக்குக் (Lenoir or Le Noir?) குடுத்த ரெண்டாயிரம் ரூபாயும் ஆக ஆறாயிரம் ரூபாயும் கொண்டு வந்து குடுத்து விடடதாகவும் கண்டுது. இது பார்த்தால் யென்னமோ அடி பிசகாக தோணப்படுகிறது.

சாயங்காலம் ஆறுமணிக்கி யிங்கே யிருந்து இங்கிலீசுக் கப்பல் மேலே சண்டைக்குப் போன சீமைக்கப்பல் ஒன்பது வந்து ரேவு பிடிச்சது. அதிலே ஒரு கப்பலுக்கு ரெண்டு பாய் மரங்களிருக்குது. ஒருபாய் மரம் முறிஞ்சு போச்சுது. அது யேதென்று தாக்கீதாய் விசாரிச்சு யெழுத வேணும். சாயங்காலம் சாரி போய் யேழு மணிக்கி வீட்டுக்கு வந்தோம். வந்தவிடத்திலே கேழ்வியான சேதி : காரைக்காலுக்கு நேரே இங்கிலீசுக்காரர் கப்பலும் நம்முடைய கப்பலும் யெதுத்து மிதமில்லாத சண்டை நடந்துதென்றும் அதிலே இங்கிலீசுக்காரருக்கு வெகுசேதங்கள் வந்து கப்பல்களெல்லாம் சத்தாவாயி பாய்மரங்கள் முறிஞ்சு இங்கிலீசு

கொம்மாந்தாம் கப்பல் தாமும் முழுகிப் போனதாகவும், அதோடே அவர்கள் சென்னப்பட்டணத்தைப் பார்த்தாப் போலே போயிவிட்டதாகவும், நம்முடையவர்கள் கப்பலிலே கொம்மாந்தாம் விழுந்து போனானென்றும், முசியே தருஷே, (d'Ache) யேறி வந்த கப்பலிலே ஒருபாய் மரம் முறிஞ்சுதென்றும், அவருக்குக் காயம் யென்றும், ஒரு பீரங்கி வெடிச்சு மருந்து பத்திக் கொண்டதினாலே அதிலே யிருந்த செனங்களுக்கு வெகுபேருக்குச் சேதமென்றும், பின்னையொரு கப்பலிலே மருந்து அறையிலே தானே நெருப்பு பத்திக் கொண்டதென்றும், யிப்படி நாலாவிதமாய் சேதப்பட்டு கப்பல் ஒப்பிசியால்மார் சொலுதாதுகள் மத்தலோத்துகள் யிவர்களிலே வெகுசனங்கள் செத்துதென்றும், காயப்பட்ட பேரும் யிந்தப்படி ஆச்சு தென்றும் கேழ்க்கப்பட்டுது.[1] சவரிராயனை முசியே குளுவேத்து அழைப்பிச்சு தைரியனாதனையும் கூட வைச்சுக் கொண்டு பேசி, கச்சேரியிலே கதவு சாத்திக் கொள்ளச் சொல்லி ரொம்பவும் பேச்சுவார்த்தைகள் பேசி கச்சேரியிலே கூட தைரியனாதனும் கட்டுக்கார முத்துவும் கூட யிருக்கிற தாகவும் சொல்லி அனுப்பினதாகவும், சவரிராயன் அவர்கள் ரெண்டு பேரையும் அழைச்சுக் கொண்டு தன் வீட்டுக்கு வந்து கூட்டிக்கொண்டு அவர்கள் ரெண்டு பேருக்கும் ரெண்டு சீரொப்பா குடுத்து, அவர்களை வீட்டுக்கு அனுப்பிப் போட்டு யிந்தசேதி சொல்லுகுறதுக்கு உடனே தான் பிறப்பட்டு அரியாங்குப்பத்திலே யிருக்கிற முசியே தெவோ வண்டைக்குப் போனாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 5; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 24; சனிவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லெறி கோவர்றதோர் கப்பலிலே சண்டை குடுத்து வந்த காயக்காரர் கால் போனவர்கள், கை போனவர்கள், சரீரமெல்லாம் வெந்து வெந்து போனவ(ர்கள்), முகம் போனவர் யிந்த அடுக்கிலே காயக்காரர் மிதமில்லாமல் யிறக்கினதினாலே, முசியே லெறி அவர்கள் யேறுகிற பல்லக்கு முதல் சகலமான பேர் பல்லக்குகளையும் கொண்டு போய் உதயமுதல் கொண்டு சாயங்காலம் மட்டுக்கும் எல்லாரையும் யெடுத்துக் கொண்டு போய் நோவாளிக் கிடங்கே சேர்த்தார்கள். அந்த வேளையிலே முசியே தெவோவும் சவரிராயன், முதலான பேர்களும் தொரை அண்டைக்கு வந்தார்கள். நாமும் பத்து மணி வரைக்கும் யிருந்து அப்பால் பிறப்பட்டு நன்னாச்சி வீட்டுக்கு வந்தோம். அவள் குழந்தைக்கு அம்மை

[1] இக்கடற்போரில் பிரெஞ்சுக்காரருக்கு ஆங்கிலேயரைக் காட்டிலும் நான்கு மடங்கு சேதம்.

போடகம் கண்டபடியினாலே அவனைப்பார்த்துப் போட்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

கோட்டைக்குப் போனவிடத்திலே சண்டை சேதி கேழ்வியானது. நம்முடைய கப்பல் எல்லாம் காரைக்கால் துறையிலே யிருக்கையிலே நாளது மாசம் 20 தேதி அங்காரக வாரத் தன்றையிலே யிங்கிரேசுக் கப்பல் ஒன்பது கப்பலும் மறைஞ்சு, நாகப்பட்டணத்துக்கு நேர் கிழக்கே வெகுதூரத்திலே யிருந்து, அவ்விடம் விட்டு காரைக்கால் துறைக்கு நேரே கிழக்கே நாலு நாழிகை வழியிலே வந்து காண்பிச்சுக் கொண்டதாகவும், உடனே நம்முடவர்கள் கப்பல் ஒன்பதும் பாயெடுத்து அந்தக் கப்பல் மேலே சண்டைக்குப் போனதாகவும், அந்தக் கப்பலும் நம்முடவர்கள் கப்பலும் தலங்கம்பாடிக்கி நேர் கிழக்கே ரெண்டு பேர் கப்பலும் சேர்ந்து சண்டை குடுக்கையிலே கோந்து தே புறுவாஞ் (comte provence) யென்கிற கப்பல் பெரிய கப்பல், அதிலே எண்பத்தி நாலு பீரங்கி யிருக்கிறது, அதுக்குக் கப்பித்தான் முசியே ஆனலுவரி யென்கிறவர் (M. Analuvari). அவர் வெகு கோபத்துடனே தம்முடைய பெரிய கப்பலை அவர்கள் கப்பல் மேலே ஓடவிட்டு வெகு சண்டை பண்ணினார். அப்படி கப்பலும் சேர்ந்து வெகு வாயி சண்டை பண்ணுகிறதினாலே அவர்கள் கப்பல் மூன்று கப்பல் கிட்ட சேர்ந்து கப்பல் சண்டையிலே தீக்குடுக்கை போடத் தேவையில்லை யென்று ராசாக்கள் கட்டுப் பண்ணியிருக்கிறதைத் தப்பி, யிங்கிரீசுக்காறர் யிவர்கள் கப்பல் மேலே தீக்குடுக்கையாலே நெருப்பு பத்தும் படியாய் கெந்தகங்களையும் கூட அடைச்சு பீரங்கி குண்டுக்கு அடைக்கிற பொச்சக் கயிறுகளிலேயும் கெந்தகங்களைத் தடவி தீக்குடுக்கையைப் போட்டார்கள். அதுகள் வந்து விழுந்து கப்பலுகளும் மருந்தும் பத்திக் கொண்டு வெகு பேர் சாவும் காயங்களும் ஆச்சு தென்றும், யிப்படி வெகுமுக்காக்கையாயி (?) சுத்திக் கொண்டு வெகுசாய் சண்டை பண்ணச்சே முசியே ஆனலுவரி யென்குறவர் தம்முட கப்பல் ஒண்டிக்கப்பலுடனே போயி அவர்கள் கப்பல் நடுவே யிருந்துக் கொண்டு நாலு முகத்திலேயும் சண்டை குடுக்கிதைப் பார்த்து தூக்கு தே புறுகோங்கி (Duc de Bourgogne) யென்குற கப்பலும் ஒதியாக்கு (Zodiaque) யென்குற கப்பலும் சேன்றுயி (Saint Louis) யென்கிற கப்பலும் மூன்று கப்பலும் அவர்கள் மேலே போட்டு நல்ல அடி அடிக்கயிலே, அவர்கள் தரிக்கமாட்டாமல் கப்பல் கொம்மாந்தாம் யிருந்த கப்பல் முழுகிப் போச்சென்றும் பின்னையும் யிருந்த கப்பல் செதரிப் போச்சென்றும் முசியே ஷெவல்லியேர் தெ அஷே (M. Le Chevalier d'Ache) கொம்மாந்தாம் கப்பலிலே சோதியாக் யென்குற கப்பலிலே யிருந்து சண்டை குடுக்கிற பீரங்கியிலே யிருபத்து நாலு ராத்தல் குண்டு ஓடுகிற பீரங்கி தெரிச்சு

மருந்திலும் பத்திக் கொண்டு, அதினாலே பதினாறு பேர் செத்தார்களென்றும் அறுபது பேருக்கு மெத்தக் காயமென்றும், முசே தான்ஷேக்கு (தெஷே) முகத்திலும் கையிலும் காயமென்றும், அவர் தமக்கைப் பிள்ளையின் ரெண்டு பேருக்கும் ஒருத்தருக்குக் கால் போச்சென்றும் ஒருத்தருக் கை போச்சென்றும், காப்பிரிகளும் உச்சாகத்துடனே பாடிக்கொண்டு மெத்த சண்டை குடுத்தார்களென்றும், அவர்களுக்குக் கை போனதும் மிதமில்லை யென்றும் ஆயிரம் பேருக்குக் காயமும் அறுநூறு பேருக்குச் சாவுயென்றும் அந்த தீக்குடுக்கைப் பத்தினதினாலே மூன்று கப்பல் வெகுதூரம் வெந்துப் போச்சென்றும் யிப்படியெல்லாம் ஆச்சுது. அவர்கள் கப்பலிலே செத்த பேர் தலங்கம்பாடி ரேவிலே யிறநூறு பேர் சிப்பாயிகள் செத்து வந்து சேர்ந்தது யென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 6; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 25; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி: முசே லாலி தஞ்சாவூர் சமாதானம் பேசிக்கொண்டு திரிச்சிராப்பள்ளிக் கோட்டை மேலே தண்டைத் திருப்பி முன்னுதாய் சிறிது பேரை அனுப்பிவிச்சு தாமும் போறதாயிருக்கையிலே தஞ்சாவூர் கோட்டைக்குள்ளே சமாதானத்துக்குப் போன பாதரியார், அங்கே யிருந்தவர், ஒரு காகிதம் தஞ்சாவூரார் வஞ்சனை பண்ணுகுறதாய் காணப்படுகிறது. தாம் யெச்சரிக்கையா யிருக்கவும் யென்று யெழுதி அனுப்பினதாகவும் முசே லாலி அவர்கள் அதைப் பார்த்துக் கொண்டு தயாரா யிருக்கையிலே அன்று ராத்திரி மானோசி மானேசி அப்பா ரெண்டாயிரம் குதிரையுடனே போய் தண்டு மேலே விழுந்ததாயும், அப்போ முசே லாலி அவர்கள் நல்ல அடி அடிச்சார்கள் யென்றும், அதிலே மானோசி குதிரையிலே நூத்தன்பது குதிரை பிடிவாயிலே செத்துப் போனதென்றும், வெகு குதிரைக்கும் வெகு பேருக்கும் காயங்கள் மிகவாயி நிற்கமாட்டாமல் செதரி ஓடிப்போய் விட்டதாகவும் அதன்பேரிலே முசே லாலி அவர்களுக்குக் வெகுகோபம் பிறந்து அப்பால் போனதாயும், அவர்களையும் வரச்சொல்லிப் போட்டு தாம் சிவகங்கைக்கு[1] மேல்புறத்திலே மேட்டுமேலே வந்து யிறங்கி ரெண்டு யிடத்திலே தண்டை யிறக்கி, கோட்டை மேலே பீரங்கிகள் விபரீதமாயி அடிக்குறார்களென்றும் கோட்டை அகப்பட்டு தென்றும், யின்ன மில்லை யென்றும் யிப்படியாகக் கேழ்க்கப்பட்டுது.

---

[1] தஞ்சைப் பெரு உடையார் ஆலயத்துக்கு அருகிலுள்ள சிவகங்கை தீர்த்தம்.

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 7; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 26; சோமவாரம்***

இத்தனாள் காலமே வெளியே போகாமல் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : நேத்து சாயங்காலம் ஆறரை மணிக்கு தைரியனாதன், சவரிராயன் வீட்டுக் கச்சேரிக்குப் போயிருந்து சீமா மூலம் அமுல்தாரரை செல்லுபாக்கி விசாரிச்சதாகவும் கேழ்விப்பட்டுது. யித்தனாள் நடந்தசேதி கேழ்வியானது : முன்னாலே அரியாங்குப்பத்திலே யிருந்து சவரிராயன் வருகிறபோது கப்பல் ஒப்பிசியால்மாருக்கும் அவனுக்கும் கலாபம் நடந்த வெள்ளைக்காரர் கப்பல் மேலே சண்டைக்குப் போயிருந்தவர்கள் கப்பல் விட்டு யிறங்கி யித்தனாள் சாயங்காலம் ஆறு மணிக்கு அஞ்சாறு பேர் பிறப்பட்டு பிஸ்தோளிலே மருந்து குண்டு போடத் தயாராய்க் கையிலே வைச்சுக் கொண்டு கத்தியை உருவிக் கொண்டு கையிலே பிடிச்சுக் கொண்டு முசே தெவோ வீட்டு வாசலிலே வந்ததாகவும், அங்கே சவரிராயன் தம்பி பத்து பேருடனே நின்றதாகவும், அவனை நீதானா மானுவேல் யென்று கேட்டதாகவும் அதுக்கு அவன் பேரும் மனுவேல் தான், உங்களை அடிச்ச மனுவேல் நானல்ல வென்று சொன்னதாகவும், அதன் பேரிலே அவனை விட்டு விட்டதாகவும் அவன் அந்த மட்டிலே தீவட்டியும் அவிச்சுப் போட்டு விச்சு அப்பாலே போயிவிட்டதாகவும், அதன்பிறகு தைரியனாதன் தீவட்டியும் பிடிச்சுக் கொண்டு பத்து பேர்கூட்டத்துடனே வந்த தாகவும் அவனை போய் நீதான் மனுவேல் யென்று பிடிச்சதாகவும் அப்போது அவர்களுடனே கூட வந்த துபாசிப் பய்யன் யிருந்து யிவன் முசே குளுவேத்து துபாசி யென்று சொன்னதாகவும், அந்த மட்டிலே அவனை விட்டதாகவும் அதன் பேரிலே தேவடியாள் (மகன்) முத்துப் பிள்ளையைப் போய்ப் பிடிச்சதாகவும், அவனல்ல வென்று சொன்னபிறகு, கட்டுக்கார முத்துப் பிள்ளையைப் போய் பிடிச்சதாகவும் அவனும் நானல்ல வென்று தப்பிவிச்சுக் கொண்டதாகவும் யிப்படி யிவர்கள் தேடி திரியுற சேதி சவரி ராயன் கேட்டு கந்தப்ப முதலி வீட்டிலே போய் ஒளிச்சு யிருக்குறா னென்றும், கச்சேரியிலே யிருந்த தாண்டவராயனும் கச்சேரியை விட்டு வீட்டுக்குப் போய் விட்டதாகவும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 8; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 27; சோமவாரம் (செவ்வாய்)***

இத்தனாள் காலமே வெளியே போகாமலிருந்து பிறகு கோட்டையைச் சுத்திக் கொண்டு சின்னதுரை வீட்டு வழியாய் வீட்டுக்கு வந்தோம். யித்தனாள் கேழ்வியான சேதி : சவரி ராயன் நிமித்தியம் முசே லெறி அவர்கள் கொம்மாந்தாமுடனே யிப்படி நடத்தினாலெப்படி யென்று கேட்டதாகவும், அதுக்கு அவர் சொன்னது, "நாங்கள் ராசா

மனுஷர், ரெத்தமும் சோறும் தின்குற பேர்கள். அவர்களைத் தமிழன் அடிச்ச மட்டுக்கும் யினி மேலென்ன யிருக்குது," யென்று சொல்லி விட்டதாகவும், சந்தாசாயபு மகனுக்கு பவுன்சு வைக்குறதுக்கு யெழுதிக் குடுத்த திருவண்ணாமலை, செங்கமா, கலவாக்கம் யிதுகளெல்லாம் இங்கிலீசுக்காரர் மனுஷன் கிருஷ்ண ராய னென்கிறவன் நூறு குதிரையும் அன்னூறு பாறும் கற்னாடகம் ஆயிரம் பேர்களுடனே அனுப்பிவிச்சு, அவ்விடமெல்லாம் தோரணம் கட்டினதாகவும், அப்போது திருவண்ணாமலையிலே யிருந்து யிவர்கள் செனம் நூறு பேரும் ஓடிப் போய் விட்டதாகவும் கேழ்க்கப்பட்டுது.

## *1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 9; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 28; புதவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போன விடத்திலே முசே லெறி கோவர்ணதோர் வெளியே போயிருந்தார். சின்னதுரை வந்து கணக்குப் பார்த்துக் கொண்டு வந்தார். முசே புலோ தேவனாம்பட்டணம் கணக்கு யெழுதி தீத்துக் கொண்டு யிருந்தார். முசியே (லெ)னுவார் வகையராக்கள் வந்து போனார்கள். (நடமாடிக் கொண்டிருந்தார்கள்). அப்படி யிருக்கையிலே கேழ்வியான சேதி : போன வருசம் பிறட்டாசி மாசம் முசியே தெசறத்தேன் (M. Desgardins) யென்கிறவர் கப்பலேறி மசுக்கரை போய்ச் சேர்ந்து சீமைக்கு அனுப்பிவிக்குற கடுதாசிகளெல்லாம் அங்கே சீமைக்குப் போற கப்பலிலே குடுத்தனுப்பிப் போட்டு அங்கே யிருக்கையிலே, சீமைக் கப்பல் ஆறுகப்பல் வந்ததாகவும் அதன்பேரிலே அங்கே மூன்று கப்பல் பயணம் பண்ணி முசே லாலி வருகிறபோது அறுநூறு பேர் சொலுதாதுகளும் சிறிது சாமானும் மசுக்கரையிலே வைச்சுப்போட்டு வந்ததாகவும், அவர்களையும் அந்த சாமான்களையும் அந்த மூன்று கப்பலிலேயும் யேத்தி ஆக ஒன்பது கப்பலும் யிவ்விடத்துக்கு வருகுறதாயி தயார் பண்ணி யிந்த தெசே ரதனை (Desgardins) முன்னுதாகப் போய் யிவ்விடத்திலே வந்து சேந்து சேதி சொல்லச் சொல்லி அனுப்பிவிச்சதாகவும், அவன் நாகப்பட்டணம் துரைக்கு நேரே வருகுற போது யிங்கிலீசுக்காரர் கப்பல்களைக் கண்டு, அங்கே கப்பலை நிறுத்திக் கொண்டு யிருந்தவர்கள் வெள்ளைக் கொடி போட்டு பிரான்சு பேச்சிலே துரும்பேத்திலே ஊதி அவனை அழைச்சதாகவும், அந்த தெசறதேன் (?) பிரான்சுக்காரனென்று பிரமிச்சதாகவும் கப்பலைக் கிட்டப் பிடிச்சு யிறங்கி அவர்கள் கப்பலிலே போனதாகவும், வந்தவனையும் பத்திரப்படுத்திக் கொண்டு கப்பலையும் பிடிச்சுக் கொண்டு, அவன் கப்பலைச் சோதிக்குமிடத்திலே காகிதக் கட்டும் சிறிது கோதும்பையும் மருந்து குண்டு பீரங்கி முதலானதுகளும் யிருந்ததென்றும், அதெல்லாம் அவர்கள் யெடுத்துக்

கொண்டார்களென்றும், அந்தக் கப்பலிலே யிருந்ததிலே ஒரு மத்தலோத்துக்காரன் இரவிலே மெள்ள சமுத்திரத்திலே யிறங்கி கரைக்கு வந்து யிந்த ஊருக்கு வந்ததாகவும், அவன் சொன்னசேதியிலே மகக்கரையிலே தயாரான ஒன்பது கப்பலும் தாங்கள் பிறப்பட்ட பதினைஞ்சு நாளுக்கெல்லாம் பிறப்பட்டு வருகுறது, அது யின்னம் பதினைஞ்சு நாளையிலே வருமென்று சொன்னதாகவும் சேதி சொன்னார்கள். அதன் பேரிலே நானும் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து சாயங்காலம் சாரிபோய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிது சேதி.

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 10; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 29; குருவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை வீட்டுக்குப் போனவிடத்திலே அவரைக் கண்டவிடத்திலே, அவர் முசே கொதே அவர்களுக்கும் கும்பினியாருக்கும் காகிதம் அவர் கணக்குப் பிள்ளை கையிலே யெழுதிவிச்சதைப் படிச்சுக் காண்பிச்சார். அது மெத்த நேத்தியா யிருக்குது. அதின் பேரிலே, முசே தெசறதேன் சேதி யென்னயென்று கேட்டோம். அதுக்கு அவன் மசுக்கரை விட்டுப் பிறப்பட்டு நாற்பது நாளாச்சுது, நாகப்பட்டணத்துக்கு நேரே யிங்கிலீசுக்காரர் கையிலே அகப்பட்டுக் கொண்டு விட்டானென்று சொன்னார். ஆனால் அதிலே சீமைக் கடுதாசிகள் அகப்பட்டு துண்டோயென்று கேட்டோம். அதுக்கு சீமைக் கடுதாசியில்லை, சீமைக்கப்பல் வரவுமில்லை சீமைக் கடுதாசியுமில்லை மசுக்கரைக் கடுதாசி மாத்திரம் வந்தது. பின்னை ஒரு சேதி, "முசே கொதே கும்பினீர் உத்தியோகம் தக்கீர் ஆச்சுதென்று கேழ்க்கப்பட்டுது. தமக்கானால் நொவம்பர் மாசம் 8 தேதி சீமையிலே யெழுதின கடுதாசி தலங்கம்பாடிக் கப்பலிலே வந்தது. அதிலே எழுதயில்லை. யிந்தப் பேச்சு முசே புஷேத்தும் முசியே திலார்ஷும் சொன்னதாக வெள்ளைக்காரர் சொன்னார்கள். யின்னம் அறிய வேணு," மென்று சொல்லி நீர்வரவில்லை யென்றும் தன்னைக் கண்டு பேசயில்லை யென்று சொல்லியும், "யென் பெண்டாட்டி உன் பேரிலே ஆசையோடேயிருக்குறாள். அங்கே போவோம் வா," யென்று மெத்தைமேலே அழைச்சுப் போனார். அங்கே போனவிடத்திலே அவள் மெத்த ஆசோபசாரமாயி கிட்டயிருக்கச் சொல்லி, "பார்த்தாயா?" பட்டணத்திலே மெத்த அநியாயம் பிறந்து போச்சுது. பெரியண்ணன், அப்பு முதலி கந்தப்பன், யிவர்களெல்லாம் குசினி சமைச்ச பேர் சவரிராயன் யெச்சில் பீங்கான் யெடுத்தவன். யிவர்களுக்கெல்லாம் யோகம் நடக்கவும், சீமா மூலம் காறுபாறு நடக்கவும் பட்டணம் துபாசித் தனம் பண்ணவும் யிப்படியாச்சுது. அதினாலே பட்டணத்திலே வெகு அநியாயங்க ளெல்லாம் நடக்கலாச்சுது," யென்று சொன்னான். அதுக்கு

சின்னதுரை யிருந்து, மெத்த அநியாயம் நடக்குது பட்டணத்திலே யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "உம்முடைய மனசுக்கு கூட பட்டணத்திலே அனியாயம் நடக்குதென்று தோணின போதே, யினிமேல் நடக்கவேண்டிய அன்னியாயம் ஒன்றுமில்லை" யென்று சொன்னேன். அதன் பேரிலே சின்ன துரை பெண்டாட்டியும் அவள் மகளும் கூடலூருக்கு போனார்கள். சின்னதுரை குமுசேல் கூடுகிறார்க ளென்று போனார். அதன்பேரிலே நாமும் வீட்டுக்கு வந்தபிறகு கேழ்வியான சேதி: கூடலூரிலே வெள்ளைக்காரர் வீடுகள் பூந்துக் கொள்ளையிட்டதாகவும் பெண்டுகளை அழிக்குறதாகவும் அதினாலே செட்டி வர்த்தகரெல்லாரும் ஓடிப்போய் தொரையுடனே சொன்னதாகவும் அவர் முசே லெறி யுடனேயும் முசே சுப்பீருடனேயும் போய் சொல்லுங்கோள் யென்று சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 11; வெகுதானிய வருசம், ஆடி மாசம், தேதி 30; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் வெள்ளை கமிசும் நீல கமிசும்[1] கோட்டையிலே போடுகிற நிமித்தியம் பிறப்பட்டார். கூடவே கோட்டைக்குப் போனவிடத்திலே அவர் அந்த வேலையிலே யிருந்தார். நாமும் பிடவைப் பார்க்கிற சாலையிலே யிருக்கையிலே கோன்சேல்க்காரரிலே ஒரு பெரிய மனுஷன் கண்டு, "யிப்போ உன்னுடனே ரொம்ப பேசப் போகாது. சாவகாசமாய்ச் சொல்லுகுறேன். காரியம் செயம். மத்தக் காரியங்களெல்லாம் மேல்கீழா கிறதாயிருக்குது. நான் 'கப்பலுக்குப் போனேன்," யென்று சொல்லிப் போட்டுப் போனான்.

நேத்து மத்தியானமும் குமுசேல் கூடினார்கள். ராத்திரியும் குமுசேல் கூடினார்கள் யென்று யிப்பால் கேழ்க்கப்பட்டுது. யோசனை (செய்து) பார்த்தால் ஒரு நாளையிலே ரெண்டு தரம் கோன்சேல் கூடினதினாலேயும், யிவன் சொன்னத்தினாலேயும் பணமில்லாத தினாலேயும் சீமாமூலம் பேச்சும் நம்முட பேச்சும் குமிசேலிலே நடந்திருக்க வேணும். முசேலாலிக்கும் தண்டுலே மெத்த கக்குஷமாயிருக்குது (செயமில்லை) யென்று தோணப்பட்டுது.

யிப்படி யிருக்கையிலே கட்டுக்காற முத்தய்யன் வந்து முசே குளுவேத்து நீங்கள் சீமா மூலம் குத்தகை குடுத்ததுக்கு உன் வயணம் கணக்கு வாங்கி வரச் சொன்னாரென்று சொன்னான். அது யிவருக்கு யென்னத்துக்கு யென்று கேட்டதுக்கு, அவன் சொன்னது : மெய்தான்

---

[1] ஏற்றுமதிக்கான சட்டைகள் இவை.

முன்னாலே யேதோ என்று பிரமிச்சேன். அவன் அளப்பு பார்த்தால், முன் வருஷம் கணக்கு தனக்கு அக்கறையில்லை யென்றும், யிந்த வருஷத்துக்குத் தான் விசாரிக்குறதென்றும் யிப்படியாகக் கண்டுது. அஞ்சாறு நாளைக்கு முன்னே முசே புலோ வீட்டுக்குப் போன விடத்திலே அவர் முசியே குளுவேத்து சேதி யென்ன யென்று கேட்டார். அடிக்கடி முசே தெவோ வீட்டுக்குப் போறாரென்று சொன்னேன். "அதுக்கு அவர் யிவன் வாலில்லாக் கழுதை. முசியே கொதே நமக்கும் யெழுதாமல் யிந்தக் கழுதையை அனுப்பினார். ஆனாலும் முசே லாலி யிவ்விடத்துக்கு வந்தவுடனே நான் முசே லாலியுடனே கேட்டுக் கொண்டு றங்கப்பன் காரியத்துக்குப் பெருக்குதோறாய் (ஏஜன்ட்) குமிசேலிலே பேச வேணுமென்று யிருக்குறேனென்று சொன்னாரென்று முத்தய்யன் சொன்னான். அதன்பிறகு நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்தோம். கோட்டையிலே பணங்களில்லாததினாலே தேவனாம்பட்டணத்திலே யிருந்து வந்த சரக்குகளை யெல்லாம் போட்டுவிப்பார் போலே கேழ்க்கப்பட்டுது. யிப்பால் முசே லாலி அவர்கள் தண்டுலே மானோசி வந்து விழுந்து வெகுபேருக்கு யிவர்களிலேயும் அவர்களிலேயும் சாவு ஆச்சுதென்றும் வெகு சண்டை நடந்து தென்றும் கேழ்க்கப்பட்டுது.

கோட்டையிலே ஒரு வெள்ளைக்காரன் சுபச் சேதி (சொன்னான்). கட்டுக் காறன் முத்தய்யனை முசேகுளுவேத்து கணக்கு கேழ்க்கச் சொன்னவிடத்திலே அவன் வந்து சொன்ன சேதி.

***1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 13; வெகுதானிய வருசம், ஆவணி மாசம், தேதி 1; ஆதிவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசே சுப்பீரும் அவர் பாளையமும் கோட்டை வந்து சேர்ந்தார்கள். உதிச்சு யேழு மணிக்கு முசே லாலி அவர்கள் தமயன் பிள்ளை முசே லாலி அவர்கள் யென்று பேருடத்தானவர் கோவர்ணமாவிலே வந்து முசே லெறி அவர்களுடனே நாலு நாழிகை நேரம் பேசியிருந்து போனாரென்றும் அவர் போன பிறகு முசே லெறி அவர்கள் மெத்த விசாரமாய் கையை முறிக்கிறதும் உடம்பை முறிக்கிறதும் பெருமூச்சு விடுகுறதும் குறிச்சு (நாற்காலி) பிடையிலே கைகை அடிக்குறதும் கையை ஒசர எடுக்குறதும் யிந்தப்படிக்கு வெகுவாய் விசனத்தை அடைஞ்சு கொண்டு யிருந்தாரென்றும் கேழ்க்கப்பட்டுது. முசே லாலி அவர்கள் காரைக்காலுக்கு வந்தாரென்றும் நாளை தீனிக்கு யிங்கே வருகுறாரென்றும் தண்டு முறிஞ்சுதென்றும் சின்னப்பய்யன் காரைக்காலுக்கு வந்ததாகவும் ரசா சாயபு காரைக்காலுக்கு போய்ச் சேர்ந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது. யிது சேதி.

### *1758 வருசம், ஆகொஸ்து மாசம், தேதி 14; வெகுதானிய வருசம், ஆவணி மாசம், தேதி 2; சோமவாரம்*

இத்தனாள் முசே லாலி அவர்கள் தண்டிலே யிருக்கிறதாகவும் முசே சொபினேயும் யிறுநூறு பேர் சொலுதாதுகளும் காரைக்காலுக்கு வந்ததாகவும் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் சாயங்காலம் கேழ்வியான சேதி : முன் ஆடி மாசம் 28 தேதி புதவாரனாள் தஞ்சாவூரார் மொருசாவிலே வந்து விழுந்து, (நமக்கு) வெகுசேதமாச்சுது[1] யென்றும் அவர்களிலேயும் வெகுசேதமென்றும் தண்டு முறிஞ்சு போச்சென்றும் முசே லாலி அவர்கள் செய்தி தெரியவில்லை யென்றும், பாப்பய்யப் பிள்ளை ஆனை ரெண்டும் பீரங்கியள் யெல்லாம் தஞ்சாவூரார் கையிலே அகப்பட்டு தென்றும் செனங்கள் சிதறி காரைக்காலுக்கு கொஞ்சம் கொஞ்சம் வந்து சேருகுறதென்றும் கேழ்க்கப்பட்டுது. நாமும் சாரி போய் யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 16; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 4; புதவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : ஆடி மாசம் 27 தேதி அங்காரகவாரம் அன்றைய தினம் ராத்திரி விடிய சாமத்துக்கு முசே லாலி அவர்கள் மொருசாவிலே யிருக்குறபேர் யேணிகள், வைக்கல் கட்டுக ளெல்லாம் அழைப்பிச்சுக் கொண்டு லக்கை யேறத்தக்க தாயிருந்தார்க ளென்றும், அப்படி யிருக்கையிலே தஞ்சாவூரார் வெடிய பத்து நாழிகைக்கு வடக்கு வாசலைத் திறந்து கொண்டு சுத்தினாப் போலே முசே லாலி அவர்கள் சோத்துப்பாளையத்திலே வந்து விழுந்து அது முதல்க் கொண்டு வெகுசண்டையாச்சுதென்றும், அதிலே தஞ்சாவூரார் வந்த பேரிலே அஞ்சாறு துரை மக்கள் விழுந்து போனார்கள் யென்றும், முசே லாலி அவர்கள் பாளையத்திலே வெள்ளைக்காரர் அன்னூறு பேர், அறுநூறு பேர் செத்ததாகவும் பெரிய மனுஷர் மூன்று பேர் விழுந்து போனார்களென்றும், அதனுடனே தண்டெல்லாம் முறிஞ்சு போட்டது போட்ட வண்ணத்திலே பிறப்பட்டு வந்து திருவாலூர் வந்து சேர்ந்தார்கள் யென்றும், முசே லாலி அவர்கள் திருவாரூரிலே தானே யிருக்குறாரென்றும் ரசா சாயபு காரைக்கால் சேர்ந்து அப்பால் திருவாரூருக்குப் போயி முசே லாலி அவர்கள் பேட்டி ஆச்சு தென்றும், சேதுபதி, தொண்டமான் யிவர்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சு அவர்களையும் அழைப்பிச்சக் கொண்டு யின்னம்

[1] லல்லியே இத்தாக்குதலில் மரணத்திலிருந்து மயிரிழையில் தப்பினார். ஆங்கிலேயர்களே தஞ்சாவூராருக்குப் பின் நின்று இப்போர்களை நடத்தினர்.

போறவனாயிருக்கிறாரென்றும், யிங்கிலீசுக்காரர் கப்பல் காரைக்காலிலே யில்லை என்றும் போய்விட்டார்களென்றும் கேழ்விப்பட்டுது. யிங்கே சவரி ராயன் கப்பல் வெள்ளைக்காரருக்கு சமாதானம் பண்ணி அவர்கள் காலிலே போய்விழுந்து சமாதானப் படுத்திக் கொண்டு வெளியிலே திரியுறானென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 18; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 6; சுக்கிறவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : ஒலாந்தாக்காரன் கப்பல் ஒடுகிறதை நிறுத்தி ரேவிலே கொண்டு வந்த விடத்திலே அதிலே யேறி யிருந்த பேர்களைப் பார்க்குற விடத்திலே, அந்தக் கப்பலிலே பொன்னும் வெள்ளியும் ரெண்டு லக்ஷம் ரூபாயிக்கு யிருந்ததாகவும், அப்போ யிவர்கள் ஒலாந்தாக்காரனுக்கு சொன்னது, "யெங்களுக்கானால் கோட்டையிலே பணமில்லை. சீமையிலே ராசாக்கள் உடன்படிக்கை (பண்ணி), பணம் யில்லாமல்ப் போனால் ஆர் கப்பல் கண்டாலும் அந்த கப்பலிலே யிருக்குற பொன் வெள்ளி ரூபாய்களை எடுத்துக் கொண்டு அதுக்கு உள்ள ஆதாயத்துடனே சீமையிலே உண்டிகை யெழுதி குடுக்குறதாயி உடம்படிக்கையாச்சு, ஆகையாலே யிந்த வெள்ளிக்கும் பொன்னுக்கும் உங்களுக்கு வருகிற ஆதாயம் யென்ன யென்று கேட்டதாகவும், அதுக்கு அவர்கள் யெங்களுக்கு முப்பதினாயிரம் ரூபாய் ஆதாயம் வரும், இதன்னியிலே சிலவு யிவ்வளவு கூட்டித் தரவேணும் யென்று சொன்னதாகவும், அந்தப்படிக்கி அவர்களுக்குச் சீமைக்கு உண்டிகைக் காகிதம் யெழுதிக் குடுத்து ரூபாயை யிவர்கள் வாங்கிக் கொண்டார்கள் யென்றும் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல் முசே லாலி அவர்கள் சேதி : காரைக்காலுக்கு வந்து சேர்ந்தாரென்றும் நாகப்பட்டணம் வந்து சேர்ந்தாரென்றும் யிவ்விடத்துக்கு வரப்போறாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 19; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 7; சனிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : விடிஞ்சு யெட்டு மணிக்கி கொமுசேல் கூடி பனிரெண்டு மணி மட்டுக்கும் யிருந்தார்களென்றும், திரும்பவும் நாலு மணிக்குக் கூடி யெட்டு மணி வரைக்கும் யிருந்தார்களென்றும், அதிலே முசியே லாலி அவர்கள் மெத்த கோபத்தோடே வருகிறாரென்றும், அவர் தண்டுக்குப் பணம் அனுப்பயில்லை யென்றும், ரஸ்து அனுப்பயில்லை யென்றும், மருந்து குண்டு அனுப்பயில்லை யென்றும், மருந்து குண்டு யில்லாததினாலே

வெகு கோபமாயி தண்டு விட்டு தண்டை நிறுத்தி, பீரங்கிகளை யெல்லாம் ஒடைச்சு ஆணி அடிச்சுக் கூடாரங்களை யெல்லாம் சுட்டு அதிலே துப்பாக்கிகளையும் கூடப் போட்டு சுட்டுப் போட்டு வெகு கோபத்துடனே வருகுறாரென்றும், வந்தவர் யென்ன செய்வாரோ யென்றும், யிந்த விதத்திலே யோசனை பண்ணிக் கொண்டு யிருந்தார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. ஊரிலே ஆனால் வெள்ளைக்காரர் வீதி வீதியளுக்குப் பிறப்பட்டு அங்கே அங்கே மனுஷரைக் குத்துறதும் கல்லுகளை விட்டு யெறியறதும் கெவுனி வாசலிலே பெண்டுகளைச் சிலாறு பண்ணுறதும், கும்பினியார் சம்பளத்துக்குக் காகிதம் யெழுதிக் குடுத்ததை ஊரிலே பிறப்பட்டு அவரவர் யிந்தக் காகிதத்தை வாங்கிக் கொண்டு குடுங்கோள், நீங்கள் ஊரிலே யிருக்க நாங்கள் சிலவுக்கு யில்லாமல் யிருப்போமா யென்று துர்விவகாரங்கள் பேசுறதும் யிந்த அடியிலே நடக்குறது யிது சேதி.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 21; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 9; சோமவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்னதுரை வீட்டுக்குப்போயி அவருடனே பேசிக்கொண்டு யிருக்கையிலே ரெண்டொரு வெள்ளைக்காரரும் கூடயிருந்தார்கள். அப்போது அங்கே சின்ன துரை சொன்ன சேதி : முசியே லாலி அவர்கள் குமிசெல்க்காரர் பேரிலே யெல்லாம் கோபமாயி காகித மெழுதினார். யென்னவென்றால், தாம் போய் சண்டை முகத்திலே யிருந்து சண்டை குடுக்கையிலே நீங்கள் பண்ணின யோசனையினாலே "யிவனானால் யெல்லார் கிட்டேயும் மோசுபா (உதவி?) வாங்கத்தக்கதாகச் சீமையிலே யிருந்து வந்திருக்கிறார், யிவருக்கு நாமொன்றும் சரஞ்சாமி பண்ணாமலிருந்தால் பாளையத்திலே யிருக்கிற பேரெல்லாம் நாலு பட்டினி அஞ்சு பட்டினி கிடந்து அவரவர் நிறுவகிக்க மாட்டாமல் ஓடிப் போவார்கள் அந்த பெலன் குறைஞ்சு போன உடனே அவருக்கும் மோசம் வரும் அவர் செத்துப்போனால் நம்முடைய கிட்ட ஆர் மோசுபா வாங்குறபேர்? அதினாலே கும்பினீர் உடமையை திருடி வைச்சுக் கொண்டு யிருக்குறதெல்லாம் நமக்குத் தக்கிப் போமென்று அல்லவா ஒன்றும் அனுப்பாமல் பாளையத்தை முழு கடிச்சுப் போட்டீர்கள்? யிந்த நியாயம் நாம் அங்கே வந்து விசாரிக்குறோம்," என்று யெழுதினார். அவர் கோன்சேல்காரர் யெல்லாரையும் கூட்டி பொதுவிலே யெழுத நியாயமில்லை. யெதுனாலே யென்றால் அவர் யிங்கே யிருந்து பிறப்படு முன்னமே ஒருநாள் யென்னைப் பார்த்து தஞ்சாவூர் மேலே போகலாமா யென்று கேட்டார். அதுக்கு நான் சொன்னது : "அங்கே போறதுக்கு யிப்போ சமயமல்லா யிப்போது அவ்விடமெல்லாம் ஆறும் வாய்க்காலும் கழனி வெளிகளும்

யெங்கும் சேரும் பயிரும் சாகுபடி யாகுறதும் யிப்படி சல மயமாயிருக்கும். யிப்போது தண்டு போறதும் பிரயாசமென்றும் நான் சொன்னேன். அப்படி யிருக்க பொதுவிலே யெழுதினார். அவரை யிப்போ போகலாம் யென்று ஆர் சொன்னார்களோ, அவர்கள் பேரிலே அல்லோ கோபம் பண்ணவேணு," மென்று சொல்லிக் கொண்டிருந்தார். அந்தமட்டிலே நாம் வீட்டிலே வந்தோம்.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 22; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 10; செவ்வாய்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போயிருக்கையிலே கேழ்வியான சேதி : பொம்பாயிலே இங்கிலீசுக்காரர் கப்பல் சண்டைக் கப்பல் முஸ்தீப்புடனே ஆறு கப்பல் வந்திருக்கிறதென்று யிவர்களுக்குச் சேதி வந்ததாகவும், யிப்போது அவர்கள் கப்பல் பத்துக் கப்பல் யிருந்து யித்தனை பிலகீனம் பண்ணித்தே, அந்த ஆறுகப்பலும் வந்து அவர்களுக்கு வந்து சேர்ந்தால் யின்னம் மெத்த பிலகினம் நடக்கும். ஆகையினாலே நம்முடைய கப்பல் யிங்கே யிருக்கிறது யுக்தமல்லாமல், மசுக்கரையிலே போயிருக்க வேணுமென்று யோசனை பண்ணி கப்பலெல்லாம் பயணம் முஸ்தீப்பு ஆகுறதாயி சேதி கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் யிங்கிலீசுக்காரர் பிலத்து வடக்கே செங்கல்ப்பட்டு உத்திரமநெல்லூர் வந்தவாசி மட்டுக்கும் வந்து சீமைகளைக் கட்டுகிறதாகவும், மேற்கே கிருஷ்ணாராயன் என்குறவன் திருவரங்கம் திருக்கோவிலூர் முதலான யிடங்களெல்லாம் கட்டு கிரானென்றும் இங்கிறேசுக்காரர் பெலனாய்க் காரியங்கள் மேலேறி வந்து நடத்துகிறார்களென்றும் கேழ்க்கப்பட்டது.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 23; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 11; புதவாரம்*

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போயி வீட்டுக்கு வந்தவிடத்திலே கேழ்வியான சேதி : முசே லாலி அவர்கள் காரைக்காலுக்கு வந்தவிடத்திலே முசே புருஷேர் (M. Porcher) பேரிலே ரஸ்து சரன்சாமிகள் அனுப்பாமல்ப் போன தென்ன வென்று மெத்தவும் கோபம் பண்ணினதாகவும், அப்போது முசே புருஷேர் சொன்னது, "நானென்ன செய்வேன் யெல்லாம் முஸ்தீப்பு பண்ணினேன், யிங்கே ஆளுமில்லை, மனுஷருமில்லை கூட வருகுறதுக்கு சொலுதாதுகள் பாறுக்காறர்களுமில்லை. நாமென்ன செய்ய வேண்டியது பணமில்லாமல் குத்தகைக்காரர் யிந்தக் கலாபத்திலே பணம் குடுக்கிறதில்லை," யென்று சொன்னதாகவும் அதன் பேரிலே குத்தகைக்காரர் பணம் குடுக்கச் சொல்லித் தாக்கீது பண்ணினதாகவும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 24; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 12; குருவாரம்*

இத்தனாள் கோட்டைக்குப் போயி வீட்டுக்கு வந்தவிடத்திலே கேழ்வியான சேதி : சந்தா சாயபு குமாரன் காரைக்காலுக்குப் போயி முசே லாலி அவர்களைக் கண்டு பேசினதாகவும், அவர் மெத்த பெருவானி (பிரியமுடன்) பண்ணி யிடுப்புக்கு நடுக்கட்டும் (குதிரை சவாரிக்குரிய பெல்ட்டுகள்) கட்டிவிச்சு குதிரை மேலே யேறி குதிரையை சுத்திச் சுத்தி வளையம் வளையமாய் ஓடச் சொல்லி வேடிக்கை பார்த்ததாகவும், யிவ்விடத்துக்கு வருகுறதாயும் யிருக்குறார்க ளென்றும், கூடப் போன பேர் அவரவர் சிறிது பேரும் ஆனைகளும் சரன்சாமிகளும் வருகுறதென்றும் நாலு நாளையிலே அவரும் வருகுறாரென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 13 (25); வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 13; சுக்கிறவாரம்*

இத்தனாள் ராசாப் பண்டிகையானதினாலே உதிச்சு யேழு மணிக்குத்தானே பூச்செண்டும் கொண்டு கோட்டைக்குப் போன விடத்திலே கோட்டை யெல்லாம் ஆருமில்லாமல் நிறுமானுஷியமாய்க் கிடந்துது. முசியே லாலி அவர்கள் முசே சுப்பீர் வீட்டுக்கும் முசியே தருஷே (தெஷே) கப்பல் கொம்மாந்தாம் வீட்டுக்கும் போயிருக்கிறாரென்று கேழ்க்கப்பட்டுது. யெப்போதும் ராசாப் பண்டிகை வந்தால் ஆறுமணிக்கு பாறு வைச்சு மூன்று தரம் துப்பாக்கி தீருவார்கள். யிருபத்தோரு வேட்டும் பீரங்கியும் மூன்று தரம் போடுவார்கள். அப்பால் பூசை கேட்டு வந்தபிறகு யிப்படி மூன்று தரம் போடுவார்கள். அப்பால் மெத்தை மேலே வந்து ரொட்டி தின்று கொண்டிருக்கும் சமையம் மூன்று தரம் போடுவார்கள். அப்பால் தீனி தின்று சாராயம் குடிக்கிற போது மூன்று தரம் போடுவார்கள். அப்பால் சாயங்காலம் மூன்று தரம் போடுவார்கள். அப்படி நடக்குறது. ஆறு மணிக்கி ஒன்றும் போடயில்லை. யெட்டு மணிக்கி முசே லெறி அவர்கள் மெத்தை மேலே வந்தார். அவரைப் போய்க் கண்டு பூச்செண்டும் குடுத்து ஆசாரம் பண்ணினோம். அவரும் யித்தனை நாளைக்கு யின்றைய தினம் தொப்பி கழற்றி சிரிச்ச முகத்துடனே மெத்தவும் வணங்கி வணங்கி ஆசாரம் பண்ணினார். அதன் பிறகு சின்னதுரை முதலான பேர் முசே சுப்பீர், முசே தருஷே (?) வீட்டுக்குப் போயிருந்து[1] அவர்கள் வந்தார்கள். சின்னதுரைக்கும் பேர்ப்

[1] தெஷே (D'Ache) தன் கப்பல்களோடு திரும்பிச் செல்ல முடிவு செய்திருந்ததால், அவரைப் போக வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளும் முயற்சிகளில் இதுவும் ஒன்றாக இருக்க வேண்டும்.

பண்டிகையானதினாலே அவருக்கும் பூச்செண்டும் குடுத்து ஆசாரம் பண்ணினோம். அவரும் சந்தோஷமாயி வாங்கிக் கொண்டு ஆசாரம் பண்ணினார். அதன்பிறகு ஒன்பது மணிக்கு முசே சுப்பீரும் முசே தருஷேயும் (?) கோட்டைக்கு வந்து யெல்லாரும் கோயிலுக்குப் போயி பூசை கேட்டார்கள். பூசை ஆனபிறகு ஒரு தரம் பாறும் சுட்டு யிருபத்தோரு பீரங்கியும் சுட்டார்கள். அதன்பேரிலே யெல்லாரும் மெத்தை மேலே வந்தார்கள். அப்போது நாமும் மெத்தை மேலே போயி முசே சுப்பீருக்கும் பூச்செண்டு குடுத்து ஆசாரம் பண்ணினோம். உடனே அவருக்கு சந்தோஷமாயி வாங்கிக் கொண்டு மெத்தவும் ஆசாரம் பண்ணியும் உபசாரமும் சொன்னார். அதன் பேரிலே யின்றைக்குத் தம்பிக்கு திதியானதினாலே வீட்டுக்கு வந்தோம்.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 26; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 14; சனிவாரம்*

இத்தனாள் கேழ்வியான சேதி : முசியே லாலி அவர்கள் யின்றைக்கு வருகுறாரென்றும் அவருக்கெதிரே ஆறு குதிரை கட்டின வண்டி அனுப்பினார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 28; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 16; சோமவாரம்*

இத்தனாள் காலமே ஆறு மணிக்குக் கேழ்வியான சேதி : நேத்து ராத்திரி முசியே லாலி அவர்கள் மூன்று மணிக்கு ஆறு குதிரை கட்டின வண்டியின் பேரிலே யேறிக் கோட்டைக்கு வந்து சேந்து, கொவர்ணமாவிலே காம்பிராவிலே நித்திரை போறாரென்றும், முசே லெறி அவர்கள் முதலான பேர்கள் யெல்லாரும் அவரெழுந்திருந்த உடனே காண்பிச்சுக் கொள்ளத் தக்கதாக யிருக்கிறார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. ஆனால் நாமும் போயிக் காணவேணும் யென்று உடனே பிறப்பட்டு கோட்டைக்குப் போயி கொவர்ணமாவிலே கிட்டப் போனோம். அப்போது அங்கே யிருக்கிறவர்கள் வெள்ளைக்காரர்கள் வந்து சொன்னது: முசியே லாலி அவர்களானால் நித்திரை போறார். முசியே லெறி அவர்கள் ஆரையும் தமிழரை மெத்தை மேலே விட வேண்டாமென்று சொன்னார்கள். உமக்குத் தேவை யில்லை, நீர் போகலாமென்று சொன்னார்கள். அப்போது நாம் சொன்னது. அவர் அப்படிச் சொல்லி யிருக்கச்சே முசே லாலி அவர்கள் நித்திரை போயிக் கொண்டிருக்க, முசே லெறி அவர்கள் ஆலோசனைக்காரர் யெல்லாரையும் உள்ளே விடாமல் பேட்டி அன்னியிலே யிருக்க, யிப்போ நாம் அங்கே போயி செய்யுற தென்னவென்று சொல்லிப் போட்டு பிடவைப் பார்க்குற சாலையிலே வந்து யிருந்தோம். பதினோரு மணிக்கும் முசே லாலி

அவர்கள் யெழுந்திருக்கவும் யில்லை. யிவர்கள் ஆரும் பேட்டி ஆகவும்யில்லை. யிதிலே முசியே திலார்ஷும் மத்தப் பேர் ஒவ்வொருத்தராயி வெளியிலே அவரவர் விட்டுப் போனதினாலே, யினிமேல் நாம் யிங்கே யிருந்தென்ன வென்று பிறப்பட்டு வீட்டுக்கு வந்தபிறகு, கோந்து தே மும்மறாசேன். (Comte de Moutmorency) தம்முட துபாசியுடன் ராத்திரி பத்து மணிக்கி நாம் தம்முட வீட்டுக்கு வந்து கண்டு பேசுகுறோமென்று சொல்லி அனுப்பினார். அவர் துபாசி வந்து யிந்தச் சேதியை சொன்னான். நல்லது அப்படியே ஆகட்டு மென்று சொல்லி அனுப்பினோம். அந்தப்படிக்கு ராத்திரி பத்து மணிக்கு முசியே கோந்து தே மும்மறாசேன் (?) வீட்டுக்கு வந்து அவர் சொன்ன சேதி : "உம்முடைய சேதியும் நீர் முசியே லாலி அவர்களுக்கு யெழுதிவைச்சுக் கொண்டிருக்கிற காகித வயணமும் கணக்கு வயணமும் யெல்லாம் சொல்லி யிருக்குறோம். அவரும் யிவ்விடத்துக்கு வந்தவுடனே உம்முட காகிதம் கணக்கெல்லாம் பார்த்து தீத்துப் போடுகிறோமென்று சொல்லி யிருக்கிறார். நாளையும் நாளை நன்றைக்கும் கூடாது, வேலை யாயிருக்கிறது. ரெண்டு நாளும் போனவுடனே உம்மை அழைச்சுப் போயி யேகதேசத்திலே ஆரும் அறியாமல் பேசிவிக்குறேன். உம்முடைய பேச்சும் வெளிக்கு வரவும் வேண்டாம். நீர் முசே லெறி ஆலோசனைக்காரர் கொம்மாந்தாங்கள் ஆராருக்கு குடுத்திருக்கிறீரோ அதையெல்லாம் நன்றாய்ச் சொல்லி விடும்," யென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது : "நமக்கு வர வேண்டியத்துக்கெல்லாம் கணக்கெழுதிக் குடுத்தே யிருக்கிறோம். நாம் குவர்ணமாமிலே காம்பிராவிலே வந்து பேசினால் முசே லெறி அங்கே யிருப்பாரே அவருக்குத் தெரியாமலிருக்குமா," வென்று கேட்டோம். அதுக்கு அவர் அவருக்குத் தெரியாமல் பேசிவிக்குறேன் யென்று சொல்லிப் போட்டுப் போனார். யிதுசேதி.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 29; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 17; செவ்வாய்*

இத்தனாள் உதயத்திலே சரீரம் லகுவு யில்லாமல் வீட்டிலே தானே யிருக்கையிலே சாயங்காலம் முசே புலோ கண்டு பேச வேணுமென்று சொல்லி அனுப்பிவிச்சார். உடனே பிறப்பட்டு போயிக் கண்டவிடத்திலே முசே புலோ சொன்னது : "நேத்து வந்து கோந்து தே மும்மறசேன் சொன்னபடிக்கி அவர் நாலு மணிக்குத் தன் வீட்டுக்கு வந்து தன்னுடனே நம்முடைய சேதியும் காகிதவயணமும் முசே கொதே (லாலியுடனே) அவர்களுடனே சொல்லி யிருக்கிறேன். அவரும் நானும் நாளை ராத்திரி யெட்டு மணிக்கி உம்முடைய வீட்டுக்கு வருகுறோம். நீரும் முசியே றங்கப்பிள்ளையை அழைப்பிச்சு வைச்சுக் கொண்டு யிரும்," யென்று

சொல்லிப் போனார். ஆகையினாலே நீர் நாளை ராத்திரி யெட்டு மணிக்கி யென் வீட்டுக்கு வாருமென்று சொல்லி அனுப்பிவிச்சார். நல்லதென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்தோம்.

### *1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 30; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 18; புதவாரம்*

இத்தனாள் முசியே புலோ வீட்டிலே நாமும் முசே லாலியும் முசியே மும்மராசனும் முசே புலோவும் பேசின சேதி : இத்தனாள் காலமே ராமாசி பண்டிதனை அழைப்பிச்சு கணக்கெல்லாம் முஸ்தீது பண்ணச் சொல்லிப் போட்டு கோட்டைக்குப் போயி பத்துமணிக்கெல்லாம் வீட்டுக்கு வந்தோம். அந்தப்படிக்கு ராமாசி பண்டிதன் கணக்கை வெள்ளைக்காரன் முசே கலி (M. Clegg) கையிலே யெழுதிவிச்சு முஸ்தீப் பாயிருந்தான். நாமும் சாயங்காலம் ஆறரை மணிக்குத் தானே முசே புலோ வீட்டுக்குப் போனோம். அப்போது முசே புலோ தம்முடைய பெண்டுகளையெல்லாம் முசியே பருத்தீர் (M. Bourdier) வீட்டுக்குப் போகச் சொல்லிப் போட்டு, தாம் ஒண்டியாயிருந்தார். நாமும் போனவுடனே நம்மை மெத்தை மேலே போகச்சொல்லி தாம் வெளியே வந்து பத்தி (மற்றவர்களோடு) உலாவிக் கொண்டிருந்தார். நாம் மெத்தை மேலே போன விடத்திலே யிருட்டிலே (நாலு) நாற்காலி கிட்ட கிட்டப் போட்டிருந்தது. நாமும் அங்கே போயிருந்தோம். அப்படி யிருக்கையிலே யேழரை மணிக்கு முசே புலோவும் முசே லாலி அவர்களும் முசே கோந்து தே மும்மராசேனும் மூணுபேரும் அந்த யிருட்டிலே வேஷமாராடி வந்தார்கள். அப்போது முசியே லாலி அவர்கள் கறுப்புச் சட்டையும் போட்டுக் கொண்டு கையிலே தடி பிடிச்சுக் கொண்டு வந்திருந்தார்கள். நமக்கு அடையாளம் தெரியாமல்ப் போச்சுது. அப்போது அந்தக் கறுப்புச் சட்டையிலே மார்புலே வலது கை ஓரமாயி முத்திரை மின்னித்து, அதினாலேயும் அவர் பேச்சினாலேயும் முசியே லாலி யென்று அறிந்து ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பண்ணினார். அதின்பேரிலே அப்பாலே நின்றோம். அப்போது முசே புலோ கிட்ட அழைச்சார். கிட்ட வந்தவுடனே முசியே லாலி அவர்களிருந்து முசியே றங்கப்பிள்ளை யிரு மென்று சொன்னார். நாமும் அந்த நாற்காலி கிட்டவே யிருந்தோம். யிருந்தவுடனே முசே லாலி அவர்கள் சொன்னது : "முசியே துப்பிளேஷிக்சுக்கு ஒன்றுமில்லை. சீமையிலே வந்து அன்பதினாயிரம் ரூபாய் கடன் வாங்கினார். பிறதிஷ்டைக்கு (வீண்டம்பத்துக்கு) யெல்லாம் சிலவு பண்ணிப்போட்டார். அவர் மனுஷன் பாப்பய்யப் பிள்ளையை முசியே கொதே அனியாயமாயி காவலிலே வைச்சார். அவர் மனுஷருக்கு அவர் பாரிக்கத்து (விடுதலைப் பத்திரம்) குடுத்திருக்கச்சே அவனை துடர் நியாயமுண்டா? முசே றங்கப்பன் பேரிலே பதினெட்டு லட்சம் ரூபாய் வரவேணும் யென்று யெழுதி முசியே

லெறி சொல்லிக் கொண்டிருக்கிறா," ரென்று சொன்னார். அதுக்கு முசியே புலோ யிருந்து "முசியே துப்பிளேயிக்சு வெகு பணம் சம்பாதிச்சுக் கொண்டு போனார். பாப்பய்யப் பிள்ளை யிந்த ஊருக்குள்ளே வெகு அனியாயங்களெல்லாம் பண்ணினான். முசியே றெங்கப்பனுக்கு முசே லெறி பேரிலே வெகுபணம் வரவேணும். அதுக்கு உமக்குக் கடுதாசும் யெழுதியிருக்கிறான். கணக்குக் கொண்டு வந்திருக்கிறான். அதை நீர் பாரும், அப்போது உமக்குத் தெரியவரு," மென்று சொன்னார். அதுக்கு முசே லாலி அவர்கள் சொன்னது : "பார்க்க வேண்டியதென்ன? யிவர் காரியமெல்லாம் தீத்துக் குடுக்கிறோம். யிப்போதும் முசே லெறி முதலான பேர்களுக்கு யிவர் யென்ன குடுத்திருக்கிறாரோ அதுக்கு கணக்குக் குடுத்தால் யிவர் காரியமெல்லாம் அனுகூலம் பண்ணிப் போடுகிறோம்," யென்று சொல்லி யெழுந்திருந்து, நம்மை மாத்திரம் அப்பாலே அழைச்சுப் போயி, "கணக்கு முஸ்தீப்பு பண்ணி லீஸ்து குடும். அவர்களை யெல்லாம் நாயடிக்குறாப் போலே அடிச்சு உம்மைக் கண்டால் நடுங்கப் பண்ணிப் போடுகுறோம். கணக்கு மாத்திரம் குடுமென்று," முதுகைத் தட்டி குடுத்து திரும்பவும் முன்னிருந்து வந்த யிடத்துக்கு வந்தார். அப்போதும் முசே புலோ காகிதங்களைக் கிட்டக் கொண்டு போய்ப் பார்க்க வேணும் யென்று சொன்னதுக்கு, "பார்க்கிறது யென்ன? நான் சொன்னபடிக்கு கணக்கு மாத்திரம் குடுத்தால் யிவர் காரியமெல்லாம் அனுகூலம் பண்ணிப் போடுகுறோ," மென்று அப்போ ஒருக்கால் முதுகைத் தட்டிக் குடுத்து சீமா மூலம் யெத்தனை ரூபா யென்று கேட்டார். சீமா பத்தொன்பது லக்ஷம் யிப்போ கட்டினது. திருவணாமலை, மூணு லட்சத்தி முப்பதினாயிரம் தேவனாம்பட்டணம் பதிமூவாயிரம் என்றும் சொன்னோம். தீவுக்கோட்டைச் சீமை யெவ்வளவு யென்று கேட்டார். அது யெனக்குத் தெரியாது யென்று சொன்னேன். அதன் பேரிலே லீஸ்து குடும் யென்று முதுகைத் தட்டிக் குடுத்துப் போட்டு அந்த யிருட்டிலே தானே போனார்கள். நாமும் முசே புலோவை அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தோம்.

***1758 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 31; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 19; குருவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்ன துரை வீட்டுக்கு போயி அவரைக் கண்டு சீமைக்கு அனுப்ப வேண்டிய காகிதங்களை யெழுதின சேதியாகப் பேசிக்கொண்டு யிருக்கையிலே அவர் ஒருவித மாயிருந்தார். அப்போ ஏன் ஒருவிதமாயிருக்கிறீர் யென்று கேழ்க்குமிடத்திலே சின்ன துரை சொன்னது : "யினி யேது கும்பினீரும் முழுகிப்போச்சு. நாங்களும் முழுகிப் போனோ," மென்று சொன்னார். அது யென்னத்துக்கு ஆக

சொல்லுகுறீர் யென்று அதை நாம் விஸ்தரிச்சு கேழ்க்குறதல்ல வென்று உடனே அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்குப் பத்து மணிக்கு வந்தோம்.

இப்பால் கேழ்வியான சேதி : பெரிய (முழு) குமிசேல்) கூடி[1] பனிரெண்டு மணி மட்டுக்கும் பேசியிருந்து கொண்டு யிருந்தார்கள் யென்றும் கேழ்க்கப்பட்டுது. யிதல்லாமல் ராமச்சந்திர ராயன், பாபு ராயன் முதலான தமிழர் பேரிலே ஒரு துகை வகை யெழுதிக் கொண்டு அவரவரை அழைப்பிச்சுப் பணம் குடுக்கச் சொல்லிக் கேழ்க்குறதா யிருக்கிறதாயி சேதி கேழ்வியாச்சுது. அதல்லாமல் வடக்கே யிருந்து முசியே புசியம் முசே மொற்சேனும் சென்னப்பட்டணத்து மேலே தண்டு வருகுறதாயி கருங்குழி, செங்கல்பட்டு யிவ்விடங்களிலே வந்திருந்த யிங்கிறேசுக்காறர் குதிரை ராஹுவமெல்லாம் சென்னப்பட்டணத்துக்குப் போறதாயிக் கேழ்வியாச்சுது.

யித்தநாள் சாயங்கள் மயேயிலே யிருந்து (சோமாக்காரர்கள் தொரைக்கு காகிதம் கொண்டு வந்ததாகவும், அவர்கள் சொன்னது சீமைக்கப்பல் ஒருக் கப்பல் மயேயிக்கு வந்தது. பின்னே பதினொரு கப்பல் வருகுறதென்றும் கப்பல்காரன் சொன்னதாகவும், அதை தொரை கேட்டு காகிதமும் பார்த்துக் கொண்டார் யென்றும் கேழ்வியாச்சுது. யிது சேதி.

[1] இக்கவுன்சிலில் தெஷே திரும்ப முடிவு செய்துள்ளது முக்கியமாகப் பேசப்பட்டது.

# செப்தம்பர் 1758

***1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 1; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 20; சுக்கிறவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்னதுரை வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் வெளியே போயிருந்தபடியினாலே அங்கேயிருந்து, முசே புலோ வீட்டுக்குப் போயி அவரைக் கண்டவிடத்திலே அவர் கோந்து தே மும்மறாசேனைக் (?) கண்டு பேசினீரா? வென்று கேட்டார். அதுக்கு நாம் கண்டதில்லை. முசே லாலி அவர்கள் வந்து பேசினது. உமக்கு யெப்படி யிருக்கு தென்று கேட்டதுக்கு, யெனக்கு ஒன்றும் தோணயில்லை என்று சொன்னார். ஆனால் சீமைக்குக் கப்பல் போகுதே, காகித மெழுதவேணுமே யென்று சொன்னதுக்கு அது யெனக்கு ஒன்றும் தெரியாது யென்று சொன்னார். அதின் பேரிலே யிவருக்கு முசே லாலி அவர்கள் நம்மை அப்பாலே அழைச்சுப் போயி கொஞ்சம் பேசினாரே அதுலே கோபமாச்சுது யென்று யெண்ணிக் கொண்டு, அந்தமட்டில் அனுப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்த பிறகு கேழ்வியான சேதி, நேத்து மத்தியானம் முசே லாலி அவர்கள் குமுசேலிலே சீமா மூலம் நம்முட வசம் பண்ணுகுறதாயித் தீந்து தென்று கோந்த தே மும்மராசனென்கிறவனுட துபாசி சொன்னதாகக் கோபாலகிருஷ்ணய்யன் வந்து சொன்னான்.

***1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 2; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 21; சனிவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு சின்னதுரை வீட்டுக்குப் போயி அவரைக் கண்டவிடத்திலே, அவர் சீமைக்கு அனுப்பவேண்டிய காகிதங்கள் அவர் கணக்கன் கையிலே யெழுதிவிச்சு வைத்ததை நம்முடைய கையிலே குடுத்தார். அதன் பேரிலே சேதிகள் யென்னவென்று கேட்டதுக்கு, நேத்து மத்தியானம் முசே லாலி அவர்கள் கோபம் பண்ணினது சொல்லக்கூடாது. அப்படிக் கோபம் பண்ணி அதன் பேரிலே முசே லெறி அவர்கள் யேதுக்கும் கையெழுத்துப் போடத் தேவையில்லை யென்றும், ஒரு காரியமும் விசாரிக்கத் தேவையில்லை யென்றும், தாம் ஒப்பம் போடுகுறது, சகலத்துக்கும் ஒடுதி குடுக்கிறது, காரியங்கள் விசாரிக்குறது யெல்லாம் தாமென்றும் தீத்தார். முசே லெறி நம்மைப் போலே தானென்று சொன்னார். அந்த மட்டிலே அவரை அனுப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்து கோந்து தே மும்மராசன் கப்பல் மேலே பயணம் போற படியினாலே அவர் கேட்டிருந்ததுக்காக ஒரு கேடயமும்

சேழுதாரும் (கத்தி) கோபாலகிருஷ்ணய்யன் கையிலே குடுத்து அவர் அண்டைக்கு அனுப்பிவிச்சு, சாயங்காலம் காகிதங்களை முத்திரை போட்டு முசே லாலி அவர்களுக்கு எழுதின படிக்கி ஒரு காகிதமும் கணக்கும் குடுத்துக் கப்பல் மேலே யேறியிருக்கிற கோந்து தே மும்மராசன் வசத்திலே சேரப்பண்ணினோம்.

*1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 3; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 22; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே சீமைக் கப்பல் பத்தும் சீமைக்குப் பாயெடுத்துப் பயணமாயிப் போச்சு. கோந்து தே மும்மராசன் யேறிப் போனாா் யென்று சேதி வந்தது. முசே குலுவேத்தும் கப்பலின் பேரிலே மசுக்கரைக்குப் பயணம் போனாரென்றும் சேதி வந்தது. அதின் பேரிலே நாமும் பிறப்பட்டு கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லாலி செனரால் அவர்களைக் கண்டு ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பண்ணிக் கோயிலுக்குப் போனாா். முசே லெறி யித்தனை நாளும் எல்லாருக்கு முன்னே போறவர் யின்றைய தினம் யெல்லாருக்கும் பிறகே முகம் வாடிக் கொண்டு போனாா். நேத்து முதல்க் கொண்டு சகல ஒடுதியும் கையெழுத்தும் முசே லாலி தானே போடுகுறாா். ரசா சாயபு நேத்தே தண்டுக்குப் போனாா் முசே சுப்பீா் யின்றைக்கும் தண்டு போகயில்லை நாளை போறாரென்று சொல்லுகுறாா்கள். நாமும் பத்து மணிக்கு வீட்டுக்கு வந்தோம். சாயங்காலம் கேழ்வியானது : டங்காசாலையிலே பொம்பாயி, பசுரா, கோவா சூரத்து முதலான சொக்கம் வெள்ளி ரூபாயிடை 2,33,000 சிலுவாணம் நிறுத்துவிட்டாா் களென்றும், தங்கக்காசு ஆள் (?) காசு ஒன்பதே முக்கால் மாத்துக்காசு விராகனிடை 23,900 சிலுவானமும் ஆக காசுகிறையம் உள்பட 3,50,000 மட்டுக்கும் ஒலாந்தாக்காரா் கப்பலிலே வாங்கின சம்மதி நிறுத்திவிட்டாா்களென்றும் கேழ்க்கப்பட்டுது. மத்தப்படி வெள்ளைக்காரா் முதலான பேர்களிடத்தில் அவரவரை அழைப்பிச்சு சிலவுகளுக்குப் பணங்கள் கேட்டு வாங்குற தாயிருக்கிறாா் என்றும், முசியே புசி மூணு லக்ஷம் ரூபா உண்டிகை அனுப்பினதாகவும் அவரும் சென்னப்பட்டணத்தின் பேரிலே வருகுறாரென்றும் கேழ்க்கப்பட்டது. கசுவராசா நேசனூரும் விட்டு வெகுமதியும் அனுப்பினதுக்குப் பதில், அவருக்கும் அண்ணாசாமி அய்யங்காருக்கும் வெகுமதி குடுத்து அவர் மனுஷன் கோபாலய்யங்காருக்கு நேசனூரிலே ஒரு சுவாஸ்தியம் பனிரெண்டு விராகனுக்கு சாசனம் குடுத்து, சகலாத்தும் குடுத்து நம்முட கந்தப்பிள்ளைக்குக் கூட வந்தபேருக்கும் வெகுமதி பண்ணி பயணம் அனுப்பினோம். யிது சேதி.

***1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 4; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 23; சோமவாரம்***

இத்தனாள் காலமே பிறப்பட்டுக் கோட்டைக்குப் போனவிடத்திலே ஆரும் மெத்தை மேலே போகாமல் முசே லாலி அவர்கள் ஒரு காம்பிராவிலேயும் முசியே லெறி அவர்கள் ஒரு காம்பிராவிலேயும் யிருக்குறார்களென்றும் சொன்னார்கள். அதின் பேரிலே நாம் பத்து மணிக்கு மட்டும் பிடவை பார்க்குற சாலையிலே யிருந்து வீட்டுக்கு வந்தோம்.

சாயங்காலம் வண்டிமேலே சாரி போயி யேழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். யிதிலே கேழ்வியான சேதி : சந்தா சாயபு மகனும் அல்லி நக்கீயும் முசே சொபினே தண்டும் மேற்கே திருவண்ணாமலை சேத்துப்பட்டு அப்படி போயி முசே சுப்பீர் தண்டுக்கு வருகுறதாகவும், முசே சுப்பீர், யித்தனாள் சாயங்காலம் நாலு மணிக்குப் பிறப்பட்டு நம்முடைய அக்கிரகாரம் வழியாயி வடக்கே போறதாயிம் கேழ்க்கப்பட்டுதெ.

***1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 5; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 24; செவ்வாய்***

இத்தனாள் காலமே பிறப்பட்டு கோட்டைக்குப் போயி பிடவை பார்க்கிற சாலையிலே பதினோரு மணி வரைக்குமிருந்தோம். அது வரைக்கும் முசே லாலி செனரால் அவர்கள் அவர் காம்பிராவிலே தானேயிருந்தார் வெளியே வரயில்லை.

யிப்படி யிருக்கையிலே கேழ்வியான சேதி : முசே புசியும் முசே மோர்சேனும் நெல்லூருக்கு வந்ததாகவும் சென்னப்பட்டணம் பவுன்சு வழிகட்டப் போகுதென்றும் சேதி வந்ததைக் கேட்டு, முசே லாலி அவர்கள் முசே சுப்பீர் தண்டையும் முசே சொபினே, ரசா சாயபு தண்டையும் சென்னப்பட்டணத்து மேலே போகச் சொல்லி ஒடுதி குடுக்கிற நிமித்தியம் முசே சுப்பீரையும் ரசா சாயபுவையும் வந்துக் கண்டு பேசிப் போகச் சொல்லிக் காகிதம் அனுப்பினதாகவும், சூரத்து வழியாயி சீமைக் கடுதாசுகள் வந்ததாகவும் அதிலே இங்கிலிசுக் கப்பலுக்கும் யிவர்கள் கப்பலுக்கும் சண்டை நேரிட்டு அதிலே இங்கிரேசுக் கப்பல் அஞ்சுக் கப்பல் முழுகிப் போச்சுது யென்றும், குறை ஒன்பது கப்பலுகளையும் யிவர்கள் பிடிச்சுக் கொண்டார்களென்றும் பிரான்சுக் கப்பல் பதினோருக் கப்பல் யிவ்விடத்துக்கு வருகுதென்றும், ஒலாந்தாக் கப்பல் யிவ்விடத்திலே ரேவுலே பிடிச்சு வெள்ளியும் பொன்னும் வாங்கிக் கொண்டதல்லாமல் செம்பு செம்மரம் சில தேக்கு மரம் உத்தரங்கள் பலகைகள் எல்லாத்தையும் யெடுத்துக் கொண்டதாகவும் வெள்ளைக்காரர் சொன்னார்கள்.

அதின் பேரிலே நாம் வீட்டுக்கு வந்து சாயங்காலம் சாரி போய் கோட்டை வெளியிலே புளியன் தோப்பிலே பல்லக்கிறங்கி அதிலே நானும் யிருக்க ஒரு சொலுதாது நிறைய சாராயத்தைக் குடிச்சுப் போட்டுக் கத்தியை உருவிக் கையிலே வைச்சுக் கொண்டு நம்மண்டையிலே வந்தான். அப்போது கோபால கிருஷ்ணய்யன் முதலான பேரெல்லாம் பயந்து அப்பாலே போனார்கள். அப்போது நாம் பல்லக்கிலே தானே யிருந்து கொண்டு அவனை சிலம்பம் பழகச் சொன்னோம். அவன் அத்தனை மயக்கத்திலும் சிலம்பம் பண்ணுகுறதும் யிந்தப்படி ரெண்டு நாழிகை நேரம் வேடிக்கை பண்ணினான். அதின் பேரிலே பிறப்பட்டு நாம் வருகுறபோது நம்முட பல்லக்கு போனான். கெவுனி வாசலிலே வந்தவுடனே அவர்கள் கண்டு அவனைப் பிடிச்சு கத்தியைப் பறிச்சுக் கொண்டு அடிச்சுக் காவலில் வைச்சார்கள். அதின் பேரிலே நான் வீட்டுக்கு வந்தபிறகு கேழ்வியான சேதி : ஒலாந்தாக்காரர் சுலுப்பு சாயங்காலம் ஒன்று வந்ததாகவும் அதிலே நாலஞ்சு பேர் வெள்ளைக்காரர் யிறங்கி வந்தார்க ளென்றும் கேழ்க்கப்பட்டுது. அவர்கள் கப்பலைப் பிடிச்ச நிமித்தியம் நாகப்பட்டணத்திருலிருந்து அனுப்பிவிச்சதாக யெண்ணிக் கொண்டோம். நாகப்பட்டணம் கப்பலிலே வந்த ரூபாய் டங்காசாலையிலே வந்ததிலே நாசற் சங்கு ரூபாயிக் கொண்டுவரச் சொல்லிப் பார்த்தோம். அதிலே பார்சியிலே முத்திரை யெழுதியிருந்த வயணம் சுவாமி யென்னுட சீமை நீதியோடே வைக்கவேணும், முத்திரைபேர் சாபு–மச்–அது புதுச்சேரியிலே ரூபாயிலே சாபு (சாப்மஷ்) (என்று எழுதியிருந்தது. நம்முடைய புதுச்சேரி ரூபாயிலே ‘ஆற்காடு’ என்று எழுதி இருக்குதே அதைப் போல.) அந்த ரூபாயி ரெண்டையும் பெட்டியிலே வாங்கி வைக்கச் சொன்னோம்.

### *1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 6; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 25; புதவாரம்*

இத்தனாள் சாயங்காலம் கேழ்வியான சேதி : மத்தியானம் குமிசேல் கூடி ரங்கோ பண்டிதனுக்கு அன்னூறு குதிரையும் ஆயிரம் பேர் ராணுவும் வைக்கச் சொல்லி ஒடுதிகுடுத்து, அதுக்கு சாகீராய் திருவதி பஞ்சமாலும் சிவா பட்டணமும் யெழுதி குடுத்ததாகவும், முசே தெவே தமக்குச் சீமை தேவையில்லை கையெழுத்துப் போட்டுக் குடுத்ததாகவும், சீமை முசே லசேல், பாரிசமாய் விசாரிக்கச் சொன்னதாகவும் சந்தா சாயபு குமாரன் ரசாவுபும் அல்லி நக்கீயும் முசே லாலி அவர்கள் வரச் சொன்னபடிக்கு வீடு வந்து சேர்ந்தார்களென்று கேழ்க்கப்பட்டுது.

சின்ன துரை குமுசேலிலே நடந்த (சொன்னது), ரங்கோ பண்டிதனுக்குப் பற்வணா சேதி (பற்றி).

***1758 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 7; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 26; குருவாரம்***

இத்தனாள் காலமே சின்ன துரை வீட்டுக்குப் போயி அவரைக் கண்டு அவர் சொன்ன சேதி : "நேத்து மத்தியானம் கோன்சேல் கூடி, ரங்கோ பண்டிதனுக்குத் திருவதி, பஞ்சமாலும், சிவப்பட்டணமும் சாகீர் யெழுதுகுறபோது, சீமா மூலம் பேச்சு வந்த விடத்திலே உம்முடைய கணக்கு பிறஸ்தாபம் வந்தது. அப்போது முசியே லாலி அவர்கள் சொன்னது முசே லெறி யானால் முசே ரங்கப் பிள்ளை பேரிலே பதினெட்டு லக்ஷம் வரவேணுமென்று சொன்னார். அவரானால் தமக்குத் தான் கும்பினீரின் பேரிலே வெகு பணம் வரவேணுமென்று சொல்லுகுறார். அவர் கணக்கு தீராமலிருக்கிற தென்ன?" வென்று கேட்டார். "மெய்தான். அவருக்கு நான் சீமா மூலத்தை நம்பி யிருபதினாயிரம் ரூபாய் கடன் குடுத்திருக்கிறேன். வட்டி ஆதாயம் ஒன்றும் வந்ததில்லை. அவர் கணக்குக் குடுத்து ஒரு வருஷத்துக்கு மேலே ஆச்சுது. கணக்கும்த் தீந்ததில்லை," என்று சொன்னேன். அதுக்கு, "அவன் யேன் திறக்கயில்லை" (பார்க்கவில்லை) யென்று கேட்டார். முசே (லெ)னுவார் கையிலே குடுத்திருக்குது. தீந்ததில்லை யென்று சொன்னதுக்கு, "அப்படி யிருப்பானேன்? இப்போதும் அந்தக் கணக்கைப் பார்த்து முசே லசேலும் முசே துப்பீனானும் ரெண்டு பேரும் தீத்துப் போடுங்கோளென்று சொன்னார். அப்போது கணக்குப்படி யெனக்குப் பணம் வரவேண்டியதினாலே நானும் அந்த சம்மதிக்கு வந்து பேசுவே னென்றும் சொல்லிப் போட்டு வந்தேன். ஆகையாலே நீ ஒன்றுக்கும் யோசனை பண்ண வேண்டாம் அவர்கள் அழைச்சுக் கேழ்க்குறபோது நடக்குற பேச்சுக்கு உடனே யெனக்குச் சொல்லி அனுப்பு, நான் வந்து பேசுறே," னென்று சொன்னார். அப்போது முசே லசேல் வந்தார். அவரைப் பார்த்து சின்ன துரைக் கணக்கு சேதி யென்னவென்று கேட்டார். அதுக்கு "முசியே துப்பிளானுத்துக்கு நாலஞ்சு நாளைக்குக் காரியமிருக்குது. ஆகையாலே நாலஞ்சு நாள் போனபிறகு யிந்த கணக்கு யெல்லாம் விசாரிக்கப் போறோ," மென்று சொன்னான். அதுக்கு சின்னதுரை சொன்னது நீர் நியாயமான படிக்கிப் பார்க்கவேணும். அதிலே வித்தியாசம் பார்த்தால் யெனக்கே பணம் வரவேண்டியதினாலே நான் வந்து பேசுவே," னென்று சொன்னார். அந்தமட்டிலே நான் அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தோம். அதன் பிறகு கேழ்வியான சேதி சவரிராயப் பிள்ளை அமுல்தாறரை யெல்லாம் அழைப்பிச்சு நாங்கள் சீமை விட்டு விட்ரும் வாருங்கோ ளென்று அழைச்சுக் கொண்டு போயி முசே லசேல் கிட்ட பேட்டி பண்ணிவிச்சதாகவும் அதன் பேரிலே முசே லசேல் அமுல்தாறரைப் பார்த்து முசே லாலி அவர்கள் நமக்கு ஒடுதி குடுத்திருக்குறார்கள்.

ஆகையாலே நீங்கள் சீமா மூலத்திலே யிருந்து யிங்கிறேசுக்காரர் சண்டை தீருகிற வரைக்கும் மாடு ஆடு அரமாசு பரமாசு அனுப்ப வேணுமென்றும் சீமா மூலத்துக்கெல்லாம் குத்தகையும் அதுக்கு செல்லு பாக்கியும் கணக்கு கொண்டு வந்து குடுங்கோளென்றும் சொன்னதாகவும் அதன் பேரிலே யெல்லாரும் நல்லதென்று சொன்னதாகவும் அப்போது சவரிராயன் யிவர்கள் மனுஷர் வருமளவும் நாமெழுதி அனுப்பினபடிக்கி அனுப்பிக் கொண்டு வாருங்கோளென்று சொன்னதாகவும் நாளை முசே லசேல் பேட்டிக்கு யெல்லாரையும் நசர் கொண்டு போயிக் காணுங்கோ ளென்று சொன்னதாகவும் அப்பால் யெல்லாரும் வீட்டுக்குப் போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. முசே லாலி செனராலவர்கள் ஆலம்புரிக்குப் பயணமாய் வண்டி மேலே போனாரென்றும் நம்முடைய அக்கிறகாரம் போனவுடனே நம்முதென்று கேட்டு யெல்லாருக்கும் சலாம் பண்ணி அப்பால் போனதாகவும் தோட்டக்காறன் இளநீர் கொண்டு போய் காலாப் பேட்டுலே குடுத்ததாகவும் அதை வாங்கி வண்டி மேலே வைச்சுக் கொண்டு அவனுக்கு ரெண்டு பணம் குடுத்து நமக்குச் சலாம் சொல்லச் சொன்னதாகவும் அப்பால் கூனி மேட்டுக்குப் போயி அங்கே ஒரு மாட்டை சுட்டு அங்கே தீனி தின்றுப் போட்டு அப்பால் பயணம் போனாரென்றும் கேழ்க்கப்பட்டுது. நாமும் ராமாஞ்சி பண்டிதனுக்குச் சொல்லி கணக்கெல்லாம் தயாறு பண்ணி விக்கச் சொன்னோம்.

முசே லாலி செனராலவர்கள் றங்கோ பண்டிதருக்கு திருவதி பஞ்சமால் வகையராவுக்கு யெழுதிக் குடுத்த பற்வானாவுக்கு நகல் வயணம் ராசாவினுடைய சேனாபதியாயி சேன்லூயி சுபேரிய முத்தரையுடையவராயி ராசா வினுடைய குமுசேலாய் யிந்தியா சீமை யிலே ராசாவுனுடைய காரியத்துக் கெல்லாம் யெசமானாயிருக்கிற மகாராசஸ்ரீ தும்மாசு அர்தோர் (M.R.Ry. Thomes Arthur) முசே லாலி சாயபு அவர்கள் கற்பித்த பற்வணா ரங்கோ பண்டிதர் யிந்த சீமையிலே உள்ள சறுதார்களிலே மகாபேரும் கீர்த்தியும் பிறபலமாயிருக்கிற சேதி அறிஞ்சபடியினாலே அவரை ராசாவினுடைய ஊழியத்திலே சேத்துக் கொண்டு அன்னூறு குதிரையும் அன்னூறு பாறும் லாவணம் வைக்க உத்தாரம் குடுத்தோம். அந்தக் குதிரைக் காறர்களுக்கு சிப்பாயிகளுக்கு சம்பளம் கும்பினியிலே கற்னாடகஸ்தாளுக்கு நடக்குற ஒப்பந்தம் நடப்பிக்குறது மத்த ஒடம்படிக்கை திருவதி வகையரா குத்தகைப் பட்டயத்திலே அவருக்கு யெழுதிக் குடுக்கிற பிறகாரம் நடந்து கொள்ளுகுறது யிந்தப்படிக்கு 1758 ஆண்டு செயித்தோம்பர் மாசம் 6 தேதி புதுச்சேரியிலே முசே லாலி அவர்கள் கையெழுத்துப் போட்டுக் குடுத்தப்படிக்கு....

***1758 வருசம் செயித்தோம்பர் மாசம் தேதி 8; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 27; சுக்கிறவாரம்***

இத்தனாள் வீட்டிலே தானே யிருக்கையிலே கேழ்வியான சேதி சீமைக் கப்பல் பத்தும் சீமைக்குப் பயணம் போனது ஒசந்து போயி சென்னப்பட்டணம் ரேவு பிடிச்சு அங்கே யிருந்த சுலுப்புகளை யெல்லாம் சுட்டுக் கோட்டை மேலேயும் பட்டணத்து மேலேயும் குண்டுகள் விபரீதமாயி போட்டு திரும்பவும் ஆலம்புரிக்கு நேரே வந்தார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. பொய் சமாச்சாரம் யிதல்லாமல் காரைக்காலிலே நம்முட வேள முத்தப் பிள்ளையும் திருமலை ராயன் பட்டணம் குத்தகை குத்தய்யனும் வந்தவாசி திருவேங்கட பிள்ளை குமாரனும் மூணு பேரும் கூடி சீமை யெல்லாம் பாழாய்ப் போச்சுது. அதினாலே நஷ்டம் வந்திருக்குது அந்த நஷ்டம் தள்ளித் தரவேணும் யென்று பித்திசாமெழுதி காரைக்கால் துரைக்கிட்ட குடுத்ததாகவும் அவர் அந்த பித்திசாமும் குடுத்து காகித மூட்டை முசே லெறி அவர்களுக்கொன்றும் குடுத்து கட்டு மரத்திலே போட்டு அனுப்பிவிச்சதாகவும் அது நேத்து சாயங்காலம் முசே லெறி அவர்கள் கிட்ட வந்து சேர்ந்ததென்றும் அதிலே முசே லாலி அவர்கள் யெழுதின காகித மூட்டையில்லை யென்றும் அது எங்கே யென்றும் கேட்டதுக்கு கட்டுமரக்காரன் சமுத்திரத்திலே விழுந்து போச்சுதென்றும் சொன்னதாகவும் அவனைக் காவல் வைச்சார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. முசே லாலி செனரால்வர்கள் யின்று நாளை ஆலம்புரி விட்டு வருகுறபோது நம்முடைய அக்கிரகாரத்திலே குடுக்கச் சொல்லி ரொட்டி–வெண்ணை சாராயம் பழவகை சகலரும் அக்கிறகாரத்துக்கு அனுப்பிவிச்சோம் கல்க்கண்டு சர்க்கரை முதலானதும் அனுப்பிவிச்சோம்.

***1758 வருசம் செத்தேம்பர் மாசம் தேதி 9; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 28; சனிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போயிருந்து பத்து மணிக்கு வீட்டுக்கு வந்த பிறகு சாயங்காலம் கேழ்வியான சேதி முசே லாலி செனரால் அவர்கள் இவ்விடத்திலே யிருக்குற குவாடுது குதிரைக்காரர் சொலுதாது களெல்லாரையும் வரச் சொல்லி யெழுதி அனுப்பினதாகவும் அந்தப்படிக்கு யெல்லாரும் ஆலம் புரிக்கு பயணம் போனார்களென்றும் கேழ்க்கப்பட்டுது.

***1758 வருசம் செப்த்தம்பர் மாசம் தேதி 10; வெகுதானிய வருசம் ஆவணி மாசம் தேதி 29; ஆதிவாரம்***

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போய் பிடவைப் பார்க்குற சாலையிலே யிருக்கையிலே கேழ்வியான சேதி மைசூரிலே யிருந்து குதிரையும் ராணுவும் அழைப்பிக்கச் சொல்லியும் நாற்பது லட்சம்

வரைக்கும் சிலவுக்கு வாங்கி வரச் சொல்லி முசே மேவிலையும் ராசகோபால நாயக்கனையும் பரமானந்த பிள்ளையும் பயணம் பண்ணி அனுப்பிவிச்சார்களென்றும், யித்தனாள் குமிசேல் பேசினவிடத்திலே முன் இருபத்தஞ்சாந்தேதி முசே லாலி அவர்கள் முன்னே சீமா மூலமும் கணக்கு வழக்கும் அறமாசு பரமாசு சகலமும் முசே தெவோவுக்கு கவையில்லை யென்றும் முசே திப்பிளாமும் முசே லசேலும் விசாரிக்கத் தக்கதாக நேமிச்சார்களே அதுக்கு யித்தனாள் முசே பெடுத்தல் மீயும் கூட யிருந்து விசாரிக்குறது. மூன்று பேரும் கூடி மூன்று பேருக்கும் சம்மதியாயி விசாரிக்குற தன்னிலே ஒருத்தர் ரெண்டு பேராய் விசாரிக்க அக்கரையில்லை யென்றும் கேழ்க்கப்பட்டுது. அந்த மட்டிலே வீட்டிலே வந்தோம். இத்தனாள் சாயங்காலம் நம்முடைய அக்கிறகாரத்திலே யிருந்து வந்த சீட்டிலே யெழுதி யிருந்தது முசே லாலி அவர்கள் ஆலம்புரியிலிருந்து அப்பால் வந்தவாசிக்குப் போனாரென்றும் யெழுதி வந்தது.

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி அவர்கள் மெத்தை மேலே காம்பிராவிலே யிருந்தவர், பிடவை பார்க்குற சாலையிலே நாமும் முசே கில்லியாரும் பின்னையும் அஞ்சாறு பேர் வெள்ளைக்காறருமிருந்தார்கள். இப்படி யிருக்கையிலே முசே கில்லியார் யிருந்து சீமா மூலம் விசாரிக்குறத்துக்கு முசே திப்பிளாமும் முசே லசேலும் முசே பெடுத்தல் மீயும் யென்கிறதாய் முன் 29 தேதி ஏற்பட்டார்களே நானும் கூட யிருக்கவா? யென்று கேட்டார். சுகமாய் யிருக்கலா மென்று நாம் சொன்னதுக்கு அவர், “சொன்னது முசே லாலி மெத்தப் பொல்லாதவர் ஆமே. மனுஷர் சீமாமூலத்திலே யிருந்து வரவேண்டியதுக்கு சத்தே தாமசப் பட்டால் மனம் பொறுக்கிறவர் அல்லா பணம் காசுகளும் வரமாட்டாது மெத்த தொந்தரையாயிருக்கும் அதுனாலே யெனக்கு சம்மதியாயி யிருக்கயில்லை யென்று” சொன்னார். அதுக்கு நான் சொன்னது நாலு பேர் ஒப்பந்தம் உமக்கு ஆகிறது நீரேன் பயந்து பின் வாங்குறீர் அப்படி வந்தால் சீமையை நாலு பங்காய்ப் பிறிச்சுக் கொள்ளலாம் யென்று சொன்னேன். அதுக்கு மெய்தான் யின்றைக்கு கோன்சேல் கூட யில்லையே நாளை நன்று குமுசேல்க் கூடினால் அந்தப் படியே நாமும் கூட யிருப்பேனென்று சொறேனென்று சொன்னார். அதின் பேரிலே அவர்கள் யெல்லாரும் நாமும் பேசிக் கொண்டிருக்கையிலே அவர்கள் சொன்ன சேதி ஒலாந்தாக்காறர் வாக்கா நீசுலே எழுதி வந்ததென்று சொன்ன சேதி. சீமையிலே இங்கிலீசு ராசா வினுடைய குமாரனும் இருபத்தையாயிரம் பேர் சொலுதாதுகளும் இங்கிலித் தேராவிலே ஒரு கோட்டையிலே யிருந்ததாகவும் அப்போ பிரான்சு ராசா தம்முடைய ஞாதியிலே ஒருத்தரைப் பயணம் பண்ணி அவருடனே பதினாயிரம் குதிரையும் முப்பதினாயிரம் சொலுதாதுகளும் கூட்டி

அனுப்பினதாகவும் அவர்கள் போயி அவர் யிருக்கிற கோட்டையைச் சுத்திக் கொண்டு கோட்டையிலே விழத்தக்கதாக பாம் போட்டு அடிச்சதாகவும் அதிலே அவரிருந்து நிறுவாகம் பண்ணமாட்டாமல் கவில் பேசினார் களென்றும் அந்த மட்டாமல் கவில் பேசினார் களென்றும் அந்த மட்டிலே குடுத்து யிங்கிறீசு ராசாவினுடைய குமாரனையும் அந்த இருபத்தையாயிரம் பேரையும் பிடிச்சுக் கொண்டு பரீசு யென்கிற ராசதானி பட்டணம் பிரான்சு ராசா யிருக்கிற யிடத்திலே கொண்டு வந்து காவல் பண்ணிக் கொண்டதாகவும் முன்னாலே யிப்போ அன்பது வருஷத்துக்கு முன்னே இங்கிலீத்தேராவிலே லோந்துறு (Londres) யென்கிற ராசதானி பட்டணத்திலே யிருந்த ராசாவை நாட்டார் வெட்டிப் போட்டு யிப்போ யிருக்கிற வரை கூட்டி வந்து இங்கிலீத் தேராவுக்கு ராசாவாய் வைச்சுக் கொண்டு வந்த நாள் முதல் யிதுவரைக்கும் அந்த அண்ணோர் யென்கிற ராச்சியமும் கோட்டையும் இங்கிலீசு ராசாவின் கையிலே தானே யிருந்ததாகவும் யிப்போது முன் வெட்டுப் பட்டுப்போன ராசாவினுடைய் பேரப்பிள்ளை பிரான்சு ராசாவினிடத்திலே வந்து சேர்ந்திருக்கிற வரை பயணம் பண்ணி அவர் பிறகே அதுக்கேத்த மந்திரிமார் காரியக்காறர் குதிரைகள் சொலுதாதுகள் சண்டை முஸ்தீப்பு களெல்லாம் கூட்டி அந்த அண்ணோர் யென்கிற ராச்சியத்துக்கு அனுப்பிவிச்சு அந்த ராச்சியமும் கோட்டையும் வாங்கி அந்த கோட்டையிலே கொண்டு போய் யிவரைப் பட்டத்திலே வைச்சதாகவும் யினிமேல் லோந்துறு யென்கிற பட்டணத்திலே கொண்டு வந்து இங்கிலீசு ராசாவை அடிச்சு அந்த ஸ்தானத்திலே யிவரைப் பட்டத்திலே வைக்கப் போறார்களென்றும் இதல்லாமல் இங்கிலீசு கப்பல் பதினாலு சண்டைக் கப்பல் வந்து யிவர்கள் பேரிலே யெதித்தாகவும் அதிலே அஞ்சு கப்பல் முழுகிப் போகத் தக்கதாய் அடிச்சு குறை ஒன்பது கப்பலையும் பிடிச்சுக் கொண்டார் களென்றும் யிப்படி யெல்லாம் சீமை சேதிகள் யெழுதி வந்ததாக பேசிக் கொண்டார்கள். இதல்லாமல் பூருசு ராசாவின் சீமையிலே நித்தானி யென்கிற (Nidadani) சீமை வகையறா வெகு சீமையும் யிவர்கள் போய்க் கட்டி அந்த ராசாவின் செனங்களிலே வெகு சனங்களைக் கொன்று போட்டார் களென்றும் யிப்படியாக யெழுதி வந்ததாக சேதி சொன்னார்கள். யிதிலே பதினோரு மணி ஆச்சுது. அந்த மட்டிலே நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வரவேணு மென்கிற தாயிருக்கையிலே ஒரு வெள்ளைக்காறன் வந்து ஒரு தேக்கமரம் வேணுமென்று கேட்டான். அதுக்கு நமக்கு வீடு கட்டவேணும் குடுக்கிறது யெப்படி யென்று சொன்னதுக்கு அவன் சொன்னது தேவனாம் பட்டணத்து மரங்கள் கல்லுகளை யெல்லாம் யென் வசமாயிருக்குது அது நான் உனக்கு சதிராயி தீத்து தருகுறேன். மரத்துக்கு மரம் அழைப்பிச்சுத் தாறேனென்று சொன்னான். நல்லதென்று வீட்டுக்கு வந்தோம். இத்தனாள் கேழ்வியான சேதி முசே லாலி அவர்கள்

வருகுறாரென்றும் சவரிராய பிள்ளையைத் தானே ஆடு மாடு கோழி சகலமும் சேகரிக்கச் சொன்னதாகவும் கேழ்க்கப்பட்டுது. பாலாறு தாண்டி செங்கல்பட்டிலே முசே சுப்பீர் போய்ச் சேர்ந்தாரென்றும் அங்கே யிருந்த யிங்கிலீசுக்காற மனுஷர் யெல்லாரும் வாங்கிப் போய் விட்டார்களென்றும் செங்கல்ப்பட்டுக் கோட்டை கருங்குழிக் கோட்டை சேத்துப்பட்டு கோட்டை மூணு கோட்டையையும் யிவர்கள் கைவசமாச்சுது யென்றும் கோட்டையை முஸ்திதைப் பண்ணுகுறார் களென்றும், திருவண்ணாமலை செங்கமா அவ்விடங்களெல்லாம் கட்டி திருவண்ணாமலை யிலே யிருந்த பேரை யெல்லாம் சங்காரம் பண்ணிப் போட்டார்களென்றும் கேழ்விப்பட்டுது.

### *1758 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 15; வெகுதானிய வருசம் புறட்டாசி மாசம் தேதி 3; சுக்கிறவாரம்*

இத்தனாள் சுக்கிறவாரம் இத்தனாள் காலமே கோட்டைக்குப் போனவிடத்திலே முசே லெறி அவர்கள் கோவற்ணமாமிலே காம்பிராவிலே தானே ஒண்டி யாயிருக்குறார்களென்றும் சொன்னார்கள் ஆனபடியினாலே பிடவை பார்க்குற சாலையிலே போனோம். அப்போது அங்கே முசே கில்லியார் முசே லங்கற்னே முசே குளுவேத்து மூன்று பேரும் யிருந்தார்கள். நாமும் அங்கே போய் கூட யிருக்கயிலே அவர்கள் சொன்ன சேதி போன மாசம் 25 தேதிக்கு குமுசேல் கூடி பேசுகுறதிலே சீமா மூலம் முசே னுவார் பாரிசம் பண்ணுகுற தாகச் சொன்னதாகவும் அப்போது முசே புலோ யிருந்து முன்னாலே முசே கொதே குடுத்தப்படிக்கு குடுக்கவேணும் அதன்னியிலே பேதிச்சு முசே தெவோ வசம் பண்ணி ரெண்டு வருஷமாயி அவர் நாலு காரியமும் அறிஞ்சுயிருக்குறார். அதை யிந்த வேளையிலே முசே னுவார் வசம் பண்ணினால் அவர் அறியறத்துக்கு மூணு மாசம் செல்லுமே யிதுக்குள்ளே மாடுகள் ஆடுகள் அரிசிகள் முதலான சரஞ்சாமி களெல்லாம் யெப்படி வரும் யென்று சொன்னதாகவும் அதிலே முசேனு பாருக்கு கோபம் வந்து யெனக் கென்ன ஒன்றும் தெரியாதா யென்னை கையாலே ஆகாதவனாய் சொல்லலாமா வென்று மெத்த மெத்த பேச்சுக்களை நடந்த தாகவும் அந்த சண்டையினாலே (29 தேதி) கோன்சேலிலே முசே புலோவும் முசே னுவாரும் வரயில்லை யென்றும் முசே லாலி பயணம் போகுமுன்னே முசே புலோ வீட்டுக்குப் போயி நாலு நாழிகை நேரம் மெத்தை மேலே பேசியிருந்து போட்டு போனார் யென்றும் அதினாலே நேத்து கூடின குமிசேலிலே முசே புலோ மாத்திரம் (Mon Boyellon) வந்தா ரென்றும் சொன்னார்கள். அதன் பேரிலே முசே குளுவேத்து முசே லெறியை குமிசேலிலே முசே லாலி உதைக்கப் போனதும் அடிக்கப் போனதும் நூறு தரம் உண்டு அத்தனைக்கும் முசே லெறி யென்னமென்று பட்டுக் கொண்டிருக்குறான் ஆயிரம் வருஷம் பிழைக்கப் போறானா யிவன்

பிரான்சுக்காறனுக்கு பிறந்தவனல்ல போலே காணுது பிரான்சுக் காறனுக்கு பிறந்தவனே யானால் யிப்படி யிருப்பானா யித்தனை நாளும் நான் துரை யாயிருந்தேன். அப்படிக் கொத்த யென்னை யிப்படி அவமானம் பண்ணினால் யெனக்கு யிந்த யிடம் தேவையில்லை. நானொன்று சீமைக்குப் போறேனென்று சொல்லலாம் அல்லவென்றால் அவர் ராசா மனுஷர் ஆனதினாலே தன் பிராணனை விட்டு விடலா மென்றும் யென்ன மனுஷனிவனென்று சொன்னான். அதன் பேரிலே முசே லங்கற்னே சொன்னது கும்பினி போச்சுது. புதுச்சேரி பட்சிக்கு ஒரு பிறது யிறது போய் விட்டது. ஆகையால் ஒருபுறத்து யிறகை அந்த பட்சி அடிச்சுக் கொண்டு பறக்கமாட்டாமல் செத்துப் போகப் போறது யென்றும் ஒபிசியால் மாரெல்லாரும் முசே லாலியானால் மரியாதை அன்னியிலே அடிக்குறதும் வைய்யுறதும் யிப்படி அவமானம் பண்ணுகுறார் அதினாலே யிப்போ பயணமாய் போன கப்பலிலே பதினாறு பேர் ஒபிசியால் மார் கப்பலேறி சீமைக்குப் போனார்கள். நாங்களும் சீமைக்குப் போறோமென்று சொல்லுகுறார் களென்றும் சொல்லிக் கொண்டார்கள்....

அதன் பேரிலே நாம் பதினோரு மணிக்கு வீட்டுக்கு வந்தபிறகு கேழ்வியான சேதி முசே லாலி வந்தவாசி உத்திரம நல்லூரிலே யிருந்து வந்த உடனே தக்கே சாயபு நசர் ரூபாய் 6 சீரொப்பா ரூபாய்–500 சறப்பள்ளி ரூ 6 துராய் ரூபாய் 6 யிந்தப்படிக்கி குடுத்ததாகவும் அதிலே சந்தோஷப்பட்டதாகவும் தம்முடய தொப்பியை அவர் தலையிலே வைச்சு அவர் பாகையை தாம் வைச்சுக் கொண்டு சகோத்ரம் யென்றும் பேசிக் கொண்டதாகவும் யித்தநாள் வழுதாவூருக்கு வருகுறதாக பெரியண முதலி வழுதாவூருக்குப் போனதாகவும் வந்தவாசி அமுல்தாறன் நசர் விராகன் 100 வைச்சான் யென்றும் அதுக்கு வெகு சந்தோஷப் பட்டார் யென்றும் கேழ்க்கப்பட்டுது. சம்பா கோயில் பாதிரிகள் யெல்லாரும் கூடி சேஷ்ட்டருடனே நீர் அஞ்ஞானிகள் பேச்சைக் கேட்டு ராசகாரியத்திலே யிறங்கி நடத்துகிறீர் அதினாலே முன்னுக்கு கோயில் திருவியங்களுக்கு உபாதிகள் வரும் உமக்கு உபதேசம் பண்ணிக் கொண்டிருக்கிறது யிக்த்தமல்லாமல் யிப்படி பண்ணுகுறது நியாயமாய் யிருக்குதா. ஆனால் நீர் அதிலே நடத்திக் கொள்ளும் நாங்களிருக்கிற பேரிலே ஒருத்தரை பெரியவராய் வைச்சுக் கொண்டு மோட்ச மார்க்கம் பார்த்துக் கொள்ளுகுறோம். நீர் யிப்படி செய்யுறதுனாலே முசே லெறி முசே தெவோ முதலான பேரெல்லாம் பகைச்சிருக்கிறார்கள். அதினாலே முன்னுக்கு ஆனி வருமென்று சொன்னதாகவும் அதுக்கு அவர் சொன்னது நீங்கள் சொல்லுகுறது மெய்தான். நாம் அதை யெல்லாம் விட்டு விட்டுப் போடுகுறோம் யென்று சொன்னார் யென்றும் கேழ்க்கப்பட்டுது. பாப்பய்யப்பிள்ளை புதுச்சீமை யெல்லாம் தன் வசம் பண்ணுகுறோம் யென்று முசே சுப்பீர் யெழுதி அனுப்பிவிச்சார் யென்று ஒரு புறுடா

பண்ணி தன்கிட்ட யிருக்கிற கிருஷ்ணராயனை பயணம் பண்ணி பல்லக்கும் குடுத்து முசே சுப்பீர் அண்டைக்கு அனுப்பி விச்சதாகவும் கேழ்க்கப்பட்டுது.....

*1758 வருசம் செத்தேம்பர் மாசம் தேதி 16; வெகுதானிய வருசம் புறட்டாசி மாசம் தேதி 4; சனிவாரம்*

இத்தனாள் சனிவாரம் காலமே கோட்டைக்குப் போய் பிடவை பார்க்குறத்திலே முசே லெறியும் முசே புலோவும் மூணாம் காம்பிராவிலே யேகாந்தமாயி பேசிக் கொண்டிருக்குறார் களென்று சேதி சொன்னார்கள். அப்படி யிருக்கையிலே கேழ்வியான சேதி சீமையிலிருந்து ராசாவினுடைய கப்பல் ஆறு கப்பல் சண்டை கப்பலும் அதிலே மூவ்வாயிரம் பேர் சொலுதாதுகளும் மகுக்கரைக்கு வந்தார் களென்றும், அதிலே குமிசேராய் கூட வந்தவர் கப்பலுக்கு வேண்டிய சாமான்களெல்லாம் வாங்கிக் குடுத்து கணக்கு யெழுதிக் கொள்ளுகுறவர் அவரை பயணம் பண்ணி ஒரு பிறுகாத்திராகிய (Frigate) சின்னக் கப்பலிலே யேத்தி சீமை கடுதாசிகளும் சிறிது குடுத்து தாங்கள் வந்த சேதி யிவடத்திலே வந்து சொல்லச் சொல்லி அனுப்பி விச்சதாகவும் அவர் வந்தவிடத்திலே அந்த சின்ன கப்பலை இங்கிலீசுக்காறர் பிடிச்சுக் கொண்டதாகவும் அப்போது சீமைக் கடுதாசிகளை யெல்லாம் சமுத்திரத்திலே போட்டு விட்டு அந்த கப்பலிலே வந்தபேரும் குமிசாயரும் கப்பல்க்காறர் கிட்ட சீட்டுயெழுதி குடுத்துப் போட்டு யித்த நாள் யிவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

*1758 வருசம் செத்தம்பர் மாசம் தேதி 17; வெகுதானிய வருசம் புறட்டாசி மாசம் தேதி 5; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே கோட்டைக்குப் போயி பிடவை பார்க்குற சாலையிலே கேழ்வியான சேதி நேத்து முசே லெறியும் முசே புலோவும் பனிரெண்டு மணி மட்டுக்கும் யேகாந்தமாயி பேசியிருந்த தாகவும் முசே லாலி செனரால் அவர்கள் வந்தவாசி முதலான யிடங்களுக்குப் போனவிடத்திலே அவரவருடனே சொன்னது நீங்கள் யினிமேல் ஆருக்கும் கணக்குச் சொல்லத் தேவையில்லை. அவரவர் குத்தகை செல்லுக்கும் பாக்கிக்கும் நம்மண்டைக்கு கணக்கு கொண்டு வாருங்கோ ளென்றும் அதன்னியிலே ஆறாருக்கு குடுத்து யிருக்கிறீர்களோ அதெல்லாம் யெழுதிக் கொண்டு வந்து நம்முட கையிலே குடுங்கோள் நீங்கள் குடுத்த யோரென்று (Courties) நாமும் ஆறுக்கும் சொல்ல வேண்டாமென்று சொன்னதாகவும் குதிரை வையுங்கள் யென்று ஆன மட்டுக்கும் சீமைகள் கட்டுங்கோள் அது சிலவானத்துக்கு நம்முடைய

கிட்ட கணக்கு கொண்டு வந்து யெழுதி வையுங்கோள் உங்களுக்குண்டான பணம் நாம் குடுத்து விடுகுறோமென்று சொன்னதாகவும் அப்போது வந்தவாசி ராமலிங்கய்யன் யிங்கே யிருக்கிற கொம்மாந்தாம் சொன்ன படிக்கு கேழ்க்குறதில்லை யென்று சொன்னதாகவும் உடனே அந்த கொம்மாந்தானை பிடிங்கிப் போட்டு வேறே கொம்மாந்தானை வைச்சதாகவும் கேழ்க்கப்பட்டுது. அதின்பேரிலே வீட்டுக்கு வந்தோம்.

## சனவரி 1959

*1759 வருசம் சனோர் மாசம் தேதி 25; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 14; செவ்வாய்க்கிழமை*

இத்தனாள் சென்னபட்டணத்து சேதி கோட்டையிலே மமுதல்லிக்கான் மகன் யிருந்தவனுக்கு நம்முடவர்கள் போடுகுற குண்டுகள் பட்டு விழுந்து போனானென்று கோட்டையிலே யிருக்குற பேர்களிலே தமிழர் யிருந்த பேர் வெள்ளைக்காறர். பாருத்திகுலாரிருந்து கொண்டிருந்த பேர் பெண்டுகள் வகையிரா வெகுபேர் வெளி பிறப்பட்டு போனார்களென்றும் பல சேதியாக சொல்லிக் கொண்டார்கள்.

*1759 வருசம் சனோர் மாசம் தேதி 24; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 15; புதவாரம்*

இத்தனாள் சென்னபட்டணத்திலே யிருக்குற நம்முடைய பவுன்சுடைய லகக்கரிலே கொள்ளு வகையிரா தினிசுகள் தவக்கமென்று சென்னப்பட்டணத்துக்கு பொதிகளின் பேரிலே அனுப்பிவிச்சதாக சொன்னார்கள். யிதினாலே மாடுகள் மனுஷர்களை பிடிக்குற அலம்பல் உண்டாயிருக்குற பின்னை ஒன்றும் விந்தை சேதிகள் கேழ்விப்படவில்லை.

*1759 வருசம் சனேவரி மாசம் தேதி 27; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 18; சனிவாரம்*

இத்தனாள் சாயங்காலம் சென்னபட்டணத்திலிருந்து நம்முடைய பிரான்சுக்காரருடைய சின்ன கப்பலொன்று யிவ்விடத்திலே யிருக்கிற மருந்து குண்டு யேத்தின போது அவ்விடத்திலே யிறக்கிப் போட்டு அவ்விடத்துக் காயக்காறர் சொலுதாதுகள் ஒபிசியாலு வகையிராக்கள் யிறநூறு பேர்களை யேத்திக் கொண்டு வந்து யிறக்கினதாகவும் அதிலே ஒருத்தன் மாத்திரம் காலுக்குகைக்கு விலங்கு போட்டு முகம் தெரியாமல் மரைச்சுப் போட்டு யிறக்கி கசோத்திலே போட்டதாகவும் அவன் ஒப்பிசியாலென்றும் அவன் அடையாளமும் அவன் பேரும் தெரியவில்லை யென்றும் யினிமேல் தெரியுமென்றும் தெரிஞ்சு சொல்லுகுறோமென்றும் நம்முட வீட்டுக்கு வந்த ஒப்பிசியால்மார் கணக்கர் சொன்னார்கள். முசே சொபினே செத்துப் போனான் யென்றும் அதை தெசெரிக்கூர் கொம்மாந்தாம் (Mon. De Tillicourt) தெபொறேன் வகையிரா பின்னையும் சிறிது ஒபிசியாலுமார்கள் செத்துப்போனார்களென்றும் மதுரையிலே

யிருந்து வந்த மேஸ்தர் கலியோ வென்கிறவனும் யூசுப்கான் யென்கிற துலக்கனும் அப்துல் வாபுகானண்டைக்கு சந்திரகிரிக்கு போய் சிறிது ராணுவும் முன்னூறு குதிரைகளும் கூட்டிக் கொண்டு வந்து திருவனூர் வகையிரா தாவுகளை மறுபடி கட்டிக் கொண்டு பூந்தமல்லிக்கி வந்தானென்றும் அவன் தங்கள் பவுன்சும் பேரிலே வந்து விழாமல் படிக்கு முசே மதாவே (Mr. Maudave) யென்குறவனையும் இறநூறு சொலுதாதுகளையும் முசே புசியின் கல்லாறியும் (Kallare) அலுமாஞ்சார் உசாருடைய கல்லெறியும் சிறிது சிப்பாயிகளையும் முசே லாலி அனுப்பி விச்சானென்றும் கோட்டையிலே யிருக்கிற இங்கிலீசுக்காரர்கள் கோட்டை செவுரை யிடிச்சுத் தள்ளி உள்ளே பிறவேசிச்சு லக்கை யேறினாலும் யெல்லாரும் செத்துத் தீருகுறதே யல்லாமல் சிவனுடனே கோட்டையை ஒப்புக்குறதில்லை யென்று மேஸ்தர் பிக்கட்டு மேஸ்தர் லாரென்சு வகையிரா இங்கிலீசுக்காறர் கோன்சேல் பண்ணி கையெழுத்துப் போட்டுக் கொண்டார்களென்றும் நம்முடைய கோட்டை சேவருவடவண்டையிலே கொஞ்சம் யிடிச்சார்களென்றும் மூடியிருக்கிற வழியை நம்முடவர்கள் கைவசம் பண்ணிக் கொண்டதாயும் மூணு நாலு நாளையிலே கோட்டையிலே பிரான்சுக்கொடி போடுவார்களென்று வெள்ளைக்காறர் சொன்னார்கள். இதல்லாமல் முசே லாலி முசே மதாவை (Mr. Madauva) முன் பதினஞ்சு நாளைக்கு முன்பாக செங்கல்பட்டு கோட்டை லக்கை யேறி பிடிக்கமாட்டாமல் போனீர்கள் யென்று கோவிச்சுக் கொண்டதாயும் அப்போ கோட்டையிலே நூறு நூத்தன்பது சிப்பாயிகள் மாதிரம் யிருந்ததாயும் வெள்ளைக்காறர் சொன்னார்கள். இத்தனாள் சாயங்காலம் கேழ்விப்பட்ட சேதி முசே மீராவுக்கும் (Mr. Miran) முசே தெவோவுக்கும் திண்டிவனம் வகையிரா பார்க்கணாக்களுடைய முத்தண்டல் சம்மதியாய் பேச்சுவார்த்தைகள் நடந்த சம்மதிக்கு ஆக முசே மீராவை முசே லெறி அழைப்பிச்சு கோபிச்சுக் கொண்டு சீமைகள் யெல்லாம் கிஷ்ணராயன் கட்டிக் கொண்டு போனான் யென்றும் அதை பந்தோபஸ்தாய் வைத்திராமல் போனாயென்று சொன்னத்துக்கு நீரல்லோ பவுன்சு வைத்து துரத்த வேணும். நான் சீமை அமுல் பண்ண வேணும் உம்முடைய யிடத்திலே பந்தோபஸ்து யில்லாமல் வில்லியநெல்லூர் தாலூக்குகள் கிராமங்கள் வழுதாவூர் சீமை தாலூக்குகள். கிராமங்களெல்லாம் புதுச்சேரி கோட்டை வாசல் மட்டுக்கும் கட்டச்சே தாது பிராதுயில்லாமலிருக்கச்சே அதுக்கப்புறம் நாற்காத வழி அங்காதவழி யேழு காதவழி எண்காத வழியிலே யிருக்கிற எனக்கு குடுத்த குத்தகை சீமையை கட்டாமல் விடுவானா யென்றும் பின்னையும் நாலா பேச்சும் நடத்தினதாயும் அதன் பேரிலே முசே லெறி கோபமாய் பேசினதாயும் சேதி கேழ்க்கப்பட்டது.

*1759 வருசம் சனேர் மாசம் தேதி 28; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 19; ஆதிவாரம்*

இத்தனாள் பட்டணங்களிலே தலையாரி சேவுகரு கும்பினீர் சேவுக்கரும் புறப்பட்டு வீடுகள் பூந்து உலக்கையும் உரலும் யேந்திரங்களையும் எடுத்துக் கொண்டு போறதும் கடைகள் பூந்து பாக்குப் பெட்டிகள் யெடுத்துக் கொண்டு போறதும் யிப்படி சோராவாரியாயி நடக்குதென்றும் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

*1759 வருசம் சனேர் மாசம் தேதி 30; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 22; புதன்வாரம்*

இத்தனாள் சாயங்காலம் முன் யிவ்விடத்திலே யிருந்து மருந்து குண்டு ரஸ்து யேத்திக் கொண்டு போயிருந்த கப்பல் சாயங்காலம் வந்து துரை பிடிச்சது. அறுபது பேர் காயக்காறர்களை யிறக்கினார்கள் யென்றும் அதிலே யிருந்து பெரிய மனுஷருக்கு முகத்திலே மாஸ்சூப் போட்டு கை காலிலே கழுத்திலே விலங்கு போட்டு அனுப்பிவிச்சதாகவும் அவர்களை மேலண்டை வாசற்படி பாதாள கிடங்கிலே வெவ்வேறே போட்டார்களென்றும் அது யெதினாலே யென்று யிவர்கள் இங்கிலீசுக்காரருக்கு கடுதாசி மத்தத்து யெழுதி அனுப்பினதுக்கு முசே லாலிக்கு சாதகம் அகப்பட்ட படியினாலே யிப்படி செய்து அனுப்பினாரென்றும் அதிலே யொருத்தன் சாம்புவா வென்றும் (Chamluris) ஒருத்தன் பேர் தெரியாதென்றும் அந்த ரங்கத்திலே சொல்லுகுறார்கள். முன்னொருத்தனை யிந்தப்படி தான் போட்டனுப்பினார்கள் அவன் முசியே ... யென்று சொல்லுகுறார்கள். நன்றாய் அறிய வேண்டியது.

இதல்லாமல் அந்தக் கப்பலிலே சென்னப்பட்டணத்திலே கொள்ளையிட்ட தட்டு முட்டுகளை வெகுசாய் வந்து தென்றும் கரை வழியிலேயும் கொள்ளை தட்டு முட்டுகளை பறையர் வெள்ளைக்காரர் சகலமான பேரும் கொண்டு வருகுறார்களென்று வழியிலே யிருக்கிறவர்கள் அடிக்கடி வந்து கபுறு சொல்லுகிறார்கள்.

## பிப்ரவரி 1759

### *1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 1; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 23; குருவாரம்*

இத்தனாள் யிங்கிலீசுக்காறர் யிசுக்காதுரு ஒன்பது கப்பல்களும் காலி (Galle) கொளும்பு (Colomlo) வந்து சேர்ந்த தென்றும் ஆனபடியினாலே யிப்போ சத்தியாயி சென்னப்பட்டணத்து இங்கிலீசுக்காறருக்கு மத்தத்து வருகுறதுக்கு யெதிர் காத்தும் நீரோட்டத்தினாலே வரக்கட்டாதென்றும் இங்கிரேசுக்காறருடைய பொல்லாத வேலையினுடைய குணம் யெதிர் காத்திலே வந்து விழுந்தார்களென்றும் யினிமேல் தென்றல் காத்து நன்றாய் திரும்பின பிறபாடேயல்லாமல் வரக்கூடாதே, ஆனபடியினாலே பங்குனி மாசம் அல்லாமல் கப்பல்கள் மத்தத்து வரமாட்டாது. யிதிலே நம்முடையவர்கள் சென்னப்பட்ணம் வாங்கிப் போடுவார்களென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

### *1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 2; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 24; சுக்கிறவாரம்*

இத்தனாள் பதினோரு மணிக்கு கேழ்விப்பட்டது. குண்டூர் நரசிங்க செட்டி றங்கப்ப செட்டி கந்தப்ப முதலியுடனே வில்லியநெல்லூர் தாலூக்கு கிராமங்கள் கிருஷ்ணராயன் மனுஷர் வந்து அறுப்புவிட்டு அறுத்துக் கொண்டு போறார்கள் நீங்கள் சிப்பாயிகளை அனுப்பி அவர்களை துரத்தி அடிக்குறதுமில்லை நாங்கள் சிப்பாயிகளை வைத்து துரத்துகுறதுக்கும் மருந்து குண்டும் குடுத்து உத்தாரமும் குடுக்காவிட்டால் பணம் நாங்கள் எப்படி செலுத்துவோ மென்று சொன்னதுக்கு நானென்ன செலுத்துவோமென்று சொன்னதுக்கு நானென்ன செய்வோமென்றும் துரையுடனே சொன்னதுக்கு அவர் சும்மா யிருக்குறாரென்று சொல்லிப் போட்டுப் போகச் சொன்னதாகவும் கோமுட்டிகள் அவரவருடனே யிப்படி அராச்சிகமானால் யெங்களாலே யெப்படி நிறுவாகம் பண்ணலாம் என்றும் தங்கள் தாபந்தத்தைச் சொல்லிக் கொண்டு திரியுறார்களென்றும் கேழ்விப்பட்டது.

### *1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 3; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 25; சனிவாரம்*

இத்தனாள் மத்தியானம் கேழ்விப்பட்ட சேதி முசே லெறி அண்டைக்கு முசே பொசேத்து (M. du Bausat) பின்னையும் அஞ்சாறு பேர் வெள்ளைக்காறர்கள் வந்து பேசிக் கொண்டு யிருந்து

போனதேயல்லாமல் வேறே விந்தை சேதிகளாய் கேழ்விப்படயில்லை யித்தனாள் ராத்திரி ஒப்பிசியார்மார் சொன்ன சேதி ஆனால் சென்னப்பட்டணத்துக்கு இங்கிரீசுக்காறருது ஒரு பிரிகேத்து (Frigate) சேதி கொண்டு வந்ததாகவும் நம்முடவர்களுது மருந்து குண்டுயேத்தி போன கப்பல் ஒன்றும் சுலுப்பொன்றும் சென்னப்பட்டணத்து ரேவிலே கிடந்தது தெரத்தினாப் போலேயும் யிவர்களுது ஒசந்து போன பிற்பாடு யிவன் ஒசந்து கிடந்தவன் கரையிலே கப்பலை தட்டவிட்டு அதிலே யிருந்த செனங்கள் யிறுநூறு பேருண்டாம் அவர்கள் சீக்கிர மத்துக்கு கோட்டையிலே போய் சேந்து மேஸ்தர் பிக்கட்டுக்கு சேதி சொன்னதாய் வெள்ளைக்காறர் சொன்னார்கள்.

***1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 4; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 26; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே மேலுகிரி செட்டியை அழைத்து நீர் போய் சவுரி ராயபிள்ளை அண்டைக்குப் போய் நீர் வரகுறோமென்று சொல்லிப் போய் யிந்த மட்டுக்கும் வராமல் போனீர் யென்று யெச்சரித்துப் போட்டு வாருமென்று சொல்லி அனுப்பினதுக்கு அவர் போய் யெச்சரித்ததுக்கு இப்போ வாறேனென்று சொன்னானென்று வந்து சொன்ன ஒரு நாழிகைக்கு சவுரிராய பிள்ளை வந்து நான் கூடத்திலே றத்தின கம்பளியின் மேலே உளுக்கார்ந்து யிருக்கச்சே யிவர் வந்து நின்றார். நின்றவரை உளுக்காரச் சொல்லி கிட்டயிருந்த சேஷய்யங்கார் மேலுகிரி செட்டி வகையிரா பிள்ளையும் அஞ்சாறு பேர்களிருந்தவர்களை அப்பாலே யிருக்கச் சொல்லி என்னச் சமாச்சாரமென்று கேட்டதுக்கு அவர் முசே மீரா அபேல்க் குத்தகை வாங்கி நடப்பிக்குற அபந்தரைகளை பயாவாராய்ச் சொல்லி யிப்போ கிருஷ்ணராயன் வந்து குண்டு சாலை மட்டுக்கும் கிராமங்களைக் கட்டிக் கொண்டு அறுப்புவிட்டு பலனைக் கொண்டு பேராது தேவடியாள் சாதி முத்தியப் பிள்ளையை சறுதாராக்கி பவுன்சு பீரங்கியும் குடுத்து கிருஷ்ணராயன் விழுப்புரத்திலே யிருக்கிறவனை அடிக்குறத்துக்கு அனுப்பிவிச்சத்துக்கு அவன் மெரண்டு செஞ்சிக்கு ஓடிப்போன சேதியும் யிப்படி தேவடியா பய்யன் சறுதாராய் பிறப்படுகுற காலம் வந்ததானால் காரியம் விறுத்தியம் நடக்குறதுக்கு கேழ்க்க வேண்டிய தென்ன அதுக்குத் த்க்கதாய் கெட்டுப் போச்சுது யென்றும் பின்னையும் அதுக்கடுத்த பெலகீன பேச்சாய் பேசிக் கொண்டு வந்து காகிதச் சேதி யென்னயென்று கேட்டதுக்கு நானந்த மட்டுக்கும் அவர் சொன்ன பேச்செல்லாம் கேட்டதேயல்லாமல் நானாக ஒரு உத்தாரமும் சொல்லாமல் எதிரி வாயினாலே தானே பேச நான் கேட்டுக் கொண்டு வந்து காகிதச் சேதி யென்று கேட்ட பிற்பாடு நான் சொன்ன உத்தாரம் யிதிலே யிருக்குற பாவம் யெனக்கு நன்றாய் தெரியவில்லை. நீர் தமிழ்ப் படுத்தி அனுப்புவியுமென்று உம்மண்டைக்கு சேஷய்யங்கார் குமாரன்

சாமய்யங்கார் கையில் கொடுத்து அனுப்பினத்துக்கு நீர் சொல்லியனுப்பினது யென் பாகத்திலே யாருமில்லை யென் சித்தப்பன் மகன் யிருந்தவன் வழுதாவூருக்குப் போயிருக்கிறான் என்று சொல்லி மறுபடியும் காகிதத்தையும் குடுத்து அனுப்பிவிட்டீர்.

### *1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 6; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 28; அங்காரகவாரம்*

இத்தனாள் சென்னப்பட்டணத்திலே யிருந்து முசே லாலியுடைய கவில் போய் கடப்பை அந்த வட்டங்களிலே (lone Trouppe hussarde-autrement) பட்டாணியின் ரெண்டாயிரம் குதிரையும் ரெண்டாயிரம் பாறுக்காறருடனேயும் வருகுறானென்றும் கபுறு சொல்லிக் கொண்டார்கள் தென்றல்க் காத்து திரும்பின சாடை காண்பிச்சது.

### *1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 7; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 29; புதவாரம்*

இத்தனாள் பதினோரு மணிக்கு மட்டுக்கும் கேழ்விப் பட்ட சேதி முசே பொசேத்து முசே லெறியுடனே சொல்லி கிருஷ்ணராயன் மனுஷர் வந்து வழுதாவூர் சீர்மை முசே துப்பிளேக்கிசு சாகீர் கிராமங்களிலே அறுப்பு அறுக்கிற சேதி சொல்லி வில்லியநெல்லூர் கொம்மாந்தானுக்கு உத்திரவு அனுப்பிவிச்சு அவர்கள் மனுஷர் யெங்கெங்கே வந்திருக்குறார்களோ அவர்களை யெல்லாம் திரத்தி விடச் சொல்லி அனுப்பிவிச்சதாகவும் அவன் நெல்லிக்குப்பம் வகையரா கிராமங்களைப் போய் சுவாரி பண்ணி சுட்டு அக்கன் நாயக்கன் காடு வகையிராக்களைக் கொளுத்திப் போட்டு வந்தானென்றும் கவுறு சொன்னார்கள் யிந்தப்படி நம்முடவர்களை தொட்டும் எதிரிகளைத் தொட்டும் நம்முடைய தாலூக்கு சீமைகள் பல சேதமாய் அழிஞ்சு போய் தாலூக்கு சீமைகள் பல சேதமாய் அழிஞ்சு போய் தாலூக்கு சீமைகள் பல சேதமாய் அழிஞ்சுபோய் வீடுகள் கொளுத்தப்பட்டு போதும் யிந்தப்படி சேத்ங்களாகு தென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

### *1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 8; வெகுதானிய வருசம் தை மாசம் தேதி 30; குருவாரம்*

பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் அவரவர்கள் பத்துப்பணம் உண்டான பேர்கள் அந்தரங்கத்திலே நாகப்பட்டணம் தலங்கம்பாடிக்கு காசு பணம் தட்டு முட்டு கிறிஸ்துவர் கூட அனுப்புறார்கள் யென்று பத்து நாளாய் கேழ்விப்படுது. ஒரு மாசமாய் பெகுபேர் ராமேசுவரம் பேர் போட்டுக் கொண்டு போனார்கள் யிப்போ இந்த சேதிகள் கேழ்விப்பட்டு

குண்டு சாலை வழிகளிலே மூட்டை முடிச்சுடனே போறவர்களை தடை பண்ணுகுறார்களென்றும் சீட்டுக் கொண்டு வரச்சொல்லுகுறார்களென்றும் சொல்லிக் கொண்டார்கள்.

***1759 வருசம் பிப்றவயி மாசம் தேதி 12; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 4; சோமவாரம்***

இத்தனாள் சாமத்துக்கு வெள்ளைக்காறர்கள் பேசிக் கொண்டார்களென்றும் மச்சிலி பந்தர் துபாசி மத்தால் ரெட்டி முசே மொரேசன் (Mr. Maracin) சொன்னானென்று சொன்னதாகவும் யிப்படி பல பேர் வந்து சொன்னசேதி இந்த மாசி மாசம் முதல் தேதி வெள்ளிக்கிழமை நாள் இங்கிறேசுக்காரர் வகை அப்துல் வகாபுகான் அவர் பகுஷி மகம்மது யிஷஷத்க் கானும் (Mochammad Israt Khan) திருச்சினாப்பள்ளியிலே யிருந்து வந்த மதுரை கொம்மாந்தாம் மகம்மது யிஷபுகானும் திருச்சிராப்பள்ளிக் கோட்டை கொம்மாந்தாம் மேத்தர்கள் கல்லியோர் யென்கிறவனும் (Mr. Cailland) அவனுக்கு ரெண்டாந்தெண்டகம் யிவ்விடத்திலே யிருந்து போன மேத்தர் சம்சென் (Lieutenant) Mr. Samson) யென்கிறவனும் யிவர்கள் வகையிரா ஆயிரத்தன்னூறு குதிரைகளும் பாறு மூவாயிரமும் ராணு பேர் ரெண்டாயிரமும் மிகவும் வெள்ளைக்காரர் நூறு நூத்தன்பது பேர் யிவர்களுடனே யிதுக்கு முன்பாக ஒரு மாதமாயி பிடிச்சு நம்முடைய பிரான்சுக்கார பவுன்சு கோட்டையின் பேரிலே யிறங்கி சண்டை பண்ணச்சே அவர்களுக்கு சகல ரஸ்து வராமலும் நாலு தண்டகம் துருப்புக் கொண்டு வந்து சண்டை பண்ணி முறிஞ்சு ஓடிப்போய் விட்டவர் யித்தனாள் பறங்கி மலையிலே யிறங்கியிருக்கச்சே முசே லாலி (Mr. Lally) அவர்களை தாம் காசா தானே போயி யிவர்களை சிஷ்சிக்க வேணுமென்று மத்தப்பேர் போனால் அவர்களை சிஷ்சிக்க மாட்டார்களென்றும் யிவர்களைத் தொட்டு யென்னேரமும் ரோஷ்ட்டுக்களாயிருக்குதென்று யோசிச்சு தாம் காசாதானே ஆயிரத்தன்னூறு சொலுதாதுகளுடனேயும் குவாடுது குதிரை முசே செஞ்சோம் வகையரா உசாறு அலுமாஞ்சுக்காறர் ஏகத்துக்கு வெள்ளைக்காற குதிரை அன்னுருடனேயும் துலக்கர் குதிரை ஆயிரம் ஆயிரத்தன்னூறு குதிரைகளுடனேயும் பாறுக்காற ரெண்டாயிரம் ரெண்டாயிரத தன்னூறு பேர்களுடனேயும் பிறப்பட்டு நாலு பவுன்சாய் யேற்பட்டு பறங்கி மலையிலே முன் சொல்லப்பட்ட யெதிரி பவுன்சை சுத்திக் கொண்டு நாலு பக்கமும் சண்டை பண்ணச்சே சத்துருக்களுடைய பவுன்சுகளிலே வெகுசேதமாய் சின்னா பின்னமாயி முறிஞ்சு போனது போக இவர்கள் கையினாலே வெட்டுப்பட்டது நானூறு குதிரை என்றும் யெண்ணூறு பாறுக்காரரென்றும் வெள்ளைக்காரர்

சொலுதாதுகள் நூறு நூத்தன்பது பேர் யிருந்தாவர்களை தாமும் வெட்டிப் போட்டார்களென்றும் மேஸ்தர் கல்லியோ திருச்சினாப்பள்ளி கும்மாந்தாமாகயிருந்தவன் முசே ஒம்மேன் கையிலே கைப்பிடியாய் பிடிச்சுக் கொண்டு அவன் கையிலே யிருந்த மோதிரத்தை கேட்டதாகவும் அவன் தாரேனென்று பிஸ்தோலிலே கைபோட்ட மாத்திரத்திலே முசே ஒம்மோ தான் முந்திக் கொண்டு பிஸ்தோலினாலே சுட்டுக் கொன்று போட்டு கையிலே யிருந்த மோதிரத்தை வாங்கிக் கொண்டு அவன் சாக்கிலே யிருந்த அஷற பிமோகற் வகையிரா யிருந்தது களையும் யெடுத்துக் கொண்டதாகவும் மதுரை கும்மாந்தான் மகம்மது யிசுபு கான் தலையை வெட்டி யீட்டியிலே கோத்து தண்டெல்லாம் காண்பிச்சதாகவும் மமுதல்லிக் கான் தம்பி அப்துல் பாபுக்கானையும் அவர் பகுஷி மகம்மது யிசறத்துக் கானையும் கைப்பிடியாக பிடிச்சுக் கொண்டு காவல் பண்ணினதாகவும் 200–250 குதிரை மட்டுக்கும் கைப்பிடியாய் அகப்பட்டதென்றும் சிறிது குதிரைக்காறர் பாறுக்காறர் அகப்பட்டார்களென்றும் அவர்கள் டேறா தண்டு சரன்சாமி வகையிரா சொத்துப்பாளையம் முதலான பீரங்கி வகையிராக்களெல்லாம் யிவர்கள் கையிலே அகப்பட்டதாகவும் அந்த க்ஷணம் சிறிது பாறுக்காறரும் குதிரைக்காறரும் ரெண்டு பீரங்கியும் யிழுத்துக் கொண்டு சின்னாபின்னமாயி தெறிகெட்டு ஓடிப்போனார்களென்றும் சிறிது பேர் சுகப்படவேந்து சேர்ந்தார்களென்றும் சொல்லிக் கொள்ளுகுறார்கள் யினிமேல் பயாவாராய் அறிஞ்சு யெழுத வேண்டியது.

***1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 16; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 8; சுக்கிறவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்றால் பதினோரு மணி வேளையிலே கோவற்ணமாவிலே முசே லெறியண்டைக்கு முசே சொல் மினியாக்கு யித்தனாள் காலத்தாலே சென்னப்பட்டணத்திலே யிருந்த வந்த சின்ன கப்பலிலேயும் காயக்காறர்களையும் சாமானுகளும் யேத்திவந்த கப்பலிலே யிருந்தும் வந்த குவாடுது காகிதத்தைக் கொண்டு வந்து முசே சொல் மினியாக்கு கொண்டு வந்து குடுத்து சமாசாரம் பேசியிருந்து போன பிற்பாடு வினாயகன் பிள்ளை அண்ணன் மகனை அழைப்பிச்சு காயங்காறராய் வந்த ஒப்பிசியால் மார்களுக்கு சான் சாமிகள் மத்தது குடுக்கச் சொல்லி சொன்னதாகவும் அப்பால் மயேயிலே யிருந்த சிப்பாயிகள் ரெண்டு பேர் காகிதத்தைக் கொண்டு வந்ததாகவும் அந்தக் காகிதத்தை மயிசூர் கடி ஆத்தூர் கடியிலே யிங்கிரேசுக் காகிதங்களென்றும் பிடிங்கிக் கொண்டு ரெண்டு சிப்பாயிகளையும் விலங்கு போட்டு வைத்ததின் பேரிலே அதிலே யொருத்தன் புதுச்சேரியார் மனுஷர் யென்று வாங்கி வாறோம் யென்று பிணைச் சொல்லி விச்சு

வந்து முசே லெறி யுடனே சொன்னத்துக்கு அவர் வந்தவன் கையிலே பத்து ரூபாயை சிலவுக்கு குடுத்து மயிசூர் வக்கீல் வெங்கிட்ட நாராயணப்பய்யன் காகிதம் யிவர்கள் புதுச்சேரியார் மனுஷர் யென்றும் இவர்கள் கொண்டு வந்து காகிதத்தை சீக்கிறமாய் அவர்கள் வசம் குடுத்து அனுப்பச் சொல்லியும் யினி மேலிப்படி செய்ய வேண்டாமென்றும் தாக்கீது வாங்கி அனுப்பிவிச்சார்களென்றும் முசே துப்பிளாம் முசே பொசெத்து முசே திலார்ஷ முசே புஷேர் கொற்னேத்து முசே மீரா முசே புஷேர் வகையிரா பின்னையும் ரெண்டொரு ஒபிசியால்மார் கப்பல் பாதிரிமார் ஒருத்தன் வந்து பேசியிருந்து போனார்களென்று முசே லெறி அப்பால் தம்முடைய காம்பிறாவிலே போனார் யென்றும் வந்து சொன்னார்கள்.

*1759 வருசம் பிப்றவரி மாசம் தேதி 17; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 9; சனிவாரம்*

இத்தனாள் சென்னப்பட்டணத்திலே யிருந்து ஒரு ஒலாந்தா சின்னக் கப்பலொன்று அருலெள் என்கிற பேருடையது (Haarelem) சென்னப்பட்டணத்தில் நம்முடயவர்கள் பிடிச்சு சாமானுகள் யேத்தினதும் வந்து சேர்ந்து கப்பல்க்காறனுக்கும் பீரங்கிப்போட்டு றேவிலே சீனிபோட்டதாய்ச் சொன்னார்கள். இத்தனாள் ராத்திரி வெள்ளைக்காறர் சொல்லக் கேட்டது முசே லாலி அவர்கள் முசே லெறி பேருக்கு எழுதின காகிதத்திலே சென்னப்பட்டணம் சண்டையை விட்டுப்போட்டு வருகுறோமென்று புதுச்சேரியிலே சொல்லிக் கொண்டார்களாம் யெவன் முன்னே யிந்த பேச்சு பிறப்பிச்சான் யென்றும் அவனை நான் தூக்கிப் போடவேணும் அவனை விசாரித்து எழுதி அனுப்புயென்று எழுதி வந்ததாயும் அதினாலே சென்னப்பட்டணத்துப் பேச்சுப் பேசுறது ஒருத்தருக்கும் நியாயமல்ல வென்று சொன்னார்கள்.

*1759 வருசம் பிப்றவரி மாசம் தேதி 18; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 10; ஆதிவாரம்*

இத்தனாள் மத்தியானம் கேழ்விப்பட்டது யென்ன வென்றால் பறங்கிமலை அண்டையிலே யிங்கிலீசுக் தாலூக்கு மனுஷர் சிப்பாயிகள் வகையிரா முறிஞ்சு ஒடினவர்கள் சதுரங்கப்பட்டணத் தண்டையிலே நம்முடைய மனுஷர் றங்கோ பண்டிதன் வகையிரா சிறிது குதிரைகளும் சுவார்களும் சிப்பாயிகளும் நம்முடையதாலூக்கு கள்ளர்கள் அவர்களை சிலவு பண்ணுகிறதாயும் சதிரங்கப்பட்டணத்திலே கொஞ்ச நஞ்சம் கொள்ளை யிட்டதாயும் சேதி கேழ்க்கப்பட்டுது சென்னப்பட்டணத்துக்கு இவ்விடத்திலே யிருந்து போறவர்கள் அப்பு முதலி வகையிரா சிறிது

பேர்கள் வழி நடக்கயில்லை யென்றும் மறுபடி வந்து விட்டதாயும் சொன்னதினாலே நெருப்பு யில்லாமல் பொகை பிறப்படாது யென்று யெவ்வளவாகிலும் உண்டாயிருந்தால் விஸ்தாரமாய்ச் சொல்லுறது லோக வழக்கமென்று யோசனை பண்ணிக் கொண்டேன் யிதல்லாமல் கிருஷ்ணராயன் குதிரைக்காறர் ரெண்டு பேர்கள் கருக்கடி குப்பத்திலே வந்து பாறநல்லியான் வீடு எங்கே யென்று விசாரித்து போனதாயும் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் பாதிரி லவர் (Father Lavaur) வந்து முசே லெறியுடனே 5 மணிக்கு துவக்கிப் பேசினது 7 மணி மட்டுக்கும் பேசியிருந்துப் போனதாய்க் கேழ்க்கப்பட்டது.

***1759 வருசம் பிப்றவரி மாசம் தேதி 19; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 11; சோமவாரம்***

இத்தனாள் பட்டணத்திலே கோன்சேல் கோவற்ணதோருடய உத்தாரமொன்று முன் போடப்பட்ட தோல் ரூபா சம்பந்தமான பேர்களும் வழக்கம் பண்ணுவதற்கு தமுக்குப் போட்டார்கள். தமுக்குப் போடச் சொல்லி காகிதத்திலே யெழுதி படித்த படிஞ் யிதின் கீழே யெழுதியிருக்குது....

மகாராகு மணியராசஸ்ரீ பெரிய துரையவர்கள் உத்தாரம் இந்தப்பட்டணத்திலே யிருக்கப்பட்ட சகல சனங்களும் அறிஞ்சு நடந்து கொள்ளுகிறது யென்னயென்றால் இந்தப் பட்டணத்திலே யிருக்கிற கும்பினீர் உத்தியோகஸ்தர் சிப்பாயிகள் சேவுகர் யாதாமொருவர் அனைவர்களுக்கும் கும்பினீரிலே பிரான்சு முத்திரையுடைய தோல் காசு குடுப்பார்கள். அந்த தோல் காசுவே ஒரு ரூபாய் முதல் கொண்டு கிறையம் போட்டு யிருக்கும். அந்த கிறையத்தைப் பார்த்துக் கொண்டு யாதாமொருவர் யிந்த முதிரைக் காசுகளைக் கொண்டு வந்து குடுக்குறார்களோ அந்தப்படிக்கு சகலரும் வாங்கிக் கொண்டு சிலவு குடுத்து சகலமும் குடுக்கிறது. அந்தப்படிக்கு குடுத்து யிந்தக் காசுகளை கும்பினியிலே குடுத்தால் யிந்த தோல்க்காசுக்குள்ளே கிறையம் குடுப்பார்கள் யிந்தப்படிக்கு அனைவரும் அறிஞ்சு நடந்து கொள்ளுகிறது வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 11 சோமவாரம் 1759 ஆண்டு பிப்றயோ் மாசம் 19 தேதி சீர்கோவற்ணதோர் முசே லெறி அவர்கள் உத்திரவுப்படி யெழுதின படிக்குப் பட்டணத்திலே வழக்கம் பண்ணச் சொல்லி தமுக்குப் போட்டார்கள்.

இத்தனாள் பத்து மணிக்கு கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் முசே லெறி கோவற்ணதோர் அவர்கள் யிஸ்ப்பித்தாலுக்குப் போய் வியாதியஸ்தரை யெல்லாம் விசாரிச்சுப் போட்டு கோட்டைக்கு வந்து

ஒன்பது மணிக்கு வந்த உடனே சங்கராபுரம் பாண்டலம் வந்து நமக்கு மத்தத்தாய் வருகிற மயிசூர் பாளையம் மூவாயிரம் குதிரையுடனேயும் ரெண்டாயிரம் பாறுடனேயும் அதுக்கு ஒரு சறுதாறும் முசே மென்வீலுடனே (M. Mainville) கூட சேர்ந்தார்கள் செஞ்சி கும்மாந்தாம் யெழுதி அனுப்பிவிச்சதாகவும் அந்த சேதி முசே லாலி (Mr. Lally) அவர்களுக்கு யெழுதி அனுப்பிவிச்சதாயும் முசே புசி (Mr. Bussy) வியாதி ஸ்தராய் ஒழுகரைதோட்டம் வந்து சேர்ந்ததாயும் யிந்தப்படிக்கு முசே லெறி அவர்களிடத்திலே நடந்ததாய் சேதி கேழ்விப்பட்டது.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன யென்றால் சென்னப்பட்டணம் கோட்டைக்குள்ளே முத்தி கையிலே யிருக்கிற இங்கிலிசுக்காறர்களுக்கு முன் 8 தேதி வெள்ளிக்கிழமை சாயங்காலம் அஞ்சு கப்பல் வந்து தென்றும் யேழு கப்பல் வந்து தென்றும் சேதி சொன்னார்கள். மெய் பொய் யென்கிறதை நன்றாய் அறிஞ்சு யெழுத வேண்டியது. நம்முடைய பிரான்சு பவுன்சு முத்திகை போட்டுக் கொண்டு யிருந்த முசே லாலி லுத்தினாந்து செனறால் ஆகிய செனறால் தம்முடைய பவுன்சை அழைத்துக் கொண்டு ஆற்காட்டுக்கு போறதாய் பூந்தமல்லி போய் சேர்ந்ததாய் சேதி சொன்னார்கள்.

***1759 வருசம் பிப்றவரி மாசம் தேதி 20; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 12; செவ்வாய்க்கிழமை***

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி யேழரை மணிக்குப் பிறப்பட்டு தச்சகூடம் கடல்கரை துவானம் கருமார்கூடம் விசாரித்து சென்னப்பட்டணத்துக்கு பயணம் பண்ணுகிற மூணு கப்பலுக்கு மருந்து குண்டுகள் வகையிரா சாமான்கள் முசே லாலி லஸ்கருக்கு அனுப்புகுறதுக்கு சறண்சாமிகள் அல்லாம் பார்த்து கோட்டைக்கு ஒன்பதரை மணிக்கு வந்து கோவற்ண மாமுலே வந்த பிற்பாடு முசியே பெடுத்தல்மீயும் முசே பொசேத்தும் வந்து கண்டு பேசிப் போட்டுப் போனார்கள். மைத்தப்படி விசேஷிச்ச சேதியில்லை யென்று கபுறு கேழ்க்கப்பட்டுது. நேத்து தோல் காசு வழக்கம் பண்ணச் சொல்லி தமுக்குப் போட்டதினாலே காசுக்கடை பிடவைக் கடைகளெல்லாம் நேத்தும் கட்டிப் போட்டார்கள். இன்றைய தினமும் கட்டிப் போட்டார்கள் யென்றும் கபுறு சொன்னார்கள். இதல்லாமல் காசுக் கடைக்காறர் பிடவைக்காறர்கள் வர்த்தகர்கள் கூடி சின்ன துரையாகிய முசே பெடுத்தல்மீயுடனே போய் சொல்லிக் கொண்டதுக்கு அவர் யென் வேலை அல்ல முசியே லெறியுடனே போய் சொல்லிக் கொள்ளச் சொல்லி சொன்னார்கள் யென்றும் முசியே லெறி அண்டைக்குப் போய் சொல்லிக் கொள்ளப் போனால் இப்ப சமயம் அல்ல வென்று கந்தப்ப முதலி போகச்

சொன்னதாயும் இப்படி வந்து காசுக்கடைக்காற வர்த்தகர்களும் பிடவை விற்கிற வர்த்தகர்களும் வந்த சொன்னார்கள். சின்ன துரை சொன்னபடிக்கி பெரிய துரையுடனே சொல்லிக் கொள்ளுங்கோளென்று சொல்லிப் போகச் சொன்னேன். யெந்தப்பட்டணத்திலே வெள்ளியும் பொன்னும் நவரத்தினமும் கொழிச்ச யிடத்திலே தோல்க்காசு வழங்கப் பிறப்பட்ட மட்டுக்கும் பட்டணம் விறுத்தி யெல்லாருக்கும் ஆச்சுதே யிதுக்கு அடுத்தாப்போலே தானே செனங்கள் நடக்கிற அசத்தியமும் அக்கிறமும் அல்ப்ப மனுஷர்கள் காரியங்களிலே யிருந்து பிறபுகளிடத்திலே துவிபாஷித் தனம் பண்ணுகிறதும் பிறபுக்களுடைய புத்திகள் மேலே யெழுதப்பட்ட காரியங்கள் நடத்துகிறதுக்கு புத்தி செனிதமாகுறதும் அரா சகமும் அனியாயமும் யெல்லா முண்டாச்சுது. யிது கண்டதுக்கு ஒன்று பட்டணம் எடுத்துப் போகவேணும் யில்லாவிட்டால் வேறே ஒரு பிறபு முசே லெனுவாரைப் போலே ஒத்தவர் ஒருத்தர் துரைத்தனம் பண்ணுகிறதுக்கு வந்து யிதுகளைத் தள்ளி சத்தியமும் நியாயமும் கிறமும் ராசரீகமும் யிதற்குத்த சின்ன மென்னமோ அப்படி நடத்த வேணும். அதுவே அல்லாமல் வேறில்லை. யென்று சகலசனங்களும் சொல்லிக் கொள்ளுகுறார்கள் யிவ்விடத்திலே யிந்தக்கட்டு பிறக்குற போது ராச்சியத்துக்கு கூட பிடிச்சு நடக்கும் யென்று சகல செனங்களும் சொல்லிக் கொள்ளுகுறார்கள்...

***1759 வருசம் பிப்றவரி மாசம் தேதி 21; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 13; புதன்***

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு முசே லெறி அவருடைய கபினேத்திலே ஒண்டியாய் நிற்கச்சே போய் ஆசாரம் பண்ணினேன். யென்னை பார்த்தவுடனே நீ அப்துல் றயிமான் வீட்டை யெடுத்துக் கொண்டாயா வென்று கேட்டதுக்கு நான் சொன்னது. அப்துல் றயிமான் வீட்டை நான் யேன் எடுத்துக் கொள்ளுகுறேன் அது வந்து பெரு முக்கல் மியா சாயபுடைய வீட்டிலே குடியிருந்தான் அவனும் குஞ்சு குழந்தைகளும் போனவுடனே மியா சாயபு சின்ன துறை முசியே பெடுத்தல்மீ முசியே தெலார்ஷூடனே ஞாயத்திலே சொல்லி வாங்கிக் கொண்டான் அதுவே யல்லாமல் நானொன்றும் அறியேன் யென்று சொன்னதுக்கு ஆனால்ப் போ யென்று சொன்னார். நான் ஆசாரம் பண்ணிப் போட்டு வீட்டுக்கு வந்தேன்.

***1759 வருசம் பிப்றயி மாசம் தேதி 26; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 18; சோமவாரம்***

இத்தனாள் பத்தரை மணிக்கி கேழ்விப்பட்ட சேதி முசே லெறி கோட்டையிலே யிருக்கிறவர் தம்முடைய காம்பிராவை விட்டு

நடுசாலையிலே வந்த உடனே கடற்கரை கப்பித்தான் முசே சொல் மினியாக்கு (M. Solminiac) வந்து பேசியிருந்து போன பிறகு முசே பொசேத்து வந்து பேசியிருந்து முசே குலோத்தும் மங்கள மேஸ்திகள் வந்து பேசின பிறகு முசே மொற்சேன் வந்து பேசியிருக்கச்சே கப்பல் பாதிரி வந்து சமையம் யில்லாமல் பிறப்பட்டுப் போனானென்றும் ஆற்காட்டு வழியிலே பனைப்பகாக்கம் என்று காவேரிப்பாக்கம் இதுக்கு காதவழியிலே யிருக்கு தாம் அங்கே முசே லாலி அவர்களும் அவருட பவுன்சும் அங்கே யிருக்க அங்கே யிருந்து முசே லாலி முசே லெறிக்கு குடுத்த காகிதங்களைக் கொண்டு வந்து யித்தனாள் பத்துமணி வேளைக்கு முசே லெறிக்கு கொண்டு வந்து குடுத்த ரெண்டு சேவுகர் வாய் விசேஷம் சொன்னது சென்னப்பட்டணம் முசே லாலி அவர்கள் விட்ட பிற்பாடு திருவள்ளூர் திருப்பாசூர் சீர்மை மேலே பிறப்பட்டு ஆற்காட்டுக்குப் போறதாய் சேதி சொன்னதாக கேழ்விப்பட்ட மனுஷர் வந்து சொன்னார்கள். முன் தோல்க்காசு வழங்கச் சொல்லி தமுக்குப் போட்டதை மறுபடியும் கடைக்காறர் காசுக்கடைக்காறர் வாங்கக்கவை யில்லை யென்று முசே லெறி சாவடி கணக்கப் பிள்ளைகளை அழைப்பிச்சு உத்தாரம் குடுத்தாரென்று கடைக்காறர்கள் நேத்தை பிடிச்சு கடைகள் போட்டுக் கொண்டு யிருக்குறார்க ளென்றும் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் சாயங்காலமான பிறகு ஒரு நாழிகைக்கு சென்னப்பட்டணம் கோட்டையிலே அகப்பட்டு யிருந்த கோணத்தே தெஸ்தேன் என்கிறவர் (Comte de Estaing) அவர்கள் சாதி வழக்கப் படி சண்டைக் காவல்க்காற னென்றும் ஆயுதமெடுக்கிறது யில்லை யெப்போ வரச் சொன்னால் அப்போவருகுறோ மென்றும் யெழுதிக் குடுக்கிற வாடிக்கைப் படிக்கு யெழுதி குடுத்து கையெழுத்துப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு யித்தனாள் ராத்திரி யேழு மணிக்கி சொர்தார் அவருடனே கூட ரெண்டு பேர் ஒப்பிசியால் மார்கள் கூட கையெழுத்துப் போட்டு வந்தவர்கள் பேர் தெரியாது அவர்கள் ரெண்டு பேரும் குதிரைகளின் பேரிலே வந்தார்கள். முசே லாலி சென்னப்பட்டணம் வாங்காமல் இரண்டு மாசமாயி சண்டை போட்டும் கால பெலமில்லாததைத் தொட்டு சென்னப்பட்டணம் வாங்க மாட்டாமல் போனதைத் தொட்டு கோட்டையிலே கோவற்ண தோராயிருந்த மேஸ்தர் பிக்கட்டு (Mr. Pigot) க்கு மெத்த பெரிய தான கீர்த்தி வந்தது. முன் விய வருசம் புதுச்சேரியின் பேரிலே அமிறால் மலாராடு மேஸ்தர் புஸ்கவேண் (Mr. Boscowan the Unlueky Admiral) வந்து சண்டை பண்ணி வாங்காமல் போனது முசே துப்பிளேக்குசுக்கு மகத்தாகிய கீற்த்தி வந்தாப் போலே யிப்போ மேஸ்தர் பிக்கட்டுக்கு வந்துதென்று செனங்கள் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் முசே லாலி அவர்களைப் போலே

சண்டையில் கெட்டிக்காறர் யிந்தியா இராச்சதியத்திலே ஒருத்தரையும் பார்த்தில்லை. யிப்படி சென்னபட்டணத்தை பட்டணம் யெல்லாம் கொள்ளையிட்டு கோட்டையை தூள் தூளாக்கி கோட்டைக்குள்ளே யிருந்த வீடுகளை யெல்லாம் போம்புனாலே (Bomb) யிடிச்சுத் தள்ளிப் போட்டு கோட்டையைச் செவிரை யிடிச்சுத் தள்ளி மொறசாவை கொண்டு போய் அகரத்தையிலே விட்டு கோட்டைக்குள்ளே யிருக்குறவர்களை வெளியிலே தெரியும்–வெளியிலே யிருக்குறவர்களை கோட்டைக்குள்ளே யிருக்குறவர்களுக்குத் தெரியும் நடப்பிக்கத் தக்கதாக ஒருத்தரும் நடத்தி சண்டை பண்ண மாட்டார்கள். அப்படி நடந்தும் போட்டை விடாமல் நிறுவாகம் பண்ணுறது மெத்தப் பிறயாசம் ஆனபடியினாலே மேஸ்தர் பிக்கட்டுக்கும் மெத்த கீர்த்தி தான் முசே லாலி அவர்கள் கோட்டையை வாங்காமல் வந்ததைத் தொட்டு தாழ்த்தியல்ல வென்று விவேவிகள் யெண்ணுவார்களானால் கோட்டை பிரான்சுக் காறர்களுக்கு வருகுறதுக்கு பிராப்த்தி யில்லாததைத் தொட்டு கோட்டை தப்பினதே அல்லாமல் முசே லாலி சண்டை பண்ணினத்திலே தப்பத் தக்கினதில்லை ஆனால் சீத்தாராம் சோசியர் சொன்னபடிக்கு தேவனாம் பட்டணம் யெடுத்துப் போனபடியினாலே சென்னப்பட்டணம் யிந்த வருசம் யின்னேரத்துக்கு தப்பினாலும் வருகிற வருசம் மாகிய பிறமாதி வருசம் ஆனி மாசத்தைக்குள்ளே சண்டை பண்ணி சென்னப்பட்டணம் மறுபடி பிரான்சுக்காரர் கொடி விழுமே யல்லாமல் போகத் தக்கதில்லை. யென்று யென் புத்திக்கேற்க்க தோணி யிருக்குது யேனென்றால் சீத்தாராம் சோசியர் சொன்ன சாஸ்திரம் ஆம் படிக்கு பெடுத்தானிய வருசம் மாசி மாசத்துக்கு ராச்சியத்துக்குச் சொன்ன அரிஷ்ட்டமும் யெனக்கும் சொன்ன சுபமும் அரிஷ்ட்டமும் பிரான்சுக்காறருக்குச் சொன்ன சுபமும் அரிஷ்ட்டமும் சரிப்பட்ட படியினாலே பிரான்சுக் காறருக்குச் சொன்ன சுபமும் யெனக்குச் சொன்ன சுபமும் சரிப்படுமென்று எண்ணியிருக்கிறேன். ஆனால் யினிமேல் நடக்குறது அறியவேண்டியது. ஆனால் பிரான்சுக் காறருக்கு நாம் சேர்ந்தால் விறுத்தியே அல்லாமல் யில்லாவிட்டால் விறுத்தி யில்லை யென்று சீத்தாராம சோசியர் சொன்னபடிக்கு நமக்கு யிறக்கம். அத்தி வயிரா காம்கொடுத்ததுக்கு அவர்களுக்கும் தோல்க்காசு வழங்குற மட்டுக்கும் வந்தது. யெனக்கும் யிந்த மட்டுக்கும் எறக்கம் கொடுத்து வருகுறபடியினாலே அவர்களுக்கும் யிறக்கம் சரிதான். யினிமேல் நம்மை அவர்கள் ஒசத்துகுற வேளை வந்து நம்முட மாரிபத்திலேயே காரியங்கள் நடக்கச்சே அவர்களுக்கு சகலமும் செயமாகவும் சகல ராச்சியமும் கைவசமும் நடக்கும் யென்று யெண்ணுறதுக்கு திஷ்ட்டாந்திரம் யிப்போ நடக்குற காரியத்தைப் பாா்த்து யோசிச்சால் புத்திசாலிகளுக்கு நன்றாய் தோத்தும். அதெப்படியென்றால் இதுவரைக்கும் பட்டணத்துக்கும் பிரபுஸ்தானத்துக்கும் யெனக்கும் நடந்த அனுபவம் அப்படியே சரிப்பட்டு யிருக்குற படியினாலே எழுதினது–

*1759 வருசம் பிப்ரேயி மாசம் தேதி 27; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 19; செவ்வாய்*

இத்தனாள் காலத்தாலே முசே புசி வந்து வெகுநேரம் முசே லெறியுடனே பேசியிருந்து நசிபுல்லிக்கான் வக்கீல்கள் துலக்கனொருத்தன் பேர் விளங்கனையும் றங்கோ பண்டிதன் யென்கிறவனையும் ரெண்டு பேரையும் அழைப்பிச்சு சாவடியிலே காவல் வைத்தாரென்றும் அதின் பேரிலே முசே மொறசேன் அவர்கள் போய் முசே லெறியுடனே சொல்லி துலுக்கன் நசிபுல்லிக்கான் மனுஷனாக வந்தது மெய்தான் யிதின் பிறபாடு தள்ளிப்போட்ட படியினாலே அவனைக் காவலில் வைக்கயில்லை யென்று துலுக்கனை விடுதலை பண்ணாப் போலேயும் யிவர்களை யேது நிமித்தியம் காவலில் வைத்தார்கள் யென்றால் நசிபுல்லாக்கான் முன் யிவர்களைச் சேர்ந்ததாயிருந்தவன் யிப்போ நம்முடைய பிரான்சுக்காறர் மனுஷர்களுக்கு துரோகம் பண்ணி பிரான்சுக்காறர் மனுஷர் வெள்ளைக்காறர் யிருந்தபேர்களை வெட்டிப் போட்டு யிங்கிறேசுக்காறர்களைச் சேர்ந்ததாய் சேதி வந்து காவல் வைத்ததாய்ச் சொன்னார்கள் மத்தப்படி முசே தெபொசேத்து துப்பிளாம் முசே கில்லியார் வகையிராக்கள் வந்து பேசி போறபடி நித்தியக் கட்டளை நடந்ததாய்ச் சொன்னார்கள்.

*1759 வருசம் பிப்றேயி மாசம் தேதி 28; வெகுதானிய வருசம் மாசி மாசம் தேதி 20; புதவாரம்*

இத்தனாள் பயாவாராய் நம்முடவர்கள் காஞ்சிபுரத்திலே யிருந்து வந்தவர்கள் சொன்ன சேதி யென்னவென்றால் முன் 12 தேதி செவ்வாய்க் கிழமை முதல் 14 தேதி வியாழக்கிழமை வரைக்கும் மராட்டியர் கோபால அரி குதிரை கேட்டதின் பேரிலே யிருந்த யிறங்கின குதிரைகள் நாலாயிரம் குதிரைகள் காஞ்சீபுரம் வகையிரா மூணு நாள் கொள்ளை சறுவ சோபானமும் யெடுத்துக் கொண்டு போனது மல்லாமல் ஒடமைகள் காட்டச் சொல்லி சிலுக்க சிலுக்க வெட்டினதுகளும் அடிச்சதுகளும் மிதமில்லை யென்று சொன்னார்கள். சகல சனங்களையும் இமிசைப் படுத்தச்சேயும் பெரிய காஞ்சீபுரத்துக் கோயிலிலே யிருக்கிற ராசா சாயபு மனுஷர் யேனென்று கேளாமல் போனார்களே அவர்கள் பயந்து கோட்டையை சாத்திக் கொண்டு யிருந்தார்களென்றும் அவர்கள் கொள்ளையிட்டு லாலாப்பேட்டை மாற்கமாய் போகச்சே யிந்தச் சேதி முசே லாலி அவர்கள் அலுமாஞ்சு குதிரைக்காறர்களையும் முசே ஒம்மோ குதிரைக்காறர்களையும் முசியே லாலி பவுன்சு திருப்பாசூரண்டையிலே யிருக்கச்சே முன்னுதாகப் போன ரசாசாயபு பல்லக்கு சாமானுகள் வகையிரா பறி குடுத்து முசே லாலி பவுன்சு தக்கோலம் பேரம்பாக்கம் அண்டையிலே யிருக்கச்சே வந்து சேர்ந்ததாயும் அதன்பேரிலே அலமாஞ்சு

குதிரைக்காறனும் முசே ஒம்மோ குதிரைக்காறர்களும் போய் மராட்டியர் லசுக்கர் பேரிலே விழுந்து அடிச்சவிடத்திலே மராட்டியர் பவுன்சு தமாமும் முறிஞ்சு கொள்ளையிட்ட வஸ்துக்களைப் போட்டுப் போட்டு கேட்டத்தின் பேரிலே ஒடிப்போனதாயும் அதிலே நானூறு குதிரைகள் மட்டுக்கும் நம்முடவர்கள் கையிலே அகப்பட்டதாயும் இறநூறு குதிரை மட்டுக்கும் சேதமென்றும் சொன்னார்கள். யிதுக்கு அரைவாசி ஆகிலும் யிருக்கும் அதுக்குச் சந்தேகமில்லை. யிந்த மராட்டியர்களை இங்கிறேசுக்காறர்கள் அழைப்பிச்சார்கள் யிதிலே நம்முடவர்கள் சென்னப்பட்டணம் விட்டு ஆற்காட்டுக்குப் போனத்தினாலே அந்தக் குதிரைக்காறர் மறுபடி கேட்டத்தின் பேரிலே (Gada) போனதாய்ச் சொல்லிக் கொண்டார்கள். சோளிங்கபுரம் லாலாபேட்டை வகையிரா வாறவழிகள் எல்லாம் கொள்ளையிட்டு சிறைகள் கூட பிடிச்சு அழிச்சுப் போட்டார்களென்றும் சொன்னார்கள்.

## ஏப்ரல் 1759

***1759 வருசம் ஏப்றல் மாசம் தேதி 10; வெகுதானிய வருசம் வையாசி மாசம் தேதி 28; வரைக்கும்***

பிறமாதி வருசம் சித்திரை மாசம் முதல் அங்காரக வாறம் உத்திர நக்ஷத்திரம் சேஷ்ட்ட சுத்ததிர யோதசிக்கு 1759 வருசம் அப்றீல் மாசம் 10 தேதி தினசரி எழுத துவக்கின தஸ்திரம் வையாசி மாசம் 28 தேதி வரைக்கும் சீமையிலே பிரான்சு ராசரீகத்திலே யிருக்கிற நாலு மினிஸ்தருகளுக்கு வயணமாவது சண்டை காரியம் பார்க்கிறவர் ஒருத்தர் சமுத்திர காரியம் பார்க்கிறவர் ஒருத்தர் புளக்கிலர் சோற்யென்கிறது மத்தவிசாரணை விசாரிக்குறது ஒருத்தர் பிறத்தியர் தேசகாரியம் விசாரிக்கிறவர் ஒருத்தர் ஆக நாலு மினிஸ்தருகள் யிதுக்கு பெரியவன் முதலாவது ஒரு மினிஸ்தரு யெப்போதும் யிருந்தது கடுதினால் புளோரிக்கு (Cardinal Flenry) பிற்பாடு ராசாதாம் தானே முதலாவது மினிஸ்தருவினுடய யிடம் கூட விசாரிச்சுக் கொள்ளுகுறோம் யென்று வேறே முதலாவது யிடத்துக்கு வேறே வைக்கயில்லை யிதின் பிற்பாடு... ஷான் செலியோ் காடுதே சொ. கோந்துரோல் சனரால் (Chaucelier and Garde de Feeauk (Excercuiea)

***1759 வருசம் அப்றீல் மாசம் தேதி 11; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 2; புதன்***

இத்தனாள் ராத்திரி பனிரெண்டு மணிக்கு முசே மொற்சேன் அறுனென் யென்குற கப்பலின் பேரிலே யேறினான் யிந்தக் கப்பலுடனே கூட பின்னையும் சின்ன ரெண்டு பிறகாத்து (Frigate) கள் கூட மச்சிலிபந்தருக்கு பயணமாய் போச்சுது...

யிதுக்கு முன் முசே புசியை பயணம் பண்ணியிருந்தார்கள் அவரை நிறுத்தி முசியே மொர்சேனை பயணம் பண்ணிப் போகச் சொன்னார்கள். யிவர் போற வழியிலே சென்னப்பட்டணத் தண்டையிலே யிருந்து இங்கிலீசுக் கப்பலுகள் தெற்கே காரைக்கால் நாகப்பட்டணம் அந்த வட்டங்களிலே யிருக்கிற தென்று கபுராயிருக்கிற படியினாலே முசியே மொர்சேன் போற கப்பலுகளுக்கு வேதையில்லாமல் மச்சிலிபந்தர் போய்ச் சேருமென்று நல்ல காத்தடிக்கிற படியினாலே மூணு நாளையிலே போய்ச் சேருமென்றும் மச்சிலிபந்தரண்டையிலே யேதாவது கப்பலுகள் இங்கிலீசுக்காறர்களுது ஆக யிருந்தாலுடனே சண்டை பண்ணுகுறதுக்கு நம்முடைய கப்பலுகளிலே பெலன் யிருக்கிற படியினாலே அதையும் நிறுவாகம் பண்ணிக் கொண்டுபோய் சேருவாரென்று சொன்னார்கள்.

*1759 வருசம் அவ்றில் மாசம் தேதி 12; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 3; குருவாரம்*

இத்தனாள் ராத்திரி இங்கிறேசிக் கப்பல் ரெண்டு அல்லது ஒன்று வந்து துறைமுகத்திலே காண்பிச்சபடியினாலே ராத்திரி பனிரெண்டு மணி வேளைக்கி நம்முடைய துறையிலே யிருக்கிற சின்ன கப்பலிலே ஒரு பீரங்கி சுட்டான். அதன்பேரிலே கடற்கறையோரம் கொத்தளங்க ளெல்லாம் பீரங்கிகள் முஸ்தீப்பு பண்ணிக் கொண்டு சிப்பாயிகளும் சாக்கிறதையா யிருந்தார்களென்றும் காலத்தாலே கபுறு சொன்னார்கள்...

*1759 வருசம் அவ்றில் மாசம் தேதி 14; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 5; சனிவாரம்*

இத்தனாள் நான் சாரத்திலே யிருந்து அபியங்கஸ்நானம் பண்ணி சாயங்காலம் வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி மச்சிலி பந்தர் பேரிலே இங்கிலீசுக்காறர்களும் விசயராமராசா மகன் ஆனந்தராசாவும் வந்து பேட்டைக ளெல்லாம் கொள்ளையிட்டு கோட்டையின் பேரிலேயும் மோறசா போட்டு சண்டை பண்ணுகுற சேதி வந்து முசே மொற்சேனும் சொலுதாதுகள் வகையிரா பெலனும் கப்பலின் பேரிலே முன் 2 தேதி புதவாரம் ராத்திரி போனாப் போலே ஆச்சுதே அப்படிப்பட்ட காரியம் அவ்விடத்திலே ஆனந்தராசாவும் இங்கிலீசுக் காறர்களும் ஒன்றுக்கொன்று விரோதப்பட்டு மச்சிலி பந்தரை விட்டுப்போட்டு அவர்கள் பவுன்சும் அவர்களும் வாங்கிப் போனதாய் ஒரு சேதி சொன்னார்கள் என் புத்திக்கு கேற்க யிந்த சமாச்சாரம் மெய்யாய் தோணினத்திலே யெழுதி வைத்தேன்...

*1759 வருசம் அவ்றில் மாசம் தேதி 18; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 9; புதவாரம்*

இத்தனாள் சரீர ஆரோக்கியமில்லாததைத் தொட்டு வெளியே பிறப்படவில்லை... இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி காஞ்சீபுரத்திலே நம்முடைய பிரான்சுக்காறர் ட்டாணா முசபர் பேக்கு சமேதாறர் வகையிராக்களிருந்த விடத்திலே இங்கிலீசுக்காறர் தாலூக்கும் மதுரை யிலிருந்து வந்த கொம்மாந்தாம் அவர்கள் பவுன்சுடனே வந்து சுத்திக் கொண்டு கோட்டையின் பேரிலே யேறி குதிச்சு முசபர் பேக்கை பிடிச்சுக் கொண்டு தாயை வெட்டிப்போட்டதாயும் பிள்ளையையும் அவன் தாலூக்கு மனுஷருக்கு சிறிது பேருக்கு காயப்படுத்தி துப்பாக்கிகளைப் பிடிங்கிக் கொண்டு துரத்தி விட்டார்களென்றும் வினாயகப் பிள்ளை மனுஷன் ராமலிங்கன் ஒருகத்தி காயத்துடனே காமாட்டிகளுடனே கூட தப்பிப்

போனான் யென்றும் அவனும் மகம்மது அபுவின் கழுத்தை வெட்டிப் போட்டார்களென்றும் இங்கிலீசுக்காறர்கள் தங்கள் பவுன்சுடனே ட்டாணாபோட்டுக் கொண்டதாயும் முசே சுப்பீர் பவுன்சு பேர்களும் திருவெத்தியே போய்ச் சேர்ந்து அதைக் கட்டிக் கொண்டதாயும் முசே லாலி வந்தவாசியைக் கோட்டையை விட்டு திருவொத்தியூர் வந்து சேர்ந்ததாயும் சிலவு சித்தாயத்துக்கு மெத்த சங்கட்டமாயிருக்கு தென்றும் யிப்படியாக சேதி சொன்னதும் அல்லாமல் ரசாசாயபுவையும் பகல் ராவுயெல்லாம் பார்க்கச் சொன்னதாயும் ரசாசாயபு நேத்திய சாயங்காலம் வெளியே போய் யிறங்கினானே முசியே தெலார்ஷும் நாளை கரத்தாலே போறானென்றும் சொன்னார்கள். காஞ்சிபுரத்திலே நடந்த சேதி யிங்கிலீசுக்காற மனுஷர் வந்து விழுந்த போது வினாயகப்பிள்ளை மனுஷன் ராமலிங்கனென்கிறவன் ஒரு காயத்துடனே காமாட்டிக ளென்று காமாட்டிகளுடனே கூடி ஒடிப்போய் தப்பினானென்றும் அபுமகம்மது (Abu Muhammad) என்கிறவன் முன் திருக்கோவிலூர் அமுல் குத்தகை பண்ணினவன் யிப்போ ராமலிங்கன் கீழே காஞ்சீபுரம் அமுல் பண்ணிக் கொண்டிருந்தான். அவனை துப்பாக்கி மருந்து மேலே போட்டு கொளுத்திவிட்டு சரிக்கட்டிப் போட்டார்கள் யென்றும் வினாயகன் அண்டையிலே தெற்கத்தியான் கவீசுவராவு என்றொருத்தன் சேர்ந்து யிப்போ சட்டை போட்டுக் கொண்டு சறுக்காய் திரிஞ்சான் வெங்கிடாசல முதலி யென்றவனை ஒருத்தன் பேர் விளங்கன் அவனையும் ரெண்டு காதையும் அறுத்துப் போட்டு விட்டதாயும் பின்னையும் நாலத்து ரெண்டு பேர் பிராமணாளுக்கு காயமும் சேதமும் செய்து விட்டார்கள் என்று சொல்லி இங்கிலீசு ட்டாணாயிருக்கிறதாய்ச் சொன்னார்கள்...

### *1759 வருசம் அப்றில் மாசம் தேதி 19; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 10; குருவாரம்*

இத்தனாள் அப்பால் அய்யண்ண சாஸ்திரி ரசா சாயபு தன்னை வரச் சொன்னார் அவர் பிறகே போரேனென்று அனுப்பிவிச்சுக் கொண்டு வந்தபோது கந்தப்ப முதலி பெரியண்ண முதலி தன் மேலே யெழுதப்பட்ட சேதி சொன்னது மல்லாமல் முசே லெறி சொன்னதாய் பொல்லாத காலம் வந்திருக்குது. நீங்கள் சாக்கிறதையாய் தப்பி பிழையுங்கோ ளென்று சொன்னதாயும் பெரியண்ண முதலி மகனுக்கு கலியாணம் பண்ண வேணுமென்று யிருந்தானே அதை நிறுத்திப் போட்டார்க ளென்றும் கந்தப்ப முதலி பெரியண்ண முதலி சவரிராய பிள்ளை மூணுபேரும் வெகுசாய் அசந்து முகத்தை தொங்கப் போட்டுக் கொண்டு யிருக்குறாங்க ளென்றும் சொல்லி பின்னையும் ஆற்காடு காஞ்சீபுரம் வகையிரா யிடங்களிலே நடக்கிற சேதியும் கிஷ்ணராயன் பவுன்சு வந்து திருவீதி விழுப்புறம் வகையிரா பற்கனாக்கள் பவுன்சு களெல்லாம் ஒட்டிக்

கொண்டு போனதாயும் அவ்விடத்து குடிகளெல்லாம் அலைஞ்சு வலசை வாரார்க ளென்றும் யிப்போ யிருக்கிற நேர் பார்த்தால் சும்மாயிருக்கிறவர்கள் காரியம் அனுகூலமாய்க் காணுது என்றும் பின்னையும் அனேகம் பேச்சுக்கள் சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு போனார்.

***1759 வருசம் அப்றில் மாசம் தேதி 20; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 11; வெள்ளிக்கிழமை***

இத்தனாள் ராத்திரி யெட்டு மணிக்கி கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் வடக்கு வாசற்படியிலே சாயங்காலம் ஆனவுடனே வெளியே போற தலை விரிச்சான் கூட்டத்தை விட்டு தலைப்பாகை துப்பட்டி சோமன் கட்டிக் கொள்ளுகிறவர்களாய் பனமரக்கதவு வெளியே யிருக்குதே அதை சாத்திப் போட்டு ஒப்பிசியால் சாற்சந்து (Sergeant) கொப்புறால் வகையிராக்கள் கத்திகளை உருவிக் கொண்டு வெட்டி மடியப் போடுகுறோம் யேதாவது குடுத்தீர்களா வென்று கேட்டீர்களாம். அதின்பேரிலே அவரவர் பயந்து நாலு அஞ்சு ரூபா முதல் ஆறுபணம் மட்டுக்கும் குடுத்து வெறியே வந்தார்களாம். அவர்கள் கேழ்க்கச்சே கும்பினீரிலே யெங்களுக்குச் சம்பளம் வரயில்லை. நாங்கள் மண்ணைத் தின்று வாசற்படி காத்து சேவகம் சேவிப் போமா குடுக்கிறீர்களா வெட்டிப் போடுவமா வென்று சொல்லி ரூபாய் வாங்கினார்களாம் அதிலே நாலுபேர் அங்கி போட்டுக் கொண்டு சட்டவட்டமாய்ப் போனார்களாம். அவர்கள் கையிலே தான் பேருக்கு நாலைஞ்சு ரூபாய் விழுக்காடு வாங்கினதும் மைத்த பேர் கையில் யெல்லாம் ஒரு ரூபாய் விழுக்காடும் ஆறுபணம் நாலு பணம் ரெண்டு பணம் இந்தப் பணம் வாங்கின மட்டுக்கும் வாங்கி விட்டார். கையிலே யிருந்தவர்கள் தான் ரொக்கம் குடுத்தார்களே யில்லாதவர்கள் சட்டைக்காறர் பாறுக்காறர்களைக் கூட்டிக் கொண்டு வீட்டுக்கு வந்து குடுத்து அனுப்பி வைச்சார்க ளென்றும் யிப்படி யிதுவரையிலே சம்பளம் வரயில்லை யென்று பட்டணத்து சனங்களைப் பிடிச்சு வாங்கின சேதி கேழ்விப் படயில்லை மைத்த அலங்கோலம் நடந்து தீர்ந்தது. யிதுக்கும் ஆரம்பிச்சு நடந்துது. யினி நாலு தெத்து வாசலை சாத்திக் கொண்டு பட்டணத்தை கொள்ளையிடுகுறது மாதிரம் பாக்கி ஒன்று தவிர மைத்த அலங்கோலமெல்லாம் நடந்து தீர்ந்தது யென்று சகல சனங்களும் பார்த்து நடுநடுங்கிக் கொண்டு யிருக்குறது மல்லாமல் பட்டணத்துக்கு யென்ன ஆபத்து வரயிந்த யேஷியங்க ளெல்லாம் நடக்குதோ தெரியாதென்றும் வெகுநாளா யிவர்கள் வெள்ளைக் கொடியின் கீழே யிருந்தோம் யென்று யிப்படியாக சரிப்போனபடிக்கு வாயிலே வந்ததைச் சொல்லிக் கொள்ளுகிறதாய்ச் சேதி கேழ்விப்பட்டதை யெழுதிவைச்சேன்.

*1759 வருசம் அவ்றில் மாசம் தேதி 22; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 13; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யேழு மணிக்கு கோட்டைக்குப் போக வேணுமென்று பிறப்பட்டு நேத்து வரச் சொன்ன முசியே துப்பிளாம் வீட்டுக்குப் போனவிடத்திலே முசே துப்பிளாம் மலாது யென்று அவன் துபாசி சொன்னான். ஆனால் நாளைய தினம் வருகுறேனென்று சொல்லிப் போட்டு கோட்டைக்குப் போனவிடத்திலே கொள்ளடிச்ச களம் போலே நறுமானு ஷியமாயிருந்தது அப்பால் யெட்டரை மணி அடிச்ச பிற்பாடு முசியே குளூவேத்தும் முசியே பொசேத்தும் முசியே கிரேப்பியேர் முசியே நொயாலும் நாலைஞ்சு கணக்கரும் ரெண்டு கும்பினீர் ஒப்பிசியாலு மார்களும் வந்தார்கள். அவர்களுடனே கூட நானும் மேல்வீட்டின் பேரிலே ஒன்பது மணிக்கு கோயிலுக்குப் போக பிறப்பட்டார். அவர் முகத்தைப் பார்த்தால் மாவினாலே பண்ணின பிறதமை முகம் போலே யிருந்ததே யல்லாமல் களையென்கிற நாமமில்லை. அப்படிப்பட்டவரை கண்டு ஆசாரம் பண்ணினேன். அவர் தலை சாய்ச்சு ஆசாரம் பண்ணினார். பரதேசத்தார் தங்கள் கப்பல் ரெண்டு உருப்படியும் அதிலே வந்து அரிசி வகையிரா தினிசுகளும் முசே லாலி சென்னப்பட்டணத்திலே யிறங்கி சண்டை பண்ணச்சே துரைமுகத்துக்கு நேராய் வந்ததைப் பிடிச்சுக் கொண்டு யிவ்விடத்துக்கு அனுப்பி வைச்ச பிற்பாடு வர்த்தகர் புதுச்சேரிக்கு ஓடிவந்ததென்றும் தெரிஞ்சுக் கொண்டு பிற்பாடு குடுத்துவிடச் சொல்லி முசே லாலி முசியே லெறி ரெண்டு பேர் உத்தாரம் குடுத்து மூணு மாசம் ஆச்சுது. அவர்களை முசியே லெறி அண்டைக்குப் போகச் சொன்னால் அவர் கிரேப்பியேருக்கு உத்தாரம் குடுத்தோம். அவர் குடுத்து விடுவார் போவென்று சொன்னால் அவரைக் கேட்டால் ஈசுக்காதர்கள் வரட்டும் உங்களுக்கு உண்டான பணத்தைக் குடுத்து விடுகுறோம் யென்று யெத்தனை தரம் சொன்னாலும் என்னண்டைக்கு யேன் வந்தார்களென்று காலத்தாலே தானே என்னுடனே தானே சொல்லி சொல்லச் சொன்னான். அவர்கள் மேல் வீட்டின் பேரிலே முசியே லெறி அண்டையிலேயும் கூவினதுக்கு நீங்களெல்லாரும் சென்னப்பட்டணம் போங்கள் ஒருத்தர் மாத்திரம் யிருங்கோள். மசுக்கரைக் கப்பலுகள் வந்தவுடனே பணம் குடுத்து விடுகுறோமென்றும் யிவர்களுக்கு சொல்லென்றும் சொல்லிப் போட்டு முசியே லெறி கோயிலுக்குப் போனார். அந்தப்படிக்கு நான் பரதேசத்தாருக்கு சொன்னதுக்கு அவர்கள் சொன்னது முசியே லெறி குணம் நாங்கள் பங்காளத்திலே பார்த்து பழகியிருக்கிறோம். நீரெங்களுக்கு சொல்லத் தேவையில்லை யென்று யிவர் குணம் யென்ன வுண்டோ ஆதியோடந்தமாய் சொல்லி அந்தப்பட்டணத்தை சரிக்கட்டி போகத்தக்கனவரே யல்லாமல் மைத்தப்படி வேரேயில்லை. அது

யெங்களுக்குத் தெரியுமென்று பயாவாரியாயி சொன்னார்கள். அதுக்கு நான் அப்படி சொல்லப் போகாதென்று பரிகரிச்சு சொல்லிப் போட்டு நான் பிறப்பட்டுப் பிடவை பார்க்கிற சாலையிலே வந்தவுடனே முசியே கில்லியாரைக் கண்டேன். அவரும் நானும் லோகாபிரமமாய்ப் பேசியிருந்து யிப்போ நடக்கிற முச்சட்டைகள் பேசியிருந்து அப்பால் அவர் கையிலே அனுப்பி வைச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

*1759 வருசம் அவறில் மாசம் தேதி 22;.....*

இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு கேழ்விப் பட்ட சேதி மச்சிலிபந்தரை யிங்கிலீசுக்காறர்களும் ஆனந்த ராசாவும் பிடிச்சுக் கொண்டுச் சேதி குண்டூர் என்று ஊர் யிருக்குதாம் அதிலே ஒரு வெள்ளைக்காறனிருக்கிறவன் முசே லெறிக்கு காகிதமெழுதி அனுப்பினானென்றும் அந்தக் காகிதம் படிச்சுப் பார்த்துக் கொண்டு கோன்சேலியேர்களுக்கு காண்பிச்சதாய் சேதி சொன்னார்கள். இனிமேல் வெள்ளைக்காறரை வாயினாலே நடந்த பூருவோத்திரம் பயாவாராய் அறிஞ்சு யெழுத வேண்டியது முசியே மொற்சேன் கப்பலும் பந்தர் கிட்டப் போய் சேர்ந்த கபுறும் தெரிஞ்சுக் கொண்டு அப்பால் மேல் ஒசந்து போனானென்றும் அப்பால் கபுறு தெரியவில்லை யென்று வந்த சேவுகர் சொன்னார்கள்...

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி மச்சிலி பந்தர் முன் பங்குனி மாசம் 28 தேதி சனிவாரம் 29 தேதி ஆதிவாரம் இதுக்கு நாளது அவ்றீல் மாசம் 8 தேதி ஆதிவாரம் அல்லது 7 தேதி சனிவாரம் ராத்திரி லக்கையேறி பிடிச்சார்கள் யென்றும் கோட்டையிலே முன்னூறு சொலுதாதுகளும் ஆயிரம் சிப்பாயிகள் மட்டுக்கும யிருந்தார்கள் ஒரு துப்பாக்கியாலே யுஞ்சுட யில்லை யென்றும் முசியே மறக்கி தெ கொம்பிளாம் (Marquis de Conflans) 300 முன்னூறு சொலுதாதுகளும் ரெண்டாயிரம் பாறுக்காறர்களும் வெளியே யிருந்தார்கள் யென்றும் அப்பால் சண்டை போட்டதும் சலாபத்து சங்கு பேருக்கு சண்டை போட்டதும் அவருக்கும் இங்கிலீசுக்காறருக்கும் சக்கியமாய் வரும் மச்சலி பந்தருக்கு அப்பால் பெசவாடையிலே (Bezavada) வந்திறங்கி யிருக்கிற வர்களுடைய காகிதம் வராதினாலே ஒரு வயணமும் நிச்சயமாய் சொல்லக் கூடாது. பந்தருக்கு முக்காத வழி நான் காதவழியிலே யிருந்த பிரான்சுக்காறன் குண்டூர் என்கிற சற்க்காரிலே யிருக்கிறவன் எழுதின காகிதமான படியினாலே பந்தர் சத்துருக்கள் பிடிச்சுக் கொண்டது மெய்தான் கொடி சலாபத்து சங்கு பேருக்கு போட்டது மெய்தான் சவிஸ்தாரமாய் நடந்த பூருவோத்திரம் மாத்திரம் தெரியாது யென்றும் ரெண்டொரு ஒப்பிசியால்மார் வந்தவர்கள் சொன்னார்கள். இனிமேல் பூறுவோத்திரம் அறிந்து யெழுத வேண்டியது. இத்தனாள் ராத்திரி

வெள்ளைக்காறர் ரெண்டொருத்தர் வந்தவர்கள் சொன்னது முசியே லெறி பண்டிகையான படியினாலே இன்று சாயங்காலம் தானே பாதிரிமார்கள் வெள்ளைக்காறர்கள் வெள்ளைக்காரச்சிகள் வகையிராக்கள் வந்து சந்திப்பார்கள். அவர்களுக்கு முசே லாலி பண்ணுற அவமரியாதையைத் தொட்டும் தன் பண்டிகை கொண்டாடினால் தனக்கும் தனக்கு முன்னிருந்த கோவற்ணதோர்களுக்கும் நடக்கிற மரியாதை நடவாததைத் தொட்டு போன வருஷமே யிங்கே பண்டிகை செய்யாமல் பிறம்பே வெளியிலே யிருக்கிற முசியே பெடுத்தல்மீ தோட்டத்திலே போய் விட்டார் யிந்த வருசம் அவமரியாதை நடக்கிறதைத் தொட்டு பகலைக்கு மேலாக தமக்கு முபாராக்கு பாதி சொல்ல வருகுறவர்களுக்கெல்லாம் வீட்டுக்குள்ளே யில்லையென்று சொல்லச் சொல்லி வீட்டுக் கதவை சாத்திப்போட்டு உள்ளே தானே விசாரத்தினாலே படுத்துக் கொண்டிருந்தாரென்று சேதி சொன்னதும் அல்லாமல் நாளை தினமும் யிப்படியே நடக்கும் யென்று சொன்னார்கள்.

### *1759 வருசம் அவ்றில் மாசம் தேதி 23; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 14; சோமவாரம்*

இத்தனாள் முசியே லெறி புதுச்சேரி கோவற்ணதோர் பேர் பண்டிகையான படியினாலே நாம் கோட்டைக்குப் போக வேணுமென்று ஆறு மணிக்கு தெருவே வந்து பல்லக்குக் காறர்களை தாக்கீது பண்ணி பல்லக்கு முஸ்தீப்பு பண்ணி வெளியிலே வைக்கச் சொல்லி வந்த விடத்திலே முசே லாலி அண்டைக்கு வந்து வந்தவாசிக்குப் போயிருந்த முசியே தெலார்ஷு மறுபடியும் ஆறு மணிக்கி நம்முடைய வீதிக்கு நேரே கோட்டையைப் பார்த்தாப் போலே போகத் தக்கதாக பார்த்து மனுஷரை அனுப்பி வைச்சு விசாரிச்ச விடத்திலே முசே தெலார்ஷு தான் வீட்டே போறாரென்று கபுறு சொன்னார்கள். அப்பால் யேழரை மணிக்கு கோட்டைக்குப் போன விடத்திலே முசியே லெறி துபாசியாகிய இஞ்சினீர் முத்தப்பிள்ளை குமாரன் யென்மேல் வீட்டுக் கதவுகளெல்லாஞ் சாத்தி நிறுமானுஷிய மாயிருக்கு தென்று கேட்டதுக்கு நேத்துதானே உத்திரவு குடுத்தார்கள். கதவுகளை யெல்லாம் சாத்திப் போட்டு ஆர் வந்து கேட்டாலும் இல்லையென்று சொல்லச் சொன்னதுமல்லாமல் பொழுது விடிய காலத்தாலே மூணுவரிசை துப்பாக்கி சுட்டு யிருபத்தோரு பீரங்கி அஞ்சுமணிக்கி சுடுகிற வாடிக்கை யல்லவா—அந்தப்படிக்கி பீரங்கிகளும் சுடவாண்டாம் கோட்டையிலே நாளையதினம் கொடி போட வேண்டாமென்று சொன்னபடிக்கி யித்தனாள் காலத்தாலே அஞ்சு மணிக்கு பீரங்கியும் போடயில்லை. யின்றைய தினம் கோட்டை கொடி கூட போடயில்லை. கோயிலைக் கூட சாத்திப் போடச்சொன்னாரென்று சொல்லி நீங்களிருக்கிறத்திலே காரியமில்லை போங்கோள் யென்று

சொன்னான். அப்படி பேசியிருக்கச்சே முசியே பெடுத்தல்மீ முசியே பொசேத்து முசியே குளுவேத்து முசியே கில்லியார் வகையிராக்கள் யேழெட்டு பேர்கள் வந்தவர்களுக்கும் துபாசி முசியே லெறி யில்லை வெளியே போனாரென்றும் சொன்னார். அவரவர் ரெண்டு நாழிகை தேசகாலம் யிருந்து அவரவர் வீட்டே போனார்களென்றும் என்னைப் பார்த்தவுடனே முசியே கில்லியார் யிருந்து கொண்டு நீர் சொன்ன சாஸ்திரமெல்லாம் அப்படியே மச்சிலி பந்தர் யிந்த அப்றீல் மாசம் 8 தேதி ஞாயத்துக்கிழமை சூரிய உதயத்துக்குப் பிடிச்சுக் கொண்டு சலாபத்து சங்குவினுடைய கொடியும் போட்டு தீந்தது உனக்கு சாஸ்திரம் சொன்னவன் மெத்தக் கட்டிக்காறன் யினிமேல் யென்ன நடக்கு அது சொல்லவேணுமென்று கேட்டார் போனவருஷம் பங்குனி மாசம் 30 தேதியோடே சகலபயமும் பரிகாரமாய் யென்ன பொல்லாப்பு நடக்க வேணுமோ அதுகளெல்லாம் நடந்து தீந்துது. இந்த வருசம் சித்திரை மாசம் முதல் சுபமாய் நடக்க வேணும் யிதுக்கு கப்பல் வந்து அதிலே வேரே ஒரு பிரபு வந்து அவர் முன்னிலையாய் மேற்சே செஞ்சி சுபா ஆவது அல்லது ஆற்காடு கோட்டையாவது பிறதான ஸ்தானஸ்தானமாக வைத்துக் கொண்டு ராசபாரம் நடக்க வேணும் யிதுக்கும் யிந்த மாதம் 20 தேதி முதல் வையாசி மாசத்துக்குள்ளே ஒரு சுபம் காணவேணும் அப்பால் ஆடி மாசம் முதல் சுபம் பிடிச்சு ராசயோகமாய் திருக்கு விசயம் பண்ணி நடக்க வேணும். அப்படி நடவாமல்ப் போனால் தத்து விபரீதமாய் நடக்கும் சத்துருக்கள். ஆக்கிறாம் இல்லாத போனால் இதுக்கு பயவொறாய் யினி ஒருவேளை உங்களுடனே சாவகாசமாய் சொல்லுகுரேன் என்று சொல்லி அவர் கையில் அனுப்பி வைச்சுக் கொண்டு வரச்சே கடற்கரையும் சந்திர அய்யனும் அவன் தம்பி காரைக்காலிலே யிருந்து வந்த சீனிவாசனும் கண்டு நானுங்களண்டைக்கு வரவேணுமென்று யோசனை பண்ணினேன். அப்பால் முசியே குளுவேத்து வகையராக்கள் கண்டவர்களெல்லாம் மச்சிலிபந்தர் பிடிபட்டுப் போனது மெத்த ஆச்சரியமாயிருக்குது அறுநூறு சொலுதாதுகளும் மூவ்வாயிரம் நாலாயிரம் பாறுமிருக்க பிடிபட்டுப் போனது மெத்த பொல்லாத வேளையென்றும் நேத்து சாயங்காலம் சேதி வந்தவுடனே முசியே லெறி முசியே லாலிக்கு தானும் ஒரு காகிதமெழுதி அவ்விடத்திலிருந்து வந்த காகிதங்கூட குடுத்து வந்தவாசிக்கு முசே லாலி அண்டைக்கு அனுப்பி விட்டாரென்று முசியே லாலி வந்து முசியே புசியை அழைப்பிச்சுப் போட்டதினாலேயும் முசியே மொறசேனை அழைப்பிச்சத்தினாலேயும் முசியே சலாபத் சங்கு பிராப்பும் போச்சுது. சீமைகளும் போச்சுது. பிரான்சுக் கும்பினீருக்கு முழுகிப் போச்சுதென்று முசே லாலி வந்து பிரான்சு கும்பினீரை முழுக்கடிக்க வந்தானென்றும் சரிபோன படிக்கெல்லாம் சொன்னார்கள். நான் பதில் வுத்திரமே சொல்லாமல்

கேட்டுக் கொண்டிருந்து அனுப்பிவைச்சுக் கொண்டு பத்தரை மணிக்கு வீட்டுக்கு வந்தேன் பனிரெண்டு மணிக்கி முசியே லெறி கதவைத் திறந்து கொண்டு வெளியே பிறப்பட்டு முசியே தெவொ வீட்டுக்கு சாப்பிடப் போனாரென்றும் சேதி சொன்னார்கள்.

***1759 வருசம் அவ்றீல் மாசம் தேதி 24; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 15; அங்காரகவாரம்***

அப்பால் மச்சிலிபந்தர் பேச்சும் சம்பவிச்சது மெய்தானாவென்று கேட்டதுக்கு மெய்யென்று சொல்லாமல் சிறிது நியாயத்தினாலே பொய்யென்று சொல்லலாம் யென்று சொல்லி மறுக்கி கொம்பிளாம் (Marquis de Comflams) முசே லாலிக்கு யெழுதின காகிதத்திலே அறுநூறு சொலுதாதுகளும் முவ்வாயிரம் பாறுக்காறர்களும் யிருக்கச்சே இங்கிலீசுக்காறன் நானூறு சொலுதாதுகளும் விசயராமராசா மகன் ஆனந்தராசா பவுன்சுக்கும் பின் வாங்கத் தக்கதாக யில்லை யென்று யெழுதின காகிதம் வந்து யிருபது நாளாச்சுது.

அப்பாலும் பந்தர் கோட்டைக்கு சுத்திலும் வெளியான படியினாலே கொஞ்சத்திலே கோட்டை வாங்கக் கூடாதென்று ஞாயத்தினாலே பொய்யென்று சொல்லுகுறது வெகு பெலனான படியினாலே முடக்காங்கையினாலே புத்திசலிச்சு குடுத்து விடவும் ஞாயம் உண்டென்றும் மெய்யமாயிருக்குதென்று சொன்னதுக்கு கபுறு யில்லாமல் தானே வாய் விசேஷத்தின் பேரிலே தானே யிந்தப் பேச்சு மெய்யென்று எல்லாரும் கேழ்விப்பட்டதென்று கேட்டதுக்கு பந்தருக்கு பந்தர் மேற்கே குண்டூர் என்று முக்காத வழியிலே நாற்காத வழியிலே யிருக்குதாம் அதிலே ஒரு பிரான்சுக்காறனை வைத்துயிருக்குது. அவனெழுதின காகிதத்தின் பேரிலே இப்போ போய் விட்டுதென்று சொல்லுகுறதென்றும் பந்தர் போனால் பெகுபணம் பிரான்சுக்காறருக்கு நஷ்டம் வரும் எனக்கு மாத்திரம் இருபத்தையாயிரம் ரூபாய் நஷ்ட்டம் வரும் யென்றும் முசே லாலி வந்து இங்கிலீசுக்காறர் கும்பினீரையும் பிரான்சு கும்பினீரையும் முழுக்கடிக்க வந்தானென்றும் யின்றைக்கு கோன்சேல் கூடப்போறார்கள்— நான் போக வேணுமென்று முசே லாலியுடைய பயம் முசியே தெலார்ஷு போனவன் பாதி வழியிலே யிங்கிலீசுக்காறர்கள் யிருக்குறார்களென்று டகனா போட்டு யெழுதி அனுப்பிப்போட்டு திரும்பிக் கொண்டு வந்தான். ட்டணா யிருக்குறதாய் யிருக்குது. உமக்குத் தெரியும் யென்றும் சொல்லி பின்னையும் லோகா பிரமமாய் ஒரு நாழிகை நேரம் பேசியிருந்து அனுப்பிவைச்சுக் கொண்டு சாராயக் கிடங்கிலே வந்து விசாரித்துப்போட்டு பத்தரை மணிக்கி வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி ஆற்காட்டிலே பிரான்சுக்காறர் கொம்மாந்தாமா யிருந்தவனும் ரசாசாயபு நியாயமாயி நேத்து துலுக்கனும் ஆற்காடு வந்த காலாடிகள் வகையறாக்கள் கையிலே அவனவன் அதிகாராசனுசாரமாய் முப்பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் வாங்கினதாயும் அந்தச் சேதியை முசே லாலி ஆற்காட்டுக்குப் போன அவ்விடத்து வற்தகர்கள் வகையிராக்கள் வந்து பிராது பண்ணிக் கொண்டதின் பேரிலே ஆற்காட்டு கொம்மாந்தாமை ஆருடைய உத்திரவு பேரிலே நீயிப்படி வாங்கினா யென்று கேட்டதுக்கு சிப்பந்தி சிலவுகளுக்கு மயில்லாமல் போனதினாலே நானும் ரசாசாயபு மனுஷனும் வாங்கி சிப்பந்தி குடுத்தோமென்று மனுஷனும் வாங்கி சிப்பந்தி குடுத்தோமென்றும் சொன்னதுக்கு என்னுடனே சொல்லாமல் எப்படி வாங்குவீர்களென்று அந்தப்பணம் வரவுக்குஞ் சிலவுக்குஞ் சரியாய் கணக்கு கேழ்க்கிற விடத்திலே அதிலே கொம்மாந்தான் சிறிது யெடுத்துக் கொண்டான். அவனண்டையிலே தேவனாம்பட்டணம் வெங்கிடாசல நாயக்கன் அண்ணன் மகன் ஒரு பிள்ளையாண்டான் துபாசியாயிருந்தவன் அவன் கொஞ்சம் யெடுத்துக் கொண்டானாம். அதின்பேரிலே கொம்மாந்தாமை காவல் பண்ணி வீடுவாசல் எல்லாம் முத்திரிச்சு வேரே கொம்மாந்தாமை வைத்து அவன் துபாசியை நடுத்தெருவிலே தூக்கிப் போட்டு ரசாசாயபு மனுஷனைப் பிடிச்சு வரச்சொன்னாப் போலே அவன் வேலூரை ஓடிப்போய் விட்டானென்று சொன்னதுக்கு வேலூருக்கு ரெண்டு குதிரை சுவாரிகளை அனுப்பி பிடிச்சு வரச்சொல்லிச் சொன்னாரென்று கபுறு சொன்னார்கள். இனிமேல் நடக்கிற சேதி அறிய வேண்டியது.

***1759 வருசம் அப்றீல் மாசம் தேதி 25; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 16; புதவாரம்***

மைத்தப்படி சென்னப்பட்டணம் தெத்து வாசற்படி யிலேயும் வில்லியநெல்லூர் வாசற்படியிலேயும் போறவார மனுஷர்களை நிறுத்தி கும்பினியார் சம்பளம் குடுக்கயில்லை. நாங்கள் பட்டினியாய் கிடந்து சாவோமா வென்று கத்திகளை உருவிக்கொண்டு பயமுறுத்தி ரெண்டொருத்தரை அடிச்சுப் பேருக்கு ஒரு ரூபாயும் ரெண்டு ரூபாயும் இந்தப்படிக்கும் நாற்பது ரூபாய் மட்டுக்கும் ஒவ்வொரு வாசலுக்கும் வாங்கினார்களென்றும் நேத்து சொன்னார்கள். இன்றைய தினம் கெவுனியா கெவுனிவா சலிலே தண்ணிக்குப் போற பெண்டுகள் கையிலே யிருக்குற செம்பு குடங்களுக்கு அஞ்சு ரூபாய் மூணு ரூபாய் யிந்தப்படிக்கு கொண்டு வந்து குடுத்தவர்களுக்கு செப்பு குடங்களை குடுக்கிறார்களென்றும் இந்தச்சேதி சின்ன துரையுடனே போய் சொன்னதுக்கு பெரியதுரை முசியே லெறியுடனே போய் சொன்னதாயும் அவர் சொன்னது பதில் உத்தாரம் சொல்லாமல் யிருந்தானென்றும்

சொன்னார்கள் இதல்லாமல் பொழுது போய் பொழுது விடியந்தனையும் சிறிது வெள்ளைக்காற கணக்கன் சிறிது ஒப்பிசியால்மார்கள் யேழெட்டு பத்து வெள்ளைக்காறர்களின் தேவடியாக்கள் தெருவு கைக்ளத்தெரு சேடத்தெருவு பெருமான் கோயில் தெரு வகைரா யிடங்களிலே வீட்டுகளிலேயும் யேறி குதிக்குறதுகளும் கதவுகளை யிடிக்கிறதும் ஆண்பிள்ளைகள் நேரிட்டவர்களை கத்தியினாலே வெட்டுகுறது. யிந்தப்படிக்கி நடக்கிற அலமு சாஸ்திகள் சொல்லி முடியாது. யிதிலே பொம்மலாட்ட பாப்பய்யன் கூட மூணு வகுப்பும் சிறிதும் மத்த தாசிகளும் வெள்ளைக்காறர்களுக்கும் அந்தரங்கமாய் அழைச்சுவர வாடிக்கை பண்ணிப் போறபடியினாலே யேகத்துக்கு தொடர் ஆயித்தப்பட்டவர்கள் யினி அடங்கிறது போன வருசம் மாசி மாசம் மட்டுக்கும் வெள்ளைக்காற தேவடியாக்கள் யிவ்விடத்திலே அத்தாய் நின்றார்கள். பங்குனி மாசம் முதல் அத்து தம்பி நடக்குறது வெள்ளைக்காறரெல்லாம் லசக்கரிலே போயிருக்கிற படியினாலே யிவ்வளவுடனே நிற்குது. ஒப்பிசியால் மார்கள் யிந்த வெளியிலே யிருந்தால் வேரே விந்தைகளாய் நடக்கும். அதரிப்போம்— யென்று சொல்லிக் கொள்ளுகுறார்களின்னம் யென்ன யென்ன விந்தைகளாய் நடக்குறதோ அறிய வேண்டியது....

***1759 வருசம் அவ்றீல் மாசம் தேதி 26; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 17; வியாழக்கிழமை***

இத்தனாள் கெவுனி வாசலிலே செப்பு குடங்கள் தண்ணீருக்குப் போறவர்கள் கையிலே வாங்கிக் கொண்டரென்றும் ராத்திரி பத்துமணிக்கி வந்தவாசி திருவேங்கிடபிள்ளை குமாஸ்தா நாறணய்யங்காரை முச்சிய நம்புலு வீட்டண்டையிலே யேழெட்டு பேராய் போகச்சே யேழெட்டு வெள்ளைக்காறர்கள் எதிரே வந்தவர்களில் ஒருத்தன் வந்து கத்தியை உருவிக்கொண்டு நாறணய்யங்காரை ரெண்டு வெட்டாய் வெட்டினான். அதிலே யிவர்கள் ஓடிப்போபனார்கள்—அப்பால் பின் ஆராரை வெட்டினார்களோ தெரியாது யென்று செதி சொல்லி அனுப்பினார்.

# மே 1759

*1759 வருசம் மாயு மாசம் தேதி 1; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 22; செவ்வாய்கிழமை*

இத்தனாள் காலத்தாலே முசே லெறி கோயிலுக்குப் போய் வந்தபிறகு காரைக்காலுக்கு வடக்கே யிருந்து கட்டு மரக்காரன் முசியே போறுஷே காகிதங் கொண்டு வந்து ஒன்பது மணிக்கி குடுத்ததாகவும் அந்தக் காகிதத்திலே காரைக்கால் துறைக்கி நேராக நேத்திய தினம் இங்கிலீசுக்காறர்களுது பனிரெண்டு கப்பல்கள் கண்டதாய் யெழுதி அனுப்பினானென்றும் வெள்ளைக்காறர் சேதி சொன்னார்கள். தமிழர் வந்த கட்டு மறக்காறன் இங்கிலீசுக்காறருது பனிரெண்டு கப்பல் காரைக்கால் துறைக்கி நேராக நேத்து மத்தியானம் கண்டதாய் வந்து சொன்னார்கள். இந்தச் சேதி முசியே கோந்தாதே தெஸ்தேன் (Comte de Estaing) யேறிப்போன கப்பல் நேத்து ராத்திரி பாயெடுத்து ஓடினாலும் காத்தில்லாததை தொட்டு துரைக்கி நேராக கொஞ்சமாய் காண்பிச்சுக் கொண்டிருந்தபடியினாலே அந்தக் கப்பலுக்காறனுக்கு இங்கிலீசுக்காறருடைய இஸ்காதுரு காரைக்கால் துறைக்கு நேராயிருக்கிற சமாச்சாரம் வந்தது. நீங்கள் யெச்சரிக்கை யாயிருக்கவும் யென்று முசியே லெறி யெழுதி அனுப்பினதாயச் சேதி சொன்னார்கள்.

இத்தனாள் முசியே சுப்பீர் ஆற்காட்டு லசுக்கரிலே யிருந்து புதுச்சேரி கோட்டையை வந்து சேர்ந்தான் யென்று கவுறு சொன்னார்கள். சந்தா சாயபு மகன் ரசாசாயபும் அல்லி நக்கீயும் முசே லாலி யிவர்கள் பேரிலே கோபம் பண்ணினதாயும் வந்தவாசியிலும் யிருந்தாப் போலே யிவ்விடத்துக்கு சொல்லாமல் பிறப்பட்டு வந்து விட்டாப் போலேயும் ஆற்காட்டு சீர்மை காரியம் ரசாசாயபுக்கு தகீர் பண்ணி வினாயக பிள்ளை மனுஷன் ராமலிங்கப் பிள்ளையை விசாரிக்கச் சொல்லி முசே லாலி கட்டனை பண்ணினதாயும் ஆற்காட்டு சீர்மை காரியமெல்லாம் ராமலிங்கம் பிள்ளை பார்க்கிறதாயும் ரசாசாயபு மனுஷர்கள் அங்கே யிருக்கிறவர்களை யெல்லாம் காவல் பண்ணினதாயும் சேதி சொன்னார்கள். ஆற்காட்டு சுபா வந்து ஒரு சுபாயிருந்து நடத்துகிற காரியத்துக்கு அய்யாயிரம் குதிரை பாதுஷா மன் சுபேதாரன் யேழாயிரம் குதிரை மன்சுபேதாரன் பெரிய மனுஷர் யிருந்து பண்ணுகுற காரியம் சொலுதாதுகளுக்கு ஆடு கோழி மாடு கொண்டு தீனி போடுகிறவன் சுபா பண்ணுகிறதாய் வந்தது. மாத்திரமாவென்று அப்படிப்பட்ட காரியக்காரனுடைய காரியக்காரனாயிருக்கிறதும் அல்லாமல் அவன் வெள்ளாட்டிப் பய்யணாயிருக்க அப்படிப் பட்டவன் விசாரிக்க காலம்

வந்தது. சரியே அதெப்படி யென்றால் பொன், வெள்ளி, செம்பு சலாவணி போய் தோல் வழங்கிற காலம் வந்தபடியினாலே மேலே யெழுதி யிருக்கப்பட்ட புழுக்கப்பயல் யிருக்கப்பட்ட ராமலிங்கன் ஆற்காட்டு சுபா காரியம் விசாரிக்கிறதுக்கு முசே லாலி உத்தாரங் குடுத்தது ஆச்சரியமல்ல வென்று சனங்கள் சொல்லிக் கொண்டார்கள். லோகம் வந்து ஷீண காலத்துக்கு என்ன என்ன கிராமங்களெல்லாம் தப்பி அக்கிறமங்களாய் நடக்க வேணுமோ. அதுகளெல்லாம் நடந்து தீர்ந்தது. நியாயத்துக்கு விரோதமான அனியாயத்துக்கு என்ன என்ன அனியாயங்கள் நடந்து தீரவேணுமோ அதுகளெல்லாம் நடந்து தீர்ந்தது. வற்ணாசிரந்தங்கள் கட்டு ஒன்று உண்டே. அதுவும் அமிஞ்சி சங்கிரமமாய் நடக்கிறதுக்கு என்ன என்ன நடக்க வேணுமோ அதுகளெல்லாம் நடந்து தீர்ந்தது. பலவந்தக் காரியங்களாய் நடக்கிறதுகள் ஒருத்தன் பெண்சாதியை யெடுத்துக் கொள்ளுறது ஒருவன் பொருளை யெடுத்துக் கொள்ளுறதும் ஒருவன் பொருளை யெடுத்துக் கொள்ளுறதும் ஒருத்தனை யொருத்தன் வெட்டுகிறதும் பறிக்குறதும் முதலான அராசிக கிருத்தியங்களும் என்ன உண்டோ அதுகளெல்லாம் நடந்து தீர்ந்தது. இனிமேல் ராச்சியத்திலே அக்கிரமம் அனீதி அதற்கணம். அனியாயம் அபந்தரை அராசகம் முதலானதுகள் என்னவுண்டோ அதுகளெல்லாம் நடந்து தீர்ந்தது. சின்ன மனுஷரிலே பிச்சை யெடுக்கிற பறையனை விட தாழ்த்தியிலலையே அப்படிப்பட்டவன் மண்டலாதி பத்தியம் பண்ணி தீந்தது. தாழ்த்திக்கு கடைசி இதைவிட வேறே யில்லை அந்தமட்டுக்கும் கண்டுது இனிமேல் நியாயம் நடக்க வேணுமில்லாவிட்டால் ராச்சியமும் முழுகிப் போகவேணும் ஆனபடியினாலே ரெண்டிலே ஒருகாரியம் நடக்கிறது பார்க்க வேணுமென்று செனங்கள் சொல்லுகிறார்கள் என்ற சேதியை சுருக்கமாய் ரெண்டு வார்த்தையாய் யெழுதி வைத்தேன்.

### *1759 வருசம் மாயு மாசம் தேதி 2; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 23; புதவாரம்*

இத்தனாள் நான் வெளியே போகயில்லை பத்து மணிக்கி கேழ்வியான சேதி யென்ன வென்றால் முசியே லெறி முதலான கோன்சேலியேர்களும் கோட்டையிலே கோன்சேல் கூடினார்கள். கோன்சேல் கூடின காரியம் யின்னதென்று தெரியாது. ஆனாலும் யெனக்கு தோத்தினதை யெழுதி வைத்தேன் மச்சிலிபந்தரை இங்கிலீசுக்காறர் பிடிச்சுக் கொண்ட சேதி ஆர்சிதமாயி முசே மொற்சேன் நரசாபுரம் போய் சேர்ந்து யெழுதி அனுப்பின காகிதமும் முந்தாம் நாள் சாயங்காலம் வந்துதே அது நிமித்தியம் மோற்சேன் நேத்திய தினம் காரைக்கால் துறை முகத்துக்கு நேராக இங்கிலீசு கப்பல் கண்டுதென்று சேதி வந்துதே அது நிமித்தியமும் பயணத்துக்கு நிமித்தியமும் என்றும்

தோத்துது. மேல் கேழ்விப்பட்டால் அப்பால் தெரிஞ்சு யெழுத வேண்டியது... சாயங்காலம் கேழழுவிப்பட்ட சேதி மத்தியானம் கோன்சேல் கூடினது வந்து கணக்கர் கோன்சேலியேருள் படகோட்டையிலே காவல் கார்க்குறது யென்றும் சுத்து கொத்தளங்கள் யெல்லாம் பீரூங்கிகள் கிட்டிச்சு தயாராக யிருக்கச் சொல்லி கட்டனை யிட்டதாயும் அதுக்கடுத்த சாதிகளுக்கு யிங்கிலீசு கப்பல்கள் வந்து காரைக்கால் துறையிலே யிருக்கிறபடியினாலே யிந்த துரையிலேயும் ஒரு வேளை வந்து நின்று சண்டைக்கு ஆரம்பிச்சால் அதுக்கு பெலப்படுத்தி யிருக்க வேண்டிய பத்திரத்துக்கு அடுத்த பெலன் எல்லாத்துக்கும் யோசனை பண்ணினார்கள் யென்று வெள்ளைக்காறர் சொன்னார்கள். இதல்லாமல் முசியே கில்லியானர் (M. Guillard) முதல் கப்பித்தானாக நேமிச்சார் களென்று அவர் உச்சாகமாக யிருக்குறார்கள் யென்று சொன்னார்கள்.

### *1759 வருசம் மாயு மாசம் தேதி 4; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 25; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் திருச்சிராப்பள்ளி யிலிருந்து பிரான்சுக்காரர் பிரிசோனோர்கள் (Prisonoar) நூறுபேர் வந்தார்களென்று சொன்னார்கள் முன் இங்கிலீசுக்காறர் பிறிசோனோர்கள் நூறு பேர்களை அழைத்துக் கொண்டு போனத்துக்கு பதிலென்று சொன்னார்கள். பட்டணத்துக்குள்ளே வெள்ளைக்காரத் தெருவிலே போறவர் வாறவர்களுடைய காது கடுக்கன்களை அறுக்கிறது ரொம்ப சுறுக்காய் நடக்குது தெத்து வாசல்களிலேயும் ரூபாய் போக்கு வரத்துக்காறர்கள் கையிலே வாங்குறது சுறுக்காயிருக்குறது யென்றும் கடைகளிலே சோராவாரி பண்ணுகுறதும் சுறுக்காய் கேழ்க்கப்பட்டுது ஆற்காட்டிலே முசே லாலி வினாயகப்பிள்ளை குமாஸ்தா ராமலிங்கனுக்கு ஆற்காட்டு சுபா குடுத்தது தானெழுதி யிருக்குதே அரிகை கூட போட்டுக் கொள்ளச் சொல்லி ஆனை பெகுமானமும் பண்ணி அரிகையும் சீரொப்பாவும் குடுத்து ஆற்காட்டு சுபா நிஷ்கருஷைக்கு பற்வானாவும் பண்ணி குடுத்ததாய் சேதி சொன்னார்கள்.

### *1759 வருசம் மாயு மாசம் தேதி 5; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 26; சனிவாரம்*

சின்னதுரை சொன்னாலும் சொல்லாவிட்டாலும் முந்தாம் நாள் தானே பரிதானம் பதினய்யாயிரம் (15000) ரூபாய் கந்தப்ப முதலி மாரிபத்திலே பேசி தீத்துக் கொண்டபடியினாலே பெகுமதி வஸ்திரம் எப்படியும் குடுக்குறது குடுக்கவே போறார்கள். இவருஞ் சொன்னார்யென்று பேர்மாத்திரம் உண்டாயிருக்கும் முசியே லெறிக்கு (M. Lyritt) தான் துகை பேசி தீந்துதே கந்தப்ப முதலிக்கி என்னா

பேசினார்களோ வெளியாகயில்லை அதுவும் கிறமமேணா வெளியாய்ப் போகுமே அல்லாமல் நிற்கத் தக்கதில்லை.

### *1759 வருசம் மாயு மாசம் தேதி 6; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 27; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே முசியே லெறி ஒன்பது மணிக்கி கோமிசேலியேர்கள் வகையிரா கோயிலுக்குப் போய் பூசை கேட்டு கொவற்ணமாவிலே வந்து வாடிக்கைப் படிக்கு யிருந்துப்போட்டு போனதாய் சேதி கேழ்க்கப்பட்டுதும் அல்லாமல் பகலைக்கு மேலாக மூணு மணிக்கு ரெண்டு பீரங்கி போட்டு மேலே செகப்பு கொடி போட்டவூரிலே யிருக்கப்பட்ட யிடம் பலப்படுத்திருக்க வெள்ளைக்காறர் மினிஸ்தர் பப்ளிக் ஒப்சியியாலுகள் கோன்சேலியேர்கள் கணக்கர் வகையராக்கள் எல்லாரும் வந்து கோட்டையிலே கூடுகிறார்களென்று சங்கேத்தமானபடியினாலே அந்தப்படிக்கி எல்லாரும் கோட்டையிலே சேர்ந்தார்களென்றும் அவர் கோட்டையும் கடற்கரையோரம் வாசற்படி கொத்தளங்கள் வூர்சுத்தி !யிருக்கிற நாலு கெவுனி வாசலுக்கு வெள்ளைக்காறர்களை வைச்சு நேமிச்சுப் பார்க்கத் தக்கதாகவும் எல்லாரும் பேரெழுதி வைத்து துகை பார்க்க கோவற்ணதோர்வுள்பட தொளாயிரத்தறுபதே சில்லரை பேர் கூடினதாகவும் அவரவர் அதிவகார அனுசாரமாய் கப்பித்தான் மயோர் கொம்மாந் தாமுகள் வகையிரா யிடங்கள் அவரவர்களுக்கு நேமிச்சு யெழுதி தீர்மானம் பண்ணி மறுபடி எப்போ செகப்பு கொடி போட்டு ரெண்டு பீரங்கிகள் போட்டவுடனே யெல்லாரும் வாரதென்று திட்டம் பண்ணிப் போகச் சொன்னதாகச் சொன்னார்கள். பட்டணத்துக்கு பட்டப்பகலிலே வெள்ளைக்காறத் தெருவிலே போரவர்களை காதுகடுக்கன்களை அறுத்துக் கொண்டு போறதும் வெட்டுகிறதும் சனிபாச்சல் குண்டு பட்டணத்துக்குள்ளே விஸ்தாரமாய் தெருத்தேருக்கு தப்பாமல் தினம் தினம் நடக்குறது யின்னம் என்ன அராசகம் நடக்கயிருக்குதோ யென்ன பட்டணத்திலே விபரீதங்கள் நடக்க யிருக்குதோ அறிய வேண்டியது....

### *1759 வருசம் மாயு மாசம் தேதி 7; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 28; சோமவாரம்*

இத்தனாள் சாயங்காலம் ஆனவுடனே பட்டணத்திலே கடைகளெல்லாம் கட்டிப் போட்டார்கள் என்றும் தெருவிலே செனங்களை வெள்ளைக்காறர்கள் துரத்துக்கிறார்கள் யென்றும் காதுகளை அறுத்தும் கடுக்கனுகளை பிடுங்கிக் கொள்ளுகிறது தலைப்பாகை களையும் துப்பட்டிகள் அகப்பட்டதை யெல்லாம் பிடுங்குறார்களென்றும் பட்டணத்திலே யிருக்கப்பட்ட செனங்கள் யெப்பேர்ப்பட்டவர்களும் காது

கடுக்கன்களைக் கழட்டி பிறப்படுவார்களே யல்லாமல் காது கடுக்கனுகளைப் போட்டுக் கொண்டு வந்தவர்களை பார்த்ததில்லை. யின்னம் என்னென்ன விபரீதங்கள் நடக்க யிருக்குதோ தெரியாது. பொல்லாத சனியென்று மாத்திரஞ் சொல்லுகிறதல்ல அத்தியந்த மிறுத்தியோடே கூடிய குரூரசனி யென்று சொல்ல வேண்டியது.

*1759 வருசம் மாயு மாசம் தேதி 10; பிறமாதி வருசம் சித்திரை மாசம் தேதி 31; குருவாரம்*

இமாம் சாயபு மகன் பதினோரு மணிக்குமேல் மத்தாபி சீரொப்பா அஞ்சுதான் ரெண்டு தட்டிலே வைத்துக் கொண்டு வந்து பேட்டி கண்டு சோராகான் மகனுக்கும் தனக்கும் யிருக்கிற வியாச்சியம் அதுக்கு யிருக்கிற காகிதங்களை காண்பிச்சு சேதி சொன்னபோது ஒன்பது பீரங்கி சுட்டார்கள் என்றும் அதுக்கு ஞாயமாம்படியே தீத்துப் போடுகுறோமென்றும் சொல்லிப் பாக்கு வெத்திலை கொடுத்து போகச் சொன்னதாயும் சேதி சொன்னார்கள். மத்தாபி தான சாமேவார்–2, மத்தாபி ஒணி–1, மத்தாபி பாகைக்கு சராத்தி படுக்காக ஆகவுருப்படி–5, எல்லாம் யிறநூறு யிறநூத்தன்பது தான் பெருமென்று சொன்னார்கள்.

*1759 வருசம் மாயு மாசம் தேதி 11; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 1; சுக்கிறவாரம்*

இதல்லாமல் முசே லாலி இங்கிலீசுக்காறர் வசமாயிருந்த காஞ்சீபுரத்தை வாங்கிக் கொண்டாரென்றும் யிங்கிலீசுக்காரர் காஞ்சீபுரத்திலிருந்தவர்கள் சென்னப்பட்டணம் போய் சேர்ந்ததாகவும் முன் திருச்சிராப்பள்ளி யிலிருந்து வந்த மகம்மது யிசுபுகான் யென்கிற கொம்மாந்தாம் திருச்சிராப்பள்ளிக்கி சாகிப் போனானென்று அயிதர் நாயக்கன் மயிசூரிலிருந்து பவுன்சுகூட்டிக் கொண்டு வந்து உபயகாவேரி தீரம் சீர்மையும் கட்டிக் கொண்டு திரிச்சிராப்பள்ளி கோட்டையின் பேரிலேயும் சண்டை பண்ணுகுறானென்றும் சலாபத்து சங்கு அண்டையிலிருந்து முசே லாலி பேருக்கு முசியே புசியை அனுப்பி வைக்கச் சொல்லி யெபதி வந்ததாயும் அதுக்கு பதிலுத்தரம் அனுப்பி வைக்குறோமென்றும் அனுப்பி வைக்குறதில்லை யென்றும் சென்னப்பட்டணம் வாங்கின பிற்பாடு அனுப்புகுறோமென்றும் சரிப்போனபடியெல்லாம் யெழுதி அனுப்பினதாயும் முசே லாலி பவுன்சுலே யிருந்த சொலுதாதுகளெல்லாம் சம்பளம் வரயில்லை யென்று துப்பாக்கிகளை வைத்துப்போட்டு சம்பளம் குடுத்தால் குடும் யில்லாவிட்டால் நாங்கள் பிறப்பட்டுப் போறோம் யென்று சங்கேத்தம் பண்ணினத்தின் பேரிலே ரெண்டு மாசத்திய சம்பளம் குடுத்து எல்லாரையும் சமாதானம் பண்ணி குறை அஞ்சாறு மாசச் சம்பளம்

குடுக்குறோமென்றும் சொன்னாரென்றும் கபுறு சொன்னார்கள் இந்த மட்டுக்கும் கேழ்விப்பட்ட சேதியாம் படியே யெபதி வைச்சேன்

***1759 வருசம் மாயு மாசம் தேதி 12; பிரமாதி வருசம் வையாசி மாசம் தேதி 2; சனிவாரம்***

தரங்கம்பாடி யிலிருந்து ரெண்டு சோடாக் காகிதங்கள் வந்துதென்றும் மசுக்கரை யிலிருந்தும் சண்டை கப்பல் வருகுதென்றும் அதுக்கு சான்சாமிகள் விஸ்தாரமாய் சேர்க்கிற அலுவலின்பேரிலே முசியே லெறியிருக்கிறாரென்று சேதி சொன்னார்கள். முசே லாலில சுக்கர் பவுன்சினால் அஞ்சு நாளைக்கி முன்னே காஞ்சிபுரத்தின் பேரிலே சண்டை போட்ட போது நூத்தி முப்பது சொலுதாதுகள் சாவுயென்றும் வேலூர் மிறுத்த சல்லிகானுக்கு ஆற்காடு சுபா குடுக்கிறதாய் சொல்லியும் முன் காரைக்காலிலிருந்து தஞ்சாவூருக்கு ஸதானாபதியாய் போய் காவலிலிருந்த பாதிரிதானே வேலூர் ராசவட்டத்துக்குப் போய் இருபத்தையாயிரம் (25000) ரூபாய் குடுக்க ராசா மொகருடனே சன்னது பண்ணி அதில் முசே லாலி கையெழுத்துப் போட்டு அவர் முத்திரை போட்டு குடுக்கிறதுமல்லாமல் குமிசெல் கையெழுத்தும் கும்பினீர் முத்திரையும் போட்டு குடுக்க வேணுமென்றும் மிறுத்தி சல்லிகான் கேழ்க்கிற தாகவும் முசே லாலி சம்மதிச்சு ரூபாயைக் கொண்டு வரச் சொல்லி கேழ்க்கிறதாகவும் முன்னே சன்னது பண்ணிக் கொண்டு வரச் சொல்லி சொல்லுகிற தாகவும் இந்தப்படிக்கி பேச்சு நடக்கிறதே அல்லாமல் காரியங் கூட நடக்கிற தில்லை யென்று சொன்னதுமல்லாமல் முசே லாலி இந்தப்படிக்கி காரியக்காறர்களா யிருக்கிற யிடங்களெல்லாம் அதனுடைய காரிய மறியாமல் பேச்சு வார்த்தை நடப்பிச்சு காரிய சுரூபத்தை குடுத்துப் போடுகுறதுமல்லாமல் யிவர்கள் விவேகிகள் அல்ல காரிய சூரூபத்திலே யிருந்தவர்களல்ல வென்கிற பேர் கூட சம்பாதிச்சுக் கொள்ளுகுறார்கள் யித்தனைக்கும் பொல்லாத காலமான படியினாலேயும் புத்திகளை கூடக் கெடுத்துப்போட்டது யென்று செனங்கள் சொல்லி கேழ்விப்பட்டதை யெழுதி வைத்தேன்.

***1759 வருசம் மாயு மாசம் தேதி 16; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 6; புதவாரம்***

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு ரெண்டொரு ஒப்பிசியால் மார் பெருமாள் கோயில் திருநாள் பார்க்க பிறப்பட்டவர்களை யிவ்விடத்துக்கு என்னண்டையிலே வந்து சொன்ன சேதி யென்ன வென்றால் முசியே லெறிக்கும் முசியே தெபொசேத்துக்கும் பங்காளா காகிதங்கள் வந்ததாயும் அதிலே முசியே லாசென்கிறன் யிங்கே யிருக்கிற லாசுவினுடைய அண்ணன் மகன் முன் தாது வருசம் பங்குனி மாசம்

பங்காளத்திலே சந்திரனாகூர் என்கிற பிரான்சுக்காறருடைய பட்டணத்தை மேஸ்தர் கிளேவிசு வஞ்சனைப் பண்ணி சண்டை போட்டு வாங்கிக் கொண்ட பிறகு முசியே லாசென் என்கிறவன் டில்லி பரியந்திரம் போய் அவ்விடத்திலே ஒரு வசீர் குமாரனை சிநேகம் பண்ணிக் கொண்டு பாதுசாவுக்கு பத்தும், பெத்து பட்டணம் வந்து சேர்ந்தாரென்றும் பங்காள நவாபு மகனுக்கும் நபாபுக்குந் தானே ஒருத்தருக் கொருத்தர் பிகாடிச்சு இங்கிலீசுக்காறரை சேர்க்க வேண்டாமென்று சொன்னதுக்கு தகப்பன் கேளாமலிருந்ததின் பேரிலே, இங்கிலீசுக்காறர்கள். அங்கே யிருந்த முன்னூறு பேர்களை பங்காள நவாபு மகன் வெட்டிப் போட்டு, பட்டாணாவிலே (Patna) யிருந்த முசியே லாசு (M. Law) வுக்கு வரச்சொல்லி யெழுதி அனுப்பினானென்றும், கபுறாயிருந்த காரியம் யித்தனாள் ராத்திரி யேழு மணிக்கு வந்த காகிதத்திலேயும் முசியே தெபொஷத்துக்கும் வந்த காகிதத்திலேயும் பாட்ணாவிலே யிருந்த முசியே லாசு வந்து பங்காள நபாபு மகனும் கூடிக் கொண்டு மேஸ்தர் கிளேவிசு (Mr. Clive) வகையிரா யிங்கிரேசுக்காறர்களைச் சிறிது பேர்களை வெட்டிப் போட்டு, சிறிது பேர்களைப் பிடிச்சுக் காவல் பண்ணி, நபாபுவையும் பிடிச்சுக் காவல் பண்ணி, நபாபு மகனுக்குப் பட்டம் கட்டியும் இங்கிரேசுக்காறர் பட்டணம் கல்கத்தாவையும் பிரான்சுக்காரருது சந்தரனாகூரையும் முசியே லாசு கட்டிக் கொண்டு செயங்கொண்டதாய் சேதி யெழுதி அனுப்பினதாய் யிந்த சந்தோஷ கபுறு ஒப்பிசியால்மார் சொன்னார்கள். வயணமாய் நாளைய தினம் அறிந்து யெழுத வேண்டியது – இது முதல் கொண்டு பிரான்சுக்காறருக்கு செயம் வரும் யென்றும் என்னுடைய காரியமும் நாளுக்கு நாள் சுபமாய் விறுத்தியாய் நடக்குமென்றும் யோசனை பண்ணிக் கொள்ள வேண்டியது – யினிமேல் சின்ன மனுஷர் பிரபல்யம் நடவாது.

***1759 வருசம் மாயு மாசம் தேதி 17; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 7; குருவாரம்***

இத்தனாள் என் தகப்பனாருக்கு வைசாக அமர பக்ஷத்துக்கு சஷ்ட்டி மரணத்தை அடைந்த படியினாலே பிராமணான் கற்மம் நடத்த வேண்டியதான படியினாலே வீட்டிலிருந்து வருஷா வருஷம் நடப்பிக்கிறபடிக்கி நடப்பிச்சேன். ஆனால் யிந்த திதியுடனே கூட முப்பத்தினாலு காரியங்களான திதியுங் குடுத்தேன். வருஷத்து வருஷம் அதிக சம்பிரமமாகத் தானே நடந்துது. யினிமேல் யென்ன நடக்குமோ நானறியேன். ஆனால் சீத்தாராம சோசியர் என் சாதகத்தை சொன்னபடிக்கி யெழுதிக் குடுத்தபடிக்கும், வருகிற வருஷம் திதி புதுச்சேரியிலே நான் குடுக்க ஞாயமில்லை. வெளியிலே ஒரு பட்டணம் ஒரு கோட்டை அதுக்கு நாம் சுவாமியாயிருந்து அவ்விடத்திலே வெகு

சம்பிறமமாய்க் குடுக்க வேணும் அது அனுபவத்தின் பேரிலே பார்க்க வேண்டியது.

இத்தனாள் காலத்தாலேயும் மத்தியானமும் சாயங்காலமும் கேழ்விப்பட்ட சேதி : முசே லாலி பவுன்சுடனே காஞ்சீபுரம் சர்வதீர்த்தக் கரையில் யிறங்கி யிருந்தவர்களுக்கும் இங்கிலீசுக்காறர் சமீபத்தில் யிறங்கி யிருந்தவர்களுக்கும் யுத்தமாயி சண்டையிலே உபய தளத்திலேயும் செனங்கள் மடிஞ்சதும் அதல்லாமல், நம்முடைய பவுன்சுலே யிருந்த சிறிது குவாடுது வெள்ளைக்காறர் அன்பது அறுபது குதிரைக்காறர்கள் யிங்கிலீசுக்காற பவுன்சிலே சேர்ந்து போனதாயும் சிறிது சொலுதாதுகளும் ஒப்பிசியாலுமார்களும் இங்கிலீசுக்காறர்கள் பவுன்சிலே சேர்ந்து போனதாயும், நம்முடைய பவுன்சு காஞ்சீபுரம் விட்டு சம்பளம் யில்லாததைத் தொட்டு திருவொத்தியூர், வந்தவாசி வந்து சேர்ந்து புதுச்சேரிக்கு தமாம் (?) பவுன்சு வந்து சேருகிறாப் போலேயும் முசே லாலி இன்றைய தினம் ராத்திரிக்கு புதுச்சேரிக்கு வந்து சேருகிறதாயும் கேழ்க்கப்பட்டுது. பயாவாரியாக யினிமேல் கிரமமாய் அறிந்து திட்டம் பண்ணி எழுதவேண்டியது.

***1759 வருசம் மாயு மாசம் தேதி 18; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 8; சுக்கிரவாரம்***

நேத்து ராத்திரி யெட்டு மணிக்கு பீரங்கிச் சத்தம் கேட்டுது. அதுக்கு மனுஷர்களை அனுப்பி விசாரித்தால் முசே லாலி பெருமுக்கல் வந்து சேர்ந்தானென்று கில்லேதாரன் போய் நசர் வைத்துக் கண்டு யிருபத்தோரு பீரங்கியும் போட்டானென்றும், யின்றைய தினம் மத்தியானம் வழுதாவூர் கோட்டை வந்து சேருகிறானென்றும் அறுக்காறுகள் வந்து சொன்னார்கள். அலுமாஞ்னு சொலுதாதுகள் உசந்து குதிரைக்காறர்கள் தமாமும் சம்பளமில்லை யென்றும் உத்தியோகம் கவையில்லை யென்றும் பிறப்பட்டு வந்து விட்டார்கள். தண்டு வெள்ளைக்காறர்கள் பெகு பேர் பத்து பேரும் யிருபது பேரும் சூத்துகரே உணர்ந்து வந்து சேருகுறார்களென்றும் சொல்லிப்போட்டு பெரியண்ண முதலியை அனுப்பிவைச்சுக் கொண்டு போனான்.

***1759 வருசம் மாயு மாசம் தேதி 18; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 8;***

இத்தனாள் ராத்திரி சிரஞ்சீவி அண்ணாசாமி படுத்துக் கொள்ளுகிற வீட்டிலே யிருந்த தந்தம் போட்ட அலமாரி மேலே யிருந்த விசிறி யெடுக்கப் போய் அலமாரி இடிச்சுக் கொண்டு விழுந்தது. பெய்புலி முத்தனென்கிறவன் அலமாரி யிழுத்தவன் அவனும் விழுந்தான்.

அவனுக்கு காயம்படாமல் அலமாரிக்கு சேதமில்லாமல் சிரஞ்சீவி அண்ணாசாமி தாழப்படுத்துக் கொண்டிருந்தான். அவனை சாப்பிட யெழுப்பிக் கொண்டு போனார்களாகையால் அவனுக்கு காயமில்லாதவனாய்ப் போய் வையாசி மாசம் 6 முதல் 8 தேதிக்குள்ளாக அமிஷை சனிபாய்ச்சல் முன்யெல்லாம் ராச நிஷ்டூரம் வந்து தாங்கி வந்தது. அதன் பிறபாடு அஞ்சு வருஷமாய் ஒவ்வொருத்தர் ரெவ்வண்டு பேர் சாவு காணும் அக்கிரமம் போனபடியினாலே அது காணாதென்று சொன்னதுக்கு, யின்று காத்தாலே முசியே துப்பிளாம் சம்மதி ஆயிரம் ரூபாய் ஆதாயம் வாறது போனது ஒரு நஷ்டமும் யின்னேரம் சீவிய யிமுசை வராமல் பொட்டிக்குஞ் சேதம் வராமல் மார்க்கமாய் சனிப்பாய்ச்சல் தோஷம் காண்பிச்சது யென்று யோசனை பண்ணிக் கொண்டு சுப்பா சோசியர் யிருந்தவரைக் கேட்டதுக்கு, நான் முன்னமே காணுதென்று சொன்னேன்.

இன்று ராத்திரி முதல் பட்டணத்துக்கும் வெள்ளைக்காறருக்கும் சனிப்பாய்ச்சல் தோஷம் குரூரமாய்த் தானே பிடிக்கும். நம்முடைய வீட்டிலே மாத்திரம் சனிப்பாய்ச்சல் தோஷத்துக்கு சீவிய யிமுசை காணாமல் தெருவிக்கையாய்ப் போகும். நாளை முதல் பிடிக்கப் போகுதே பட்டணத்திலேயும் வெள்ளைக்காரத் தெருவிலேயும் சீவனுக்கும் பாக்கியத்துக்கும் கூட பிடிக்கும், அல்லாமல் நம்முடைய வீட்டு சாடையாய் தெலிபோ் காதென்று சொன்னதும் அல்லாமல் சாராயக் கிடங்குக்கு அடுத்த மேலண்டையிலே ஒரு வாடை சாரல் பிறப்பட்டு இஞ்சினீர் குளத்திலே விழுந்து அங்கே யிருந்து தெற்கே ஒரு வாய்க்கால் பிறப்பட்டு அது ரெண்டாய்ப் பிறிஞ்சு ஒரு வாய்க்கால் சம்பாக் கோயிலுக்கு அடுத்த தென்னண்டை பிறப்பட்டு மேற்கே யிருக்கிற முசே தும்மா தோட்டத்துக்குத் தெற்கே புறப்பட்டு வாரத்திலே விழுந்து அகலத்திலே விழுகுது. ஒரு வாய்க்கால் வடங்காசாலைக்கு மேலண்டை ஓரமே பிறப்பட்டு முகத்துவாரத்திலே விழுகுது. சம்பாக் கோவிலுக்குத் தெற்காக மேற்கே யிருக்கிற வாய்க்காலுக்குத் தெற்காக யிருக்கிற புத சனங்களுக்கும் அந்த வாய்க்காலுக்கும் கிழக்காகி முதல் யீசானிய மூலையிலே யிருக்கிற புதவாரங்கள் சுக்கிறவாரங்களுக்கு சனி பாய்ச்சல் பிடிக்குறதே அல்லாமல் யிதுக்குள்ளாக யிருக்கிற தமிழருக்கு முன்பிடிச்சுதே அல்லாமல், யினிமேல் பிடிக்கத் தக்கதில்லை யென்று சொல்லி வாய்க்காலுக்குத் தெற்கே யிருக்கிற புத செனங்களுக்கு நாளை சனிவாரமாச்சுதே, அதிலே தாவது சின்னம் காண்பிக்குமா யென்றும் சொன்னதுக்கு மீராவெளியிலே யிருக்கிறவர்களுக்குக் காணவேணும் யென்று சொன்னத்துக்கு இன்று முதல் காணும் யென்று சொல்லி, காணுறது சீவகானியாய் காணும் பாருங்கோள் யென்று சொல்லி இன்று ராத்திரி தானே சனி ஆரம்பிச்சத்துக்கு நம்முடய வீட்டிலே தானே அடையாளம் கண்டுது. யின்றைய தினத்துடனே யென்று சொல்லி முசே

லாலி இன்று ராத்திரிக்குத் தானே வந்து சேர்ந்தார். நாளை முதல் சுக்கிற வாரங்களுக்கும் புத வாரங்களுக்கும் பாப பலன் குடுக்க வேணும் என்று சொன்னத்துக்கு முசே லாலி யின்று ராத்திரியே வருவாரென்று கபுறு யிருக்கிறபடியினாலே வந்து சேருவாரென்றும் மைத்த காரியம் நாளை முதல் கொண்டு அறியவேண்டியது சொன்னேன்.

இத்தனாள் ராத்திரி பதினொன்றரை மணிக்கி முசே லாலி மூடு பல்லக்கிலே கோட்டையிலே பிறவேசிச்சுப் போட்டாரென்று ராத்திரி பனிரெண்டு மணிக்கு வந்து கபுறு சொன்னார்கள்...

### *1759 வருசம் மாயு மாசம் தேதி 19; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 9; சனிவாரம்*

இத்தனாள் காத்தாலே முசே லாலி செனராலை யெட்டு மணிக்கிக் காணவேணுமென்று கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே கில்லியார் பிடவை பார்க்கிற சாலை அண்டையிலே நின்றவர் என்னைக் கண்ட மாத்திரத்திலே என்கிட்ட வந்தார். வந்தவர் "உன் சாஸ்திர மெப்படி யிருக்குறது? நீர் சொன்னபடிக்கி முசே லாலி வந்தாரே, அவர் சிறிது வெள்ளைக்காறருக்கும் தமிழருக்கும் பாபபலன் குடுப்பாரென்று சொன்னாரே? அதெப்படி நடக்கு"மென்று கேட்டதுக்கு, "நேத்து ராத்திரி சனி பகவான் கோட்டையிலே பிறவேசிச்சதுக்கு கொல்லை முசே தும்மா, தோட்டத்துக்குத் தெற்கே வாய்க்காலிருக்குதே வாய்க்காலுக்குத் தெற்கே தமிழன் யோகம் பொசித்த பேர்கள் வீட்டுக்கு அப்பால் கோட்டையிலே யிருக்கிற பேர்கள் அக்கினி மூலையிலே யிருக்கிற வெள்ளைக்காறருக்கும் பிடிக்கும். அதுக்கும் அடையாளம் மீராப்பள்ளியிலே நெருப்பு பட்டு சிறு துண்டுகளாவது தோட்டத்திலே யாவது வெந்து போகும். யிது அடையாளம். யிந்தப்படிக்கி யிவ்விடத்திலே நடந்து அப்பால் ஆடி மாதத்தையிலே வேறே ஒரு பிறபு நேமகம் ஆனபிறகு அது முதல் பட்டணத்துக்கு சுபமார்ச மனுஷர்களுக்கு சுபம். ஆவணி மாசம் பிறட்டாசி மாதம் சென்னப்பட்டணம் கைக்கு வரும். அப்பால் திருச்சிராப்பள்ளி கோட்டையிலே நம்முடைய கொடி விழுந்து அவ்விடத்திலிருந்தும் கோல்கொண்டை மட்டுக்கும் பிரான்சு ராசாவினுடைய ஆணை ஆக்கனை நடக்கிறதே அல்லாமல் மைத்தப்படி வேறே விதமாயி நடவாதென்றும் புதுச்சேரி ரேவுக்கும் செஞ்சி யெசமானிருக்கிற யிடமும் யேற்பட்டு நடக்குமென்று உமக்கும் நாளது வரைக்கும் சொன்னபடிக்கு தானிப்போது நடக்க போகும் படிக்கி நடக்குதென்று சொன்னதுக்கு" பட்டணத்தை பிடிச்ச முதல் யின்னம் போகயில்லையே யென்றார்.

வேறே ஒரு பிறபு ஆடி மாசத்திலேயே வருவானே அவன் வருகிற மட்டுக்கும் முதல் பிடிச்ச வாக்கிலே யிருக்குமானால் முசியே லெறி,

முசியே தெவோ முதலான பேர்கள் சிறிது பேர்களுக்கு முசியே லெறி பாபபலனைக் குடுத்து பாக்கியத்தை வுருஞ்சுவான். கும்பினீர் காரியம் படுத்துக் கொள்ளும் மகாராசாவினுடைய யனுஷர்களே அதிகாரத்துக்கு பிறப்படுவார்கள். அப்பால் ஆடிமுதல் யிதுவும் நின்று வேரே பிரபஞ்சமாய் நடக்குமென்று சொன்னானே யிப்படி நானும் அந்தப்படிக்குத் தானே நடக்கப் போகுதென்று சொன்னேன். யிப்படி நானும் முசியே கில்லியாரும் பேசியிருக்கச்சே கோட்டை கார்க்குற ஒப்பிசியாலும் வந்து முசே லாலி செந்தினேருக்கு யெழுதி குடுத்ததென்ன வென்றால் முசே லெறி முதலான பேர்கள் கோன்சேலியேர்களாக வந்தாலும் அழைத்து அனுப்பினதே வுண்டானால் வாரதே அல்லாமல் அதுக்கு முன் வரவேண்டாமென்று செனராலுடைய ஒடுதியென்று சேந்தினோர் சொல்லுகுறான். முசே லெறி நேத்து ராத்திரி செனங்களை காணப் போனதுக்கும் சேந்தினோர் மேலே யெழுதின படிக்கு சொல்லிப் போகச் சொன்னான். அதின் மேலே முசியே லெறி மெத்த விசாரமாக யிருக்குறாரென்று முசே தெவோ, முசே திலார்ஷு முதலான பேர்கள் அழைப்பிச்சு யேகதேசத்திலே யோசனை பண்ணிக் கொண்டிருக்குறாரென்று சொன்னத்துக்கு, முசியே கில்லியார் யென்னைப் பார்த்து, "நீர் சொன்ன சாஸ்திரத்தை அனுசரிச்சப் பேச்சாய் கேழ்க்கப்பட்டது. நல்லது முற்றிலும் அறிந்து கொள்ளுகிறதுக்கு லெறியே போக வேணுமென்று முசே லெறி அண்டைக்குப் போறதை விட்டுப் போட்டு வீட்டுக்கு போனார். பதினோரு மணிக்கு மீராப் பள்ளியிலே நோவாளிக் கிடங்கு அண்டையிலே துப்பாக்கி மருந்து பண்ணுகிற கிடங்கு யிருக்கிறது. அதிலே அண்ணாடம் பண்ணுகுற மருந்து புது குடத்திலே போட்டு வண்ணான் துரையிலே அனுப்பிப் போடுறது அப்படி நடக்கிற திட்டம். யித்தனாள் மருந்து யிடிக்கச்சே அதிலே ஒரு கல் யிருந்து ஒலிக்கையிலே சந்திச்சு நெருப்பு விழுந்து அது பத்திக் கொண்டு கெந்தகம் பொட்டுலுப்பு வகையிரா தமாம் பத்திக் கொள்ளச்சே சபுத்தம் யிடிகள் யேக வெளியிலே படபடவென்று யிடிச்சதாலே அனேகம் சபுத்தங்கள் காண, அந்த நெருப்பு அண்டையிலிருந்த வீடுகள் வாசல் கூட யேகமாய்ப் பத்திக் கொண்டு அந்த வாணப்பட்டரையிலே கூலி வேலை செய்தவர்களிலே யிருபது யிருபத்தி ரெண்டு பேர் கையறுதியாய் செத்துப் போனார்கள். இதினாலே சிறிது பெண்டுகள் சிறிது ஆண்கள் சிறிது பசங்களிந்தப்படி நடந்தேரிச்சுது. அந்த பிராந்தியங்களிலே யிருக்கிற பேர் பாணப்பட்டரை பத்திக் கொண்டு தென்றாப் போலே தங்கள் தங்கள் வீடுகள் பத்திக் கொள்ளப் போகுதென்று வீடுகளை விட்டுப்போட்டு குழந்தைகள் குடுடிகளை எடுத்துக் கொண்டு ஓடிவந்தவர்களும் பெண்டுகளை அழைத்துக் கொண்டு காபுறாப்பட்டு ஓடிவந்த சமையத்திலே வெள்ளைக்காறர்கள் வீடுகளை அவிக்க தண்ணீர் குடத்ததுகளுக்கு ஆக வீட்டுக்குள்ளே நுழையுகுறோமென்று

அகப்பட்டதுகளை கொள்ளையிட்டுப் போட்டார்கள் யென்றும், சிறிது பெண்டுகளைக் கெடுத்து போட்டார்களென்றும் யிப்படியாக பேச்சுகள் அவரவர்கள் வந்தும் சொல்லுகுறதுகளும் வெள்ளைக்காறர்களுடைய ஆணுகளை தண்ணீர் மொள்ள பிடிக்குறார்களென்றும் ஆகையாலே ஆகாசமெல்லாம் புகையும் யிந்த சபுத்தங்கள் கேட்டவுடனே முசே லெறி கிட்டயிருந்த பேர்களில் ரெண்டு மூன்று பேரை ஒதைச்சும் அடிச்சும் துரத்தியும் சீக்கிரமாய் கபுறு கொண்டு வந்து சொல்லச் சொல்லியும் யிப்படியெல்லாம் நடந்ததாய் சேதி சொன்னார்கள். நானும் சபுத்தங்களும் கேட்டேன். ஆகாசத்திலே பிறப்பட்ட புகைச்சலையும் பார்த்தேன். வையூர் சுப்பா சோசியர் சொன்னபடிக்கு சனிக்கிழமையும் அக்கினி தக்குத்தமான வாய்க்காலுக்குத் தெற்கே யென்கிற குறிப்பும் சரியாய்க் கண்டுது. அந்த வட்டங்களிலே யிருக்கிற யோகம் புசிச்ச புத செனங்களுக்கு சனி அங்காரக பாய்ச்சல் காண வேணும். அப்பால் சுக்கிர செனங்களுக்கு காணவேணும்.

இத்தனாள் சாயங்காலம் யேழு மணிக்கிக் கேழ்விப்பட்ட சேதி முசே லாலி வந்தவன் தீர்மானமாய் யோசனை பண்ணி தீத்துக் கொண்டு வந்ததென்ன வென்றால், முசியே லெறி, முசியே தெவொ முசியே தெலார்ஷூ முசியே தெபொஷேத்து யிவர்கள் நாலு பேர்களும் யிவர்களைச் சேர்ந்த தமிழர்கள் கந்தப்பன் பெரியண்ணன் சவரிராயன் வகையராக்களையும் காவல் பண்ணி வீடுவாசல் முத்தரிச்சுக் கணக்கு காரியம் விசாரிக்கவும் யிவர்களுடைய ஆஸ்திகளை யெல்லாம் கும்பினீரிலே யெடுத்துக் கொள்ளவும் தான் பட்டணத்து ராச்சியத்துக்கு யெசமானாக யிருக்கவும் தன் கீழே சகல அமுலும் நடப்பிச்சுக் கொள்ளவும் யிந்தப்படிக்கி, லசுக்கரிலே யோசனை பண்ணிக் கொண்டு வந்ததாயும் யிந்த சேதி முசே லாலி லசுக்கரிலே யிருக்கிற வெள்ளைக்காறர் பெரிய மனுஷர் முசியே லெறிக்கு யெழுதி அனுப்பி வைச்சதாயும், அந்தப்படிக்கும் நேத்து ராத்திரி பதினொன்றரை மணிக்கு வந்தாப் போலே ரெண்டு பேர் செந்தினேர்களை வைத்து ஆர் வந்தாலும் தன்னுடைய உத்திரவு யில்லாமல் உள்ளே விட வேண்டாமென்றும் முசே லெறி முதலான கோன்சேலியேர்களைக் கூட பரிச்சேதம் என்னுடைய உத்திரவு யில்லாமல் உள்ளே விடக்கவை யில்லையென்று சொல்லித் திட்டம் பண்ணினது மல்லாமல், பின்னை யென்ன யென்ன பேச்சு வார்த்தைகள் நடப்பிச்சானோ அதின் பேரிலே காத்தாலே முசியே தெவோ, முசியே திலார்ஷூ, பொசேத்தை அழைத்துக் கண்டு பேசின விடத்திலே அவர்களும் முசியே லெறியும் என்ன யோசனை பண்ணிக் கொண்டார்களோ, சவரிராயப் பிள்ளையை அழைப்பிச்சு முசியே தெவோ வெளியே போய் விடச் சொன்னதாயும், சாயங்காலம் ஆக ஒரு நாழிகை யென்றச்சே சவரிராயப் பிள்ளை அவன் பிள்ளைகள் ரெண்டு பேர்களும்

தாண்டவராயப் பிள்ளையுடைய பிள்ளைகளும் மேற்படியாருடைய தம்பியும் அழைத்துக் கொண்டு பிறப்பட்டு பிரமதேசம் திண்டிவனம் அந்த வட்டங்களுக்குப் போயிருக்கவும், அப்பால் மார்க்கமாயிருந்தால் யிவ்விடத்துக்கு வரவுமில்லா விட்டால் அப்படியே போய்விடவும் போய்விட்டானென்று சேதி வந்து சொன்னார்கள். யிதை மெய்யென்று தானே யெண்ண வேணுமே யல்லாமல் பொய்யென்று யெண்ணப் போகாதென்று கேட்டார். அந்த மட்டுக்கும் யோசனை பண்ணினேன். என்னத்தினாலே மெய்யென்று எண்ண வேண்டியதென்றால் முசே லாலி லசுக்கரிலே யிருந்து முசியே லெறிக்கு மூணுதரம் கந்தன், பெரியண்ணன் முதலியார், சவரிராயப் பிள்ளை கையிலே லக்ஷம் ரூபா லசுக்கர் சம்பளத்துக்கு வாங்கி அனுப்பி வைச்சதுக்கெல்லாம் போக்கெழுதிக் கொண்டே வந்தார்கள். யிவர்கள் பேரிலே வெகு பணஞ் சம்பாதிச்சு வைத்துக் கொண்டு யிருக்குறார்களென்றும் கபுறு கேட்டு மிருக்கிறது மல்லாமல் அனேகம் பரிக்ஷையாய் கூட யிருக்கிற தானபடியினாலே யிவர்களே யெசமானர்களைக் கூட சொறப்பு வாங்க வேணுமென்று சொல்லிக் கொண்டு வந்த சேதியெல்லாம் கேழ்விப்பட்டு யிருக்கிற படியினாலே, முசே லாலி வரச்சே யோசனை பண்ணிக் கொண்டு வந்த சேதி : வெள்ளைக்காறர்கள் பெரிய மனுஷர் வாயினாலே தானே கேழ்விப்பட்ட படியினாலேயும் சவுரிராயப்பிள்ளை ஓடிப்போய் விட்ட சேதி மெய்தானென்று நிச்சயித்து யெழுதியும் வைத்தேன். நாளைய தினம் பயாவாரியாய்த் தெரிந்து யெழுதி வைப்போம். இதல்லாமல் சனி பாய்ச்சலுக்கு சனிவாரம் கூடினதினாலேயும் வாயக்காலுக்குத் தெற்கேயும் மீராப் பள்ளி யிருக்கிற யோகம் புசிச்சுத் தீர்ந்திருக்கிற புதனானபடியினாலேயும் அவர்களுக்குக் கஷ்ட்ட கால சக்கிரம் வந்திருக்கிற படியினாலேயும் சாஸ்திரம் அனுபவ பூத்த காரியமிதுகளை யெல்லாம் யோசிச்சு மெய்தானென்று நிஷ்கருஷை பண்ணினேன்.

***1759 வருசம் மாயு மாசம் தேதி 20; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 10; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்கு எட்டு மணிக்கி நான் போன விடத்திலே முசியே கில்லியார் யிருந்து நேத்தைய தினம் யெல்லாம் முசியே லெறிக்குக் கூட, எங்களுக்குக் கூட முசே லாலியுடைய பேட்டியில்லை. யின்றையு தினமானால் பிறயோசனத்தை வ்வாங்கிக் கொண்டானென்று ஒருவரும் வரத்தேவையில்லை யென்று சேந்தினேருக்கு உத்திரவு ஆயி ஒருத்தரையும் வர ஒட்டுகிறதில்லை. முசியே சுப்பீர் மாத்திரம் நேத்தைக்கு சாய்ங்காலம் போய் பேசி வந்து முசியே லெறியுடனேயும் பேசினாரென்று சேதி. அது பார்த்தால் யென்னமோ ராசவட்டப் பேச்சாய் நடக்குறாப் போலே யிருக்குதென்று

தோத்துது. இன்றைய தினம் விசதமாய்த் தெரியுமென்று முசியே கில்லியார் சொல்லிக் கொண்ட படியிருக்கச்சே முசே சுப்பீர், முசியே லெறி பின்னையும் நாலத்து ரெண்டு ஒப்பிசியாலுமார்களும் முசே குளூவேத்து பின்னை கோன்சேலியேர்களும் கோயிலுக்குப் போகத் தக்கதாக மேல் வீட்டை விட்டு யிறங்கி கோயிலுக்குப் போகச்சே முசே சுப்பீர் மாத்திரம் அங்கே ஒரு அரிகை போட்டுக் கொண்டு போனான். முசே லெறிக்கு அரிகை போட வந்தால் வாண்டாமென்று சொல்லிப் போகச் சொல்லி அரிகை யில்லாமல் வெகு சின்னவனாய் முசியே சுப்பீர் பிறகே போனான். மைத்த பேர் ஆரும் அரிகை போட்டுக் கொண்டு போகவே யில்லை. அப்போ முசியே லெறி யென்னைப் பார்த்தவாக்கிலே போனான். அப்பால் முசியே கில்லியாரும் நானும் கோயில் பூசைக்குப் போரேனென்று சொல்லிப் போட்டுப் போய் ஒன்பது மணி அடிச்சாப் போலே கோயில் பூசை கலைஞ்சு யெப்போதும் வாடிக்கைப் பிறகாரம் மேல் வீட்டின் பேரிலே போனார்கள். பிடவை பார்க்கிற சாலை அண்டையிலே முசியே கில்லியார் வந்து நேத்து நீரும் நானும் பேசியிருந்த பிற்பாடு நெருப்பு பட்டு பாணப்பட்டை பத்திக் கொண்டதும் வெள்ளைக்காரனை வெட்டிப் போட்டதும் முசியே தெவோ துபாசி மனுவேல் பிறப்பட்டுப் போனதும் நீர் சொன்ன சாஸ்திரம் சரியாய்ப் பலிச்சு மைத்தப் பேச்சுகளும் நீர் சொன்ன சாடையை அனுசரிச்சிருக்கிறதென்றும் சொல்லி யிப்படி தானே நடக்குமா வென்று கேட்டார். நான் சொன்ன சாஸ்திரப்படிக்கு சாடை கண்டபடியினாலே மைத்ததும் நடந்தேர வேணும். யிது அனுபலம். பார்த்துக் கொள்ளலாமென்று சொன்னத்துக் கெல்லாம் ரெண்டு மூன்று நாளையிலே தானே தெரியுமென்று சொல்லிப் போட்டு அனுப்பிவிச்சுக் கொண்டு பத்து மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

***1759 வருசம் மாயு மாசம் தேதி 22; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 12; அங்காரகவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : முசே தாந்தேரு சுலுத்தினாந்து தெ பத்தாலியேம் தெ யிந்தியா–மோன்சியோர் செம் மொர்சோசு–மர்ஷாம் தெலா கொம்பஞ்சி (M. d' Andres' Lieu tenant of the Battaillon de l' Inde. M. st. Marceau Marchand de la Compagne) பங்காளத்திலே யிருந்து வந்தவன் முசியே லாகர்னேயுடைய (M. Lagrene) சக்கிறத்தாராகிய (Secretaire) கோந்துவாரிலே யெழுதுகிறவன், முசியே கொரேல் (M. Corail) சீனத்துக்குப் கப்பல் கப்பித்தானும் சூப்பர்கார்கோ (Supercargo) வாயிருந்தவன் யிந்த மூணு மச்சிலி பந்தர் மறக்கி கோம்பினாம் கையிலே லஞ்சம் பேர்களும் வாங்கிக் கொண்டு இங்கிலீசுக்காறர்களுக்கு வித்துப் போட்டானென்று பின்னையும் முசே லாலி பேரிலே சூணுதியாய் தண்டிலே யிருக்கிற தங்கள் சினேகிதருக்கு

காகித மெழுதினாப் போலேயும் அந்தக் காகிதங்கள் தண்டுக்கு சேவுகன் கொண்டு போகச்சே இங்கிலீசுக்கார மனுஷர் வழியிலே பிடுங்கிக் கொண்டு சென்னப்பட்டணம் கோவற்ணதோர் மேஸ்தர் பிக்கட்டு கையிலே கொண்டு போய்க் குடுத்தாப் போலேயும், அந்தக் காகிதங்களை அவர் அவிழ்த்து வாசித்துப் பார்த்தால் சண்டை சமாசார மெல்லாமில்லாமல் மறக்கி கொம்பிளாம் பேரிலே மச்சிலி பந்தரைக் கையடை (லஞ்சம்) வாங்கிக் கொண்டு வித்துப் போட்டானென்றும், அவனுடைய நிந்தையும் முசே லாலி பேரிலே நிந்தையும் யெழுதி யிருக்கிறதைப் பார்த்து, உம்முடைய பட்டணத்திலே யிருக்கப்பட்டவர்கள் தானே உம்மண்டை யிப்படி நிந்தனை பண்ணுகுறார்களென்று முசே லாலி பேருக்கு உபசாரமாய் ஒரு காகித மெழுதி மேலே யெழுதி யிருக்கப்பட்ட காகிதங்களையும் குடுத்து அனுப்பி வைச்சதாகவும், அதை முசே லாலி பார்த்துக் கொண்டு மேலே யெழுதி யிருக்கப்பட்ட முசே தந்திரேசு, முசே செம்மொரசோ, முசே கெரேல் (?) யிந்த மூணு பேர்களையும் பிடிச்சு வரச்சொல்லி முசே லாலி கசோத்திலே போட்டாரென்று பின்னையும் ரெண்டு ஒருத்தரைத் தேடுகுறார்கள். அகப்பட்ட பிற்பாடு தெரியுமென்றும் ரெண்டொரு வெள்ளைக்காறர் வந்தவர்கள் சொன்னார்கள்...

ஸ்ரீ ராமஜெயம் கிருஷ்ண சகாயம், வசந்தராய விசைய ஆனந்தரங்கராயர் அவர்கள் கையெழுத்தாய் யெழுதின தினசரி தஸ்திரம் யிது. யாதாமொருவர் நன்றாய் பார்க்குறாரோ அவர்களுக்குப் புத்தியும் வித்தையும் அஷ்ட்ட அயிசுவரியமும் சந்தான சமறதியும் மென் மேலும் உண்டாகும்.

# ஜூன் 1759

***1759 வருசம் சூன் மாசம் தேதி 8; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 29; சுக்கிறவாரம்***

இத்தனாள் தினசரி (எனக்குத் துவங்கினது). பட்டணத்திலே வெள்ளைக்காறர்களைத் தொட்டு நடக்கிற அக்கிறமங்கள் சோராவாரிகள் பெண்டுகள் அழும்புகள் முதலான அராசக நடத்தைகள் யாவதும் நடக்கிறத்தினாலே தாக்ஷியில்லை. அது தினம் தினம் அபிவிறுத்தியாய் நடக்குதென்று செனங்கள் சங்கடப் பட்டுக் கொண்டு யிருக்கிறதுகளை காகிதங்களிலே எத்தனை யெழுதப் போறேன். ஆனபடியினாலே ஒவ்வொரு யிடத்திலே சூட்சமமாய் எழுதி வைத்தேன். தோல் ரூபாய் முன் நூத்துக்குப் பதினஞ்சு யிருபது முப்பது நாற்பது அன்பது மட்டுக்கும் நஷ்ட்டத்திலே குடுத்தார்கள். யித்தனாள் ரெண்டொருத்தர் அறுபது அறுபத்தஞ்சு மட்டுக்கும் நஷ்டப்பட்டு வித்ததை கண்ணீராலே பார்த்ததை யெழுதினேன். காதினாலே கேட்டது பத்திருபது பேருண்டு. ஆனால் கும்பினீருக்குக் குடுக்க வேண்டியவர்கள் குத்தகை பண்ணுகிறவர்களுக்கு நல்ல ஆதாயமும் சம்பாதிக்குறார்கள். இதிலே வெள்ளைக்காறர்கள் ஆதாயம் யிந்த விதத்திலே சம்பாதிக்குறார்கள். அரும்பாத்தைக் கூட்டம் கும்பினிரைத் துரோகம் பண்ணி லட்சக்கணக்காய்த் திருடுகிறார்கள். மைத்த பேரெல்லாம் நஷ்ட்டமிட்டு நொந்து போனார்கள்...

***1759 வருசம் சூன் மாசம் தேதி 10; பிறமாதி வருசம் வையாசி மாசம் தேதி 31; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே றங்கோ பண்டிதன் சம்மதி மாத்திரம் அவனுக்கு எழுநூறு குதிரைக்கும் ஆயிரம் பாறுக்கும் பகலி (ரத்து) பண்ணி அதுக்கு திருவதி, புவனகிரி, வெங்கிட்ட ராம்பேட்டை வகையிரா பஞ்சாமால் சீர்மை சிப்பந்திக்காகக் குடுத்திருந்த சம்மதி கவையில்லை யென்று றங்கோ பண்டிதருக்கு லாவண *சீளிதம்* பண்ணி, *சீமை*யையும் தகீர் பண்ணி, அந்த *சீமை*யும் அந்தக் குதிரைக் காறர்களும் பாறுக்காறர்கள் முசே லசேல், முசே துபுவா வசம் பண்ணி, அந்தக் கணக்கு பார்த்து தீந்தாலும் தீரந்தனிலும் றங்கோ பண்டிதனை சாவடியிலே காவல் பண்ணி வைக்கவும் யென்று தீர்த்தார் களென்றும், பின்னை எந்தெந்த காரியம் நடந்துதோ தெரியாது. பனிரெண்டு மணிக்கி கோன்சேல் கலைஞ்சு போனார்கள் யென்றும் சாயங்காலம் மறுபடி அஞ்சு மணிக்கு கோன்சேல் கூடுவார்களென்றும் சொன்னார்கள். யிதிலே நம்முடைய பிறஸ்தாபம் ஒன்றும் நடக்கவில்லை யென்றும் சொன்னார்கள்.

இத்தனாள் மச்சிலிபந்தருக்குப் போனவர்கள் சொன்னது மச்சிலி பந்தர் பிடிபட்ட சமாசாரத்துக்கு அவ்விடத்து துபாசி மத்தால் ரெட்டி நாயக்கன் வைசாக பகுள தெசமி யென்றெழுதின காகிதம் நாளது மாசம் 30 தேதி வந்து சேர்ந்தது. யிதை யித்தனாள் யின்றைய தினசரியின் கீழே வந்த காகித பசினாசு ஆகத்தானே எழுதி யிருக்குறது. அது பார்த்துக் கொள்ளச்சே அவ்விடத்துச் சேதி விசிதமாய் தெரியும்.

*1759 வருசம் சூன் மாசம் தேதி 12; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 2; மங்களவாரம்*

இத்தனாள் முசியே லாலிக்கும் முசே லெறிக்கும் முசே புசிக்கும் யெனக்கும் தஞ்சாவூர் ராசா வெகுமதி வஸ்திரங்களும் குதிரைகளும் பதக்கங்களும் அவர் ஸ்தானாபதி ருத்திராசி பண்டிதன் மாரிபத்தாய் நம்முடைய ராமாராயன் அண்ணன் பாப்புராயன் வசமாய் அனுப்பி வைச்சதாயும் அந்த பாப்புராயன் தெற்கே குண்டு சாலைக்கு யிப்பறம் யிருக்கிற மேலுகிரி பண்டிதன் அக்கிரகாரத்திலே வந்திறங்கி யிருந்து அந்தச் சேதி சம்பா கோயிலிலே, அவர்கள் பாதிரிமார்களுக்கு, எச்சரித்தாப் போலேயும், அவர்கள் முசே லெறிக்கு கபுறு சொன்னாப் போலேயும், அந்த வக்கீலை அழைத்து வந்து வூரிலே விடச்சொல்லி கந்தப்ப முதலியாருக்கு உத்தாரங்குடுத்தார் யென்றும் யித்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கி கந்தப்ப முதலியையும் பாளையக்காற நயினார் கோனேரி நாயக்கன், குண்டூர் நாரசிங்க செட்டி, வெங்கிட்ட நரசு யிவர்களைப் போய் அழைத்து வந்து கோமுட்டித் தெருவிலே நரேந்திர செட்டி வீட்டிலே யிறக்கினவுடனே வந்த வைக்கீல் கந்தப்ப முதலிக்கு ஒரு சீரொப்பாவும், வெங்கிட்ட நரசுக்கு அலாக்கா சரிகை ஒணி ஒன்றும் பாளையக்காற நயினாருக்கு ஒரு அலுக்கா (?) ஒணி ஒன்றும் கோபாலய்யன் மகன் ராமய்யனுக்கு ரெண்டு கேசும் சகலாத்துக்கு விலைக்கு ஆறு ரூபாயும் குடுத்து பாக்கு வெத்திலையும் குடுத்தனுப்பு விச்சானாம். அவர்கள் போய் முசியே லெறிக்கு கபுறு சொன்னார்களாம். யிதிலே முசே லாலி ஒழுகரை யிலிருந்து ஆறு மணிக்கு கோட்டைக்குள்ளே வந்தவிடத்திலே சம்பா கோயில் பாதிரியார் கபுறு சொன்னதுக்கு அப்படியே வாங்கிக் கொள்ளுகுறதுக்கு நான் சொல்லுகுரோமென்றும் சொன்னதாய்ச் சேதி சொன்னார்கள். அப்பால் முசே லாலி யெட்டு மணிக்கி மறுபடி முசே பெடுத்தல்மீ தோட்டத்துக்குப் போனாரென்றும் சொன்னார்கள். முசே லாலிக்கு மாத்தாபி சரியிலே காறுசுப்பி போட்டது சீரொப்பா–1, பதக்கம், குதிரை காகிதம்–1, முசியே லெறிக்கு மாத்தாபி சீரொப்பா–1, பதக்கம்–குதிரை–காகிதம்–1, முசியே புசிக்கு மாத்தாபி சீரொப்பா–1–பதக்கம்–1, காகிதம்–1, ஆனந்தரங்கப்பனுக்கு மாத்தாபி சீரொப்பா–1, காகிதம்–1 யிதுகளில் விஸ்தாரதமியம் அறிய வேணும்.

***1759 வருசம் சூன் மாசம் தேதி 13; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 3; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே துபுவா கொமுசாயிரு யிந்தாம் தாம்தே ஆரமே தெபுவா (M. Dubois. Commissaire et- Intendent des Armeasdu Roi) என்கிறவருக்குப் பொடரியிலே ரெணம் கண்டிருக்கிறபடியினாலே அவரைப் போய் விசாரித்து வருவோமென்று போனவிடத்திலே அங்கே முசியே ஷெவலியேர் கென்னடி என்று (M. Chevallier Kennedy) ஒரு பெரிய மனுஷர் சென்னப்பட்டணத்துச் சண்டையிலே காலிலே குண்டு காயம்பட்டு நொண்டுகுறான், அவரும் அங்கே யிருந்து பேசிக் கொண்டிருக்கச்சே நானும் போய் ஆசாரம் பண்ணினேன். அவர்கள் ரெண்டு பேரும் எழுந்திருந்து ஆசாரம் பண்ணி எனக்கு ஒரு நாற்காலி போடச் சொல்லி தாங்களும் உளுக்கார்ந்தார்கள். அப்பால் முசியே துபுவாயிக்கு பொடரியிலே கண்ட ரணம் சவுக்கியமாயிருக்கிற சேதி கேட்டு அதுக்கு சுவாமி தயவினாலே சீக்கிரமாய் சொஸ்தப் படுமென்று உபசாரமாய்ச் சொல்ல, அவரும் நீர் நல்ல மனதுடனே நினைத்துச் சொல்லுகிறபடியினாலே ஆரோக்கியமாகும் யென்று உபசாரமாய் சொல்ல, அப்பால் முசியே கின்தியேயைப் பார்த்து நீர் சீர்மையிலே லக்ஷம் லக்ஷம் சொதாதுகளிருந்து உபயஸ்தனங்களிலே யுஞ் சண்டை குடுத்த போது நீர் அப்படி எத்தனை தரம் எத்தனை சண்டையிலே யிருந்து சண்டை குடுத்த போதெல்லாம் காயப்படாமல் வந்ததுக்கு பிரான்சு ராசா கூட ஆச்சரியப்பட யில்லையா? யிந்த சென்னப்பட்டணத்துக் கொஞ்ச சண்டையிலே உமக்கு காயம்பட்டது ஆச்சரியமாயிருக்குதென்று சொல்ல அதுக்கவர் நிறை வெள்ளம் ஆத்திலே பிறவாகம் வரச்சே நீஞ்சி அக்கரை போய்ச் சேருகிறவன் ஆபத்துயில்லாமல் சுகமாய்ச் சேருகுறான். அல்பமாய் தொடையளவு முழங்காலளவு தண்ணீயிலே மடிப்பிலே அகப்பட்டுக் கொண்டு செத்தாகிலும் போறான், மோசம் ஆகிலும் போறான். அப்படிப் போலே வெகு தளத்திலே யில்லாதது அற்பதளத்திலே காயம் பட்டுதென்று சொல்லி, நீர் முன் சென்னப்பட்டணம் சண்டை, அன்வரதி கான் சண்டை, நாசறு சங்கு சண்டை முதலான சண்டை நாளிலே நிறுவாகம் பண்ணி பிறதாபத்தை அடைஞ்சு வந்த நீர் யிப்போ வீட்டிலே தானே யிருக்கிற காலமாயிருக்குதோ யில்லையோ வென்றார்.

அப்பால் கப்பல்கள் பத்து பதினைந்து நாளையிலே வருமென்று சொன்னார். அதுக்கு நான் சொன்னது, "இந்த ஆனி மாசம் 28 தேதிக்கு மேல் முப்பதுக்குள் வருமென்று சொல்லி, அந்தக் கெடுவு உங்கள் சூலை மாசம் 10 தேதி 11 தேதி விழும், அந்தப்படிக்கு வந்தால் சென்னப்பட்டணம் உங்களுக்கு செயம் ஆகும். பணத்துக்கு தாக்ஷி வராது. அது முதல்

கொண்டு எந்தக் காரியமும் எத்தனம் பண்ணினாலும் அந்தக் காரியமெல்லாம் அனுகூலம் ஆகும் யென்று" நான் சொன்னதுக்கு ராயப்பிள்ளை யிருந்து கொண்டு தமிழர் சோசியஞ் சொல்லுவார்கள். பத்துக்கு ஆரேழு தப்பாமல் சரிப்படும் என்றும் அந்தப் பிறகாரம் அரை நாழிகை நேரம் பேசியிருந்து அனுப்பி விச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 14; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 4; வியாழக்கிழமை*

பாசிராயன் குமாரன் நானா வண்டை யிலிருந்து வந்த மீரா சாயபுக்கு முசே லாலி, முசியே லெறி காகிதங்களும் எழுதிக் குடுத்து ரெண்டு தாக்கர் சகலாத்து வகையிரா சிறிது ஆகுதேவுங்கேரி கத்திரி வகையிரா குடுத்து அவருக்கு நாளது வரைக்கு உண்டான படியும் குடுத்துத் தீத்துப் போட்டுப் போகச் சொல்லி உத்தாரம் குடுத்ததாய் அவர் யித்தனாள் ராத்திரி என்னண்டைக்கு வந்து அனுப்பி வைச்சுக் கொண்டு போனார். நானும் நூறு ரூபாயிலே ஒரு சீரொப்பாவும் குடுத்து நானாவுக்கு பதில் காகிதமும் எழுதிக் கொடுத்தேன்.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 15; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 5; சுக்கிறவாரம்*

இங்கிலீசுக்கார சொலுதாதுகள் இறநூறு பேர்கள் காவலிலிருந்தவர்களுக்குப் பதில் திருச்சிராப்பள்ளிக் கோட்டையிலே யிருக்கிற பிரான்சுக்காரர் சொலுதாதுகள் யிறநூறு பேர் வந்ததுக்கு பதில் காகிதமும், காவல் விட்டு அனுப்பினார்களென்று சொன்னார்கள். வூரிலே ஒப்பிசிலியால்மார் தேவடியாக்களையும் பிடிக்குறதுக்கு யெத்தனம் பண்ணித் திரிகுறதும் கடைத் தெருவுகளெல்லாம் சோராவரி பண்ணுகுறதும் தெருக்களிலே போறவர்களை அடிக்கிறதும் ரொம்ப சுறுக்காய் நடந்தது.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 17; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 7; ஆதிவாரம்*

நாளது காத்தாலே கேழ்விப்பட்ட சேதி : முந்தாம் நாள் சுக்கிறவாரம் நாள் முசியே புசி தீவான்கிரி நாகோசி நாயக்கன் (Nagoji Nayakan-Buesy o' Diven) என்கிறவன் தம்முடைய இந்த கானி குதிரை சாமானுகளுடனே முசியே புசி கையிலே பாரிக்கத்தும் வாங்கி கொண்டு அனுப்பி வைச்சுக் கொண்டு அப்பால் லெறி அண்டைக்குப் போய் அவர் கையிலும் அனுப்பிவிச்சுக் கொண்டு தங்கள் தேசமாகிய கோல் கொண்டைக்குப் போகப் பயணம் பண்ணி பாதிராப்புலியூர் மட்டுக்கும்

போனவனை முசே லாலியுடைய அறுக்காறுகள் போய் காபந்து அழைக்குறார், அவர் சொல்லி அழைத்துக் கொண்டு வருகையிலே புதுச்சேரியிலிருந்து அன்பது சொலுதாதுகளும் நூறு பாறுக்காறர்களையும் எதிரே அனுப்பி வழுதாவூர் கோட்டையிலே கொண்டு போய் அடைக்கச் சொல்லி, சொன்னபடிக்கி கோட்டையிலே அடைச்சு யிங்கே யிருந்து போன அன்பது சொலுதாதுகளும் ஒரு ஒப்பிசியாலும் நூறு பாறுக்காறர்களும் சவுக்கியிருக்குறார்களென்றும், போன ஒப்பிசியால் நாகோசி நாயக்கனை சலாபத்து சங்கு நானா வகையிராக்களுக்கு காகிதங்கள் கொண்டு போரதை காண்பிக்கச் சொல்லி கேட்டதாகவும், அவரொருத்தருக்கும் காகிதங் கொண்டு போகயில்லை யென்றும், தன் கலிந்தான் காகிதமூட்டை யிருந்ததை யெல்லாம் ஒப்பிசியால் வசமாய் யொப்பி வைச்சதாகவும் பின்னையும் யிவர் தாலூக்கு மனுஷர்களை யெல்லாம் சோதா வாங்கி யேகத்துக்கு வழுதாவூர் கோட்டையிலே கைது பண்ணி அந்தக் காகித பத்திரங்களை முசே லாலி அண்டைக்கு அனுப்பி வைச்சதாகவும் எட்டு மணிக்கி முசியே புசியைக் கூட வீட்டிலே தானே காவல் வைச்சார்களென்றும் கேழ்க்கப்பட்டுது. யிந்தக் காரியம் நடப்பிச்சுப் போட்டதின் பேரிலே முசியே புசிக்கு அவமானம் வந்தது மல்லாமல் மனதிலே பயந்தோத்தி யிருக்கிறது மல்லாமல் சலாபத்து சங்கு நானா அவர்களிடத்திலே முசியே புசி பரமெடுத்துப் போமென்று செனங்கள் சொல்லிக் கொண்டார்கள். முசியே லெறி மைத்துமுள்ள கோன்சேலி யொர்களுக்கு கூட பயசுணக்கமுண்டாச்சுது என்று சொல்லிக் கொண்டார்கள்.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 20; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 10; புதன்வாரம்*

இத்தனாள் நான் வெளியே போகயில்லை. கேழ்விப்பட்ட சேதி முராரி ராயனை அவன் பவுன்சுடனே கூட அழைத்து வரத்தக்கதாக மயிலாப்பூர் பிசப்பு நொரான்னா (Fathee Naronha) போரத்துக்கு சகல சிலவும் போகவர அவர் போட்டுக் கொள்ள ஒடம்படிக்கை பண்ணிக் கொண்டு முசே லாலி கையிலே அனுப்பி வைச்சுக் கொண்டு குண்டு சாலைக்கு அப்பிறம் போயிறங்கினதாயும் சேதி கேழ்விப்பட்டுது. இதல்லாமல் இவர் பிறகே மீர்ஷமும் (மீர்) கூடப்போனான். யிவன் போர சமயத்துக்கு நாலாயிரம் அய்யாயிரம் ரூபாய் பிடிக்கும் சென்னப்பட்டணத்து சண்டையும் போதும் கொள்ளையிலே மயிலாப்பூரிலே யிறங்கி யிருந்த போதும் கோயில் தட்டுமுட்டு வகையிரா அகப்பட்டது பதினையாயிரம் ரூபாய்க்குண்டு. அதுக்கிந்த மட்டுக்கும் நாலாயிரம் அய்யாயிரம் ரூபாய் மட்டுக்கும் சிலவாயிருக்கும், மத்தது யிந்த யாத்திரையுடனே சிலவழியு மென்று சொன்னார்கள்.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 21; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 11; குருவாரம்*

இன்று மத்தியானமும் ராத்திரியும் முசே லாலி முசியே கில்லியார் வீட்டிலே விருந்து சாப்பிட்டு முசியே பெடுத்தல்மீ தோட்டத்திலே குடியிருக்கப் போய் விட்டானென்று முசியே கில்லியார் வீட்டிலே யிருக்கச்சே மயேயிலே யிருந்து காகிதங்கள் வந்ததாயும் போனவருஷம் அற்பிசி மாசம் சீமை சண்டைக்கப்பல் நாலுக்கப்பல் காப்புதே போனேசு (Cape de Bomrede Esferauee) சப்பிராயின்சு சண்டையிலே வந்துதாயும் அங்கே சீனத்திலே யிருந்து யிங்கிரேசு கப்பல் ஒன்று அங்கே வந்ததாயும், அந்தக் கப்பலையும் பிடிச்சுக் கொண்டு நம்முடைய கப்பலுகள் மசுக்கரையிலே வந்து சேர்ந்ததாகவும், அந்த நாலு கப்பலுகளும் முன் மசுக்கரையிலிருக்கிற கப்பலுகளும் யேகத்துக்குச் சேர்ந்து பிறப்பட்டு யிவ்விடத்துக்கு வருகிறதாயும், இங்கிரேசுக் கப்பல் பிடிச்சத்திலே சீனத் (திலிருந்து) பொன்சரக்கு வகையிரா லக்ஷத்து அன்பதினாயிரம் வராகனுக்கு உண்டென்று சீர்மை யிலிருந்து வந்த நாலு கப்பலிலேயும் திரவியமும் விஸ்தாரமாய் வந்ததென்றும் யேகத்துக்குக் கூடிக்கொண்டு அஞ்சாறு நாளையிலே கப்பல்களெல்லாம் வருகுதென்றும் சொன்னார்கள். இதன் பயாவாராய் வெள்ளைக்காறர் வாயினாலே கேழ்விப்பட்டு சேதி பிறப்பட்டு யெழுத வேண்டியது.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 22; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 12; சுக்கிரவாரம்*

இத்தனாள் மத்தியானம் மோரிசுக்கு யிவ்விடத்திலிருந்து போயிருந்த சுலுப்பு ஒன்று வந்தது. அதிலே யேழு பீரங்கி போட்டார்கள். கரையிலேயும் யேழு பீரங்கி போட்டார்கள். இதிலே முசியே லாபொந்தேன் கல்னல் லீத்துனாந் (Lieutenaut Colonel Fontaine) என்கிறவன் வந்தான். அவ்விடத்திலிருந்து சீமைக் காகிதங்களும் கொண்டு வந்து முசியே லாலி முசே லெறி வகையராக்களுக்கு குடுத்தான். அவ்விடத்து சமாசாரம் யென்ன வென்று ஆராகிலும் கேட்டால் அவன் சென்னது சொல்ல வேண்டாமென்றும், ஒடுதி யென்றும் சொன்னானாம். யிந்த சுலுப்பும் மசுக்கரை விட்டு நாற்பதாம் நாள் இங்கிரேசுக்காறர் கப்பல்கள் நாகப்பட்டணத் தண்டையிலே சேவ முனையிலேயும்[1] யிருக்கச்சே அவர்கள் கையிலே அகப்பட்ட கப்பல் பரங்கிப்பேட்டை கரைகண்டு புதுச்சேரி வந்து சேர்ந்தானென்று சொன்னார்கள். ரெண்டொரு வெள்ளைக்காறர்கள் சொன்னதென்ன வென்றால் நம்முடைய சண்டைக்

---

[1] சிவ முனை at point calimere. இன்றும் கோடியர்கரையில் ஒரு சிவாலயம் உள்ளது.

கப்பல் சமீபத்திலே வரவேணுமான படியினாலே சத்துருக்களுக்கு வெளியாகாமல் யிருக்கத்ததாகவும் வெளியே சொல்ல வேண்டாமென்று கட்டு பண்ணினார்கள். அதுக்கு அடையாளம் ரெண்டு மூணு நாளாய்ப் பிடிச்சு கொடிக் கம்பத்திலே வெளிச்சங் கட்டி வைக்குற படிக்கு யின்று ராத்திரி ரெண்டு வெளிச்சமாய்க் கட்டி வைச்சதே ஒரு அடையாளமாய்ச் சொன்னார்கள். முசியே லெறி மத்தியானம் சாப்பாட்டுக்கு முசியே லாலி யிருக்கிற வெளித் தோட்டத்துக்குப் போனானென்கிறதும், முசியே கோந்திதேல் தூர்துப்பேன் என்கிறவனை (Counte de la Tour du Pin) ஆனையின் பேரிலே அம்பாரி வைத்து யேறிப் பார்க்க வேணுமென்று நம்முடைய பச்சை அம்பாரி போட்டு ஆனை கொண்டு போனார்கள் யென்று சொன்னார்கள்.

***1759 வருசம் சூன் மாசம் தேதி 23; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 13; சனிவாரம்***

இத்தனாள் சண்டை கோன்சேல்ப் பண்ணி முசே லாலி உத்தாரப்படிக்கு தியாக்கடை துற்கத்திலே (Tyagar) யிங்கிரேசுக்காற சொலுதாதுகள் முப்பது பேர் அகப்பட்டதிலே யெட்டு பேர் பிரான்சு சொலுதாதுகள். யிவ்விடத்திலே யிருந்து ஓடிப்போனவர்களான படியினாலே, தன் எசமான் பேரிலே தானே சத்துருக்களுடனே கூடிக் கொண்டு ஆயுதமெடுத்த படியினாலே அவர்களைத் தூக்கி விட தீத்து, அதிலொருத்தன் திருச்சிராப்பள்ளி யிலிருக்கிற பிரான்சுக்காரர்கள் அண்டை காவல் சொலுதாதுகளுக்கு மத்தத்து பண்ணுனான் யென்று இங்கிறேசுக்காறர் ரெண்டு மூன்று தரம் அடிச்ச சேதி அவ்விடத்திலிருந்தும் காவல் விட்டு வந்த சொலுதாதுகள் சொன்னார்கள். அதனாலே அவனை விட்டு விட்டு மைத்த யேழு பேரை கோட்டைக்கு வடவண்டை முசே பெடுத்தல்மீ பழய குவற்ணமாம் வீட்டுக்கு யெதிரே நாலு தூக்குமரம் நட்டு தூக்கு மரத்துக்கு ரெவ்வண்டு பேர் விழுக்காடு தூக்குறதுக்கு ஒரு தூக்கு மரத்துக்கு யொருத்தனை மாத்திரம் போட யித்தனாள் சாயங்காலம் யேழு பேர்களை தூக்கிப் போட்டார்கள். தென்புறத்திலே தூக்குகிற வாடிக்கைப்படிக்கி அங்கே தூக்கிறதுக்கு சாம்சுவாம் (St John) பண்டிகைக்கு சொக்கப்பானை கொளுத்துகுறது அந்த யிடத்திலே ஆனபடியினாலே வடவண்டைப் பக்கத்திலே தூக்கினார்கள்.

இத்தனாள் மத்தியானம் வெளியிலே கந்தப்ப உடையான் விருந்து சாப்பிட்டு சாயங்காலம் ஆறரை மணிக்கு வீட்டுக்கு வந்தவுடனே முசே திலார்ஷு, முசே லாலி பாடுத்தியாய்ச் சொல்லி அனுப்பின தென்ன வென்றால், நாளைக்கு சலாபத்து சங்குவினுடைய பெகுமானம் கோசா அப்துலாக் கான் குமாரன் கோசா சுக்கீறு வாக் கான்

(Zuhur ul-lah-Khan Son of Coja Abdul la Khan) கொண்டு வைத்துக் கொண்டிருந்த மூலதோட்டத் தண்டையிலே விக்கிறபாண்டியன் வீட்டிலே யிருக்கிறானே, அந்த பெகுமானம் வாங்கிக் கொண்டு வரவேண்டியிருக்கிறது. நயினாருக்குச் சொல்லி தேவடியாக்கள், மோளக்காறர், ஈட்டிகழிக்காறர்களையும் நாளைய காலமே யெட்டு மணிக்கு கோட்டை அண்டையிலே வந்திருக்கச் சொல்லி அனுப்பி வைச்சு, நீரும் கோட்டைக்கு வந்து முசே லாலியுடனே கண்டு பேசிக் கொள்ளவும் வேணுமென்று சொன்னார் யென்று முசியே தெலார்ஷு மனுஷன் வந்து சொன்னவுடனே, நயினாருக்குச் சொல்லியனுப்பி வைச்சு முசியே தெலார்ஷு மனுஷனுக்கும் சொல்லிப் போகச் சொன்னேன். பாளையக்காறனான நயினார் வந்து பகலத்தானே முசியே லெறி கோவற்ணதோர் உங்களுக்குச் சொல்லி தஞ்சாவூரிலே யிருந்து பெகுமதி வஸ்திரமும் முசே லாலி அவர்கள் வகையிராக்களுக்கு வந்திருக்குது. அதைக் கொண்டு வருகுறதுக்கு தேவடியாக்களும் மேளதாளம் வகையிராக்களை நாளைக் காலத்தாலே கொண்டு கீழண்டை வாசற்படியிலிருக்கச் சொல்லித் திட்டம் பண்ணி வைச்சுப் போட்டு நாளைக் காத்தாலே யெட்டு மணிக்கு உங்களை வந்து தம்மைக் கண்டு பேசச் சொன்னார் யென்று கபுறு வந்த தென்று சொன்னான். அப்பால் ராத்திரி பத்துமணிக்கு முசே லெறி வேலைக்காறனும் சொல்லி அனுப்பினான்.

### *1759 வருசம் சூன் மாசம் தேதி 25; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 15; சோமவாரம்*

இத்தனாள் வெளியே போகவில்லை கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் காத்தாலே யெட்டு மணிக்கு முசியே லாலி, முசியே பெடுத்தல்மீ தோட்டத்திலே யிருந்தபடியே முசியே லெறியைக் கண்டு பேசி வரச் சொல்லி முசியே பெடுத்தல்மீயை அனுப்பி வைச்சாப் போலேயும் அவர் வந்து கண்டு பேசி போனாப்போலேயும் ஒரு சேதி சொன்னார்கள். இன்ன காரியத்துக்கு என்று தெரியவில்லை. யெனக்கேற்க பார்த்தால் நேத்து தஞ்சாவூரார் பெகுமதியும் கொண்டு வந்தபோது அவர்கள் முசே லெறிக்கு கூட கொண்டு வந்த பெகுமதி கூட கொண்டு வர போகாதென்றும் வருகிறவர்கள் தான் யெசமானென்று தன்னை அறிகிறதே அல்லாமல் முசியே லெறி பேர்வூர் யென்கிறது அறியப் போகாது யென்று நடப்பிச்ச சம்மதியும் தமிழர் ஆரும் மேல்வீட்டின் பேரிலே பாப்புச்சு சோடு பயிசார் சோடு போட்டுக் கொண்டு வரலாகாதென்றும் தான் ஒருத்தன் உளுக்காந்து கொண்டிருக்கிறதே அல்லாமல் மைத்த பேர்கள் யெல்லாம் நிற்கிறதென்று கட்டுப் பண்ணிக் கொண்டு வந்தபடியினாலேயும், அப்பால் நேத்து சாயங்காலம் முசியே

பெடுத்தல்மீ தோட்டத்துக்குப் போறதுக்கு முன்னே முசியே லெறியைக் கோபம் பண்ணின சாடையாய் அதன்பேரிலே முசியே பெடுத்தல்மீயை அனுப்பி வைச்ச சாடை பார்த்தால் தானே யேக வீரனாய் ஒருத்தனாய் துரைத்தனம் பண்ண வேணுமென்று யோசனை யிருக்கிற படியினாலேயும் முன் சாஸ்திரப்படிக்கு முசியே லெறிக்கு யோகம் யிந்த மாசம் மட்டுக்கும் ஆனபடியினாலே அவனை தள்ளுகுற காரியத்துக்கு அடுத்த சின்னமாய்ச் சொல்லி அனுப்பி வைச்சாப் போலே தோத்துது. அப்பாலே யென்னமாய் நடந்துதோ யினிமேல் அறிய வேண்டியது.

***1759 வருசம் சூன் மாசம் தேதி 28; பிறமாதி வருசம் ஆனி மாசம் தேதி 18; வியாழக்கிழமை***

இத்தனாள் ராத்திரி பதினெட்டு நாழிகைக்கு எங்கள் தாயாருக்கு மூத்தவள் எனக்கு பெரிய தாயார் பரமபதம் சேர்ந்தாள். யிவளுக்கு வயது எண்பத்தி மூணு ஆச்சுது. இந்த மட்டுக்கும் சரீரம் சுவாதீனத்திலே யிருந்து விழுந்து போனாள். எங்கள் தாயார் விழுந்து போன நாற்பத்தேழாம் வருஷம் யிவளுக்கு மரணம் வந்தது.

## ஜூலை 1959

*1759 வருசம் சூலை மாசம் தேதி 16; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 4; சோமவாரம்*

இத்தனாள் காத்தாலே சந்தாசாயபு மகனுக்கு ஆற்காட்டு சுபாவுக்கு சீரொப்பா குடுத்து பர்வாணாவும் குடுக்கப் போறார்களென்றும் சேதிகேட்டபடியினாலேயும் சந்தாசாயபு மகன் ரசா சாயபு நமக்கு சந்தி அனுப்பி மீர் குலாம் உசேன் மருமகனை கலியாணம் பண்ணியிருக்கிற மிறுத்திசா சாயபுவை நாளைக்கு சுபாவுக்கு சீரொப்பா ஆற்காட்டையிலே முசே லாலி செனராலாக போறாரென்றும் எண்ணத் தகுந்த சீர் பண்ணியிருந்த போதைக்கும் மாப்பு பண்ணி வந்து முபாரக்கு பாதி குடுக்க வேணுமென்றும் அதுக்குத் தக்க மரியாதையாய் நடப்பிச்சுக் கொள்ளுகுறோமென்றும் யிதுக்கு சொல்லத் தக்க காரியமா முடிய ரொம்பவும் உபசாரமாய் சொல்லி அனுப்பினதுக்கு நாமெந்த காரியத்திலே யிருக்குரோமென்றும் உங்களுக்கு பலன் தோணப்போகுது அல்லது நம்மைத் தொட்டு ஆகவேண்டிய காரியமிருக்க வேணும் என்னை பிரார்த்திக்கவும் ஆம் நான் வரவும் ஆகும். யிப்படி யிருக்கிற அவசரத்திலே நான் வருகிறதுக்கு ருசியிராது பார்த்தவர்களுக்கு கெம்பீரமாய் தோத்தப்படாது யென்று என்னை பரிகரிச்சு சொன்னாலும் வரவேணுமென்றும் ரொம்ப பிரார்த்திச்சதுக்கு ஆனால் நாளைய தினமும் நாளை நன்றைய தினமும் பறணி கிருத்திகை யாயிருந்தபடியினாலே அப்பால் யோசனை பண்ணிக் கொண்டு சொல்லி அனுப்புகுறேன் என்று போக்காகச் சொல்லி போகச் சொன்னதுண்டு. யின்று காலமே அந்த சீரொப்பா குடுக்கிறதும் நடக்கிறதும் வேடிக்கை பார்க்கிறாப் போலேயும் கோட்டையை போனேன் அங்கே வெள்ளைக்காறர் ஒருத்தர்களும் வரயில்லை. முசியே லெறி காம்பிரா சாத்தினவாக்கிலே யிருக்குது. முசே லாலி காம்பிரா திறந்து ரெண்டொரு வெள்ளைக்காறர் கீழண்டை போக்கு வரத்தாயிருந்துது. நல்லது பத்து மணி மட்டுக்கும் பார்ப்போமென்றும் மேல் வீட்டின் பேரிலே நடுசாலையிலே யிருக்கச்சே மிறுத்திசா சாயபு வந்தான். அவனை யென்ன சேதி யென்று கேட்டதுக்கு முசியே திலார்ஷு வருவான், வந்த பிற்பாடு தெரியுமென்று சொன்னான். நல்லது பார்ப்போமென்று யிருக்கச்சே முசியே தெலார்ஷு வந்து முசியே லாலி யிருக்கிற காம்பிராவிலே போய் பேசியிருந்து பத்தரை மணிக்கி வெளியே போனான். மிறுத்திசா சாயபுவும் கூட போனான். அப்பால் நானும் வீட்டுக்கு வந்தேன்.

இத்தனாள் ராத்திரி யேழு மணிக்கு கேழ்விப்பட்ட சேதி : ரசாசாயபும் அல்லி நக்கியும் முசியே திலார்ஷு வீட்டுக்குப் போய் ஆற்காட்டு சுபாவுக்கு முசியே லாலி செனரால் யெழுதி குடுத்த பர்வானா வாங்கிக் கொண்டு வந்தார்களென்றும் பெரியண்ண முதலியார், கந்தப்ப முதலியார் வகையராக்கள் பின்னையும் உத்தியோகத்துக்கு கார்த்துக் கொண்டிருக்கிறவர்கள் போய் முபாரக்கு பாதி குடுத்து நசர் வைத்துக் கண்டார்கள் யென்றும் நவபோத்தும் அடிச்சார்கள் யென்றும் யிப்படியாக அங்கே போய் வந்த பேர்கள் சொன்னார்கள்.

***1759 வருசம் சூலை மாசம் தேதி 23; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 11; சோமவாரம்***

ஆற்காட்டுக்கு சுபாதாரனாக கட்டளையிட்ட சாடை யெந்த விதமும் தெரியவில்லை யென்று கேட்டதுக்கு ரசா சாயபு முன் சந்தாசாயபு முதலான ஆற்காட்டு நபாபுகள் யிந்தப்படிக்கி பிறின்சுப் பியாயிருக்கிரது (Prince) அதுக்கு இவருக்கு ஒரு சாகீர் யிருக்கிறது. மைத்த சீமையிலிருந்து வருகுற பணம் பாளையக்காறர் பேஷ்கஷுக்கள் கில்லாதாரர்கள் பேஷ்க்கஷுக்கள் வகையராக்கள் வந்து ரசாசாயபுடனே சேருகுறது. திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் பேஷ்கஷு தவிர வருகுறது. சிப்பந்தி பேர் கும்பினீருக்கு முதல் விடுகுறதென்று ஒரு உடம்படிக்கை யென்று சொல்ல வந்தார். அதுக்கு நான் சொன்னது முசியே துப்பிளேயிக்சுக்கு இதாயத்து மொகதின் கான் சலாபத்து சங்கு கொம்மாந்தாம் செனரால் என்று பர்வானா யெழுதிக்குடுத்து அப்பால் ஆற்காட்டு சுபாவே முசியே துப்பிளேயிக்குசு பேருக்கு எழுதி வந்தது. கலாபத்தை தொட்டு சீர்மை யிவர்கள் வசமுமில்லாமல் அவர்கள் வசமுமில்லாமல் அராசகப்பட்டு துலுக்கர்கள் பந்தோபஸ்தும் தப்பி யெங்கும் அராசகத்திலே வந்து யிருக்கச்சே நம்முடைய கைவசமாயிருக்கிற சீர்மையை நாமா ஒருவரை நேமிச்சு நேமிச்சவன் நமக்குத் துரையாயிருக்கச் சொல்லி வைத்துக் கொள்ளுகிற பேரை நான் கண்டதில்லை. யிதுக்கு கோன்சேல் கூட்டம் ஒன்று ஆலோசனைக்காறர் அவரவர் மனது ஞாயத்தைச் சொல்லி எல்லாரும் சம்மதியின் பேரிலே செய்யுர போது ஒருத்தருக்காகிலும் தோத்தி யிப்படி யெங்கே யாகிலும் நடக்குமா வென்று கேழ்க்கப் பார்த்துப் போனதும் ஆச்சரியந்தானென்று சொன்னதுக்கு முசியே லெறி சம்மதிக்க யில்லை. மூணு பேரும் கையெழுத்துப் போடயில்லை. முசியே தெவோவும் சம்மதிக்கயில் யென்று சொல்லி அவர்கள் கையெழுத்துப் போடாதே போனாலும் கோன்சேலிலே தீர்த்துக் கோன்சேல் லிப்ரேசியேமில யெழுதி வைக்கப்பட்டபடியினாலே முசே லாலி செனராலாயிருக்கிற படியினாலே அவரே சபேரிட்ட வர்சரி அது கோன்சேலுக்கு கவையில்லை முசே

லாலி யினுடைய மனதென்று சொன்னதுக்கு என்ன ஞாயத்தை சொல்லி முசியே லெறி சம்மதியல்லவா வென்று சொல்லி கையெழுத்துப் போடமாட்டமென்று சொல்லுகுறாரென்று கேட்டதுக்கு யிப்போது அதுக்கு சமயமில்லை. யினிமேல் ஒரு வேளை பார்த்துக் கொள்ளுவோம் யென்று சொன்னாரென்று சொல்ல வந்தார். அதுக்கு நான் சொன்னது, "முசியே லெறி முசே லாலிக்கு சொல்ல வேண்டிய உத்தாரம் வேரே யிருக்குது யிப்படி சொன்னால் முசே லாலி கோபிச்சுக் கொண்டு நிராகரிச்சு உம்முடைய கையெழுத்து கவையில்லை யென்று சொல்லுவார். சொல்லவேண்டிய மார்க்கமாய் சொல்லி, தள்ள வேண்டிய மார்க்கமாய் தள்ளுகிறதுக்கு நியாய மிருக்கச்சே சொன்னத்துக்கு அதெல்லாம் ஆருக்கு கவை தனக்கும் பத்து பணம் வரயில்லை யென்று தோத்தி சம்மதியில்லை யென்று சொல்லுகிறதே அல்லாமல் நியாயமும் நம்முடைய சாதிக்கும் இளமையும் மரியாதையும் தாக்ஷியாச்சுது என்றும் தோத்துதா யென்று சொல்ல வந்தார். அதுகளுக்கு நல்லகாலம் வந்தால் யெல்லாம் தோத்தும் யென்று சொல்லிக் கொண்டிருக்கச்சே" வண்டி முஸ்தீப்பாய் வந்து தென்று கபுறு சொன்னவுடனே நான். அரியாங்குப்பத்துக்குப் போரேனென்றும் சொல்லி அனுப்பி வைச்சுக் கொண்டு போனார். நானும் அனுப்பி வைச்சுக் கொண்டு வீட்டுக்கு எட்டரை மணிக்கு வந்தேன்.

***1759 வருசம் சூலை மாசம் தேதி 24; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 12; செவ்வாய்***

இத்தனாள் காத்தாலே வெளியே கடற்கரை யோரத்துக்குப் போய் முசே லெபோம் (M. Le Beaume) யில்லை யென்று பார்த்துப் போட்டு வீட்டுக்கு எட்டு மணிக்கு வந்தேன். யித்தனாள் மத்தியானம் நான் கேழ்விப்பட்ட சேதி : சலாபத்து சங்கு தம்பி பசலாத்து சங்கு (Basalat Sang Salabat Sang's Younger Brother) – யென்குறவனுடைய காகிதமும் முசியே லெறிக்கும் முசியே லாலிக்கும் முசியே புசிக்கும் பின்னையும் முசியே புசி அண்டையிலிருக்கிற ஒப்பிசியால் மாருக்கும் காகிதங்கள் வந்ததாயும் அந்த அறுக்காறுகள் சொன்னது ஆற்காட்டு சுபா கிருஷ்ணா நதிக்கு தெற்கு யெல்லாம் யிவருக்கு சுபா குடுத்ததாயும் அது நிமித்தியம் பந்துபஸ்து பண்ண வருகுறார் யென்றும் பதினாயிரம் குதிரையும் ஆராயிரம் பாறுக்காறர்கள் கூட வந்து நெல்லூர் மார்க்கமாய் கடப்பையின் பேரிலே பிறப்பட்டு ஆற்காட்டுக்கு வாரதாய் சேதி சொன்னார்கள். இனிமேல் யென்ன நடக்குமோ தெரியாது அறிய வேண்டியது.

ரெண்டு மூணு நாளாய் கேழ்க்கப்படுகுற சேதி என்ன வென்றால் ரசாசாயபுக்கு குடுத்த ஆற்காட்டு சுபாவை ராமலிங்கன் துரைத்தனம் பண்ணி நடப்பிச்சால் மூணு லக்ஷம் ரூபாய் குடுக்குறோம் என்று முசியே பசேன் மாரிபத்தாக முசியே லாலியுடனே பேசினதாகவும் அதுக்கவர்

சம்மதிச்சதாகவும் அந்த சந்தோஷத்தின் பேரிலே ராமலிங்கன் மூணு நாளாய் இராமார் ஆட்டு பாட்டு கூட்ட நாட்டம் பெகு சம்பிறமமாய் பண்ணி நாலாயிரம் அய்யாயிரம் ரூபாய் மட்டுக்கும் சிலவு கூட பண்ணினானென்றும் கபுறு கேழ்க்கப்பட்டுது.

*1759 வருசம் சூலை மாசம் தேதி 29; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 13; ஆதிவாரம்*

நிசாமல்லிக்கான் தான் ஷாநவாபுகான் வீட்டில் யிருக்கிறவன் சலாபத்து சங்கு வீட்டுக்கு வந்து தமையனை மறிச்சுக் கொண்டு உன் பெண்சாதி கையிலே யிருக்கிற உடமை யிருபது லக்ஷம் ரூபாயிக்கு உண்டே அந்த உடமையைக் குடுத்துப்போட்டாலே அல்லாமல் போறதில்லை யென்று மறிச்சுக் கொண்டு சலாபத்து யிருக்கிற வீட்டை சுத்திலும் நிசாமல்லிக்கான் சவுக்கை வைத்து சலாபத்துவை காவலிலே வைத்து சகல சோபானமும் யெடுத்துக் கொண்டு தான் ராச்சியபாரம் பண்ண நினைத்துக் கொண்டு நடப்பிக்கிறக் காரியமாயிருக்கிறதுக்கு நிசாமல்லிக்கான் அண்டையிலே யிருக்கிற அமீர்வுல் உமார்க்கன் சமேத்தராக்கள் வகையரா எல்லாரும் சலாபத்து சங்குவை பிடிக்குறதும் காவல் வைக்கிறதும் சகல சோபானமுமெடுத்துக் கொள்ளுகிறதும் சம்மதிப் படாமல் நிசாமல்லிக்கானைப் பார்த்து நீர் நியாயம் தப்பிதமாய் நடத்துகிறதுக்கு நாங்கள் சம்மதிச்சு சலாபத்து சங்குவின் பேரிலே கையெடுக்கிறதில்லை யென்று சொல்லிப் போட்டு யிருக்குறார்களாம். சலாபத்து சங்கு நிசாமல்லியைக் கொல்ல வேணும் அல்லது கையிலே வெட்டுப்பட்டுப் போறதுமே அல்லாமல் மைத்தப்படி வேறே யென்ன என்று தீர்த்துக் கொண்டிருக்குறாரென்று யிப்படிக்கு அண்ணன் தம்பி ஒருத்தருக்கொருத்தர் அந்தக் கலகம் பிறந்து வெட்டுண்டு போறதும் கோல்க்கொண்டை பட்டணத்தை அனியாயம் பண்ணினதைத் தொட்டு வர்த்தகர் முதலான பேர் குடி விலகி போய் விடுகுறபடியினாலே பட்டணம் நாசமாகவும் ராச்சியம் அராசகமாகவும் துலுக்கர் நாசத்துக்கு காலம் வந்ததென்று செனங்கள் சொல்லிக் கொள்ளுகுறார்களென்று யெழுதி வந்த சேதியைப் பார்த்து யெழுதி வைத்தேன். மைத்தப்படி முசே லாலி ஒழுகரையிலே யிருக்கிற முசே சுப்பீர் அண்டையில் போய் சாப்பிடப் போனார்.

*1759 வருசம் சூலை மாசம் தேதி 30; பிரமாதி வருசம் ஆடி மாசம் தேதி 18; சோமவாரம்*

கேழ்விப்பட்ட சேதி : மத்தியானம் பதினோரு மணிக்கு வெளியே இமாம் சாயபு குமாரன் தியாக துற்கமும் அதுக்குள்ள சாகீர் முன் தன் தகப்பனாருக்கு நடந்தப்படிக்கி குடும் அதுக்கு முப்பதினாயிரம் ரூபாய்

கும்பினீருக்கு நசர் குடுக்கவும் யிந்த முப்பதினாயிரம் ரூபாயும் கும்பினியார் யிமாம் சாயபு மகன் ரொக்கத்திலே பத்திக் கொண்டதாய் ரெசீது குடுக்கவும். முசே லாலிக்குப் பதினாயிரம் ரூபாய் ரொக்கத்திலே குடுக்கவும், அதுக்கு சத்தியாய் அய்யாயிரம் ரூபாய் கையிலே குடுக்கிறதும் பர்வனா கைக்கு வந்த பதினைந்து நாளையிலே மைத்த அய்யாயிரம் ரூபாயும் குடுக்கவும் முசே பசேனுக்கு மூவ்வாயிரம் ரூபா, அவன் துபாசி சவரிராயனுக்கு ரெண்டாயிரம் ரூபா இந்தப்படி யெல்லாம் பேசித் தீர்ந்துது அல்லாமல் வருஷா வருஷம் சாகீருக்கு எழாயிரம் ரூபாய் பேஷுக்கஷு குடுக்கவும் யிந்தப்படிக்கு உடம்படிக்கை பேசி தீர்ந்துக் கொண்டு இத்தனாள் பதினோரு மணிக்குப் போய் முசே லாலியை பேட்டி பண்ணிக்கொண்டு ரெண்டு மாத்தாபி சீரொப்பாவும் கோசாவு வாணீசு (Coja Johannes) கையிலே ரெண்டாயிரம் ரூபாயிக்கு வாங்கின வஜ்ர மோதிரமொன்றும் குதிரையும் கொண்டு போய் நசர் வைத்து சந்திச்சவுடனே, அவரெதிரே ஒரு நாற்காலி போட்டு உளுக்காரச் சொல்லியும் வார்த்தை வசனங்களும் நடப்பிச்சு துபாசித் தனம் முசே பசேன் துபாசி சவரிராயன் பேசினானாம். அப்பால் முசே லாலி தியாக துற்கம் சாகீர் வகையரா யெழுதி மோகரு பண்ணி யிருக்கிற பர்வானா கையிலே குடுத்து இமாம் சாயபு குமாரனுக்கு குடுத்தாராம். அதை அவன் யெழுந்து வாங்காமல் உளுக்கார்ந்த வாக்கிலே வாங்கினவுடனே, முசே பசேன் சோபுதாருடனே சொல்லி அவன் கையைப் பிடிச்சுத் தூக்கி விட்டுத் தலையை குனியச் சொல்லி கையினாலே கழுத்தை அமுக்கிப் கையைப் பிடிச்சு தசிலி மாத்து பண்ணச் சொல்லி யிப்படி அவமரியாதையாய் நடந்த பிற்பாடு, முசே லாலி யிவன் சிறுபிள்ளையான படியினாலே நடக்க வேண்டிய மரியாதை தெரியாதே போனபடியினாலே சோபுதாரன் கத்துக் குடுத்தான் யென்று யெழுந்து போகச் சொன்னாராம். பர்வானரவை வாங்கிக் கொண்டு அந்தப்படிக்கிக் குனிஞ்சு தசிலி மாத்துப் பண்ணிப் போட்டுப் போனானாம். அவன் பிறகே ஒரு கிழவன் ஒருத்தன் வந்தவன் தன் எசமானுக்கு நடந்த பாட்டயைப் பார்த்து, யிவன் தலையைக் கொண்டு போய் தரையிலே வைத்து தசிலிமாத்துப் பண்ணிக் கொண்டே யிருந்தானாம். அவன் போன பிற்பாடு யேழு பீறங்கி போட்டார்களாம். இந்தப்படிக்கு நடக்கச்சே கூட யிருந்து வந்து சொன்னவர்கள் வாய் விசேஷங் கேட்டு எழுதினது : முசே லசேல் பஞ்சமால் விசாரித்து நேத்து ராத்திரி வந்து சேர்ந்தானென்று சொன்னார்கள். யிவர்கள் போய் விசாரித்த விடத்திலே முன் முசே மீரா முதலானவர்கள் பர்கணாவிலே பண்ணின அனியாயத்தை மறந்து போய் யிவரைச் சொல்லத் தக்கதாக நடப்பிச்சுப் போட்டு வந்தானென்று சொன்னார்கள். யிதிலே தார திமியம் பார்த்துக் கொள்ள வேண்டியது. இமாம் சாயபு மகன் முசே லாலிக்குக் கொண்டு வந்து கண்டு

அவருக்குக் குடுத்து கண்ட மாத்திரத்திலே மாத்தாபி சீரொப்பா 2–க்கு ரூபாய் நானூறும் குதிரை–1க்கு ரூபாய ஆயிரம் வயிர மோதிரம் 1–க்கு ரூபாய், (2000) இரண்டாயிரம் ஆக கூடி ரூபாய் மூவாயிரத்து நானூறு (3400).

*1759 வருசம் சூலை மாசம் தேதி 31; பிரமாதி வருசம் ஆடி மாசம் தேதி 19; செவ்வாய்*

இத்தனாள் பதினோரு மணிக்கு சந்தா சாயபு மகன் ரசா சாயபுவை அழைப்பிச்சு சீரொப்பாவும் ஆற்காட்டு சுபாவுக்கு சுபேதாரர்த்தனமும் (Subhadarship) முன் ஆடி மாசம் 2 தேதி சனிவாரம் கோன்சேல் பண்ணி தீத்த சம்மதிக்கு யித்தனாள் சீரொப்பாவும் பர்கனாவும் குடுக்க நேத்தே நிஷ்கஷை பண்ணி முசே லாலி தன்னுடைய சக்கிறததேராகிய (Seeratary) முசே லபாத்தை முசே லெறிக்கு முசே பெடுத்தல்மீ வகையரா கோன்சேல்க்காரர் எல்லா வீட்டுக்கும் போய் நாளைய முப்பத்தோராந்தேதி செவ்வாய்க்கிழமை பதினோரு மணிக்கி கோட்டையிலே ரசா சாயபுக்கு ஆற்காடு சுபாவுக்கு சீரொப்பாவும் பர்வனாவும் குடுக்கப் போரார்களாம், உங்களை வரச்சொல்லி முசே லாலி சொன்னார் யென்று சொன்னால்ப் போட்டு வந்தபடிக்கி யின்றைய தினம் பதினோரு மணி வேளைக்கு முசியே லாலி காம்பிராவிலே முசியே லெறி முதலான கும்பினீர் தாலூக்கு கொவற்ணதோர் கோன்சேலியோர்க்காறர் யெல்லாரும் கூடினார்கள். முசியே பசேனையும் முசே லாமேரும் போய் அழைத்து வரப்போன விடத்திலே முசே பசேனுக்கு ஒரு மாத்தாபி சீரொப்பாவும் ஒரு மமுதி சீரொப்பாவும் ஒசத்தியும் முசியே லாமேருக்கும் குடுத்து, அவர்கள் பிறகே கோட்டைக்கு ரசா சாயபும் அல்லி நக்கி சாயபும் ரெண்டு பேரும் பல்லக்கேறிக் கொண்டு பத்துபேர்களும் பிடிப்பிச்சுக் கொண்டு கோட்டைக்குப் போனவிடத்திலே மேல் வீட்டின் பேரிலே போன சந்தா சாயபு மகனையும் யிப்பறம் சத்து நேரம் நிறுத்தி முசே லாலி சமயம் பேதகமென்று சொல்லி வைத்துக் கொண்டிருந்து அப்பால் வண்டி போட்டு ஓடுகிற முசியே துப்பிளேயிக்சுனுடைய நாற்காலியை சீமையிலிருந்து வந்து, முசியே பொசேத்து வீட்டிலே யிருக்கிற நாற்காலியை அழைப்பிச்சுப் போட்டு அதன்பேரிலே முசியே லாலி ஊளுக்கார்ந்து கொண்டு யிப்பறத்திலே ஒரு சாதா நாற்காலியைப் போட்டு அதன் பேரிலே முசியே லெறி ஊளுக்கார்ந்து யிருக்க முசியே பெடுத்தல்மீ முதலான கோன்சேலியோர்கள் நிற்க முசியே பசேன் முசியே லமேர் பிறகே ரசா சாயபும் அல்லி நக்கியும் யெதிராக வந்து ரெண்டு நாற்காலி போட்டு ஊளுக்காரச் சொல்லி ஊளுக்காரப் போகச்சே சந்தா சாயபு மகன் கையிலே ஒரு ரத்தின மிழைத்த பதக்கம் முசே லாலிக்கு நசர் வைத்து ஊளுக்காரந்த பிற்பாடு ஆற்காட்டு சுபாவுக்கு உம்முடைய மனுஷரை

அனுப்பவில்லையா வென்று கேட்டாப் போலேயும், அனுப்பி வைச்சோம் யென்று சொன்னாப் போலேயும், கொடி போட்டு யிருபத்தோரு பீரங்கி சுடச் சொன்னதாகவும் கொடி மரத்தின் பேரிலே யேறி கொடி போடப்போகச்சே கொடி நடுக்கயிறு அத்து விழுந்தாப் போலேயும் அதன் பேரிலே மறுபடியும் கொடியைத் தூக்கி நடுக்கயிறு கட்டி அதன்பிற்பாடு கொடிபோட்டதாயும் அப்பாலிங்கே சீரொப்பாவும் பர்வனாவும் ரசா சாயபுக்கு குடுக்க அப்பால் பின்னை ஒரு சீரொப்பா அல்லி நக்கிக்கு குடுக்க இவர்கள் ரெண்டு பேரும் எழுந்திருந்து வாங்கிக் கொண்டு சலாம் பண்ணி உளுக்கார்ந்த உடனே யிருபத்தோரு பீரங்கி போட்டார்கள். அப்பால் சத்து நேரம் உபசாரஞ் சொல்லி அனுப்பி வைச்சுக் கொண்டு போகச்சே முசே பசேனையும் முசே லெமேரையும் கூடப்போய் விட்டு வரச் சொன்னார்கள். அவர்கள் ரெண்டு பேரும் கூட போனார்கள். கோட்டை வாசற்படியிலே வரிசை வைத்து சின்னதுரைக்கு அடிக்குற தம்பூறு அடித்தார்கள். வீட்டுக்குப் போனவுடனே முசே பசேனுக்கும் முசே லெமேருக்கும் பேருக்கொரு மாத்தாபி அலக்கா சீரொப்பாவும் முசியே பசேனுக்கொரு வையிரமோதிரமும் முசே லெமூருக்கு ஒரு நீல மோதிரமும் குடுத்து அனுப்பி வைச்சான். யிந்தப்படிக்கு நடந்ததென்று கபுறு சொன்னவர்களை பின்னையும் ஒரு சேதி அதனமாய் முசே லாலியை சாயங்காலம் வீட்டுக்கு வரவேணுமென்று அழைப்பிச்சதாகவும் வாறோமென்று சொன்னதாகவும் சொன்னார்கள். கொடி போடுகிறபோது மத்தியே கவுறு அறுந்து போய் கொடி விழுந்துதுக்குப் பலன் யிவனுக்கு கொஞ்ச நாளைக்குள்ளே தலை போறது யென்று அல்லவென்று காவல் கட்டு வந்தும் சங்கடப்படுவானென்றும் செனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.

## ஆகஸ்ட் 1959

*1759 வருசம் அகொஸ்து மாசம் தேதி 1; பிரமாதி வருசம் ஆடி மாசம் தேதி 20; புதவாரம்*

இத்தனாள் காலத்தாலே கோட்டைக்குப் போனவிடத்திலே சந்தாசாயபு மகனும் தக்கா சாயபு மகனும் ரெண்டு பேரும் ரெண்டு பல்லக்கும் பேரிலே யேறிக் கொண்டு வந்திறங்கி மேல் வீட்டின் பேரிலே வந்து மேலண்டை பாரிசத்திலே முசே லெறி யிருக்கிற யிடத்திலே முசியே திலார்ஷும் போயிருந்தபடியினாலே இவர்கள் உள்ளே போன உடனே உளுக்காரச் சொன்னவுடனே ஒரு பதக்கமும் ஒரு துர்ாயும் நசர் வைத்தார்கள். அவர்கள் அதை வாங்கிக் கொண்டு ரெண்டு பேரும் உபசாரமாய் சொல்லி பேருக்கொரு மாத்தாபி சீரொப்பா குடுத்து போகச் சொன்னார்கள். அந்த மட்டுக்கும் வாங்கிக் கொண்டு போனார்கள். மைத்தப்படி பீரங்கி போடயில்லை யெதிரே போய் வெள்ளைக்காறர் அழைத்ததில்லை. நடக்கும் சடங்குகள் ஒன்றும் நடக்கயில்லை. அது யெதினாலே யென்றால் முசே லாலி யிவருக்கு ஆற்காடு சுவாபுக்கு நேமிக்கிறதுக்கு முசியே லெறி சம்மதிச்சுப் போடமாட்ட மென்றவரான படியினாலேயும் முசே லாலி கையெழுத்துப் போடாதவரை கூட வைத்துக் கொண்டு நேத்துதாம் நடப்பிக்க வேண்டியதை நடப்பிச்சுக் கொண்டு இன்றைய தினம் முசியே லெறி அண்டைக்குப் போகச் சொன்னபடிக்கு அவர்கள் வந்த மட்டுக்கும் யிவர் அவர்களுக்கு குடுத்த நசரும் ஒப்பிட்டு வாங்கி தீரவேணும் பெகுமானமும் குடுத்துத் தீரவேண்டி வந்து நடப்பிச்சதே அல்லாமல், யில்லாவிட்டால் சறுவாத்துமனாக முசியே லெறி வரச் சொல்லப் போறதும் யில்லை. அவர்கள் வரப்போறதுமு் யில்லை. யிந்தப்படிக்கு ரசாசாயபு வந்து பேட்டி பண்ணிக் கொண்டு போனான். வந்தும் போனதும் காலநாழிகை நேரமுண்டு...

இதல்லாமல் கேழ்விப்பட்ட சேதி சலாபத்து சங்கு அண்டையிலிருந்து முசியே லாலி அவர்களுக்கு காகிதங்கள் வருகிறதினாலே அறுக்காராய் வருகுது யென்றால் முசியே புசி வந்து யிவ்விடத்திலிருந்து பழகினவன் யிந்த ராட்சியத்தாருடைய சுபாவங்களெல்லாம் நன்றாயி அறிந்து எவரெவர் களுக்கு யெந்தெந்த விதம் பேச வேணுமோ அந்தந்த விதம் பேசுவான். அவரவர்கள் தராதரம் அறிந்து பேஷுக்கஷு வாங்குவான். சண்டித்தனம் பண்ணினவர்களை பவுன்சுகளை அனுப்பி அந்தந்த கில்லாக்களை கைவசம் பண்ணிக் கொண்டு அப்பால் அவரவர்களுக்கு தானே அபராதங்கள் கூட விசேஷமாய் வாங்கிப் போட்டு குடுக்குறதும் உண்டு ரொம்ப அராம் சாதாருக்களை வாங்கிக் கொண்டு வேறே போடுகுறதுண்டு.

பாளையக்காறர்களுக்கும் அப்படித்தான். மராட்டியர்களுக்கும் அப்படித் தான். யிந்தப்படி யிந்த ராச்சியத்தார்களை யேழு வருஷமாயிருந்து அடக்கிப் போட்டு பந்து பஸ்தும் பண்ணி நடப்பிச்சுக் கொண்டு வந்தார். இதல்லாமல் நானா வைத்தானே பவுன்சுடனேயும் ஒடிப்போகத்தக்கதாக ரெண்டு தரம் முறியடிச்ச பிற்பாடு யிவர் பேர் சொன்னவிடத்திலே மராட்டியர் கால் வைக்குறதில்லை. இதல்லாமல் டில்லி பாதுஷா கூட முசியே புசியை தமக்கு சகாயமாய் வரச்சொல்லி அஞ்சாறு தரம் யெழுதினதுக்கு அவர் டில்லிக்கு வந்தால் தக்கன ராச்சியத்தை மராட்டியர்கள் கட்டிக் கொண்டு போவார்களென்றும் யெழுதினதின் பேரிலே நல்லதென்று சம்மதிச்சு எழுதினார். ஆனாலிந்த ராட்சியத்திலே யிருக்கிற பாளையக்காறர்கள் மராட்டியர் கில்லேதாரர்களுக்கு முசியே புசியை விட பின்னை ஒருத்தருக்கு பந்துபஸ்த்துப் பண்ண வராது. ஆகச்சே அவரை அனுப்பிவைச்சால்தான் அனுப்பி வைக்குறீர்களே—யில்லாவிட்டால் வும்முடைய பவுன்சில் சிறிது பவுன்சும் கூட்டிக்கெண்டு நீர் காசுதானே வரவும் யென்றும் யெழுதி வந்தது மல்லாமல் இந்தப்படிக்கு நீறும் வராமல் முசியே புசியை அனுப்பாமல் போனால் உங்கள் சமேத்து பவுன்சுகள் சமேதாரர் சீமைகள் வகையிரா யிவ்விடத்திலே யிருக்கிறதிலேயும் தள்ளப் போட்டு அப்பால் நாங்கள் இங்கிலீசுக்காரர்களை சேரப்பிடிச்சுக் கொண்டு எங்கள் காரியம் யெப்படியோ அப்படி பார்த்துக் கொள்ளுவோ மென்றும் யிது நிமித்தியமாக கோசா சோகிறுல்லாக் கானை (Coja-Zuhur-ul-lah-Khan) அனுப்பி வைச்சோம். சுறுக்கிலே வரவேணும் யென்று அடிக்கடி யெழுதி வாரதாயும் சலாபத்து சங்கும் யிந்தப்படிதான் யெழுதி அனுப்பி வைக்குறானென்றும் யிதுக்குப் பதிலுத்தரவு நிசாமல்லிக் கான் காகிதம் வரவேணுமென்றும் அவனக்கும் மத்தத்தாய் பண்ணுரோமென்று சொல்லுகுறார் யென்று சொன்னார்கள். இனிமேல் யென்ன சேதி நடக்குமோ அறிய வேண்டியது...

இத்தனாள் சாயங்காலம் முசே லாலி பின்னையும் நாலைஞ்சு ஒப்பிசியால் மார் முசே தெலார்ஷு வகையிரா கோன்சேலியேர்கள் கூட ரசா சாயபு வீட்டுக்கு வந்த விடத்திலே யிவர்கள் நவபத்து முதலான மரியாதை வாத்தியங்களென்ன வுண்டோ அதுகளெல்லாம் பிடிப்பிச்சுக் கொண்டு கோட்டைக்கெதிரே போய் அழைத்துக் கொண்டு வந்தவிடத்திலே முசியே லாலிக்கு ரசா சாயபு குடுத்த பெகுமாணம் வயணம் றத்தினம் இழைத்த துரா—1, றத்தினமிழைத்த சீறபோஸ்திரா—1, பதக்கம்—1, மாத்தாபி சீரொப்பா—1, முசியே தெலார்ஷுக்கு மாத்தாபி சீரொப்பா—1, றத்தின மிழைத்த பதக்கம்—1 இதை வாங்கிக் கொண்டு போனார்கள்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 3; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 22; சுக்கிறவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : மைலாப்பூர் பிசப்பு னொரோஞ்சு (Bishop Norouha) என்கிறவர் முராரிராயன் அண்டைக்கு ஸ்தானபதியாய் போனவரும் முராரிராயனும் கூடிக் கொண்டும் ஆலோசனை பண்ணி முசே லாலி பேருக்கு யெழுதி அனுப்பின கராறுநாமா வயணம்.... முராரிராயன் அவ்விடத்திலிருந்து அனுப்புகுறது. குதிரையும் துப்பாக்கி பிடித்திருக்கிற பாறுக்காறர்கள், 1000 வெள்ளைக்காறர்கள் சொலுதாதுகள், 100 பீரங்கி யிதுகள் முராரிராயன் அனுப்புகிறது. இது கடப்பை கேட்டை சேர அனுப்புகிற தென்னவென்றால் இனாம் லக்ஷம் ரூபாய் முன்னுதாக கடப்பை நத்தம் கனமை வந்து சேர அனுப்புகிறது. பவுன்சுக்கு சரதார் தளவார் பேர்கள் வயணம் சிவராம் பவம் முல்லாரிராவ், யினிசுக்கான், நரசிங்கராவு, கோஜாப்பீர் ஆக நாலுபேர் சறுதார்களிவர்கள் வந்து முசே லாலியை பேட்டி கண்டவுடனே முசியே லாலி அவர்கள் குடுக்கிற பெகுமானம் பல்கை தந்தமாயிருக்கிற ஆனை—2, குதிரை—3, பீரங்கி—4, யிதுகளுடனே வஸ்திரங்கள் எந்தப்படி சேர்மானம் பண்ணிக் குடுக்க வேணுமோ அந்தப்படி வெகுமதி பண்ணுகிறதும் மறுபடி காரியம் ஆயி—லூருக்கு அனுப்பி வைச்சுக் கொண்டச்சே மேலே யெழுதப்பட்ட படிக்கு லட்சம் ரூபாய், ஆனை—2, குதிரை—3, பீரங்கி நாலு யிதல்லாமல் வஸ்திர பெகுமானங்கள் கூட குடுத்தனுப்புகுறது அப்பால் சம்பள நிஷ்கருஷை முன் குதிரை—1, ஒரு ரூபாய் வீதம் நிஷ்கருடிஷ பண்ணி யிருந்தோம். பிசப்பு யிதில் வந்த பிற்பாடு குதிரை—1 க்கு தினம் முக்கால் ரூபா விழுக்காடு நிஷ்க்கருஷை பண்ணினோம்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 4; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 23; சனிவாரம்***

இத்தனாள் சூரிய உதயத்துக்கு இங்கிலீசுக்காறர் கப்பல் நாகப்பட்டணம் அந்த வட்டங்களிலே யிருந்த பதினாறு பதினேழு கப்பலும் நம்முடைய துரைக்கு நேராய் வந்து பிடித்தவுடனே கோட்டைக் கொடி கம்பமரத்தின் பேரிலே சிகப்பு பூவால் கொடி போட்டு ரெண்டு பீரங்கி சுட்டார்கள். சமஸ்தமானபேர் வெள்ளைக்காறர் யாவத்தும் துப்பாக்கிகள் யெடுத்துக் கொண்டு கோட்டையே வந்தார்கள். கடற்கரை அடங்கம் கொத்தளங்கள் யெல்லாம் மருந்து குண்டுகளும் சண்டை சாமான்களென்ன உண்டோ யாவத்தும் தயாறு பண்ணி பீரங்கிகள் நெருப்பு கயிறும் கையுமாய் நின்றார்கள். பட்டணத்து செனங்களெல்லாம் கடற்கரை யோரத்திலே வேடிக்கைப் பார்க்க வந்தவர்கள் மிதமில்லை.

யிந்தப்படிக்கி ரெண்டு மணி மட்டுக்கும் கண்டு பகலைக்கு மேலாக ஒசந்து மறைஞ்சு போனான். இதுகளெல்லாம் முசியே சுப்பீர் யிருந்து ஒடுதி மத்தது குடுத்து திட்டம் பண்ணினார். முசியே லாலிக்கு காகிதம் யெழுதி அனுப்பினதாய் சேதி சொன்னார்கள். அப்போ வெள்ளைக்காறர் சொன்னது சென்னபட்டணத்திலே யிருந்து ஆயிரத்திறுநூறு (1200) சொலுதாதுகள் ரெண்டாயிரம் பாறும் (2000) ஆயிரம் குதிரையும் ஆற்காட்டிலே போகத்தக்கதாக காஞ்சீபுரம் போய்ச் சேர்ந்ததாகச் சொன்னார்கள்.

### *1759 வருசம் ஆகொஸ்டு மாசம் தேதி 5; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 24; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே யெட்டரை மணிக்கு கோட்டைக்குப் போனவிடத்திலே கோட்டையிலே ஒருத்தரும் யில்லை. கடற்கரையே போனால் இங்கிலீசுக்காரர் கப்பல் வரிசையாய் வீராம்பட்டணத்து துரைக்கு நேராய் பாயெடுத்துக் கொண்டு வடக்கே போறதும் தெற்கே வாறதும் ஆக யிந்தப்படிக்கி ஓட்டம் காட்டிக் கொண்டிருக்கிறதும் ஒவ்வொரு பீரங்கி சுடுகிறதும் இந்த சாடையிலே நடத்திக் கொண்டிருக்கிற வினோதங்களைப் பார்த்ததுமில்லாமல் நம்முடையவர்கள் கொத்தளங்களிலே வெகுபந்துபஸ்த்துடனே யிருக்கிறதுகளும் சனங்கள் வந்து கூட்டம் கூட்டமாய் பார்த்ததுவும் நேத்தைக்கு இன்றைக்கு அரைவாசியான படியினாலே நாளைய தினமிதுவும் யிறாதென்றும் யோசனை பண்ணிக் கொண்டு நாலத்து ரெண்டு பேர் ஒப்பிசியால் மார் அங்கே வந்தவர்களுடனே லோகா பிராமமாய்ப் பேசியிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு பத்துமணிக்கு வீட்டுக்கு வந்தேன். பின்னை வேறே விந்தைகள் கேழ்க்கப்படயில்லை.

### *1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 6; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 25; சோமவாரம்*

இத்தனாள் ராத்திரி மறுக்கி கோம்பிளாம் (Marquis de Conflane) மச்சிலிபந்தர் இங்கிலீசுக்காறர் வசம் பண்ணிப்போட்டு அவர்கள் வாடிக்கைப்படிக்கு கத்தி குடுக்கிறதில்லை யென்றும் பிறி சொனேர் தெ கேர்யென்றும் யெபதிக் குடுக்கிற வாடிக்கைப் படிக்கு யெழுதிக் குடுத்துப் போட்டு அவ்விடம் விட்டு பிறப்பட்டு யிவன் தட்டு முட்டுடனே கூட நேத்து ராத்திரி ரெண்டு மணிக்கு ஒழுகரை வந்து சேந்து முசே லாலி சிதம்பரத்திலே யிருக்கிற கபுறு தெரிஞ்சுக் கொண்டு யித்தனாளையிலே சிதம்பரத்தையே போறார்கள் என்று சொன்னார்கள்....

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 7; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 26; செவ்வாய்கிழமை***

இத்தனாள் சந்தா சாயபு மகனும் தக்கா சாயபு மகனும் ஆற்காட்டுக்குப் பயணம் போகத் தக்கதாக நேத்து ராத்திரி ஆறு மணிக்குப் பத்துப் பதினைஞ்சு குதிரைக்காரர்களும் நூறு பேர் பாறக்காறருடனே பிறப்பட்டு வழுதாவூரிலே போயிறங்கி யிருந்து யித்தனாள் அவ்விடம் விட்டுப் போனதாய் சேதி சொன்னார்கள். செனங்கள் யிவனுக்கு சோமை மோகத்து பண்ணாததுக்கு முன்னுதாக ஆற்காட்டி தேசம் பிரான்சுக்காறருடைய ஆதீன மாச்சுதே ரசா சாயபு பிறப்பட்டபடியினாலே இங்கிலீசுக்காறர் காவேரிப்பாக்கம் கோட்டை வகையிராக்களும் சீமைகளும் கட்டுவார்கள் இவர்கள் ஒரு மாசத்துக்குள்ளாக ஓடிவருவார்களென்று செனங்களும் எக்க வாக்கியமாய்ச் சொல்லிக் கொண்டார்கள்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 8; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 27; புதவாரம்***

இத்தனாள் முத்துபள்ளி மகன் கொழந்தைக்கு சீமந்தக் கலியாணம் யென்று யிவ்வடத்திலே யிருந்தவர்கள் அந்தக் கலியாண அலுவலிலே யிருந்ததைத் தொட்டு ஒரு சமாச்சாரமும் கேழ்விப்படயில்லை யென்று கபுறு சொன்னார்கள். இந்தநாள் ராத்திரி ரெண்டு ஒப்பிசியால்மார் வந்து சொன்ன சேதி யென்ன வென்றால் மயேயிலிருந்து பதினோராம்நாள் சேதி வந்ததாயும் அங்கே சீமையிலே யிருந்து லகுலோரிஸ் என்கிற (The Frigate Egnacieuse) பிரிகாத்து சீமையை விட்டு யிந்த வருசம் சித்திரை மாசம் பிறப்பட்டு மூணு மாசம் ஒன்பது நாளிலே மயேயிலே வந்து சேர்ந்து சீர்மை யிலிருக்கும் கும்பினியார் குடுத்த காகிதத்தை மயேயிக்கு தெற்க்கேதோர் (Directeur) கையிலே குடுக்க அந்த க்ஷணம் பயணம் அனுப்பினான். அந்தக் காகிதம் இன்று சாயங்காலம் முசே லெறிக்கு வந்து சேர்ந்ததென்றும் கும்பினீர் கோன்சேலுக்கு எழுதின காகிதத்தை கணக்காகத்தானே எழுதி வந்தபடியினாலே அதையெல்லாம் எழுத்தா யெழுதிக் கொண்டு அப்பால் படிச்சு பார்த்து சேதி அறிய வேண்டியது யென்றும் கசேத்து சேதி சீமையிலே வெகுசண்டை யென்றும் தென்மார்க்கு ராசா கூட பிரான்சு ராசாவுடனே சண்டை பண்ணி திக்கிலேசெம் (Declaration) பண்ணினார்கள் யென்றும் மேஸ்தர் லசுக் (Mr. Lasuk) யென்கிறவன் இங்கிலீசுக்காறர் உத்தாரப்படிக்கு எட்டு கப்பலுடனே சென்னப்பட்டணத்துக் காருக்கு மத்தத்து வருகுராரென்று பிரான்சுக்காறருது லூயி சுபக் என்கிற பெரிய பட்டணம் யிங்கிரேசுக்காறர்கள் பிடிச்சுக் கொண்டார்கள் யென்று பின்னையும் ஒரு

லுத்தினான் செனரால் முசே லாலியைப் போலேக் கொத்த மேன்பாட்டுடையவர் மோன்சியோர் மொன்காம் (M. Montcalm) என்கிறவன் கனடாவுக்கு (Canada) போய் நாலாயிரம் சொலுதாதுகளை அடிச்சார் யென்றும் அவர்களை யெல்லாம் பிடிச்சுக் கொண்டு பிரான்சாவுக்கு அனுப்பினாரென்று ரெண்டு கோடியும் நாற்பது லக்ஷம் ரூபா கும்பினீர் திறேக்குதேர் பேர் விளங்கன் இவன் ராசாவுக்கு குடுத்து *சண்டைக் கப்பல்கள் முஸ்தீப்புப் பண்ணி வைக்கச் சொல்லி* சொன்னதாகவும் அதுக்கவர் நாற்பது கப்பல் முஸ்தீப்பு பண்ணி கொடுத்தாரென்றும் மைத்தக்கப்பல்களும் முஸ்தீப்பு ஆகுதென்றும் இந்தியாவிலே யிருக்கிற மோன்சியேர் சொபினே மேன்வில் துய்யசாயிசி முசியே பால்திக்கு வகையிரா யெட்டு பேர்களுக்கு யெட்டு செம்லுமிசு யென்கிற குதிரை ராசா கையிலே யிருந்தும் கும்பினி யாரிந்த பிரகாரத்திலே வாங்கி அனுப்பினதுக்கு நாலு பேர் செத்துப் போய் விட்டார்களென்றும் நாலுபேர் யிருக்கிறார்களென்றும் யிது முதலான சேதிகள் சொல்லி யினி கும்பினீர் காகிதம் பார்த்தால் அதிலென்ன யெழுதியிருக்கு அது முசே லாலி முசே லெறி மைத்தமுள்ள கோன்சேலியேர்களுக்கும் தெரியும் யென்றும் சொன்ன சேதியை யெழுதி வைத்தேன். இனிமேல் யின்னம் அதிசெய முண்டாயிருக்கிறது வெளியாக வேண்டியது முசே மொன் மொரன்சி (Mr. Montmorency) சீமையிலே சேர்ந்த பிற்பாடு யிந்த பிரிகாத்து பிறப்பட்டபடியினாலே யிவ்விடத்து சேதிகளெல்லாம் பயாவாராய் கும்பினியாருக்கும் மினிஸ்தருகளுக்கும் தெரிஞ்சிருக்குது. அதன் பேரிலே யிந்த பிரிகாத்து பிறப்பட்டு மூணு மாசம் ஒன்பது நாளையிலே யேதாகிலும் அதிசெயம் உண்டாயிருக்கிறதைப் போலே யெனக்குத் தோத்துது. அது யினிமேல் விசிதமாய் தெரியவரும்....

### *1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 9; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 28; வியாழக்கிழமை*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி இங்கிலீசுக்காறர் காவேரிப்பாக்கம் கோட்டையை வாங்கிக் கொண்டு ஆற்காட்டுக் கோட்டையை மார்க்கமாக லாலாப்பேட்டை முதலான யிடங்களெல்லாம் தங்கள் ட்டாணா போட்டுக் கொண்டு ராணிப்பேட்டையில் போயிறங்கினதாயும் உத்திரமேலூர் வகையரா பர்கணாக்களுக்கு வேறே பவுன்சு வருகிறதாகவும் வந்தவாசி அண்டையிலே யிறங்கி யிருக்கிறதாகவும் வந்த வாசி அண்டையிலே யிறங்கியிருக்கிற பவுன்சுக்கு கொம்மாந்தாம் முசே சுப்பீருக்கு மேலே யெழுதப்பட்ட சேதியெல்லாம் யெழுதி லசுக்கரிலே தின்னுவதற்கு யில்லாவிட்டால் சொலுதாதுகள் யெப்படி சண்டை பண்ணுவார்கள் யென்று யெழுதினதின் பேரிலே முசே சுப்பீர் முசியே மீராவை அழைப்பிச்சு

கோபம் பண்ணினதாயும் அந்த வந்தவாசி குத்தகைக்காறன் சின்னய்யா பிள்ளையை அவன் கோபிச்சுக் கொண்டு பற்கணாவுக்குப் போய் பவுன்சுக்கு தீனி சாமான் சமுதாயிருக்கச் சொல்லி சொன்னதாகவும் சின்னய்யா பிள்ளை யென்கிறவன் வந்த வாசிக்கு போறானென்றும் யிப்படியாக சேதி சொன்னார்கள்...

*1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 10; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 29; வெள்ளிக்கிழமை*

இத்தனாள் ராத்திரி முசியே கொதே (M. Godeaw) (Paris) பாரிசுலே யிருந்து அனுப்பின காகிதம் லகுவோரியாசு (frigate) யென்கிற பிறகாத்தும் மயேயிலே வந்து சேர்ந்ததிலே வந்த காகிதத்தை முசியே போலே யெனக்கு குடுத்து அனுப்பி வைச்சார். அந்த காகிதத்திலே நாமனுப்பின காகிதங்கள் யாவும் கணக்குகளும் வந்து சேர்ந்தது. கும்பினியார் காகிதங்கள் அவர்களுக்கு குடுத்தோம். கோந்திரோலர் செனரால் தெ பினான்சு (Controller general of Finance) யென்கிற மினிஸ்தருக்கு யெழுதி அனுப்பின காகிதங்களை அவருக்கு குடுத்தோம். யிவ்வடத்திலே சண்டை அலுவல் மூச்சுவிடக்கூடாமல் யிருந்ததாலும் உம்முடைய காரியமென்ற யிடத்திலே அதைப் பார்க்கிலும் எதோ பிறதானமான காரியமாயென்று மினிஸ்தருகளும் கும்பினியாரும் கோன்சேல் முசியே லாலிக்கு உம்முடைய சம்மதி முன்னே தீத்து தங்களுக்கு யெழுதி யெழுதியனுப்பச் சொல்லியும் யெல்லாக் காரியங்களுக்கும் நல்ல கட்டளை கூட அனுப்புகுறார் யென்று உமக்கு அவர்கள் காகிதங்களெழுதியும் வருகுதென்று யெழுதி பின்னையும் சிறிது சம்மதிகள் பெகுமரியாதையாயும் நிறைந்த கருணை கலந்து யெழுதி யிருந்த காகிதம் வந்து சேர்ந்தது. அதனுடைய மத்தலப்புகளெல்லாம் பார்த்துக்கொண்டு மனதுக்கு சந்தோஷ மாச்சுது. யினிமேல் அந்த காகிதங்களும் கோன்சேலுக்கு தாக்கீதா யெழுதியும் வந்த பிற்பாடு நடக்கிற காரியம் அறிய வேண்டியது.

ரசாசாயபு ஆற்காட்டுக்குப் போரோமென்று போனவன் யிங்கிரேசுக்காறர் சோறு பார்த்துச் சேத்துப் பேட்டிலே யிருந்து காகிதங்களை யெழுதி அனுப்பினதின் பேரிலே முசியே தெலார்ஷு முசியே லாலியைக் கண்டு பேசப் போக வேணுமென்றும் சிதம்பாத்துக்குப் போனானென்று சொன்னார்கள்.

*1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 11; பிறமாதி வருசம் ஆடி மாசம் தேதி 30; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நேத்து ராத்திரி வந்த முசியே கொதே– காகிதங்களை எடுத்துக் கொண்டு முசியே பொலோ சுவாசகாசத்துடனே

யிருக்குறானென்று கபுறு கேட்டவுடனே அதுக்கும் விசாரித்து யிந்தக் காகிதம் அனுப்பி வைச்சான். அதுக்கு நன்றியறிந்த உபசரணை சொல்லி வருவோம் யென்று அவன் வீட்டுக்குப் போனவிடத்திலே அவனவன் பெண்சாதி மகன் மருமகனிந்த நாலுபேரும் யிருந்தார்கள். நாபோயாசாரம் பண்ணினவிடத்திலே தானிருக்கிற கட்டிலின் பேரிலே தன் பெண்டாட்டி யிருந்தவளை அப்பிறம் யெழுந்து நாற்காலியிலே உளுக்காரச் சொல்லி அந்தயிடத்திலே என்னை உளுக்காரச் சொல்லி குசலையார்ச்சனை பண்ணி அப்பால் நான் அவர் வியாதியினால் படுகிற கஸ்திக்கி தெத்தரவு சொல்லி அப்பால் படுகிறது சமையம். சீமையிலே யிருந்து முசியே கொதெ எனக்கு அனுப்பின காகிதம் யெடுத்து அவர் கையிலே குடுத்து என் காரியத்துக்கு நீர் சீர்மைக்கு யெழுதின காகிதத்தின் பெலனினாலே யாங்காட்டும் இத்தனை புஷ்ட்டியாய் சீமையிலே யிருந்தும் யெழுதி வந்ததும் மேலே அவர் போர யேஷியங்களும் சொல்லி இதெல்லாமும் மைத்தொட்டு கிடைச்சபடியினாலே நானென் சரீரம் உள்ளமட்டுக் கும்பினீர் செய்த சகாயத்தையும் மறக்கத்தக்கதில்லை யென்றும் பிறபஞ்சத்திலே என்ன உபசாரம் நேத்தியாய் சொல்ல வேணுமோ அந்த மட்டுக்கும் சொன்னேன். அவரும் அந்தக் காகிதத்தைப் பார்த்து ஒருதரம் பார்த்து ரெண்டு தரம் பார்த்து என்கையிலே குடுத்து உம்முடைய அதிருஷ்டமானபடியினாலே யிவ்விடத்திலே யிருந்த வாக்கிலே நீர் ஆராயிரம் காதவழிக்கு காகிதம் எழுதவும் அந்தப்படிக்கு அனுகூலமாயும் உம்முடைய மனதின் படியே யெழுதி வரவும் யிவ்விடத்திலிருக்கிற கொவற்ணதோர் கோன்சேல் கூடியெழுதுகுற காகிதங்களுக்கு உத்தாரம் வரமாட்டாது யிது அப்படியல்ல கோவற்ணதோர் உம்முடைய பெரிய வேட்டாலத்து பிராது யெழுத வேணுமோ அந்த மட்டுக்கும் பிராதெழுதினது கூட கவைக்கு வராமல் அவர் பேரிலே நேரங்கூட சுமத்தி வேறே கொமுசாயிகளை கட்டளை கூட வந்துதே ஆனால் யும்முடைய யோகத்துக்கு சமானமான யோகம் மகாராசாக்களுக்குச் சொல்ல வேணுமே யல்லாமல் யிதராக்களுக்கு சொல்லப் போகாதென்று அவரும் அவர் பெண்சாதியும் அவர் மருமகனும் முசே தெசோசேயும் அவன் பெண்சாதியும் கூட சொல்லி உனக்கு வந்த காகிதத்தை முசியே லாலி பார்த்தானே அவனுக்குக் கூட உன்னிடத்திலே பயசனக்கம் செனிக்கும் யென்றால் மைத்த பேருக்கு சொல்ல வேண்டியதில்லை யென்று முசியே பொலோ வகையராக்களும் சொன்னார்கள்... முசியே பொலோவுக்கு சுவாசகாசத்துடனே கூடின ரோகம் பேசக்கூடாமல் யிருந்தாலும் யிந்தக் காகிதம் பார்த்து உச்சாகம். அந்த வருத்தத்தைக்கூட தள்ளிரெண்டு மூணு நாழிகை நேரம் பேசினார்கள். அப்பால் தமக்கு முசியே கொதே வெகு பெலனாய் யெழுதினதும் அல்லாமல் என்னை உன் காரியத்திலே யெந்த மட்டுக்கும் கைவிட வேண்டாமென்று எழுதினாரென்று அந்தக் காகிதத்தையும் காண்பிச்சார். அதுக்கு

அவருக்கென்ன உபசாரஞ் சொல்ல வேணுமோ அந்த உபசாரஞ் சொல்லி லோகா பிரம்மாயும் அனேகம் பேச்சுகள் பேசியிருந்து அவர் பேசுறதுக்கு ஆயாசமாயிருக்கு போவென்று சொல்ல அனுப்பிவிச்சுக் கொண்டு பத்து மணிக்கு வீட்டுக்கு வந்தேன்.

### *1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 14; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 2; செவ்வாய்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி இங்கிலீசுக்காறர்கள் திருப்பதியின் பேரிலே போயங்கே மராட்டியர் யிவர்களை சேரவொட்டாமல் அடிச்சதை தொட்டு அவ்விடம் விட்டு ஆற்காட்டின் பேரிலே வந்து சென்னப்பட்டணத்திலே யிருந்து வந்த பவுன்சு கூட்டிக் கொண்டு காவேரி பாக்கத்து கோட்டை திமிர்கோட்டையும் வாங்கிக் கொண்டு ஆற்காட்டின் பேரிலே சண்டை பண்ண யெத்தனம் பண்ணுகிறதுக்கு முன்னே ஆற்காட்டுப் பட்டணத்திலே குடியிருக்கிற செட்டி வர்தகர்கள் வகையிரா குடித்தனம் பண்ணுகிற பேர்களுடைய வீட்டுகளிலே இங்கிலீசுக்காறன் வந்து கொள்ளையிடப் போறார்கள் பெண்டுகளை அழிச்சுப் போடப் போறார்களென்று நம்முடைய பிரான்சுக்காறர்கள் ஆற்காட்டு கோட்டையிலே யிருக்கிறவர்களும் மத்தத்தா யிறங்கியிருக்கிறவர்களுமாய்க் கூடி வந்த சத்துருக்களுக்கு ஒரு திரணம் அகப்படாமல் யிவர்கள் சரிக்கட்டி வைத்ததின் பேரிலே இங்கிலீசுக்காறர்கள் வந்து பூந்து பார்த்து ஒன்றுமில்லாமல் வெழ்க்கப்பட்டுப் போனவர்கள் மறுபடி வெழ்க்கமில்லாமல் கோட்டையின் பேரிலே சண்டை பண்ண வேணும் யென்று யிறங்கி யிருக்கச்சே நம்முடையவர்கள் ராத்திரியிலே போய் விழுந்து சண்டை பண்ணினதின் பேரிலே யிங்கிலீசுக்காறர்கள் முறிஞ்சு காஞ்சீபுரம் வந்து சேர்ந்தார்களென்று சொல்லிக் கொண்டார்கள் இங்கிலீசுக்காறர்கள் ஆற்காட்டின் பேரிலே சண்டைக்கு எத்தனம் பண்ண வந்து யிறங்கினார்கள் யென்றும் ஆத்திரத்திலே யிவ்விடத்திலே யிருந்து அன்னூறு அறுநூறு சொலுதாதுகள் சிறிது ஒப்பிசியாலுமார்களும் பயணமாய்ப் போனதுமல்லாமல் முசே லாலி இன்றைக்கு வந்தவுடனே நாளைய தினமும் முசே சுப்பீர் கூடப்போறாரென்றும் அவர்களுக்கு சிலவுக்குப் பணமில்லாமல் யித்தனாள் காத்தாலே முசியே லெறி, முசியே பெடுத்தல்மீ மத்துமுள்ள கோன்சேலியோர்களும் கூடி கோன்சேல் பண்ண்ணின விடத்திலே வில்லியநெல்லூர் சீமைக்கு பதினய்யாயிரம் ரூபா முன்னுதாக சத்தியாய் குடுத்து யிவ்வருஷத்திய பணம் குடுக்க வேண்டியதிலே செல்லு ஒத்துக் கொள்ளுகிறதென்றும் வறதமான குத்தகைக்காறன் அவர்கள் குடாமல் போனால் அப்பு முதலி கேழ்க்கிறவனுக்கு குத்தகை அஞ்சு வருஷத்துக்கு குடுத்து

விடுகறதென்று முசியே பெடுத்தல்மீ பேச, முசியே லெறி குண்டூராரை அழைத்து நீங்களிப்போ குடுத்தால் உங்களுக்கு குத்தகை நிற்கும் யில்லாவிட்டால் அசலிலே நாங்கள் குடுத்து விடுவோம் யென்று சொல்லி யிந்தக் காரியம் முன் முசியே பெடுத்தல்மீயை அல்லவோ அப்பு முதலி வகையிரா நாட்டாருக்கு குண்டூர் நாரசிங்க செட்டியார், றங்கப்ப செட்டியார் வகையிராக்களை அழைத்து யிருக்கிற விபகாரத்தை தீர்க்கச் சொல்லி கோன்சேலிலே நேமிச்சிருந்ததை யித்தனாள் முசியே லசேலை நேமிச்சு அவரை விசாரிக்கச் சொல்லி திட்டம் பண்ணினதாயும் கேழ்க்கப்பட்டுது.

***1759 வருசம் ஆகொஸ்டு மாசம் தேதி 15; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 3; புதவாரம்***

இத்தனாள் பனிரெண்டு மணிக்கு மேல் ரெண்டு மணிக்கி முசியே சுப்பீர் வகையரா சிறிது படைத்தலைவர்களும் யிறநூறு சொலுதாதுகளும் ஆற்காட்டுக்குப் பயணமாய் போனார்கள்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 16; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 4; குருவாரம்***

இத்தனாள் காத்தாலே கோன்சேல் கூடி பனிரெண்டு மணிக்கு கலைஞ்சு போனார்கள் யென்றும் யிந்த கோன்சேலிலே என்ன நடந்ததென்று கேட்டால் கேழ்விப்பட்ட மட்டுக்கும் அனுபவமாய்ப் பார்த்ததின் பேரிலேயும் யெழுதின காரியம் யென்ன வென்றால் யிப்போ யிருக்கிற பவுன்சு சொலுதாது சிப்பந்தி வகையரா சிலவுகளுக்கு மசுக்கரையிலிருந்து வரப்பட்ட சண்டைக்கப்பலுகளுக்கும் சிலவு களுக்கும் விஸ்தாரமாய் லக்ஷக்கணக்காய்ப் பிடிக்குமென்றும் யோசனை பண்ணி யிதுக்கு முசியே லெறி கோவற்ணதோர் முசியே பெடுத்தல்மீ சின்னதுரை முதலியவர்களும் மத்துமுள்ள கோன்சேலியோர்களையும் அவரவர்களை ஆஸ்திக்குத் தக்கதாய் குடுக்கச் சொல்லியும் குடாதவர்கள் வீட்டிலே சொலுதாதுகளை அனுப்பி யிருக்கிற ஆஸ்திகளை யெடுத்துக் கொள்ளுகிறதும் தமிழர் கையிலேயும் அவரவர்கள் ஆஸ்திக்குத் தக்கதாய் வாங்கிறதுக்கு முசியே லசேலை நேமிச்சுப் போட்டார்களென்றும் யிதல்லாமல் முசியே தெவோ நம்முடைய கையிலே யிருந்த சீமா மூலம் வாங்கி சந்தா யித்தமாய் விசாரித்து அந்தந்த பர்கணா குத்தகைக்காறர் பேரிலே பத்து லக்ஷம் ரூபா மட்டுக்கும் நிலுவை யெழுதிக் கொடுத்தார்களாம். அந்த நிலுவைக்காறர்களை அழைப்பிச்சு அந்தப் பணத்தை வாங்கச் சொல்லியும் அறுபது வருசம் பிரான்சுக் கொடி போட்டது முதல்க்கொண்டு வியாபாரத்தினால் நிலுவைகள் சச்சு பாக்கிகளுண்டே அதுகளையெல்லாம் எடுத்தெழுதி அந்தப் பழய

நிலுவைகளையும் முசியே துப்பிளேயிக்குசு நாளையிலே சீமை முழுமை சம்பந்தம் பேஷ்கஷு சம்பந்தம் சந்தா சாயபு பேரிலே நிலுவை கணக்கிலே நிலுவைகள் யெழுதியிருக்கிற துண்டு. அதையெல்லாம் யெடுத்தெழுதி தண்டச்சொல்லி யிதுகளையெல்லாம் விளக்குறதுக்கும் வாங்குறதுக் கெல்லாம் முசே லசேலை நேமிச்சார்களென்று சீமையிலே யிருந்து முசியே லாலி பேருக்கு ராசாவுடைய மந்திரிமாரெழுதின காகிதத்திலே முசியே லெறி, முசியே தெவோ பின்னையும் சிறிது கோன்சேல்க்காறர்கள் வகையராக்கள் கும்பினீர் பணத்தை முழுக்க திருடி கும்பினீரை முழுக்கடிச்சது மல்லாமல் பட்டணத்து சனங்கள் சீமை பூமிகளிலே யிருக்கிற செனங்களை யெல்லாம் அனியாயமாய்ப் பண்ணின சமபரிதானமும் வாங்கி கெடுத்துப் போட்டார்கள். இதை நீர் நன்றாய் விளங்கி விசாரித்து அவரவர்களை யெந்தப்படி நடத்த வேணுமோ அந்தப்படிக்கு நடத்தச் சொல்லியும் யெழுதி வந்ததாயும் அதுகளையும் முசியே லாலி அவர்கள் விளங்குவாரென்று முசியே லெறிக்கு பதில் வேறே கோவற்ணதோர் பிறகே வருகிற கப்பலிலே வருகிற மட்டுக்கும் முசியே லெறி பேருக்கு கோவற்ணதோரென்றும் கோன்சேலியோர்களென்றும் பேர் மாத்திரமே அல்லாமல் அதிகாரம் என்கிற பேச்சு யில்லாமல் கோன்சேல்க்காறர் மரியாதையாய் முசியே மரியாதையாய் முசியே லெறியும் ஒரு கோன்சேல்க்காறனும் போலே யிருக்கிறதே அல்லாமல் மைத்தப்படி அல்லவென்று வெள்ளைக்காறரிலே பெரிய மனுஷராயிருக்கிற பேர் நான் சாயங்காலம் கோட்டைக்கு வெளியே சுவாரி போனவிடத்திலே சொன்ன சேதியை யெழுதி வைத்தேன்.

இத்தனாள் ராத்திரி யேழு மணிக்கு கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால் முசியே லசேல் சாவடி கணக்கப்பிள்ளை திருச்செல்வராய முதலியார் சேலம் வகையராக்களையும் சேவுகரையும் விட்டு நாளையதினம் காலை நாட்டாரை சாதிக்கு ரெவ்வெண்டு பேர் விழுக்காடு அழைத்து வரச்சொல்லி திட்டம் பண்ணி அனுப்பினபடிக்கும் பாளையக்காறர்கள் சேவுகர்களும் சாவடி கணக்குப்பிள்ளை அனுப்பின தர்காக்களும் சாதிக்கு சாதிக்குப் போய் சொல்லி வந்தார்களென்று சேதி சொன்னார்கள்...

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 17; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 5; சுக்கிறவாரம்***

முசே லாலி செனறால் அவர்கள் உத்திரவு யென்று முசியே லசேல் யிந்தப்பட்டணத்திலே வுள்ள மகாநாட்டாரை அழைப்பிச்சு யிந்தப்பட்டணத்திலே உள்ளவர்களுடைய ஆஸ்தி யெழுதிக் குடுக்கச்

சொல்லிக் கேட்டான். மகாநாட்டார் எங்களுக்குத் தெரியாதென்று சொல்ல அதன் பேரிலே முசியே லசேல் தில்லை மேஸ்திரியை ரெண்டு மூன்று அடி அடிச்சு மகாநாட்டாரை யெல்லாம் சாப்பாடு யில்லாமல் ராத்திரி பனிரெண்டு மணி மட்டுக்கும் தன்வீட்டிலே ஒரு கிடங்கிலே போட்டு அடைச்சு வைத்தான். அதன் பேரிலே மகாநாட்டார்கள் யெல்லாரும் கூக்குறல் போட்டு கூப்பிட்டார்கள். அதன்பிறகு நயினாரை அழைச்சு நயினார் பிணையிலே சாப்பாட்டுக்கு விட்டான்.

*1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 18; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 6; சனிவாரம்*

இத்தனாள் மகாநாட்டா ரெல்லாரும் கூடி கடைகண்ணி களெல்லாம் கட்டி வைச்சு பட்டணத்திலே யிருக்கிற செனங்களை யெல்லாம் முத்திரை சாவடியிலே கூட்டம் கூடியிருந்தார்கள். அதின் பேரிலே முசியே லசேல் அவர்கள் நயினாரையும் சாவடி மணியக்காறரையும் அழைச்சனுப்பி விச்சு சாவடியிலே கூடியிருக்கிற மகாநாட்டு நாட்டாண்மைக்காறரை மாத்திரம் அழைச்சனுப்பிக் கொண்டு வரச்சொல்லிச் சொல்லி அனுப்பினார். அந்தச் சேதி மகாநாட்டாருடனே சொன்னவுடனே நேத்திய தினம் அவர் அழைச்சனுப்பின உடனே போனோம். போனவுடனே ஊரிலே யிருக்கிற செனங்களுடைய ஆஸ்தி யெழுதி வைக்குறோமென்றும் கையெழுத்துப் போடுங்கோ ளென்றும் கேட்டார். அவரவர்கள் ஆஸ்தி யெங்களுக்கெப்படி தெரியும்? தெரியாது யென்று சொன்னதுக்கு, "எங்களை ஒரு வீட்டிலே போட்டு அடைச்சு சாப்பாட்டுக்கும் விடாமல் மூத்திரம் பேயவும் விடாமல்ப் படிக்கு அடைச்சுப் போட்டார். ஆகையினாலே எங்களுக்கு பயமாயிருக்குது. நாங்கள் வருகுறதில்லை யென்று சொல்லி அனுப்பி வைச்சார்கள். அந்த சேதி முசே லசேல் அவர்களுடனே சொன்னார்கள்." அப்படி பயமாயிருந்தால் பிள்ளை அவர்கள் முகாந்திரமாய் வரச்சொல்லி சொல்லுங்கோள் நீங்களும் பிள்ளை அவர்களண்டைக்குப் போய் மகாநாட்டாரை சமாதானம் பண்ணி நாலு மணிக்கு நம்மண்டைக்கு அழைச்சு வரத்தக்கதாகவும் நம்முடனே சொல்லச் சொல்லி அனுப்பி வைச்சார். அப்படியே மகா நாட்டாரை அழைச்சு அனுப்பி வைச்சு சமாதானம் பண்ணி நாலு மணிக்கு முசியே லசேல் வீட்டுக்கு அழைச்சுக் கொண்டு போனோம். போனவிடத்திலே ஆஸ்தியெழுதிக் கொண்டு வருகுறோம் யென்று சொன்னீர்களே. யேன் யெழுதிக் கொண்டு வரவில்லை. முசே லசேலை அபாண்டமாய் சொன்னார்கள். அதின்பேரிலே மகாநாட்டார் நாங்கள் யெழுதிக் குடுக்குறோமென்று சொன்னதில்லை யென்று சொன்னார்கள். நல்லது முசியே லாலி சாயபு அவர்களடனே நான் சலிக்கிறனையாய்

சொல்லியிருக்குது. நாளை மத்தியானத்துக்கு மேலே நாட்டார்களையும் நம்மையும் வரச்சொல்லி சொல்லி அனுப்பிவிச்சார்.

*1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 19; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 7; ஆதிவாரம்*

இத்தனாள் காலமே முசியே லாலி சாயபு நம்மை அழைச்சனுப்பிவிச்சு பட்டணத்திலே கடைகண்ணிகள் போடாமலிருக்குற தென்ன யேதாகிலும் தானே யிந்த க்ஷணம் கடை போட்டால் ஆச்சுது. யில்லாவிட்டால் ஆக்கினை பண்ணி வைப்பேன். யிதுகளெல்லாம் நயினார் உளவாயிருந்து பண்ணிவைச்சது. யிந்த க்ஷணம் கடை போட்டால் ஆச்சுது. யில்லாவிட்டால் நயினாரே உமக்கு ஆக்கினை சரிப்போனபடி பண்ணுகுறது. யிதுகளுக்கெல்லாம் நீர் அல்லவா அதிகாரஸ்தர் ஆனபடியினாலே தாக்கீது பண்ணி கடை கண்ணிகள் போடுவிக்கவும் யென்று சொன்னார். அந்தப்படிக்கு நாம் மகா நாட்டாரையும் நயினாரையும் அழைச்சுப் பேசத்தக்கன விசேஷம் பேசிக் கொள்ளும். கடைகள் போடாமல் போனால் துரையவர்களுக்கு ரொம்ப கோபம் வருமென்று சொல்லி முசே லசேல் அவர்களண்டைக்கு அழைச்சுக் கொண்டு போய் அங்கேயும் தெரியப்படச் சொல்லிக் கடை போடுவிச்சோம். சாயங்காலம் அஞ்சு மணிக்கு முசியே லாலி சாயபு அண்டைக்கு மகா நாட்டாரை அழைச்சுக் கொண்டு போய்க் கண்டு பேசினவிடத்திலே முசியே லாலி சாயபு அவர்கள் சொன்னது "முன்னாலே நீங்கள் குடுத்த பணம் யிந்த மட்டுக்கும் வந்து சேரயில்லை யென்று அந்த யோசனை பண்ணிக் கொள்ளத் தேவையில்லை. யிப்போ குடுக்கிற பணம் உங்கள் கையில் யிருக்குராப் போலே பார்த்துக் கொள்ளுங்கோள். இதுக்கு திஷ்டாந்திரம் நாளைக்கு ஒண்ணு காண்பிக்குறேன். அப்போ தெரியவரும். ஆனபடியினாலே நீங்கள் ஒன்றுக்கும் யோசனை பண்ணத் தேவையில்லை. நாளைக்கு பணம் காசு சம்மதிக்கு யோசனை பண்ணிக் கொண்டு வந்து சொல்லுங்கோளென்று" சொல்லி அனுப்பி வைச்சார்.

*1759 வருசம் ஆகஸ்டு மாசம் தேதி 20; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 8; சோமவாரம்*

இத்தனாள் ஆறு மணிக்கு செனால் முசே லாலி அவர்களுத் திரவுப்படிக்கி முசியே போலி (Mr. Pouly) யென்கிறவரும் ஆறுபேர் சொலுதாதுகளும் பாளையக்கார நயினாரும் பொயண்ண முதலியார் வளவுக்கு வந்து அவரைக் கோட்டைக்கு அழைச்சுக் கொண்டு போகச் சொல்லி ரெண்டு பேர் சொலுதாதுகளைக் கூடக்கூட்டி அனுப்பி அவ்விடத்திலே யிருந்து கந்தப்ப முதலி வீட்டுக்கு வந்து அவரையும் கோட்டைக்குப் போகச் சொல்லி ரெண்டு சொலுதாதுகளையும் கூட்டி

அனுப்பி அவ்விடத்திலே யிருந்து சவரிராயப் பிள்ளை வீட்டுக்கு வந்து அவர் பிறகேயும் ரெண்டு பேர் சொலுதாதுகளை கூட்டி கோட்டைக்கு அனுப்பி வைச்சு யிந்த மூணு பேரையும் உள்கோட்டை மேர்க்கு வாசலான பொறத்தேதோ பென் (The Porte Dauphine) வாசலிலே கசோத்திலே பிறத்தியேக பிறத்தியேகமாய் போட்டு அந்த மூணு பேர் வீட்டண்டையும் வீடு ஒண்ணுக்கு ஆறு பேர் சிப்பாய் விழுக்காடு காவல் வைச்சார்கள். அதின் பேரிலே பகலொரு மணி வேளைக்கு முசியே லாலி யேர் முசியே கில்லியார் அவர்களையும் முசே தெனுவேல் (Mr. de Noval) கிரேப்பியேர் தெணாத்தியோரையும் வட அவர்கள் மூணு பேர் வீடும் சோதிச்சு யிருக்கிற தட்டு முட்டு யெடுத்தெழுதி முத்திரிச்சு சாவிகள் கொண்டு போய் செனரால் முசே லாலி அவர்கள் உத்தாரப்படிக்கி கிரேப்பிலே வைச்சார்கள். ரெண்டு மணி வேளையிலே பழய துரை முசியே லெறி அவர்கள் நயினாரை அழைப்பிச்சு அவர் பிறகே தம்முடைய பொட்டுலரையும் கூட்டி முசியே பொலி கிராம்பு ரோவோ (Provost-Marchal) அண்டைக்கு அனுப்பி வைச்சு யிந்த காவலிலிருக்கிற மூணு பேரையும் சாப்பாட்டுக்கு விடத்தக்கன செனராலுடனே தெரியப்படச் சொல்லி உத்தாரம் வாங்கினால் யிந்த நபருகள் ஓடிப்போகாமல் படிக்கு நயினார் சாமீனிருக்குறாரென்றும் சொல்லி அனுப்பிவைச்சார். அதுக்கு மேல் அவர் நயினாரையுங் கூடக் கூட்டிக் கொண்டு செனராலவர்களண்டைக்குப் போய் அந்தப்படிக்குத் தானே சொல்லிக் கொண்டத்துக்கு அவர்கள் ஒரு சீட்டெழுதி நயினா கையிலே குடுத்து கோட்டை வாசலிலே யிருக்கிற பேர் அண்டையிலே கொண்டு போய் குடுக்கச் சொன்னபடியினாலே "யிந்த நயினார் அந்த சீட்டை வாங்கிக் கொண்டு தாம் சொல்லிக் கொண்டத்துக்கு சாப்பாட்டுக்கு உத்தாரம் குடுத்தாரென்கிற சந்தோஷத்துடனே கூட அந்த சீட்டு கொண்டு போய் மேற்கு வாசலிலே யிருக்கிற சார்சந்து காடுது கையிலே குடுத்தவுடனே அவர் அந்த காகிதம் பார்த்துக் கொண்டு அதிலே எழுதி யிருக்கிறபடிக்கு நயினாரைப் பிடிச்சு கசோத்திலே போட்டார்கள். அதுக்குமேல் நாலு மணி மட்டுக்கும் மகா நாட்டாரையும் கும்பினீர் வர்த்தகர்களையும் கூட அழைச்சுக் கொண்டு நாமும் முசே லசேலும் செனராலவர்களண்டைக்குப் போய் காண்பிச்சுக் கொண்டத்துக்கு அவர்கள் மகா நாட்டாரைப் பார்த்து சொன்ன விபரம் யிந்த பட்டணத்திலே அதிகாரம் பண்ணினவர்கள் லஞ்சம் பிரதானம் வாங்கி அனியாயம் பண்ணி செனங்களை உபத்திரவம் பண்ணி வர்த்தக பிறவர்த்தங்கள் நடக்காபடிக்கி நடப்பிச்சுக் கொண்டு வந்தபடியினாலே யிந்த சங்கதிகளெல்லாம் சீமைக்கு யெழுதி போனதின் பேரிலே அவ்விடத்திலே மகிமை பிரதாபமுள்ள பிரான்சு ராசா யினிமேல் அனியாயங்கள் இல்லாமல் ஞாயத்துடனே சகல சனங்களையும் பரிபாலனம் பண்ணச் சொல்லியும் ஊரிலே வர்த்தக பிரவர்த்தங்கள் விஸ்தாரமாய் நடப்பிச்சுக் கொண்டு வரச்சொல்லியும் நம்முடைய பேருக்கு

ஒடுதி வந்திருக்குது. ஆனபடியினாலே யினிமேல் நீங்கள் சகலமான பேரும் யாதொரு கவை காரியத்திலே சிந்தனை பண்ணாமல் சகல வியாபாரங்கள் உங்கள் மனசின் படிக்கி பண்ணிக் கொண்டு பணங்கள் கையிலே வைச்சுக் கொண்டு தெருவுகளிலே நிர்ப்பயமாய் திரியாமல் யிந்தப்பட்டணத்திலே ஆராவது அனியாயம் நடப்பிச்சால் என்னேரமாகிலும் ஒருபறையன் முதற்கொண்டு மன்னவனா யிருக்கப்பட்டவன் கூட நம்மண்டையிலே வந்து சொல்லிக் கொண்டால் அந்த க்ஷணம் அந்த ராயத்தை விசாரித்து நேரமுண்டான விடத்திலே ஆக்கினை அபராதம் நடப்பிப்போம். ஏழையென்றும் மகாராசனென்றும் வித்தியாசம் பாராமல் படிக்கி சமகக்ஷியாய் விசாரிப்போம் ஆனபடியினாலே நீங்கள் யாதொரு காரியத்துக்கும் நம்மைவிட வேரே பின்னை ஒரு அதிகாரஸ்தனிருக்கு ராரென்று எண்ணத் தேவையில்லை" யென்று சொல்லி கையிலே யிருக்கிற ரலூரசு வாங்கிக் கொண்டு ஒசக்கத் தூக்கி யெடுத்து யிந்தப்படிக்கி நிதானமாய் நடப்பிப்போமென்று சொல்லி அதுக்குமேல் யிந்தப்பட்டணத்திலே யிருக்கப்பட்ட சகல செனங்களையும் காப்பாத்துகிற நிமித்தியம் கலாப நாளாகிறபடியினாலே கோட்டை வெளியிலே சுத்திக் கொத்தளங்கள் போடுவிக்குறதுக்கும் பின்னையும் மத்துமுண்டான முஸ்தீப்புக்கள் பண்ணிவிக்குறதுக்கும் யோசனை பண்ணி யிருக்குரோமென்றும் ஆனபடியினாலே நீங்கள் அனைவரும் ஒண்ணாய் பேசிக் கொண்டு யெட்டுப் பத்து லக்ஷம் ரூபாய் மாத்திரம் பாபத்தியம் குடுத்தால் 100க்கு நூத்துக்கு ஒண்ணாகிற வட்டியும் முதலுக்கும் அடமானம் வில்லிய நெல்லூர் சீமையாகிலும் வழுதாவூர் சீமையாகிலும் பின்னையும் உங்களுக்கு எந்த சீமை சம்மதியோ அந்த சீமை அடமானம் பண்ணிக் குடுக்குறோம். உங்களிலே யிதுக்கு எசமானாக நாலுவர் யேர்ப்பட்டு அந்த சீமை உங்கள் மாரிபத்தாகப் பண்ணிக் கொண்டு உங்களுக்கு பணம் செலுத்துகுறதுக்குள்ளே நீங்கள் பணம் நடக்குதே நீங்கள் லக்ஷம் ரூபாய் மட்டுக்கும் சென்னாப் போலே அந்த தேதியிலே செல்லுபோட்டுக் கொண்டு யெதிர் வட்டி தள்ளிப் போடுகுறது லக்ஷத்துக்குள் குறைச்சலாய் செல்லுகிற பணத்துக்கு யெதிர் வட்டி கவையில்லை. உங்கள் பணம் சாடாவாக செல்லுகுறதுக்குள்ளே கப்பலுகள் வந்தால் உங்கள் பணம் ரொக்கத்திலே குடுத்து விடுகுரோம் சீமை அடமானம் பண்ண பிற்பாடு அதுக்கு விகாதம் நடக்குமென்றும் யோசனை பண்ணத் தேவையில்லை. நான் காகிதம் யெழுதி கராறு பண்ணி மொகரா பண்ணி குடுத்தால் சிலாசாசனமாய் நிற்குமோ அல்லாமல் வேறே ஆலோசனை பண்ணத் தேவையில்லை. நான் யெழுதிக் குடுக்கிற சன்னது அந்தப் பிரான்சு ராசா யிடத்திலே யிருந்து யெழுதிக் குடுத்ததே யெண்ணுகுறதே அல்லாமல் வித்தியாசமாய் யெண்ணக் கவையில்லை. ஆனால் முசியே கொதே அவர்கள் நடப்பிச்ச காரியங்களும் அவர்கள் அந்த காரியங்களுக்கு திட்டப்படுத்தினது

அவர்கள் சீமைக்கு பிறப்பட்டுப் போன பிறகு அவர்கள் நடப்பிச்சுப் போன காரியங்களெல்லாம் யிவ்விடத்திலே யிருக்கிறவர்கள் அந்தப்படி நடப்பியாமல் லஞ்சம் பரிதானம் வாங்கினதுக்கு ஆசிச்சு தங்கள் மனசுக்குச் சரிப்போனபடிக்கு நடப்பிச்சார்கள் யென்றும் யிதுவும் அந்தப்படிக்கு நடக்குமென்று எண்ணக்கவையில்லை. நாம் நடப்பிக்கிற காரியம் அந்த பிரான்சு மகாராசா அவர்கள் நடப்பிக்குராப் போலே ஆனபடியினாலே நாம் நடப்பிக்குர காரியம் யெவரை யிட்டும் தடை பண்ணக் கூடாது. இதல்லாமல் இனிமேல் யிவ்விடத்திலே நடக்க வேண்டிய காரியங்களுக்கெல்லாம் நாம் ஒரு கட்டளைத் திட்டம் பண்ணப் போறோம். அதுக்குமேல் அல்லாருக்கும் தெரியவரும். ஆனால் நீங்கள் பணத்துக்கு யோசனை பண்ணிக் கொண்டு நாலுபேர் பெரியதனக்காறர் களாய் யேற்பட்டு நாளைக்கி வசாராத்துராயர் (Wazaral Rayar) பிறகே கூட வந்து உத்தாரம் சொல்லிச் சொல்லியும் நம்மண்டைக்கு வரச்சே கும்பலாய் வரக்கவையில்லை யென்றும் சொல்லி நாலு பேரை மாத்திரம் அழைச்சுக் கொண்டு வரச்சொல்லி நமக்கு உத்தாரம் குடுத்தார்கள். யிதுக்குள்ளே முசியே லசேல் யிவர்களுடனே நீங்கள் நாளை யென்று சொன்னால் காலவீனம் பண்ணுவார்களானபடியினாலே நாளைக்காத்தாலே யிவர்களை என் அண்டைக்கு வரச்சொல்லி உத்தாரம் பண்ண வேண்டியதென்று சொன்னத்துக்கு அப்படித் தேவையில்லை. அவர்கள் நாளை யில்லாவிட்டால் நாளை நன்றைக்காவது வருவார்கள் யென்று சொல்லி அவருடனே கூட திரும்பவும் மகா நாட்டாரைப் பார்த்து நீங்கள் நாளைய தினம் வந்து யிதுக்கு உத்திரம் சொல்லி ஒரு மார்க்கப்படுத்தாமல் காலதாமசம் பண்ணினால் சொலுதாதுகள் ஒப்பிசியாலுமார்கள் பசிச்சு யிருக்கிறவர்களான படியினாலே அவர்கள் வந்து உங்கள் வீட்டுகளிலே பூந்து யிருக்கிற தட்டுமுட்டு களெல்லாம் எடுத்துக் கொண்டு பின்னையும் என்ன என்ன நடப்பிப்பார்களோ எங்கள் பேரிலே குத்தம் சொல்லக் கவையில்லை யென்று சொன்னார்கள். யிதிலே முசே லசேல் செனரால் அவர்களைப் பார்த்து நயினாரைக் காவல் பண்ணினீர்களா வென்று கேட்டத்துக்கு அவர்கள் சொன்ன வயணம் இந்தப்பட்டணத்திலே வெள்ளைக்காறர் தமிழர் வீட்டுகளிலே பூந்து பெண்டுகளை பிடிச்சு சோராவாரி பண்ணுகுறதும் அவர்கள் கோயில்களிலே பூந்து அலாக்குப் பண்ணுகுறதும் பின்னையும் பட்டணத்திலே சகலமான சோராவாரியும் நடக்குது. யிவன் பாளையக்காறனானபடியினலே இப்படிப் பட்ட சமாச்சாரம் எல்லாம் அப்போதைக் கப்போது நம்மண்டை வந்து கபுறு பண்ணாமல் அவர்களைப் பிடிச்சு அப்போ தானே ஆக்கினை பண்ணி வைப்போம் யிவன் சொல்லாதே போனபடியினாலே பட்டணத்திலே யித்தனை அனியாயங்கள் நடக்குது. எத்தனை அபகீர்த்தி இந்த அபகீர்த்தி யாரைச்சேரும்.

ஆகையினாலே அவனைக் கசோத்திலே போட்டு வைச்சோம். அந்த உத்தியோகத்துக்கு வில்லியநெல்லூரிலே முசியே துப்பிளேயிக்சு பாளையக்காரனாய் வைச்சிருந்தாராம். அவன் முத்திரை போட்டுக் கொண்டிருக்குறான். அவன் ஒரு கண் உள்ளவன் கெட்டிக்காரனாக தோணுது. அவனை உத்தியோகத்துக்கு வைப்போமென்று யோசனை பண்ணிக் கொண்டிருக்குறோம் யென்று சொன்னத்துக்கு மகாநாட்டார் யிந்த நயினார் வெகு நாளா யிந்த பட்டணத்துக்குப் பாரம் பரியமாய் பிராசாயிருக்கிற வனானபடியினாலே யிவனைத் தள்ளப் போகாது தயவு பண்ண வேண்டிய தென்று சொன்னத்துக்கு ஆனால் நீங்கள் யோசனை பண்ணி நல்லவனாய்க் கெட்டிக்காரனாய் சகலமானவருக்கம் நன்மையாய் நடந்துக் கொள்ளுகுறவனாய் யோசனை பண்ணிக் கொண்டு வந்தால் அவனை நேமகம் பண்ணுகுரோமென்றும் சொன்னார்கள். அதன்பேரிலே முசியே லசேல் வில்லியநெல்லூர் நயினாரை நீங்களென்னத்துக்கு ஆகாதென்று சொல்லுகுறீர்களென்று சொன்னத்துக்கு சகலமானவர்களுக்கும் சம்மதமாயிருக்க வேணுமே ஆகையாலே அவர்களுக்கு சரிப்போனபடிக்கு நடப்பிக்க வேணுமென்று செனராலவர்கள் சொன்னார்கள். அதன் பேரிலே முசியே லசேல் தில்லை மேஸ்திரியைப் பார்த்து யிவன் பெரிய நெஞ்சுடைத்தானவன் மகா மிஞ்சினவன் நித்தியம் ஒரு பணத்துக்கு கூலி வேலை செய்கிறவன் இவன் யென்னை யெடுத்துப் போட்டுப் பேசினானென்று சொன்னத்துக்கு அந்தப் பேச்சு யிவ்விடத்திலே எடுக்கத் தேவையில்லை. யிது உனக்கு பூஷணமல்லவென்றும் செனராலவர்களும் சொன்னார்கள். சொன்ன பிற்பாடு பேசாதே நின்று கொண்டிருந்தார். ஆனால் யின்றைய தினம் சுவாபு சுவாலிலே செனரால் அவர்கள் சொன்ன உத்திரப் பிரதி உத்திரவுகள் பாலகெற்பமாய் சொல்லுகுற பேச்சும் யோசனையும் பார்க்கும் யிடத்திலே யிவ்விடத்திலே யிருக்கிற கோவற்ணதோரும் கொமிசேலியோர்களும் முதலானவர்கள் ஒரு பேச்சுக்காகிலும் உத்தாரம் சொல்லாமல் போய்விட்டார்களென்று தோணப்படுது. யிதல்லாமல் நாம் சாப்பிட்டவுடனே ரெண்டு மணிக்கு முசியே போலோ அவர்கள் நம்மை அழைத்து சொன்ன உத்தாரங்கள்...

ஆடிமாசம் 20 தேதி புதவாரம் சாயங்காலம் அஞ்சு மணிக்கு முசே லாலி ரசா சாயபு வீட்டுக்கு வந்தவிடத்திலே முசியே தெலார்ஷு வகையிரா பின்னையும் கோன்சேலியோர்களும் ஒப்பிசியால்மார் கூட வந்தார்கள். வந்தவர்களுக்கு குடுத்த பெகுமான வயணம்...

| | |
|---|---|
| முசே லாலிகுக் குடுத்த பெகுமானம் | |
| ரத்தினம் யிழைத்த துரா கபி | 1 |
| ரத்தினம் யிழைத்த துரா செற்பேசு | 1 |

| | |
|---|---|
| ரத்தின மிழைத்த பதக்கம் ரத்தாபி சீரொப்பா | 1 |
| முசியே தெலார்ஷுக்கு | |
| ரத்தினமிழைத்த பதக்கம் | 1 |
| மத்தாபி சீரொப்பா | 1 |
| பேட்டி ஆனப்போலே பலகை தந்தம் ஆனை | 2 |

குதிரை 3, நாலு பீரங்கி யிது பேட்டி ஆனாப் போலே பெகுமானத்தோடே கூட குடுக்குறதும் மறுபடி காரியம் ஆயி ஊருக்குப் போகச்சே மேலே யெழுதப்பட்ட லக்ஷம் ரூபா, ஆனை 2, குதிரை 3, பீரங்கி 4, பெகுமானத்தோடே கூடக் குடுத்து அனுப்புகுறதும் குதிரைக்காறர் ஒவ்வொரு ஒவ்வொரு ரூபா திட்டம் பண்ணியிருந்தோம். தெலார்ஷ் சங்குக்கும் வந்து (Dilarshthu Jang) என் பேருக்கு காகிதமும் வந்தபடியினாலே பிரான்சுக்காறர் எங்களுக்கு பெகு நாளாய் சினேகிதமாயிருந்ததைத் தொட்டு முக்கால் ரூபாய் நிஷ்கருஷை பண்ணினோம். இந்தப்படிக்கு துகை எண்ணிக்கை பிடிச்சுக் கொண்டு குதிரைக்காறர்களுக்கும் வெள்ளைக்காறர்களுக்கும் காபிரிகளுக்கும் சராசரி முக்கால் ரூபாயும், பாறுக்காறர், காமாட்டிகள், கிளாசுக்காறர், எருதுக்காறர்களு வகையிரா செனம் எனம் எண்ணிக்கொண்டு முக்கால் ரூபாய் விழுக்காடு தினம் ஒன்றுக்குக் குடுத்து வருகுறது. இந்தப்படிக்கி முன் முசே துப்பிளேயிக்சுக்கும் நமக்கும் நடந்த உடம்படிக்கை யெழுதி கையெழுத்துப் போட்டு அனுப்பச் சொல்லி எழுதி வந்ததுக்கு, பதிலுத்தரம் யின்னம் எழுதவில்லை. முராரிராயன் பவுன்சு கடப்பை நத்தம் நன்மைக்கு அனுப்பி வைக்குற குதிரை 3000 பாறுக்காறர் 1000 வெள்ளைக்காறருடைய காப்பிரிகய் 100 பத்து பீரங்கி யிது அவர்கள் அனுப்புகுறதுக்கு முன்னுதாக முசியே லாலியை அனுப்பச் சொல்லி யாதாஸ்த்து முராரிராயன் யெழுதின வயணம் லக்ஷம் ரூபாய் கடப்பை நத்தம் நன்மைக்கு முன்னுதாக வந்து சேர அனுப்புகுறது பேட்டிக்கு வருகுற (நாலு) சர்தார்கள் சிவராம பவா, மல்காரி ராவு, இன்னீசுக்கான் (Innis Khan), நாரசிங்கராவு கோற்படே நாலுபேரும் பேட்டிக்கு வருகிறது.

***1759 வருசம் ஆகஸ்து மாசம் தேதி 23; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 11; குருவாரம்***

இத்தனாள் காத்தாலே யேழு மணிக்கு நான் வெளியே பிறப்பட்டு முசியே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போய் அவரைக் கண்டு பேசி முசியே லசேல் ஊர் வரியிலே ஆறு லக்ஷம் யெட்டு லக்ஷம் பிடிக்குறதும் அந்தப்பணம் இந்த உத்திர க்ஷணமே வரவேணுமென்றும் யிப்படியாக மகாநாட்டார் றொக்கத்திலே கொண்டு வந்து குடுப்பார்களென்று முசியே லாலி செனராலவர்களுக்குச் சொல்லி யிதுக்கு என்னை கூட ஒட்டி

அவர்கள் கையிலே அறுவிடச் சொல்லுகிறதுமல்லாமல் அடிக்கடி நீர் அவர்களைப் பாடுத்தியில் பேசுகிறீர்களென்று முசியே லசேல் சொல்லுகுறானென்றும் பின்னையும் இப்படி நடப்பிச்சுதே உண்டானால் பணமும் வரமாட்டாது. செனங்களும் மகா வருத்தப்பட்டு பெகு கூக்குறலாமென்று மாறகமாய் முசியே பெடுத்தல்மீக்குச் சொல்லி அவரைக் கொண்டு முசியே லாலி அவர்களுக்குச் சொல்லி கலாபமென்று யோசனை பண்ணிக் கொண்டு போனவிடத்திலே முசியே லசேலுக்கும் முசியே பெடுத்தல் மீயும் பேசிக் கொண்டிருந்தார்கள் அவர்களும் ஆசாரம் பண்ணினார்கள்...

அப்போ முசியே லசேல் யிருந்து கொண்டு மகாநாட்டார் தீத்து வந்த பணமும் தண்டலுக்கு விட்டார்களா வென்று கேட்டதுக்கு நான் ராத்திரி சொல்லி அனுப்பி வைச்சேன். பொழுது விடிஞ்சும் சொல்லி அனுப்பி வைச்சேன். அதுக்கு அவர்கள் ரெண்டு தண்டகமும் சொல்லி அனுப்பினது.

***1759 வருசம் ஆகஸ்து மாசம் தேதி 24; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 12; சுக்கிரவாரம்***

இத்தனாள் காத்தாலே முசியே பெடுத்தல்மீ வீட்டுக்குப் போனவிடத்திலே முசியே பெடுத்தல்மீயே கதேசமாய் ஒண்டியாயிருந்தார். அப்போ நான் போனாப்போலே ஆசாரம் பண்ணி உளுக்காரச் சொன்னார். பெரியண்ண முதலி காகிதம் ஒண்ணு வந்தது. அதிலே என்ன சமாச்சாரம் எழுதி வந்தது யென்று கேட்டார். வடக்கே யிருந்த தண்டு உடையார் பாளையத்தின் பேரிலே போகுதென்றும் ரவாணா ஆருக்கும் மருந்தும் குண்டும் யில்லையென்றும் மருந்துக் குணம் அனுப்பி வைக்கும்படிக்குச் சொல்லியும் சிப்பந்தி சேவுகர் வைச்சோம். அதுக்கு மோகனி சாப்பித்தா பிறகாலே எழுதியனுப்பி வைக்குறோம் என்றும் குடிகளை அழைத்துக் கவில்களுக்கு குடுத்து திலாசு பண்ணி சாகுபடி பண்ணி வைக்குறோமென்று மிப்படியாக சமாச்சாரம் எல்லாமிந்தப்படிக்கி விந்தையாக அதிசெயமாய் யெழுதியிருக்கயில்லை யென்றும் நாம் சொன்னோம். சொன்னத்தின் பேரிலே ஆனால் யிந்த சமாச்சார மெல்லாம் செனரால் முசியே லாலி அவர்களுடனே சொல்லிப் போடுவோம், யிந்தக் கடுதாசியைத் தன் அண்டையிலிருக்கிற சட்டைக்காறன் லூசு கையிலே குடுத்து விடச் சொன்னார். அப்படியே அவன் கையில் குடுத்துவிட்டேன்.

முசே லாலி வீட்டுக்குப் போனோம். அவ்விடத்திலே முசே லசேலைக் கண்டவிடத்திலே யென்ன சமாச்சாரமென்று கேட்டார். எல்லாம் நல்ல சமாச்சாரம் யென்று சொன்னோம். அதின் பேரிலே மகாநாட்டார் யின்னம் பணம் கொண்டு வந்து செலுத்தயில்லை. அதினாலே

அவர்களண்டைக்குச் சேவுகனை அனுப்பி வைச்சோம் யென்றும் சொன்னார். நல்ல காரியம் பண்ணினீரென்று நாம் சொல்லி யிப்படி அவர்களை ரொம்ப துறுசு பண்ணி காபுறா பண்ணினால் யெப்படியும் பத்து பேருடனே சேர்ந்த பேச்சு நாலு நாள் மெதுவிலே வாங்க வேண்டியது.

அவர்கள் வரி பிரிச்சு தண்டி குடுக்கிற பணமேயல்லாமல் ஒருவனாய்க் குடுக்கிற சம்மதியல்ல, ஆனபடியினாலே லகுவிலே வாங்க வேணுமென்று நாம் சொன்னத்தின் பேரிலே, மகா நாட்டாரையும் அழைச்சுக் கொண்டு நம்மையும் செனரால் முசியே லாலி அவர்களண்டைக்கு வாருங்கோள், நானும் வாரேன் யென்று சொன்னார். அதன் பேரிலே நாம் கோட்டைக்கு வந்தோம். வந்தவிடத்திலே முசியே லெறி அவர்கள் முசியே லாலி அவர்களைக் கோயிலுக்குப் பூசை கேழ்க்க வந்து அழைச்சார். நீங்கள் முன்னே போங்கோள் நான் வாறேன் யென்று சொன்னார். முசியே சுப்பீர் அவர்களும் முசியே லெறி அவர்களும் ரெண்டு பேர்களும் முன்னே கோயிலுக்குப் போனார்கள். பிறகு பத்தரை மணிக்கி முசே ல்லாலி அவர்கள் கோயிலுக்குப் போகப்பிறப்பட்டார். உடனே வரிசை வைச்சு தம்பூறு அடிச்சார்கள். அப்பிறம் கோயிலுக்குப் போய் பூசை கேட்டு பதினோரு மணிக்குக் காகிதம் யெழுதுகுற வீட்டிலே வந்திருந்துக் கொண்டு மகா நாட்டாரை அழைக்கச் சொன்னார். அழைச்சவுடனே கனகசபை முதலியார் தில்லை மேஸ்திரி, கோமுட்டி கிருஷ்ணம செட்டி, தரும சிவசெட்டி நாலு, பேரும் வந்தார்கள். யிந்த நாலுபேரும் நாமும் முசியே லசேலும் முசியே லாலி அவர்களும் சாவடிக் கணக்கப் பிள்ளையாகிய சவரிமுத்தும் ஒரு காம்பிராக்குள்ளே போனோம். போனவிடத்திலே நடந்த உத்தாரம் நான் உங்களுடனே சொன்னேனே பில் கொண்டு வந்தீர்களா வென்று கேட்டார். அதுக்கு முசியே லசேல் சொன்னது, அவர்களேது பணம் குடுக்குறது நீங்கள் எட்டு லக்ஷம் ரூபாய் ஆகப் பண்ணித் தாரோமென்று சொன்னார்கள். அப்படி அவர்கள் சொல்லுகுறார்கள். அவர்கள் பணம் குடுக்குறதில்லை. அவர்கள் நாலு பேரையும் காவலிலே போட்டு சாவடிக் கணக்கப்பிள்ளையையும் யென்னுடைய மனுஷனையும் றங்கப்பிள்ளை மனுஷரை யுங்கூட வைச்சு விட்டு வரி பிரிச்சுப் பணம் தஸ்து பண்ணால் பணம் அறுவாகும், அல்லாமல் மைத்தப்படி பணம் வரமாட்டாது யென்று சொல்லி முசே லசேல் சொன்னதுக்கு அவர் மகா நாட்டாரைப் பார்த்து யிந்தப் பட்டணம் சுத்துக்கோட்டை முஸ்தீது பண்ணுகுறதுக் குத்தானே ரெண்டு லக்ஷம் ரூபா செல்லும்.

அப்பால் சொலுதாது சிப்பந்தி சிலவு வேறே யிருக்குது. யிப்படி யிருக்க நீங்கள் யிப்படிச் சொன்னால் அப்பாலே யெப்படி காரியம் நடக்குமென்று சொன்னதுக்கு, முசே லசேல் சொன்னது. நீங்கள் முன்னே

பிடிச்ச யெட்டு லெக்ஷம் ரூபாய்த் தானே பேசவேணுமே அல்லாமல் யிப்படிச் சொன்னால் யிந்த லக்ஷம் ரூபாயும் குடுக்க மாட்டார்களென்று சொல்லி அப்பாலே அழைச்சுக் கொண்டு போய் றகசியமாய் பேசிக் கொண்டதுகள் : முசியே லசேல் சொன்னது முசியே லெறியும் முசியே தெபோவும் முசே தெபொசேத்தும் கந்தப்ப முதலியார், பெரியண்ண முதலியார், சவரிராயப் பிள்ளை யிவர்கள் போதனையை கேட்டுக் கொண்டு யிவர்களும்- யிப்படி பேசிக்குறார்களென்றும் பின்னையும் யென்னென்னமோ சொன்னான்.

அதைக் கேட்டுக் கொண்டு மறுபடியும் முசியே லாலி வந்து சொன்னது கந்தப்ப முதலியார், பெரியண்ண முதலியார், சவரிராய பிள்ளை மூணு பேரும் தூக்கிவிடப் போகிறோம். அதுக்கும் பிறகாலே யாகிலும் உங்களுக்குத் தெரியவரும். யிப்பறம் நாலு நாளைக்குள்ளே பணம் செலுத்தும்படிக்கி ஆரம்பிச்சால் ஆச்சுது. யில்லாவிட்டா லுங்களுக்கும் அந்த ஞாயம் நடக்கும் யென்றும் நம்முடனே சொன்னார். நாமிவர்களுடனே துரையானால் யிப்படியெல்லாம் சொல்லுகுராரே, நானா முன்னே தானே பதினாயிரம் ரூபா மட்டுக்கும் செலுத்தினால் யின்னம் பத்து பதினைந்து நாள் பொறுத்து மைத்தது லகுவிலே சலக்கிரணையாய்ச் செலுத்தலாமென்று சொன்னோம். அவர்களும் கேட்டு நல்லது அப்படித்தானே நாலு நாளையிலே பணம் செலுத்தத் தக்கன விதம் பண்ணுகுறோமென்றும் சொல்லச்சே முசே லசேல் சொன்னது, யிப்படி யிவர்கள் பணம் செலுத்தமாட்டார்கள். முன்னே சொன்னபடிக்கி மனுஷரை வைச்சுப் பணம் தண்ட வேண்மே அல்லாமல் மைத்தப்படி பணம் வரமாட்டாது என்று சொன்னான். ஆனால் யென்னதான் செய்யச் சொல்லுகுராய் யென்று சொன்னார். மறுபடி முசே லசேலை அப்பாலே அழைச்சுக் கொண்டு நாளைய தினத்திலே பணத்துக்கு சம்மதி சொல்லுங்கோள் யென்று சொல்லிப் போட்டு போங்கோ ளென்று சொன்னார். நல்லதென்று சொல்லி அனுப்பி வைச்சுக் கொண்டு வந்துவிட்டார்கள். நாமும் அனுப்பி வைச்சுக் கொண்டு வரச்சே குண்டுசாலைக் கணக்கு சீக்கிறமாய் யெழுதிக் கொண்டு வரச்சொல்லிச் சொன்னார். நல்லதென்று சொல்லி அனுப்பி வைச்சுக் கொண்டு வந்து விட்டோம்.

பகல் மூணு மணிக்கு மேலாக நாம் போனவிடத்திலே கேழ்விப்பட்டது. சாவடி கணக்கு சீயாலம் (Siyalan) சவரிமுத்தும் அவனண்டையிலிருக்கிற தட்டாரப் பையன் சிதம்பரத்தையும் மூணு பேரையும் வைச்சு அவரவர் சாதிக்குப் பேர் வயணமாய் பிரிச்செழுதின டாப்பை பிடிச்சுக் கொண்டு அதன்பேரிலே அதிகமாய் விசாரிச்சு எழுதச்சொல்லி சொன்னதாய் சேதி கேட்டோம்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 26; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 14; ஆதிவாரம்***

முசே லசேல் குமுசேலிலே தீந்ததும் மகாநாட்டார் பலபட்டடைகள் குடுக்குற பணத்துக்கு நூத்துக்கு ஒண்ணு விழுக்காடு வெட்டிக் குடுக்குறோமென்றும் பணம் குடாதவர்களுடைய வீடு யிதுகளுக்குக் குடுக்க வேண்டிய தெல்லாம் குமிசேலிலே விசாரிக்கச் சொல்லி பிரான்சிலே எழுதிக் குடுத்தக் காகிதத்தை தமிழ்ப்படுத்தி கையெழுத்தும் போட்டு மோகரும் பண்ணி குடுக்கச் சொல்லிக் குடுத்தால், முகற் பண்ணுகிற பிராமணன் யில்லாதபடியினாலே வந்தவுடனே முகற்பண்ணிக் கொண்டு நீர் வாருமென்று சொல்லிச் சொல்லியுடனே முசே லசேல் சொன்னது, என்னை மாத்திரம் காட்டிக் குடுத்து யிந்தச் சோலியிலே நுழையாமல் படிக்கு யிருக்குராரென்று சொன்னார். அதுக்கு அவர் சொன்னது முசியே லசேல் ராவும் பகலும் பிறயாசப்படச்சே நீர் யென்ன யிப்படி அந்தக் கவை பாராமல் யிருக்கிற தென்று சத்து நேரம் சுறுக்காய்க் கோபமாய் யிப்படி நீர் யிருந்தால் பணமெப்படி வந்து சேரும், காரியமெப்படி நடக்குமென்று சொன்னார்.

அதுக்கு நான் சொன்னது : "முசே லசேல் அவர்களுக்கு நீங்கள் சகல அதிகாரமும் குடுத்தீர் அவர் சகலமும் நடப்பிக்குறார். அவர் சொல்லுகுறபடிக்கு நடப்பிக்குறேனென்று சொன்னதுக்கு அதுவும் கேளாமல் ஆவூ யென்று சொல்லி நீர் கூட யிருந்து பணத்தை தஸ்து பண்ணச் சொன்னார். ஆனால் தாங்கள் எந்த உத்தாரம் சொல்லுகுறீர்களோ அந்தப்படிக்கு செய்குறேன்," யென்று போகச்சே காகிதத்துக்கு முகற் பண்ணச் சொல்லிப் போட்டுப் போனான். ஆனால் தாங்களெந்த உத்தரம் பண்ணுகுறீர்களோ அந்தப்படிக்கி நடப்பிக்குறேனென்றும் சொன்னோம். அப்பால் முசே லசேல் சொன்னது, சாவடி கணக்கப்பிள்ளையிலே ரெண்டு பேரும் தன் மனுஷரிலே ஒருத்தரையும் நம்முடைய மனுஷரிலே ஒருத்தனையும் இந்த நாலு பேரையும் மகா நாட்டாருடனே கூடவைச்சு பணம் வாங்கல் சொல்லியும் றங்கப்பிள்ளைக்கி உத்தாரம் பண்ணுங்கோளென்றும் சொல்லியும் நம்மை முகர் பண்ணி வரச்சொல்லி வாங்கிப் போட்டு அனுப்பி வைச்சுப் போட்டு சாவடிக்குப் போய் விட்டான். அப்பறம் முகற் பண்ணிக் கொண்டு கையெழுத்து வாங்கிக் கொண்டு வரச் சொன்னதுவும் உம்முடைய மனுஷன் ஒருத்தனை வைச்சு கூட நீரும் முசே லசேலுடனே கூட யிருந்து இரவு பகலாய் பிறயாசைப்பட்டு பணத்தை தஸ்து பண்ணி வைக்கச் சொல்லி பின்னையும் அந்தரங்கமான ஒரு வீசேஷஞ் சொன்னார். அது நாளைக் காத்தாலே பகலைக்கு விசிதமாய்ப் போகும்.

அப்பால் அனுப்பி வைச்சுக் கொண்டு சாவடிக்கி வந்தோம். முசே லசேல் சாவடிக் கணக்கரையும் மகாநாட்டாரையும் அழைச்சு நேத்தைய தினம் பிடிச்சு வரி பிரிச்சு எழுதுகிறீர்களே பாதியாச்சுதே குறை பாதியும் இன்றைக்குள்ளே தீத்தெழுதித் தயாரா யிருக்கச் சொல்லி சொன்னார். நாம் வந்து முசே லாலி அவர்கள் தமிழிலே யெழுதி முகறு பண்ணிப் கையெழுத்துப் போட்டுக் குடுத்த கடுதாசியை சாவடியிலே கொண்டு வந்து படிக்குமிடத்திலே அதிலே யெழுதி யிருந்த வயணமிந்த பணம் வாங்கிறதுக்கு முசே லசேல் திட்டம் பண்ணி யிருக்குறான் யென்று குடுக்கிற பணத்துக்கு செஞ்சி திருவதி யிந்த சீமைகளிலே தனகா பண்ணுகுறோமென்று நூத்துக்கு ஒண்ணு வீதம் வட்டி குடுக்குறோமென்றும் யிந்தப்படிக்கி அவரவர் ஆஸ்திக்குத் தக்கனதாய் குடுத்தாலே ஆச்சுது. யில்லாவிட்டால் ஆக்கனைகள் வரும் யென்று உடமை தம்டு முட்டுகளெல்லாம் கும்பினியிலே யெடுத்துப் போட்டுக் கொள்ளுவோம் யென்றும், யிதல்லாமல் முசியே லெறி அவர்கள் வாங்கின பணத்துக்கு யித்துடனே கூட சேர்த்து வட்டி முதலுக்கும் சீமை தணக்கா பண்ணுகுறோமென்றும் யிதுகளெல்லாம் நீங்கள் கெட்டியாய் நம்பி மேலே யெழுதினபடிக்கி பணத்தை சீக்கிரமாய் குடுங்கோ ளென்றும் சொன்னார்.

பதினோரு மணிக்கு சோறுகான் மகன் (Zuhur Khan) முசே லெறி, முசியே பொசேத்து, முசியே தெவோ, கந்தப்ப முதலியார், பெரியண்ண முதலியார், சவரிராயப்பிள்ளை, இவர்களுக்கு லஞ்சம் குடுத்ததுக்கு பித்திசாமெழுதி முசியே பிளாம் முசியே லாலி அவர்கள் வேலைக்காரன் கையிலே குடுத்து முசியே லாலி அவர்களுக்கு குடுப்பிச்சான்.

***1759 வருசம் ஆகஸ்து மாசம் தேதி 27; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 15; சோமவாரம்***

இத்தனாள் காத்தாலே யெட்டு மணிக்கு கோடடைக்குப் போனவிடத்திலே முசியே லாலி அவர்கள் தாம் யிருக்கிற காம்பிராவிலே யிருந்து எதிரே யிருக்கிற காம்பிராவிலே உடம்பு குளிக்கப் போகச்சே நான் ஆசாரம் பண்ணினேன். கந்தப்ப முதலியார் தம்பி நயினாத்தை யென்கிறவனை நயினார் மனுஷர் போய் காவலிலே போட்டார்களென்றும் அது நம்முடைய உத்தாரந்தானென்றும் சொன்னார். மகாநாட்டார் எப்போ பணம் கொண்டு வருவார்களோ வென்று கேட்டார். நாளைய தினம் தங்களை வந்து கண்டு பேசுவார்களென்றும் சொன்னோம். அப்பிறம் அவர் ஒடம்பு குளிக்கப் போனார். ஒடம்பு குளிச்சு ஒன்பது மணிக்கி வந்தார். அப்பிறம் முசியே புலோ மத்துமுள்ள கொமுசேலியோர்களும் வந்தார்கள். வந்தவர்களை கண்டு நாம் ஆசாரம் பண்ணினோம். நாளைய தினம் திங்கள்கிழமை யானபடியினாலே குமிசேல் கூடுவார்கள், கூடி பேசியெழுந்திருந்து பதினோரு மணிக்கி அவரவர் வீட்டுக்குப் பிறப்பட்டு

போய் விட்டார்கள். அப்பிறம் முசியே லசேல் மாத்திரம் யிருந்தான். யிருந்த முசியே லாலி அவர்கள் வாயினாலே முசியே லசேல் சொல்லி வைச்சது, முசியே லெறி நாற்பது பேர் வழியிலே ஒன்பதினாயிரம் ரூபாய் வாங்கினார். அப்படிக்கி யிந்தப் பட்டணத்திலேயுள்ள செனங்களெல்லாம் கூடி முப்பதினாயிரம் விராகன் போட்டு யெழுதினார்கள். யிப்படி அத்தாக்ஷியாயும் யெழுதியிருக்குறார்கள். யிப்பவும் அவர்கள் கூடி யிருக்கிற விடத்திலே நீர் போய் யெப்படி யெழுதி வைக்க வேணுமோ அப்படி யெழுதி வைக்கச் சொல்லித் திட்டம் பண்ணி அப்பிறம் நீர் வீட்டுக்கு போமென்று முசியே லாலி அவர்கள் வாயினாலே முசே லசேல் சொல்லி வைச்சான். அப்பிறம் முசியே லாலி அவர்கள் கையிலே அனுப்பி வைச்சுக் கொண்டு நாம் முசே லசேலும் வரச்சே முசியே லசேல் நம்மைப் பார்த்து நீர் தேவடியாக்களுக்கு வரிபோட வேண்டாமென்று சொன்னீராம். அது போட்டு வாங்கச் சொல்லிச் சொன்னோம் என்றும் சொன்னேன். அதுக்கு நாம் சொன்னது "யிந்த செனங்கள் கையிலே பணம் வாங்குறதே வெகு அபகீற்த்தி யாயிருக்கிறது. தேவடியாக்கள் கையிலும் வாங்கினால் வெகு அபகீர்த்தியாயிருக்குறது. ஆகையினாலே யிந்த கும்பினீருக்கு நாம் சீனேகமாகி யிருக்கிற படியினாலே அபகீர்த்தி வரலாகாதென்று சொல்லி அவர்கள் ஒரு பணத்துக்கும் ரெண்டு பணத்துக்கும் ஒருத்தனை அழைக்கிறதும் அதிலே அவர்கள் சீவனம் பண்ணுகுறுதும் ஆகையினாலே நாம் சொன்னோம்" யென்று சொன்னதுக்கு அவன் சொன்னது, அவர்களை வைச்சிருக்கிற சொகுசுக்காறன் குடுப்பானென்று சொன்னான். ஆனால் நமக்குத் தான் என்னாவென்று சொல்லிப்போட்டு நாம் பிறப்பட்டு முத்திரைச் சாவடிக்கி வந்தோம் வந்ததும் மகா நாட்டாரை அழைச்சு எப்படிச் சொல்லவேணுமோ அப்படி யெல்லாஞ் சொல்லி பணம் உசத்தி வாங்கிறதேயும் யெப்படியோ அட்டி யில்லாமல் சொல்லி நாலு நாழிகை மட்டுக்கும் அவ்விடத்திலே யிருந்து ஒருமணி நேரத்துக்குப் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். அப்பால் பகலைக்கு மேலாக கேட்ட விசேஷம், சின்னதுரை வீட்டிலே முசியே லசேலும் முசே பெடுத்தல்மீயும் அமுல்தாரரையும் எல்லாம் அழைப்பிச்சுக் கொண்டு கணக்காச்சுதா வென்று கேட்டதுக்கு சிறிது ஆனதும் ஆகாததும் ஆக யிருக்குறது, யின்ன மூணுநாள் செல்லுமென்று சொன்னார்களென்று சேதி கேட்டோம்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 28; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 16; மங்களவாரம்***

இத்தனாள் காத்தாலே முத்திரைச் சாவடிக்குப் போய்ப் பார்த்தோம். அங்கே போனவிடத்திலே மகாநாட்டார் பலபட்டடைகளையுஞ் சாவடிக் கணக்கரையும் நம்முடைய மனுஷர் முத்தப்பிள்ளையையும் அழைச்சு வரி

பிரிச்சு ஆச்சுதாவென்று கேட்டதுக்கு அவர்கள் சொன்னது, சிறிது பேர் வழிகள் யெழுதியாச்சு, யின்னம் சிறிது பேர் வழி யெழுதுகுறோமென்று சொன்னதுக்கு நாம் சொன்னது, யிப்படி நீங்கள் ஆலசியம் பண்ணிக் கொண்டிருந்தால் தொரை யவர்கள் ரொம்ப கோபம் பண்ணுவார்கள். கும்பினி காரியமும் நடக்க வேணும் யென்று தாக்கீதாய் அவர்களுக்கு யெப்படிச் சொல்ல வேணுமோ அந்தப்படிக்கிச் சொல்லி சீக்கிரத்துக்கு சாப்பித்தா யெழுதி வரச்சொல்லித் திட்டம் பண்ணினோம். அதிலே சிறிதுபேர் எங்களுக்கு ஆஸ்தியில்லாமலிருக்க யெங்கள் பேரிலே வரி யெழுதுகுறீர்களென்று சொல்லிக் கொண்டதுக்கு நாம் சொன்னது, யிதுக்கும் கும்பினீயைச் சேர்ந்த காரியமாயிருக்குது நாட்டாண்மைக்காறர் எழுதி வைச்சபடிக்கி போங்கோளென்று சொல்லி தக்கன விசேஷம் சொல்லிவிட்டு நாலு நாழிகை மட்டுக்கும் சாவடியிலிருந்து அப்பிறம் பத்துமணிக்கி வந்தோம். அப்பிறம் முசியே லசேல் கும்பினீருக்கு குடுக்க வேண்டிய பேர் வழிநாலு பேர் நிறுவையாய் நில்லாமல் யெடுத்தெழுதிக் கொண்டு சின்னதுரை முசியே பெடுத்தல்மீ வீட்டுக்கு வந்து என்னென்னமோ கண்டு பேசிக் கொண்டு யிந்த நிலுவை தண்டுகிறதுக்கு சேக்கு துக்கி (Shaik Dukki) கொமாந்தாம் சிப்பாயிகளிலே பதினைஞ்சு பேரையும் அழைச்சுக் கொண்டு பதினொரு மணிக்கி முத்திரைச் சாவடிக்கி வந்தான். வந்தவிடத்திலே மகாநாட்டாரையும் சீயாலத்தையும் (Syalam) சவரிமுத்தையும் தன் மனுஷன் தட்டார சிதம்பரத்தையும் அழைச்சு வரி பிரிச்சு யெழுதி ஆச்சுதா யென்று கேட்டதுக்கு, சிறிது களெல்லாம் எழுதியாச்சு, யின்னம் சிறிது பேர்வழி யெழுதியாகவில்லை யென்று ... சொன்னதுக்கு, நீங்கள் நேத்து சொன்னீர்களே இன்றைக்குள்ளே யெழுதியாமென்று சொன்னீர்களே. யின்னேரம் மட்டுக்கும் யெழுதி யாகாமலிருந்தால் முசே லாலி அவர்கள் கோபம் பண்ணுவார்கள். சீக்கிரத்துக்கு யெழுதி குடுத்த துகையை கொண்டு வரச்சொல்லிச் சொன்னவிடத்திலே யிதிலே சிறிதுபேர் ஆஸ்திகளில்லாத வர்களுக்கெல்லாம் வரியெழுதி யிருக்குதென்று சொல்லிக் கொண்டதுக்கு, முசியே லசேல் சொன்னது, அவரவர் ஆஸ்தியெல்லாம் எடுத்தெழுதி யிருபதுக்கு அஞ்சு விழுக்காடு வரி பிரிச்சு எழுதி வரச்சொல்லியும் வீடுவாசல் ஆஸ்தி யில்லாதவர்களுக்கு வரியெழுதத் தேவையில்லை யென்றும் பத்து விராகன் ஆஸ்திக்காறனுக்கு யெழுதத் தேவையில்லை யென்றுஞ் சொல்லிப் போட்டுப் போய்விட்டான்.

இன்றைய தினம் கந்தப்ப முதலி அண்ணன் பூமியப்பன் மகன் கந்தப்பனை கசோத்திலே போட்டார்களென்றும் சேதி கேட்டோம். சாயங்காலம் அஞ்சரை மணிக்கி முத்திரைச்சாவடிக்கிப் போய் மகாநாட்டாரை சகலமான பேரையும் அழைப்பிச்சு தாக்கீது பண்ணி

சீக்கிரத்துக்கு எழுதித் திட்டப் படுத்தி சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்து விட்டேன்.

யித்த நாள் ராத்திரி ஆறு மணிக்கி நாகப்பட்டணத்திலே யிருந்து சதுரங்கப்பட்டணம் பழவேற்காடுக்குப் போற ஒலாந்தாக்கார சேவுகள் சொன்ன சமாச்சாரம் என்னவென்றால் ஒலாந்தாவிலே யிருந்து நாகப்பட்டணத்துக்கு யேழு சீமைக்கப்பல் வரச்சே நாகப்பட்டணத்திலே துரையாயிருந்த பிறமேந்து (Vermont (படேவியா?) கோவற்ணதோர் வத்தலை(Vattalai)க்குப் போகையிலே நடுவழியிலே ஏழு கப்பலிலே ஒரு கப்பலைக் கூட அழைச்சுக் கொண்டு போய்விட்டான், மைத்த ஆறு கப்பலும் நாகப்பட்டணம் வந்து சேர்ந்தது. அதிலொரு கப்பல் பழவக்காட்டுக்கும் வடக்கே போச்சுது. மைத்தக் கப்பல் அஞ்சுலேயும் நானூறு பேர் சொலுதாதுகளும் யெழுநூறு போயி சுப் பாங்கிக்காறரும் (Is Pangi) இறங்கினார்கள். இந்த சமாச்சாரம் நாகப்பட்டணம் சேவுகன் சொன்னான். இங்கிலீசுக்காறருது பத்தொன்பது கப்பல் நாகப்பட்டணத்து துறையிலே யிருக்குதென்று சொன்னான்.

***1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 29; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 17; புதவாரம்***

இத்தனாள் காத்தாலே ஒன்பது மணிக்கி முசே லாலி அவர்கள் அழைக்குறார்களென்று சேவுகன் வந்தழைக்கப் போனவிடத்திலே முசே லாலி அவர்களிடத்திலே முசியே சுப்பீர், முசியே எலியாசு, முசியே பெடுத்தல்மீ, முசியே தெலார்ஷு, முசியே பொசேத்தும் முசியே லசேல் முசியே பசேன், முசியே அபேல் பின்னையும் நாலத்து ரெண்டு பேர் யிருந்தவர்கள் யெல்லாரையும் நான் போய் ஆசாரம் பண்ணினேன். அவர்களும் ஆசாரம் பண்ணினார்கள். அப்பிறம் முசே லசேல் நம்மை அழைச்சு நீர் யிந்தப் பணங்காசு சம்மதி விசாரி யாமலிருக்கிறீரென்று கேட்டான். அதுக்கு நான் சொன்னது, "சகலமும் யும்முடைய மனுஷரிருந்து கணக்கெழுதி வரி பிரிக்கிறவர்கள் யெல்லாம் அவர்களாயிருந்து விசாரிக்குறார்கள். நீரும் ஒரு நாளைக்கு பத்து ஒடுதி குடுக்கிறீர். அவர்களும் அந்தப்படிக்கி பிரிச்சு எழுதுகுறார்கள். அப்படி யெழுதினால் இன்னம் ஒரு மாசம் செல்லும் நாற்பது நாளும் செல்லும். நாம் கூட அந்த துணை வகை அறியப் போகாது. நாமொரு கூலிக்காரனைப் போலே யிருக்குறோம்? அப்படியிருக்க நம்மை கேட்டால் யெப்படி நாமும் சாவடிக்கிப் போய் விசாரிக்குறோமாவென்று சொன்னதுக்கு, ஆனால் நான் முசே லாலி அவர்களுடனே சொல்லுகுறேன் யென்று சொன்னால் நீர் சொன்னால் நானும் நடக்கிற ஞாயத்தை சொல்லுவோம், அப்பிறம் உள்ளே போய் முசே லாலி அவர்களுடனே என்னென்னமோ சொல்லிக் கொண்டிருந்தான். அவரும் மூணுதரம் நம்மை முறண்டு பார்த்தார்.

ஆனபடியினாலே நம்முடைய பேச்சு சொல்லுகுறானென்று எண்ணிக் கொண்டு போனேன். அப்பிறம் அரை நாழிகை தேசகாலம் பேசிக் கொண்டிருந்தான். அதன் பிறகே முசே அபேலை (M. Abille) அழைச்சு தண்டுக்கு சாமக்கிரிகை அனுப்பி வைக்கயில்லை யென்று கேட்டார். கேட்டதுக்கு அவனென்னமோ உத்திரஞ் சொன்னான். அப்பிறம் இஞ்சினீர் கையிலே தமிழிலே அஞ்சாறு கடுதாசி யெழுதி பாரிசிலே தம்முடைய முத்திரையும் போட்டு கையெழுத்தும் போட்டுக் குடுத்தார். அது கொத்தர் தச்சர் சம்மதியாய் காணுது, அது பிறகு விசாரிக்க வேண்டியது. யின்னம் காரியமென்று அறிய வேண்டியது. அப்பிறம் நாற்பது வருஷமாய்க் கும்பனீருக்கு குடுக்கவேண்டிய பாக்கி சம்மதிகளெல்லாம் கணக்கு யெடுத்து யெழுதி கும்பினீர் வர்த்தகர் பின்னையும் அவரவர்கள் பேரிலே வரவேண்டிய தெல்லாம் இன்னாரென்னாரென்று பிடிச்சுக் கொண்டிருந்தார்கள். அந்த பிறஸ்தாபம் ஒரு நாழிகை தேசகாலம் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பிறம் குமிசேலியாராய் யிருக்கிற முசியே பெடுத்தல்மீ, முசியே தெலார்ஷு, முசியே தெபோசேத்து முசே லசேல் யிவர்களெல்லாம் அனுப்பி வைச்சுக் கொண்டு போய் விட்டார்கள். அப்பிறம் முசியே புசியும் முசியே சுப்பீரும் பேசிக் கொண்டு யிருந்தார்கள். முசியே லாலி அவர்கள் நம்மைக் கிட்ட அழைச்சு குண்டு சாலையிலே யிருக்கிற சேவுகர் களெல்லாம் செப்த்தெம்பேர் மாசம் முதல் சேவுகம் தேவையில்லை யென்று சொன்னார். அந்தப்படிக்கி அவர்களுக்குச் சொல்லுகுறோமென்று சொன்னோம். அப்பிறம் பின்னை யேதாகிலும் காரியமுண்டாயென்று கேட்டோம். யிப்போ பின்னை யொன்றுமில்லை, நீர் வீட்டுக்கு போமென்று சொன்னார். அப்பிறம் அனுப்பி வைச்சுக் கொண்டு சாவடிக்கி வந்து மகா நாட்டாரை யெல்லாம் அழைச்சு சீக்கிரத்துக்கு வரியெழுதச் சொல்லி தாக்கீது பண்ணிப் போட்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

### *1759 வருசம் ஆகொஸ்து மாசம் தேதி 30; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 18; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே முத்திரைச் சாவடிக்கு நாம் போன விடத்திலே மகாநாட்டார் சொன்னது : யிதுவரைக்கும் பிரிச்செழுதினது எழுத்தய்யாயிரம் யெண்பதினாயிரம் விராகன் துகையாச்சுது. யின்னம் அதின்பேரிலே ஒசத்தி யெழுதி வைக்கச் சொல்லி தன் வீட்டுக்கு வந்து கணக்கு வெள்ளைக்காரர் கையிலே எழுதிவிக்கச் சொல்லியும் அழைச்சனுப்பி விக்குறானென்று சொன்னதுக்கு நல்லது அங்கே தானே போய் எழுதுங்கோளென்று சொன்னோம். அப்பிறம் மகாநாட்டாரும் சாவடிக் கணக்கும் நம்முட முத்தப் பிள்ளையும் யெல்லாரும் பதினோரு மணிக்கு முசியே லசேல் வீட்டுக்குப் போனார்கள். அப்பால் யித்தனாள்

காலத்தாலே முசியே சாம்பூபா (M. Chambois), ஷெவலியோ கிரிலோன் (Chevalier Gillon) என்கிறவனும் சீமைக்கு முன் ஆடி மாசம் 21 சுலுப்பு மேலே யேறிப் பாயெடுத்து ஓடினவர்கள், அஞ்சாறு நாளையிலே ஓடி கிழக்கே ஒசந்து ஓடுகிற விடத்திலே சுலுப்பிலே கம்மத்துக் கண்டு யினிமேல் ஓடினால் முழுகிப்போம் என்கிறது தோணி, அச்சை யிந்தக்கரை பிடிச்சு வேலை பார்த்துக் கொண்டு போவோமென்கிறது தோணாமல் படிக்கி யிவர்களுக்கு நல்ல காலம் யில்லாத படியினாலே மறுபடி திரும்பி புதுச்சேரி துறை பிடிச்சு யிங்கிலீசுக்காறர் இஸ்காதுரு இருக்குறபடியினாலே ஆலம்புரவி துறை பிடிச்சு யிறங்குவோ மென்று சதுரங்கப் பட்டணத்துக்கு நேராய் வரச்சே இங்கிலீசுக்காறருடைய கப்பல் ரெண்டு கப்பல் கண்டு அந்த சுலுப்பைப் பிடிச்சுக் கொண்டு அதிலே இருந்த சரக்குகளும் ஜெராக்கமும் அஞ்சாறு லக்ஷத்துக்கு யிருந்ததையும் எடுத்துக் கொண்டு சென்னப்பட்டணம் போயி பிடிச்சார்கள். அதிலே சரக்கு சப்படியும் யிறக்கிப் போட்டு அவர்களையும் துறையிலேயே யிறக்கிப் போட்டார்கள்.

அப்பிறம் அவர்கள் வாடிக்கைப்படிக்கு கத்தி யெடுத்து சண்டை போடுகுறதில்லை யென்று கையெழுத்துப் போட்டுக் குடுத்துப் போட்டு யித்தனாள் புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள். முசியே சாம்புவாசும் செவலியே (M. Chamboir Chevallier), செவலியேர் கிரிலோனும் (Crillon) புதுச்சேரி வந்து சேர்ந்தார்கள்.

யிப்பால் கேழ்விப்பட்டது சம்பா கோவில் பாதிரியள் அறியாங்குப்பத்திலே யின்றைய முதல் பத்துனாள் திருனாள் நடக்கப்போகுது. அது செனங்கள் போக்குவரத்துக்கு உத்தாரம் குடுக்க வேணும் யென்று முசியே லாலி அவர்களைக் கேட்டதுக்கு அவர் சொன்னது, வெளிகளிலே யிருக்கிற முசியே பெடுத்தல்மீ தோட்டங்கள் பின்னையும் வெள்ளைக்காறர்கள் தோட்டங்களிலே யிருக்கிற நாற்காலிகள் மேசை பலகை தட்டு முட்டுகளெல்லாம் யெடுத்து வரச்சொல்லி உத்தாரம் பண்ணி யிருக்குறோம். அப்படி யிருக்க நீங்கள் யிந்த வருஷத்துக்கு நிறுத்தி மேல் வருஷத்துக்குச் செய்யலாமென்று சொன்னதுக்கு பாதிரியார்கள் சொன்னது : "யிது தமிழருடைய திருநாள் ஆகையினாலே நடப்பிக்க வேணு" மென்றும் தெரியப்படச் சொன்னதின் பேரிலே கசறிக் கொண்டு நல்லதென்று உத்தாரம் குடுத்தாரென்று கேழ்விப்பட்டோம். அப்பறம் சாயங்காலம் விக்கிரகத்தை யெடுத்துக் கொண்டு வில்லியநெல்லூர் கெவுனி வாசலிலே போகச்சே முசியே லசேல் மனுஷர் அஞ்சாறு சேவுகர் வந்து ஆணையிட்டு கிறஸ்து வரைப் போகவாண்டாமென்று சொல்லச்சே அவர்கள் ஆணையைத் தள்ளி போகச்சே சேவுகர் பூந்து அடிச்சுப் போகவாணாமென்று அடிக்கச்சே

அவர்கள் சேவுகரை அடிக்கச்சே, யிப்படி ஒருத்தருக்கொருத்தர் அடிதடிகள் பட்டு ரொம்ப காபிறாவாயி வச்சையாயி நடந்தது. யிப்பறம் ஆறு மணிக்கி இரண்டு பேர் ஒப்பிசியால்மார் யிவ்வடத்துக்கு வந்து சொன்ன சேதி யென்ன வென்றால், சென்னப்பட்டணத்துக்கு இங்கிலீசுத்தாராவிலே (England) யிருந்து போனவருஷம் பிறப்பட்ட கப்பல் ஒன்பது சென்னப்பட்டணத்துக்கு வந்ததென்றும் அதிலே யிங்கிரேசு ராசாவண்டையிலே யிருக்கிற பவுன்சுலே வொரு வகுப்பு சொலுதாதுகள் ஆயிரத் தன்னூறு பேரென்றும் ரிஜிமெண்டு சொலுதாதுகள் யென்றும் ஒருத்தன் சொன்னான். ஒருத்தன் ஆயிரத்திறுநூறு 1200 பேரென்று சொன்னான். ஒருத்தன் இரண்டாயிரம் பேரென்று சொன்னான். இப்படி மூணு வித சமாச்சாரமாய் சொல்லி யின்னம் பிறகாலே சிறிது கப்பல் வருகுதென்கிறதாக எழுதி வந்தது யென்றும் யிப்படியாக சமாச்சார சொன்னார்கள். இதல்லாமல் அதிலே சிறிது பண்டும் சீமையிலே யிருந்து சகலாத்தும் மத்துமுள்ள சாமான்களும் சரக்குகளும் வந்துதென்றும் சொன்னார்கள். அப்பறம் யித்தனாள் வியாழக்கிழமை யானபடியினாலே குமிசேல் கூடி அதிலே கும்பினீ பாக்கி முன் நிலுவைகள் வாங்க வேணுமென்று பேசினார்கள் யென்றும் நம்முட பேரிலே யிருக்கிற பாக்கிக்கு முசியே பெடுத்தல்மீயை விசாரிக்கச் சொன்னார்களென்று நம்முடைய பாக்கிக் குடுசே திலார்ஷூம் முசியே லசேலும் மத்தபேரெல்லாம் ரொம்ப விகாதமாய்ப் பேசினார்களென்றும் மத்த பேரெல்லாம் சும்மா யிருந்தார்களென்றும் முசியே திலார்ஷூம் முசியே லசெலும் ரொம்ப விகாதமாய்ப் பேசினார்களே யிதுவரைக்கும் நீங்கள் கேளாமலிருந்த தென்ன ஒரு ஞாயமுமில்லாமல் யிருக்கத் தக்கினதில்லை ஞாயமிருக்கும் ஆகையினாலே நீங்கள் கேளாமலிருந்தீர்களென்று முசியே லாலி அவர்கள் சொன்னாரென்று பகலைக்குக் கேழ்விப்பட்டுது. யெழுதி வைத்தோம்.

## செப்டம்பர் 1759

*1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 1; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 20; சனிவாரம்*

இத்தனாள் ராத்திரி கேழ்விப்பட்ட சேதி யென்னவென்றால் : முசியே லசேல் மகாநாட்டாரை எல்லாரையும் தன் வீட்டிலே வைச்சுக் கொண்டு மகாநாட்டார் அறுபத்தொன்பதாயிரம் சில்லரை வராகனுக்கு யெழுதி குடுத்த கணக்கிலே கையெழுத்துப் போட்டு, குடுத்த கணக்கை கட்டிக் கொண்டு அதை விலாடிச்சு லக்ஷம் விராகனுக்கு கையெழுத்துப் போடச் சொல்லி கனகசபை முதலியை சப்பாத்துக் காலாலே மாரிலே உதைச்சு பின்னை ரெண்டொருத்தரை உதாசனமாய்த் திட்டி கையாடினதின் பேரிலே பயந்து கையெழுத்துப் போட்டு குடுத்தார்கள். அப்பிறம் ராத்திரி பதினெட்டு நாழிகைக்கு விட்டு விட்டானென்று சேதி கேட்டோம். யிந்த லக்ஷம் விராகனுக்கு பலவந்தத்திலே கையெழுத்து வாங்கினதுக்கு சாப்பிதா பிறகாலே எழுதியிருக்கிறது. அதைப் பார்த்துக் கொள்ளவும்.

*1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 3; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 22; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே ஒன்பது மணிக்கு நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே குமுசேல் கூடுகுறதுக்கு கொமுசேல் வீட்டுக்கு முசியே லாலி அவர்கள் ஒன்பது மணிக்கு போனார். அப்போ நாம் ஆசாரம் பண்ணினோம். அவரும் பதிலுக்கு ஆசாரம் பண்ணினார். அப்பிறம் விமித்திலே யிருக்கிற (Bound Hedge) சிப்பாயிகள் கணக்கு தீத்துப் போட்டு சொல்லிச் சொன்னோமே யேன் தீத்து போடவில்லை யென்று கேட்டார். ரெண்டு மூன்று நாளாய் அலுவலாயிருந்தோம். நாளை நாளை நன்றையிலே தீத்து சொல்லுகுறோம் யென்று சொன்னதுக்கு நல்லதென்று குமுசேல் வீட்டை போனார். அப்பால் முசியே லெறி, முசியே பெடுத்தல்மீ, முசியே புலோ முதலான பெரெல்லாம் கூட நுழைஞ்சார்கள். முசியே லசேல் குமுசேல் வீட்டுக்கு போறவன் நம்மை அழைச்சு நம்முடைய வீட்டிலே மகாநாட்டாரெல்லாரும் யிருக்குறார்கள், அவர்களண்டைக்கி ஒரு சேவுகனை அனுப்பி அழைப்பிச்சு வைச்சு வையும். குமுசேல் தீந்தவுடனே அவர்களுக்கு பாக்கு வெத்திலை பன்னீர் குடுத்து சந்தோஷமாய் அனுப்பி வைப்போமென்றும் சொல்லிப் போட்டுப் போனான். அப்படியே சோணாசலத்தை அழைச்சு பாக்கு வெத்திலை பன்னீர் முஸ்தீப்பு பண்ணிவிக்கச் சொல்லி காசா துபாசி ராமாநாயக்கனுக்குஞ்

(Rama Nayakkan) சொன்னோம். அப்பிறம் ரெண்டு பேரும் சேவுகரை அனுப்பி முசே லசேல் வீட்டிலே யிருந்த மகாநாட்டாரை அழைச்சு வந்து மேல் வீட்டின் பேரிலே வைச்சுக் கொண்டிருந்தோம்.

அப்பால் முசே லாலி அவர்கள் குமிசேல் கலைஞ்சு வெளியே பிறப்பட்டவுடனே முசியே லங்கர்னே (M. La grenee) சொன்னது "வும்முடைய காரைக்கால் கிராமம் சம்மதிக்கு பித்திசாம் குடுத்திருந்துதே அது குமிசேலிலே தீந்தது முசியே போற்சே பார்த்து (Mr. Porcher) அதை விசாரிச்சு நஷ்டம் மெய்தான் யென்று சொன்னால் அந்தப்படிக்கு ஒத்துக் கொள்ளுவோமென்று சொல்லி" அந்தக் கடுதாசியை முசே போர்ஷே கையிலே குடுத்தார் களென்று சொன்னார். முசியே புலோவும் அப்படித்தானே சொன்னான். அப்பிறம் முசே லக்கற்ணேக்கி நாம் நன்றியறிந்த உபசாரஞ் சொல்லி யிந்த பித்திசாமை குமிசேலிலே போடுவிச்சீரே என்று சொன்னார். அதுக்கு நீங்கள் பணமும் குடுக்க தேவையில்லை போங்கோளென்று கோபிச்சுக் கொண்டு சொன்னான். அதன் பேரிலே யெல்லாரும் போயிவிட்டார்கள். போனவர்களை ஒரு சேவுகனை அனுப்பி தன் வீட்டே அழைச்சுக் கொண்டு போகச் சொல்லி நம்மை அழைச்சு அவர்களுக்கு சம்மதியாய் தீத்துப் போடுவோம் நீரும் வாருமென்றும் சொல்லி, முசியே லாலியானால் யிந்த புதுச்சேரி பட்டணமெல்லாம் முழுங்கிப் போடுவான் யென்று அவர் கோபிச்சுக் கொண்டதுக்கு நாம் அதுகளெல்லாம் தெரியப்படச் சொல்லி சமாதானமாய்ச் சொன்னோம். நீர் வாருமென்று வீட்டுக்கு அழைச்சுக் கொண்டு போனான். அப்பிறம் மகாநாட்டரை அழைச்சுக் கேட்குமிடத்திலே அவர்கள் யெழுபதி னாயிரத்துக்கு சம்மதியே அல்லாமல் லக்ஷத்துக்கு சம்மதியில்லை யென்று சொன்னார்கள். அதின் பேரிலே யிவன் உருட்டும் பிறட்டும் நயமும் பயமுமாக எத்தனை சொல்லியும் அவர்கள் கேழ்க்கமாட்டோமென்றார்கள். அப்பிறம் நம்மை அழைச்சு நீர் அவர்களுக்கு சொல்லுமென்று சொன்னான்.

நாமும் எத்தனை விதம் சொன்னாலும் யெழுபதினாயிரத்துக்கு சம்மதியே அல்லாமல் வேறே சம்மதியில்லை யென்று சொன்னார்கள். அதுக்கு நாம் முசியே லசேலுடனே சொன்னது "நல்லது செனராலானால் பணத்துக்கு ரொம்ப துறுசு பண்ணுகுறார் நீரானால் காலதாமசமான காரியம் பண்ணுகுறீர். இப்பவும் அவர்கள் சொன்ன யெழுபதினாயிரம் விராகனுக்கு பணம் தண்டி வரட்டும். வந்தபிறகு நம்முடைய கையிலே தானே யிருக்குறார்கள். அப்பிறம் யெப்படி வாங்க வேணுமோ அப்படி வாங்கலாமென்று சொன்னதுக்கு அவன் சொன்னது அப்படி சத்தியம் தப்பி முன்னே ஒரு பேச்சு பிறகே ஒரு பேச்சு பேசப் போகாதென்று சொன்னதுக்கு" அவன் சொன்னது. அந்த விசேஷம் அவர்களுடனே

சொன்னதுக்கு அவர்கள் சொன்னது நாங்கள் முன்னே அன்பதினாயிரம் ரூபாயாய் யெழுதிக் குடுத்ததை அன்பதினாயிரம் விராகனாக ஆக்கினான். அதை லக்ஷம் விராகனாக்கினேன். யிப்படி சத்தியம் தப்பாமல் பேசுகிறவனை எங்கேயும் காணோமென்றும் சொன்னார்கள். அப்பிறம் முசே லாலி அண்டைக்கு நம்மைப் போய் யெழுபதினாயிரம் விராகனுக்கு மேல் சம்மதிக்க மாட்டமென்குறார் களென்று சொல்லச் சொல்லி சொன்னான்.

அதன் பேரிலே முசியே லாலி அண்டைக்கு போறோம் போனவிடத்திலே சாப்பிட்டு கட்டிலிலே உளுக்கார்ந்து கொண்டிருந்தார். அப்போ நாம் போய் ஆசாரம் பண்ணினோம். அவரும் ஆசாரம் பண்ணி யெங்கே வந்தீரென்று கேட்டார். மகாநாட்டார் சம்மதி லக்ஷம் விராகனுக்கு கையெழுத்துப் போட்டவர்கள் தங்களண்டைக்கு வந்து சம்மதியில்லை யென்று சொன்னார்களே, யெழுபதினாயிரம் விராகனுக்கு கையெழுத்துப் போட்டிருக்குறோமே அந்தப்படிக்கி சம்மதி யென்று சொல்லுகுறார்களென்று தங்களுடனே முசியே லசேல் சொல்லி தாங்கள் யெந்த ஒடுதி பண்ணுகுறீர்களோ அந்தப்படிக்கு நடந்து கொள்ளுகுறோமென்று சொல்லச் சொன்னார். அவர்கள் எழுபதினாயிரம் வராகனுக்கு அதிகமாக குடுக்கிறதில்லை யென்று சொல்லுகுறார்களே எப்படி அது உமக்கு யிருக்குதென்று கேட்டார். அதுக்கு நாம் சொன்னது "குடிகளாய் யெழுபதினாயிரம் விராகனுக்குச் சம்மதிச்சு குடுக்குறோமென்று சொல்லச்சே அந்தப்படிக்கி விடு. யிந்த எழுபதினாயிரம் விராகனும நமக்கு வந்து சேர்ந்த பிறகு குறை முப்பதினாயிரம் வராகனும் வாங்கலாம். கொஞ்சம் கொஞ்சமாய் சாப்பிட்டால் ரொம்ப சாப்பிடலாமென்று சொன்னதுக்கு" மெய்தானென்று ஒத்துக் கொண்டு அவர்கள் மனசுப்படிக்கி விட்டால் எத்தனை நாளையிலே பணம் வருமென்று கேட்டதுக்கு, யெட்டு நாளுக்கு மேல்க் கொண்டு நித்தம் பதினாயிரம் பதினய்யாயிரம் விழுக்காடு வருமென்று சொன்னதுக்கு நல்லது அந்தப்படிக்கிப் பணம் தஸ்து பண்ணி வைக்கச் சொல்லி சொன்னார். நாம் அனுப்பிவிச்சுக் கொண்டு நாம் நாலடி வந்தபிறகு மறுபடி அழைச்சு யெண்பதினாயிரம் விராகனாய் தீத்துப் போடச்சொல்லி சொன்னார். பின்னையும் சம்மதிச்சானால் ஆச்சுது. யில்லாவிட்டால் எப்படியாகிலும் தீத்துப் போடச்சொல்லிச் சொன்னார். அனுப்பிவிச்சுக் கொண்டு ரெண்டே கால் மணிக்கி முசியே லசேல் வீட்டுக்குப் போய் நடந்த சேதி யெல்லாம் உம்முடனே சொன்னாராயென்று கேட்டு நல்லது நீர் மகாநாட்டாரண்டைக்கு போக வேண்டாம். வீட்டுக்குப் போய் சாப்பிட்டு வாரும் யென்று சொன்னான்.

நாம் வந்துவிட்ட பிறகே எண்பத்தோராயிரத்து அறுநூத்து சில்லரை (81600) விராகனாய் ஒரு கணக்கு யெழுதிக் கொண்டு அதிலே

கையெழுத்துப் போடச்சொல்லி சொன்னான். அவர்கள் அந்த எழுபதினாயிரம் விராகனுக்கு சம்மதியே அல்லாமல் யிது சம்மதியில்லை யென்று சொன்னதின் பேரிலே கனகசபை முதலி, பின்னை முத்தாப்பிள்ளை, தில்லை மேஸ்திரி மூணு பேரையும் கசோத்திலே போடச் சொல்லி மத்தக்குறை பேரையும் தன்வீட்டிலே தானே காவல் பண்ணி விச்சுக் கொண்டு அஞ்சு மணிக்கு நம்மண்டைக்கி மனுஷரை அனுப்பி வைச்சான். நான் போனவிடத்திலே முசியே லாலி அவர்கள் யெண்பதினாயிரம் விராகனாய் வாங்கச் சொல்லிச் சொன்னார் யென்று சொன்னீரே அந்தப்படிக்கி கையெழுத்துக் கேட்டால் மாட்டோமென்று சொல்லுகுறார்கள். ஆனபடியினாலே அந்த மூணு பேரையும் கசோத்திலே போட்டு வைச்சோமென்று சொன்னதுக்கு நல்லதென்று சொன்னோம். பிறகு மைத்த பேரை கையெழுத்து போடச் சொல்லி சொன்னான். அவர்கள் மூணு பேரையும் காவல் விட்டால் நாங்களும் அவர்களுமாக யோசனை பண்ணிக் கொண்டு சொல்லுகுறோமென்று சொன்னார்கள்.

அதுக்கு முசே லசேல் சொன்னது அந்த மூணு பேரும் தானெதித்து உத்திரவு சொல்லுகுறவர்களும் யிவர்களை சம்மதிக்க வொட்டாமல் கலைக்கிறவர்களும் மூணு பேரையும் நாளை தூக்கிப் போட வேணும். அவர்களை விடத்தக்கதில்லை யென்று தூக்கு மரத்துக்கு யென்றும் சம்மதி யென்று சொன்னான். ஆனால் நாங்கள் செய்ய வேண்டியதென்ன வென்றால் அவர்கள் வந்து ஒரு காரியம் தீரவேணும் யென்று சொன்னார்கள். அப்பிறம் யேழு மணிக்கு மட்டுக்கும் நாமிருந்து உபய ரேத்து ராதிகளுக்கும் சொல்லத் தக்கின விஷயம் எல்லாம் சொன்னோம். இருவரும் கேழ்க்க மாட்டோமென்று சொன்னார்கள். அப்பிறம் முசியே லசேல் உடம்படிக்கைப்படி நம்மை அழைச்சு நீர் போய் சாவடியிலே யிருந்து சாவடி கணக்கரையும் வைச்சுக் கொண்டு யெண்பத்தொராயிரத்து அறுநூத்து சில்லரை விராகனும் வாங்கிப் போடச் சொல்லி சொன்னான். அப்பால் நாம் சாவடிக்கு வந்து யெல்லாரையும் அழைச்சு பணங்கொண்டு வரச்சொல்லி தாக்கீது பண்ணிப்போட்டு வீட்டுக்கு வந்து விட்டோம். யித்தனாள் சாயங்காலம் அந்தந்த சாதிக்கு நாட்டாரை காவல் பண்ணியிருக்குது யென்று சொன்னப்பட்டணத்திலே யிருக்கிற செனங்களெலலாம் கட்டிப் போட்டு பட்டணமெல்லாம் வெகு காபிரா பண்ணுறார்கள்...

***1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 4; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 23; மங்களவாரம்***

இத்தனாள் காத்தாலே சின்ன துரையும் முசியே லசேலும் நம்மை அழைச்சு அனுப்பி வைச்சார்கள். கந்தப்ப முதலியிது பின்னந்தாங்கலிலே

(Pillantangal) யிருபது பதினைஞ்சு விராகனும் ஒலையும் வந்துது. குண்டு சாலையிலே யிருக்கிற சிப்பாயிகளை நம்மண்டையிலே கொண்டு வந்து விட்டார்கள். நாம் சின்னதுரை அண்டைக்கு அனுப்பி வைச்சோம். அதன் பேரிலே நம்மை அழைச்சனுப்பி வைச்சார். நாம் போனவிடத்திலே யிந்த ஒலை சம்மதி யென்ன யெழுதி யிருக்குதென்று கேட்டார். அந்த ஒலையிலே கிராமத்து சம்மதி யெழுதி யிருக்குது. கிராமத்திலே அமுல்தாறர் தஸ்து பண்ணி அனுப்பி வைச்சார்களென்று சொன்னதுக்கு ஆனால் அந்த விராகனை சாவடியிலே செலுத்தி கணக்கப் பிள்ளைகள் கையிலே கையெழுத்து அத்தாட்சி வாங்கிக் கொண்டு வரச்சொன்னார்.

அப்படியே சாவடி கணக்கப்பிள்ளை கையிலே செலுத்தி கையெழுத்து அத்தாட்சி வாங்கி கட்டி வைச்சோம். அப்பிறம் முத்து வெங்கிடராம ரெட்டி, சீனிவாசபிள்ளை பேரிலேயும் பாப்பய்ய பிள்ளையும் முத்துமல்லா ரெட்டியும் பித்திசாம் யெழுதி குடுத்தார்கள். அது யென்ன சம்மதியென்று கேட்டு அதுபிறகு ஆகட்டும் நேத்தய தினம் கசோத்திலே போட்ட கனகசபை முதலி, தில்லை மேஸ்திரி, பிள்ளை முத்தப்பிள்ளை யிந்த மூணு பேரையும் தூக்கிப் போடப்போறார்கள். தூக்கு மரம் கொண்டு வந்து சாவடியிலே போடுகிறார்கள் நான் வருகுறேன். நீர் போய் முன்னே மகா நாட்டாரை யெல்லாம் அழைப்பிச்சு வைச்சிரும் யென்று சொன்னான். அப்படியே நாம் சாவடிக்கு வந்து மகா நாட்டாரை யெல்லாம் அழைச்சனுப்பி வைச்சுக் கொண்டு யிருந்தோம். யிதிலே யிருபது சிப்பாயிகளும் அழைச்சுக் கொண்டு சின்னதுரை வீட்டுக்கு யெதிரே கிடந்த தூக்கு மரத்திலே ரெண்டு மரமும் யெடுப்பிச்சுக் கொண்டு வந்து சேர்ந்தான். அவன் வரச்சே வழியிலே கும்பலாயிருந்த செனங்களெல்லாம் வெகு வெகு விதங்களான விசேஷமெல்லாம் பேசினார்கள். இவனுக்கும் செனங்கள் வந்து மேலே விழப்போறார்களென்று மனசிலே அச்சத்துடனே பிரிகாத்துடனேயும் சாவடி வந்து சேர்ந்தான்.

நேத்து சாயங்காலம் துவக்கி பட்டணத்திலே உள்ளே கடைகளெல்லாம் கட்டிப் போட்டு செனங்களெல்லாம் யேக கூட்டமாய் கூட்டிக் கொண்டு சின்ன துரை வீட்டு வாசற்படி யண்டையிலும் கோட்டைக்கி வடவண்டையும் கீழண்டையும் கூட்டமாய் கூடிக் கொண்டு, முசியே லாலி அவர்களும் முசியே லெறியும் முசியே சுப்பியெரும் பார்க்கத் தக்கதாக கோவென்கிற சத்தமாய் யேகக்கூக்குறலாய் கூப்பிட்டுக் கொண்டு யிருந்தார்கள். எப்போ யிவன் தூக்கு மரமும் யெடுத்துக் கொண்டு யிவனும் சாவடிக்கி வந்தவுடனே அவ்விடத்திலே யிருந்த கும்பலெல்லாம் சாவடியண்டைக்கு வந்து நெறைஞ்சார்கள். அப்பிறம் தன்னண்டை இருக்கிற துபாசி கிஷ்ணம நாயக்கனையும் பத்துபேர் சிப்பாயிகளையும் கூட்டி கசோத்திலே போட்டிருக்கிற மூணு பேரையும் அழைச்சு வரச்சொல்லி அனுப்பி வைச்சான்.

அவர்கள் போயி கோட்டையிலே யிருந்து பத்து பேர் சிப்பாயிகளும் யிருபது பேர் சிப்பாயிகளும் பயினேத்து துப்பாக்கியிலே போட்டுக் கொண்டு காவலுடனே வந்தார்கள். வந்தவுடனே யிந்த நூறாயிரம் விராகனுக்கும் கையெழுத்துப் போட்டால் ஆச்சுது. யில்லாவிட்டால் தூக்கிப் போடுவோம் யென்றும், அதிரும்பி துருமாய் நயமும் பயமுமாய் யெந்த விதம் சொல்ல வேணுமோ அந்த விதமெல்லாம் சொன்னான். யென்ன சொன்னாலும் நாங்கள் யெழுபதினாயிரம் விராகனுக்கு சம்மதிச்சு கையெழுத்துப் போட்டுக் குடுத்தோமே அதுவே அல்லாமல் லக்ஷம் விராகனுக்கு சம்மதியில்லை யென்று சொன்னார்கள். யிந்தப்படிக்கி ஒன்பதரை மணிக்கி மட்டுக்கும் துவக்கி யிந்தப்படிக்கி பனிரெண்டு மணிவரைக்கும் விசேஷம் நடந்தது. இதிலே மத்தியிலே மன்னப்ப முதலி சிறிது விசேஷம் பேசினான். அவனைக் காவல் வைக்கச் சொன்னான். யிந்தப்படிக்கி யிவர்கள் லக்ஷம் விராகனுக்கு சம்மதிச்சு கையெழுத்துப் போட்டாலாச்சுது. யில்லாவிட்டால் நாளைக்காத்தாலே முசியே பெடுத்தல்மீயும் நானும் வந்து யிவர்களை காவலிலே தானே வச்சு வைய்யுமென்று சொல்லிப் போட்டு நம்முடைய கையிலே அந்தக் கடுதாசியை குடுத்துப் போட்டு பனிரெண்டு மணிக்கு வீட்டுக்குப் போய் விட்டான். போகச்சே செனங்களெல்லாம் யிந்த தூக்கு மரம் லசேலுக்குத்தான் தூக்குறதுக்கு கொண்டு வந்து போட்டார்களென்று கூப்பிட்டு மண்ணை வாரிப்போட்டு யிப்படியாக உதாசினமாய் திட்டினார்கள். சனங்களெல்லாம் யிதுவெல்லாம் கேட்டுக் கொண்டு பயந்து நம்மை யிவர்கள் மேலே விழுந்து அடிச்சுப் போடுவார்களென்று பயத்துடனே தலையைக் குனிஞ்சுக் கொண்டு போய் விட்டான்.

போனவன் முசியே லாலி அவர்கள் அண்டைக்குப் போய் தமிழரானால் வெகு கூட்டமாய் கூடிக் கொண்டு யென்னைச் சுத்திக் கொண்டு அடிச்சுப் போட வந்தார்கள். நான் தப்பிச்சுக் கொண்டு வரப்பட்டது வெகு பிறயாசை யாயிருந்தது யென்று சொன்னான். அவர் அதன் பேரிலே யோசனை பண்ணி தமிழர் கையிலே ஆயுதமிருந்தால் ஒரு வேளையிலே மோசம் பண்ணுவார்களென்று தோணி அவரவர் வீட்டிலே யிருக்கிற துப்பாக்கி, கத்தி ஆயுதங்களிருக்குறது யெல்லாம் சோதிச்சு யெடுக்கச் சொல்லி சொன்னார். கோட்டையிலே கொண்டு வந்து சேர்க்கச் சொல்லி உத்தாரம் பண்ணினார். அப்படி உத்தாரம் பண்ணச்சே நம்முட வீட்டிலே மாத்திரம் ஆயுதம் எடுக்க தேவையில்லை. மத்தப்படி பட்டணத்திலே யிருக்கிற வீடுகளிலே யிருக்கிற ஆயுதங்களெல்லாம் யெடுக்கச் சொல்லி உத்தாரம் பண்ணினார்.

அப்பிறம் நாம் றெண்டு மணி மட்டுக்கும் யிருந்து அவர்களை கையெழுத்துப் போடச்சொல்லி உடம்படிக்கை சொன்னதுக்கு அவர்கள் சம்மதிக்க மாட்டமென்றோ மென்றார்கள். அப்பால் அவர்களை

சம்மதிக்காமல் போனால் சாவடியிலே தானே வைச்சுப்போட்டு நாம் வீட்டுக்கு வந்து சாப்பிட்டு சத்து ஆசுதாப் பண்ணிக் கொண்டு மறுபடி நாலு மணிக்கி சாவடிக்குப் போய் ராத்திரி யெட்டு மணிக்கு மட்டும் செனரால் சொன்ன எண்பதுனாயிரம் வராகனுக்கும் கணக்கிலே கையெழுத்துப் போடச்சொல்லி சொன்னதுக்கு, ராத்திரி பனிரெண்டு மணி அடிச்சு றண்டுமணி மட்டுக்கும் சம்மதிக்க மாட்டோமென்று பிறகே யெண்பத்தோராயிரத்தி இறநூத்துச் சில்லரை விராகனுக்கு கணக்கிலேயும் கையெழுத்துப் போட்டார்கள். யிந்தப் பிறகாரமாக சூரிய உதையத்துக்கு துவக்கி ராத்திரி ரெண்டு மணி மட்டுக்கும் பட்டணத்திலே உள்ள செனங்களுக்கு நடந்த சம்மதியள் யிப்பால் கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளை யிவர்கள் மூணு பேருக்கும் நடந்த வர்த்தமானம் யெழுத துவக்கினோம்.

யின்றைய தினம் காலமே யேழு மணிக்கு கசோத்திலே போட்டிருந்த கந்தப்ப முதலி, சவுரிராய பிள்ளை, பெரியண்ண முதலி யிந்த மூணு பேரையும் பதினோரு பேர் சொலுதாதுகளையும் கூட்டி அவர்கள் குடியிருந்த தெருவழியே அழைச்சுக் கொண்டு போகச் சொல்லி போகச்சே, அவர்கள் பெண்டுகள் பிள்ளைகள் பார்த்து அழுது அங்கலாய்க்க அதைக்கண்டு யிவர்கள் திரும்பி பார்க்க யிவர்களை துப்பாக்கியிலே பிடங்காலே அடிச்சுத் தள்ளி சுறுக்காய் நடக்கச் சொல்லி தள்ளிக் கொண்டு போய், வில்லியநெல்லூார் அண்டையிலே போய் அவ்விடத்திலே யிருந்து காட்டுமேடு பிரம்பை யிதுகளெல்லாம் யிழுத்து நடக்கமாட்டாமல் விழுந்து கொண்டு போனவிடத்திலே காலைப் பிடிச்சு யிழுத்தும் நிண்ணயிடத்திலே நடக்கச் சொல்லி, துப்பாக்கி பிடங்காலே யிடிச்சும் அடிச்சும் யிப்படியெல்லாம் வெகு அயிரா பண்ணினார்கள். யிவர்கள் பிறகே ஆயிரம ரெண்டாயிரம் பேர்கள் கும்பலாய் செனங்கள் கூட்டம் வேடிக்கை பார்க்கத் தக்கதாக ராத்திரி யேழு மணிக்கி வில்லியநல்லூர் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கு தாகமான விடத்திலே தாகத்துக்கு மோர் குடுக்க வந்தால் அதை வெள்ளைக்காறர் பிடிங்கி குடிச்சுப் போடுகுறதும் யிப்படி யெல்லாம் வெகு அயிராணி பண்ணினார்கள். யிதுகள் யிந்தப்பட்டணம் தோணி அன்பது அருபது வருஷத்துக்குள்ளே யிப்படிப்பட்ட அனியாயங்கள் நடந்ததில்லை கேட்டதும்யில்லை நாம் பார்த்ததுமில்லை.

ஆனால் முன்னாலே ஆற்காடு தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி யிவ்விடங்களிலே றெண்டு மூணு துறையனுக்கு நடந்ததென்றும் கேட்டிருப்போம். பார்த்ததில்லை யிப் பிறதிஷ்டை பிறத்தியஷ்ஷமாய்க் கண்ணினாலே நாம் பார்க்கத் தக்கதாய் நடவாத காரியங்களெல்லாம் அனியாயங்களெல்லாம் நடந்தது. யிந்தப்பட்டணத்திலே யினிமேல் யுள்ள செனங்களெல்லாம் சுபஷ்ஷமில்லை யென்று சொல்லிக்

கொள்ளத்தக்கதாக நடந்தது. யிந்தக் கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளை யிவர்கள் மூணு பேருக்கும் யிந்த சீமா மூலம் குத்தகைக்காறருக்கும் பாப்பய்யபிள்ளை ஒருத்தன் தோணி முசே லாலி அவர்களுக்கு முசியே பசேன் முன்னிலையும் முசியே லசேல், சின்னதுரை, முசியே பெடுத்தல்மீ யிவர்களுடனே முன்னிலையாய் சொல்லி பதினைஞ்சு லக்ஷம் யிருபது லக்ஷம் ஆகப்பண்ணி குடுக்குறோம் யென்று சொல்லி யிப்படி யெல்லாம் நடப்பிக்குறான். ஆனால் அவர்கள் பண்ணின பாபத்துக்கு தக்கினதாய் அவர்கள் அனுபவிக்குறார்கள். யிவனிருந்து செய்விக்கிறபடியினாலே அந்த கழுவுக்கு இந்த கோமுட்டி செட்டி யென்கிறதாய் யிந்த பாப்பய்யப்பிள்ளை யினிமேல் யென்னென்ன அனுபவிப்பானோ தெரியாது யென்று சகல செனங்களும் சொல்லிக் கொண்டு யிருக்குறார்கள். யிந்த மகா நாட்டாருக்குத் தூக்கு மரம் கொண்டு வந்து போட்டு யிப்படி கஸ்தி பண்ணினால் லசேலுக்கு யென்ன ஆக்கினை வருமோ தெரியாதென்றும் சொல்லிக் கொள்ளுகுறார்கள். யிந்தப் பாப்பய்யப்பிள்ளை பேரிலே போட்டியாய் மைசூர் ஸ்தானாபதியாய் வந்திருக்கிற வெங்கிட்ட னாறணப்பய்ய னென்கிறவன் யிந்தப் பட்டணத்திலே யுள்ள செனங்களை யெல்லாம் யென் வசத்திலே ஒப்பிச்சால் அறுபது லக்ஷம் யெழுபது லக்ஷம் ஆகப்பண்ணி தாறோமென்று, முசியே பசேனுக்கும் முசியே லசேலுக்கும் ஸ்தானாபதியும் விட்டிருக்கு ரானென்றும் கேழ்க்கப்பட்டுது. யிந்தப் பட்டணத்திலே யுள்ள செனங்கள் பண்ணின பாபத்துக்கு தக்கினதாய் துற்ச்சனாளாய்ப் பிறப்பட்டு திரியுறார்கள்.

***1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 5; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 24; புதவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கு போனவிடத்திலே முசியே லசேலும் வந்தான். முசியே லாலி அவர்களை காண்பிச்சுக் கொண்டு யிருந்தோம். நம்மைப் பார்த்து தமிழர் சம்மதிச்சு கையெழுத்துப் போட்டார்களா யென்று கேட்டார். பாதிபேர் கையெழுத்துப் போட்டார்கள். பணம் தண்டலுக்கு விட்டோம். யினிமேல் வந்து சேர்ந்து கொண்டே யிருக்குமென்று சொன்னான். யெப்போ வருமென்று கேட்டார். அஞ்சாறு நாள் முதல்க் கொண்டு யெட்டு நாளைக்கி மேல் பணம் விஸ்தாரமாய் வருமென்று சொன்னேன். அவருடனே நாம் பேசுகிறது லசேலுக்கு ஆகாமல் யின்னம் றெண்டொருத்தர் கையெழுத்துப் போடாமல் யிருக்கிற கடுதாசியை நம்முடைய கையிலே குடுத்து, நீர்சத்தே பிறயாசைப் படவேணுமென்றும் சாவடிக்கிப் போகச் சொல்லி அவர் முன்பாக சொன்னான். அப்புறம் நாம் அனுப்பிவிச்சுக் கொண்டு சாவடிக்கு வந்து திட்டவட்டம் பண்ணிப் போட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

நேத்து சாயங்காலம் வில்லியநெல்லூர் கோட்டையிலே கசோத்திலே போட்ட கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளை யிவர்களை விசாரிக்க முசியே புலி யென்கிறவன் போனான். போனவன் அவர்களை அழைச்சு பணங்காசு சீக்கிறத்துக்கு செலுத்தாமல் போனால் உங்களை அப்படி செய்வேன், யிப்படி செய்வேன், தூக்கிப் போடுவேன் யென்று நயமும் பயமும் ஆக சொல்லி பிரம்பினாலே றெண்டொரு கையாடிப் போட்டு வந்து விட்டானென்று கேதி கேட்டோம். யித்தனாள் சாயங்காலமும் நாம் சாவடிக்கிப் போயிருந்து அவரவர்களை அழைச்சு சீக்கிறத்துக்கு பணம் தண்டச் சொல்லி தாக்கீது பண்ணி யேழு மணிக்கு மட்டுமிருந்து அப்புறம் வீட்டுக்கு வந்தோம்.

யித்தனாள் முசியே பெடுத்தல்மீ, முசியே லசேல், பாப்பய்ய பிள்ளை யிவர்கள் சின்னதுரை வீட்டிலே யிருந்து சீமாமூலம் கணக்கு அய்யண்ண சாஸ்திரியும், பெண்ணாத்தூர் சாமாராயனும் யெழுதிவிக்கச்சே முசியே லெறி, முசே தெபோ, சவுரிராய பிள்ளை யிவர்களுக்கு பெண்ணாத்தூர் சாமாராயன் லஞ்சம் சிதம்பரத்து சம்மதியிலே கொஞ்சமாயி பதினாயிரம் பதினொண்ணாயிரம் யெழுதி விச்சாய். நான் ரொம்ப இடுத்துருக்குதென்று கேட்டிருக்குறேன் யென்று முசியே லசேல் சாமாராயனை தாடையிலே றண்டு போட்டான். அப்பறம் அய்யண்ண சாஸ்திரி சரியாய் உள்ளபடி யெழுதி விப்பானென்று சொன்னான். யிப்படி சீமா மூலம் கணக்கு சம்மதி சின்னதுரை வீட்டிலே வெகு கறுக்காய் நடந்தது யென்று கேழ்விப்பட்டோம். கந்தப்ப முதலி பெரியண்ண முதலியார் சவுரிராயப்பிள்ளை யிவர்கள் சம்மதியும் சீமா மூலம் குத்தகை காறர் சம்மதியும் யிதுகளெல்லாம் பாப்பய்யப்பிள்ளை முகாந்திரமாயிருந்து அவர்களை கஸ்திப்படுத்துவிக்குறான்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 6; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 25; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்கிப் போனவிடத்திலே யெட்டு நாளைக்கி திங்கள் கிழமை வியாழக்கிழமை குமிசெல் கூடுகுறபடியினாலே சகலமான குமிசலியோ ரெல்லாரும் வந்திருந்தார்கள். சென்னப்பட்டணத்திலிருந்து யிங்கிலீசுக்காறன் ஒரு ஒப்பிசியால் கப்பித்தான் நூத்தன்பது அழைச்சுக் கொண்டு வந்தயிடத்திலே விட்டுப்போட்டு பதிலுக்கு நூத்தன்பது பேர் யிங்கிலீசுக்காறர் சொலுதாதுகளை மாத்திக் கொண்டு அவர்களை வெளியே அனுப்பிவிட்டு அந்த ஒப்பிசியால் முசியே லாலி அவர்களண்டைக்கு வந்து அனுப்பிவிச்சுக் கொண்டு போயி விட்டான். அப்புறம் பாதிரி லவோர் (Fr. Lavaur) வந்து முசியே லாலி அவர்களுடனே வெகுநேரம் பேசிக் கொண்டு யிருந்தார். அப்புறம் ஒன்பது மணிக்கு முசியே லாலி யவர்களும்

குமிசேல்லியேர் யெல்லாரும் குமிசெல் வீட்டிலே நுழைஞ்சார்கள். நுழைஞ்சு பதினோரு மணி மட்டுக்கும் பேசி குமிசேலை கலைஞ்சு வெளியே பிறப்பட்டு அவரவர் வீட்டுக்குப் பிறப்பட்டுப் போயி விட்டார்கள்.

அப்பிறம் குமிசேல் வெளியே முசியே லசேல் வெளியே பிறப்பட்டவன் நம்மைப்பார்த்து யெண்பதினாயிரம் விராகனுக்கு மகாநாட்டார் சம்மதிச்சு கையெழுத்துப் போட்டார்களே அந்தக் கடுதாசியே குமிசேலிலே காண்பிச்சேன். குமிசெலிரோரும் முசியே லாலி அவர்களும் அந்தப்படிக்கு பணத்தை தண்டி கும்பினீருக்கு செலுத்திப் போடச் சொல்லி யெழுதிக் குடுத்தார்கள். அந்தப்படிக்கி ஒடுதி பண்ணினார்கள். நீரும் சகாயமாய் சாவடிக்கிப் போய் சீக்கிரமாய் தண்டி செலுத்தச் சொல்லி தாக்கிதையும் பண்ணிப் போட வேணுமென்று சொல்லிப் போட்டு போய்விட்டான். அப்பிறம் முசியே தெவோவும் வந்தான். வந்தவன் நம்மைப் பார்த்து நம்முட மனுவேல் தான் காவல் பண்ணிக் கொண்டார்களே கணக்கப்பிள்ளை யனையும் காவல் பண்ண வேணுமாவென்று யிந்த பாப்பய்யப்பிள்ளைக்கி நாம் யென்ன செய்தோம் யென்று கேட்டான். அது உமக்குத் தெரியும் யென்று அவனுக்கு தெரியும் எனக்கு என்ன சொன்னேன். அப்பிறம் அவனும் பிறப்பட்டுப் போய் விட்டான்.

அப்புறம் முசியே லாலியும் முசியே வெறியும் (Mr. Very) பனிறெண்டடிச்சு அரைமணி மட்டுக்கும் ஒரு காம்பிராவிலே தானே பேசிக் கொண்டிருந்தார்கள். சமையமல்லாத படியினாலே நாம் பிறப்பட்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் அஞ்சு மணிக்கு மகா நாட்டார் குடிகள் சகலமான பேரும் ஒரு பித்திசாம் யெழுதினார்கள். யென்ன யென்றால் முசியே லசேல் தூக்கு மரத்தை கொண்டு வந்து போட்டும் தன் வீட்டிலே அடைச்சுக் கொண்டு அடிச்சும் சப்பாத்து காலினால் உதைச்சும் பலவந்தம் பண்ணி எண்பத்தோராயிரத்தி அறுநூறு சில்லரை விராகனுக்கு கையெழுத்து வாங்கிக் கொண்டான் என்றும், யெங்கள் சம்மதியிலே கையெழுத்துப் போட்டதில்லை யென்றும், யெழுபதினாயிரம் விராகனுக்கு வரிபிறிச்சு யெழுதி கையெழுத்துப் போட்டிருக்குரோம். அந்தப்படிக்கி சம்மதி யென்றும் நாங்கள் வந்து யேழைச் சாதியார் குடுக்க மாட்டோமென்றும், யிப்படி யெல்லாம் யெழுதி பாதிரி லவேரு (Fr. Lavaur)ம் முசியே லாலியும் சவாரி போகச்சே வில்லியநெல்லூர் வாசற்படி யண்டைக்கு வந்த சமையம் பித்தி சாமை குடுத்தார்கள். அதைப் பார்த்துக் கொண்டு நாம் யேழைச்சாதியார் கையிலே வாங்கச் சொன்னமா யென்று சொன்னார். பாதிரி லவோறு முசியே லாலிக்கு யிந்தப்பட்டணத்திலே யுள்ள செனங்கள் ரொம்ப யேழைகள். அஞ்சாறு வருஷமாயும் வற்தகம் சத்தகம் யில்லாத படியினாலே ரொம்ப யேழையாய்ப் போனார்கள். காலகல

மத்தினாலேயும் யிப்பவும் அவர்கள் யெழுதிக் குடுத்த எழுபதினாயிரம் விராகனுக்குத் தானே சம்மதிச்சுக் கொண்டு அந்தப்படிக்கு உத்தாரங் குடுக்க வேணுமென்றும் ரொம்ப சொன்னதுக்கு நாளைக்கி நீங்கள் வாங்களென்று சொன்னார்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 7; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 26; சுக்கிறவாரம்*

இத்தனாள் காலமே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே முசியே லாலி அவர்கள் முசியே லசேலை அழைச்சனுப்பிவிச்சு றெண்டு பேரும் வீட்டுக்குள்ளே யென்னென்னமோ பேசிக் கொண்டிருந்துப் போட்டு வீட்டுக்குப் போறவன், நேத்து சாயங்காலம் பித்திசாமெழுதிக் குடுத்த குடிகள் அன்பது அறுபது பேரும் கும்பலாயிருந்தார்கள். அவர்களைப் பார்த்து நாம் சாவடிக்கி வருகுறோம். அங்கே நீங்களும் வாருங்கோளென்றும் உங்கள் ஞாயத்தை கேழ்க்குறோம் யென்று சொல்லிப்போட்டு நம்மையும் தன் வீட்டுக்கு வரச்சொல்லிப் போட்டு போய்விட்டான். அப்பிறம் யிந்த கும்பல் போகாமல் படிக்கு தப்பிட்டார்கள். அதின்பேரிலே செனராலவர்கள் போயி அவன் வீட்டுக்கு அடிச்சு துரத்தி விடச்சொல்லி சென்றார். அதுக்கும் போகாமல் படிக்கு கூப்பிட்டார்கள். அதிலே ஒரு கோமுட்டியைப் பிடிச்சுக் காவலிலே போட்டார்கள். போட்டவுடனே யெல்லாரும் பரிச்சென்று ஓடிப்போய் விட்டார்கள்.

அப்பிறம் நாம் முசே லசேல் வீட்டுக்குப் போனோம். போனவிடத்திலே யிந்த பித்திசாமை நமக்குப் படிச்சுக் காண்பிச்சு பார்த்தீரா யென் பேரிலே பிராது யெழுதினார் களென்று சொல்லி, யென் கையிலே குடுத்து நீர் போயி சாவடியிலே யிருந்து யிந்த பித்திசா மெழுதினவர்கள் யாரென்று விசாரிச்சு நாட்டார் ஏழை சாதி குடிகள் பேரிலே அதிகமாய் எழுதினார்களாம். அது களெல்லாம் விசாரிச்சு தாக்கீது பண்ணச் சொல்லி நடக்க வேண்டியதெல்லாம் சொல்லி நம்மை சாவடிக்கி போகச் சொல்லி சொன்னான். அப்பிறம் நாம் சாவடிக்கு வந்து மகாநாட்டார் குடிகளை யெல்லாம் அழைச்சு யிந்த பித்திசா மெழுதினவர்கள் ஆர்? அவர்களைச் சொல்லுங்கோ ளென்று கேழ்க்கவே அவர்கள் சொன்னது "ஆரென்று சொல்லுவோம். யெல்லாரும் கூடத்தானே யெழுதிப் போட்டது. நாங்களென்னா பணம் குடுக்கிறது யில்லை யென்று சோன்னோமா. முன்னே நாங்கள் யெழுதிக்குடுத்த யெழுபதினாயிரம் விராகனும் குடுக்குறோமென்று தானே யெழுதிக் குடுக்குறோம். பிறகு போட்ட பதினோராயிரமும் அறுநூத்து சில்லரை விராகனும் தள்ளிப் போடுவார்கள் சத்து சலக்கருணையாய்ப் போமென்று முசியே லாலி அவர்களுக்கு பித்திசா மெழுதிக் குடுத்தோம். அவருக்கு தயவு யில்லாமல் வாங்க வேணுமென்று சொன்னால் நாங்கள் செய்ய

வேண்டியதென்ன யிருக்குது யெங்கள் வருத்தம் தெரிஞ்சால் சத்து சலக்கருணையாய்ப் போகாதா யென்று யெழுதிக் குடுத்தோம்." யிதுக்கு யாரெழுதினாரென்றால் நாங்களெல்லாருந்தான் யெழுதினோமென்று சொன்னார்கள். இதுகளெல்லாம் விசாரிச்சுப் போட்டு பனிறெண்டு அடிச்சு அரை மணிக்கு பிறப்பட்டு வீட்டுக்கு வந்தோம்.

அப்பறம் சாயங்காலமும் சாவடிக்கிப் போயிருந்து யிந்த எண்பத்தோராயிரத்தி அறுநூத்து சில்லரை விராகனுக்கும் வரிப்பிறிச்சு, நாளைக்கிப் பணம் தண்டத்தக்கதாக திட்டம் பண்ணி அவ்விடத்திலே யிருந்து யேழு மணிக்கு வீட்டுக்குப் பிறப்பட்டு வந்து விட்டோம். வந்தவுடனே முசியே பசேன் நம்முடைய வீட்டுக்கு வந்தான். வந்து சிறிது சம்மதிகள் பேசிக் கொண்டு பிறப்பட்டுப் போயிவிட்டான். இத்தனாள் பாப்பய்யப்பிள்ளை வில்லியநெல்லூருக்கு கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவறிராய பிள்ளையண்டைக்கி பணத்துக்கு உடம்படிக்கை பேசு ஆகிறதுக்குப் போனான். மணி பார்க்கிற வெள்ளைக்காறனும் சாவடி கணக்கப்பிள்ளையும் சேவுகரும் றெண்டு நாளாய் பட்டணத்திலே அவரவர் வீட்டுகளிலே யிருக்கிற ஆயுதங்களெல்லாம் சோதிச்சு எடுக்குறார்கள்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 9; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 28; ஆதிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போயிருந்தோம். அவ்விடத்திலே கேட்ட சேதி என்னயென்றால் : முசியே லாலி அவர்கள் உத்தாரம் உசார் குதிரைக்காறர் வெள்ளைக்காறர் அலமாஞ்ஞுக்காறரை பட்டணத்திலே யிருக்கிற குதிரைகள் யெல்லாம் பிடிக்கச் சொல்லி உத்தாரம் பண்ணாரென்று சேதி கேட்டோம். அப்பிறம் அவ்விடத்திலே ஒரு உத்திரமும் நடக்கயில்லை.

பதினோரு மணிக்கி சாவடிக்கு வந்தோம். வந்தவிடத்திலே முசே லசேல் துபாஷி கிஷ்ணமனாயக்கன் என்கிறவன் வந்து நம்முட பேரிலே எழுதியிருக்கிற அய்யாயிரம் விராகன் சீட்டு பாப்பய்ய பிள்ளை பேரிலே எழுதியிருக்கிற மூவாயிரம் விராகன் சீட்டுக்கும் சின்ன முதலியார் பேரிலே எழுதிருக்கிற அய்யாயிரம் விராகன் சீட்டுகளும் இந்த மூணு சீட்டும் நமக்கு காண்பிச்சு நம்முட சீட்டை நம்முட கையிலே குடுத்துப் போடவந்தான். அதுக்கு நாம் சொன்னது மகாநாட்டார் ரெண்டாயிரமும் அன்னூறு விராகன் யெழுதினார்கள். அதுக்குத்தானே நாம் முசே லசேலுடனே சொன்னது யெனக்கென்ன ஆஸ்தியிருக்குது. நாம் யென்னத்தை கொடுக்கப் போறோம் என்று சொன்னோம். நாம் தானே யிப்ப விகாதம் பண்ணால் மகாநாட்டார் பணம் குடாமல்ப்

போனார்களென்று நாம் சொன்னதினால் சும்மா யிருந்தோம். யிப்போ அய்யாயிரம் விராகன் எழுதினால் யெனக்கு குடுக்கிறதுக்கு யென்ன யிருக்குது? முன்னே காற்திகை மாதத்தையிலே பதினாயிரம் ரூபாயிக்கு யென் பெண்டாட்டி யுடமை பிள்ளைகளுடமை யெல்லாம் டங்காலையிலே உருக்கி ரூபாயாக்கி குடுத்தேன். அதல்லாமல் நான்தானே முசியே பெடுத்தல்மீ, முசே மிலோன் (Mr. Melon), முசே லாத்தூர் (Mr. Latour) யிவர்களுக்கு கடன் குடுக்க வேணும். யென் கையிலே பணம் யிருக்குதா? ஆனால் ஆஸ்திக்காறர் தண்டல்லோ வாங்கச் சொன்னார். ஆனால் மெய்தான் முப்பது நாற்பது வருஷம் ஆக யிந்தப்பட்டணத்திலே சுகமாயிருந்தோம். யிப்ப மூணு நாலு வருஷமாயி உத்தியோக சத்தியோகம் யில்லை. ஆனபடியினாலே யென் வீட்டு சிலவுக்கு நடக்குறதுக்குத் தானே வெகு கடினமாயிருக்குது. பணம் காசு யில்லாமல் அவர்களுக்கும் ரொம்ப கடினமாயி ருக்கிறபடியினாலே யிந்த வேளையிலே கூடாமல் படிக்கி யெந்த வேளையிலே குடுக்கப் போறோம். ஆனால் என்னுட ஆனை ஒன்று இருக்குது. றெண்டு மூணு குதிரை யிருக்குது எருது யிருக்குது. வீடு யிருக்குது. தோட்டமிருக்குது. யிதுகளை வித்து யெடுத்துக் கொள்ளச் சொ்லுமென்று சொன்னேன். அந்தப்படிக்கி அவனுடனே துபாஷி கிஷ்ணம நாயக்கன் போயி சொன்னான். மெய்தான் அவர் நிறுவாகம் யெனக்கு தெரியும் நல்லது யிந்த மகா நாட்டார் அவர்களை மாத்திரம் சீக்கிறமாய் தண்டி விச்சால் யிந்த அய்யாயிரம் விராகனும் மாப்பு பண்ணுகுறோமென்று சொன்னானென்று அவன் துபாசி வந்து பனிரெண்டடிச்சு ஒருமணிக்கு வந்து சொன்னான். அப்பிறம் சாயங்காலம் முசியே லசேல் அண்டைக்கு நாம் போய் உபசாரமாய் சொல்லிக் கொள்ளுவோமென்று பயணமாயிருக்கச்சே மழை வந்தது. ஆகையிானலே போகாமல் படிக்கு வீட்டிலே தானே யிருந்தோம். சோணாசலம் பேரிலே துபாசி முத்தையன் சமமதி முப்பத்தி நாலாயிரம் ரூபாய் வரவேண்டிய சம்மதி கேட்க்க சின்னதுரை அழைச்சனுப்பி வைச்சான். அதுக்கும் மழை யாயிருந்ததே காலமே வந்து கண்டு பேசிக் கொள்ளுகுறோமென்று சொல்லி யனுப்பி வைச்சோம்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 10; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 29; சோமவாரம்*

இத்தனாள் காலமே காரைக்காலிலே யிருந்து கட்டு மரத்திலே முசியே லாலி அவர்களுக்கு காகிதம் வந்ததாய் அதிலே சேதி யென்ன யென்றால் நம்முடைய இதுக்காதுரு பதினேழு கப்பல் காரைக்கால் துரைக்கி நேராய் வந்து தென்று கடலோரத்திலே யிருக்கிற முசியே லிபோம் (Mr. Le Beaume) முசியே சோல் மினியாக்கு பின்னையும் நாலத்து றெண்டு பேர்களும் நம்முடனே சொன்னார்கள். சகலமான பேர்களும் வெள்ளைக்காரர்களும் சொன்னார்கள். யிந்தப் பிறகாரமாய்

பட்டணத்திலேயுள்ள சகல சௌங்களும் வெள்ளைக்காறரும் கப்பல் வருகுறது யென்குறதாய் சந்தோஷத்தை அடைஞ்சு யிருந்தார்கள். யிந்தப் பட்டணத்திலேயுள்ள மகாநாட்டாரும் யெண்பதினாயிரம் விராகன் வரி போட்டுத் தண்டுகுற யிந்த சனியனும் விட்டுப் போய் தள்ளுபடியாய்ப் போமென்று சந்தோஷமாயிருந்தார்கள்.

இத்தனாள் பெரியண்ண முதலியை காவல் வச்சிருந்த சம்மதிக்கு முசியே அபேல், முசியே மீரான் முகாந்திரமாய் முசியே லாலி அவர்களைக் கண்டு பேசி காவலிலே யிருந்த ராமிரெட்டியை விடுதலை பண்ணி பெரியண்ண முதலி அண்டைக்கு வில்லியநல்லூருக்கு சந்திக்கு அனுப்பி விச்சார்கள். முன்னே முசியே பெடுத்தல்மீ, முசே லசேல் மாரிபத்திலே பாப்பய்ய பிள்ளை சந்திக்குப் போனவிடத்திலே சமயம் விடாமல் வந்து விட்டான். அது யேன் யென்றால் தப்பு ராசவட்டம் யெழுபதுனாயிரம் ரூபாயாய் தீத்துக் கொண்டு வந்தோமென்று சொன்னபடியினாலே முன்னே பெரியண்ண முதலியை கசோத்திலே போட்டவுடனே முசே பொசேத்து நசர் ரூபாய் யிருபதினாயிரமும் கடன் முப்பதினாயிரமும் ஆக அன்பதினாயிரம் ரூபாயாய் முசியே லாலி அவர்களுடனே பேசினதுக்கு, அவர் சம்மதியில்லாமல் லக்ஷம் ரூபா குடுத்தாலே யல்லாமல் விடுகுறதில்லை யென்று வில்லியநல்லூருக்கு அனுப்பிக் காவலிலே போட்டது. யிப்பறம் பெரியண்ண முதலி அன்பதினாயிரம் ரூபாயாய்த் தானே பேசினபடியினாலே பாப்பய்ய பிள்ளை தப்பு ராசவட்டம் பண்ணானென்று கோபிச்சுக் கொண்டு ராமு ரெட்டியை விடுதலை பண்ணி முசியே அபேல் (M. Abballe) முசே மீரா மாரிபத்திலே சந்திக்கு அனுப்பிவிச்சார்கள்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 11; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 30; மங்களவாரம்*

இத்தனாள் நேத்து ராத்திரி பிடிச்ச மழை பொழுது விடிஞ்சும் விடாமல் பேஞ்சுது. யெட்டு மணிக்கு முசியே லசேல் அழைச்சனுப்பி விச்சான். போனவிடத்திலே மகாநாட்டார் வெள்ளாழத் தெருவிலுள்ள வெள்ளாழர், இடையர், அகம் படையர் பலபட்டைகளெல்லாம் யெழுதிக் கொடுத்த யெழுபதினாயிரம் வராகனாய் எழுதிக் குடுத்ததை நாம் எண்பத்தோராயிரத்து அறுநூத்து சில்லரை வராகனாய் வாங்கச் சொன்னதை. முன்னே அவர்கள் யெழுதிக் குடுத்த பேர்வழி வயணம் வெள்ளாழர் பேர்வழி 56 க்கு ரூபாய் 7550, அகம்படையர் பேர்வழி 113 க்கு ரூபாய் 7800, இடையர் பேர்வழிக்கு ரூ 45 ரூபாய் 900, கோமுட்டியள் பேர்வழி 91 ரூபாய் 6000, கவரை பேர்வழி 28 ரூபாய் 600, சாணார் பேர்வழி 33க்கு ரூபாய் 600, இலவாணியர் பேர்வழி 13க்கு ரூபாய் 800, முச்சியர் பேர்வழி 9க்கு ரூபாய் 400, செட்டியன்

பேர்வழி 169 க்கு ரூபாய் 12000, கம்மாளர் பேர்வழி 5 க்கு ரூபாய் 500, பள்ளிகள் பேர்வழி 32க்கு ரூ 1600, பிராமணர்கள் பேர்வழி 26க்கு ரூபாய் 8000, பருத்திக் கொல்லார் பேர்வழி 12க்கு 2215 ரூபாய், கிறிஸ்துவர்கள் 71 பேர்வழிக்கி ரூபாய் 7500, வெங்கிடாசல முதலி 750 ரூபாய், அய்யம் பெருமாள் 600 ரூபாய் மீர் அல்லி நாயக்கன் ரூபாய் 150, மீர்அசாம் ரூபாய் 750 ரூ யிந்தப்பிறகாரம் வாங்கச் சொல்லி எபதிக் குடுத்தான். மீர் அசத்துடைய அண்ணன் மகன் பீர் மமுது என்கிறவன் பேர் யெழுதியிருந்தது. அவன் போய் யிருபது வருஷம் ஆச்சுது. அவனை யேனெழுதி நீர்களென்று சொன்னதுக்கு அவன் யில்லாவிட்டால் யேன் எழுதிவிச்சார்கள் என்று தள்ளிப்போட்டான். மீர் குலாமுசேன் பேர் எழுதியிருந்தது. அவர்கள் நேத்து யிறநூத்தன்பது ரூபாயிலே ஒரு சீரொப்பா கொண்டு போய் குடுத்தார்கள். அதை வாங்கிக் கொண்டு அவன் பேரைத் தள்ளிப் போட்டான். யிண்ணு நாம் போனவிடத்திலே மீர் குலாமுசேன் பேர் எழுதியிருந்ததுதே அவர்கள் கும்பினீருக்கு லக்ஷம் ரூபா குடுத்து யிருக்குராா்களாம். அந்தப் பணத்து நிமித்தியம் காத்துக் கொண்டு யிருக்குறார்களாம். ஆகையினாலே தள்ளிப் போட்டோமென்று சொன்னான். நாம் முன்னே தானே சொல்லயில்லையா. அந்தப் பணத்து நிமித்தியம் காத்துக் கொண்டு யிருக்குறார்கள். எழுதப் போகாதென்று சொல்லயில்லையாம். பின்னையும் மீரா ஷங்கென்கிறவன் மீர்குலா முசேன் மருமகன் தான், அவனும் தண்டவன் தான். அவனுக்கும் தள்ளிப்போட்டு வருமென்று ரொம்பவும் சொன்னோம். அவனும் ஒரு சீரொப்பா கொண்டு போய் குடுத்தால் அவனுக்கும் தள்ளிப் போடுவான்.

யிந்த தமிழருக்கு யிப்படி அந்தரங்கத்திலே குடுக்கத் தெரியாதபடி யினாலே யிப்படி யெல்லாம் உசத்தி யெழுதி வைச்சான். யிந்த யெழுபதினாயிரம் விராகனாக உசத்தி யெழுதுகுறது என்னத்துக்கு யென்றால் யிப்படி யல்லாம் அவர்களை கபாரா பண்ணினால் உள்ளுக்குள்ளே யேதாகிலும் குடுப்பார்களென்கிறதை யெண்ணி பணம் தண்ட ஒட்டாமலும் ஒரு நாளைக்கு யிப்படி யெட்டு விதம் பத்து விதமாய் பேசுறது, குடுப்பார் களென்றுகிறதை யிச்சிச்சு யிப்படி யெல்லாம் மகாநாட்டார் பலபட்டடைகளை யெல்லாம் அலார் பண்ணான். அப்பறம் முன்னே எழுதியிருக்கிற பேர்வழி களிலே யிந்த எண்பத்தோராயிரத்தி அறுநூத்து சில்லரை விராகனாக வாங்கிறதே அல்லாமல் சில்லரையிலே பேர்வழி யெழுதி யிருக்குறார்களே அந்தப்படிக்கி ஒரு சாப்பித்தா சாவடியன் கையிலே எழுதிவிக்கச் சொல்லி திட்டம் பண்ணவும், அந்தப் பிரகாரம் நாம் அலாயி தாயத்தைப் பண்ணி கும்பினீருக்கு செலுத்திப் போடுவோம் யென்றும் சொல்லிச் சொன்னான். யிந்தப் படிக்கி சாவடிக்கிப் போய் திட்டம் போட்டு பிறகு வீட்டுக்கு போகச் சொல்லிச் சொன்னான். அப்பறம் நாம் சாவடிக்கி வந்து மகா நாட்டாரை அழைப்பிச்சு முன்னே யெழுதியபடி பேர் வழிகள் விபரமாய் சாவடி கணக்கு சியாலமும் தட்டார

சிதம்பரமும் கையிலேயும் எழுதிவிக்கச் சொல்லியும் பிறகு நீங்களாய் சில்லரை பேர்வழி வரிப்பிறிச்சு யெழுதினீர்களே அந்தப்படிக்கி ஒரு சாப்பிதாவும் எழுதிக் குடுக்கச் சொல்லி திட்டவட்டம் பண்ணிப்போட்டு பனிரெண்டடிச்சு ஒரு மணிக்கு வீட்டுக்கு வந்தோம்.

இப்பறம் தேவடியாக்கள் வண்ணார் அம்பட்டர் பறையர் யிவர்களுக்கு தள்ளிப் போட்டதை மறுபடி வரிபிறிச்சு எழுதச் சொல்லி ஒருசீட்டு எழுதி அனுப்பி விச்சான். துபாசியள் சிறிது பேருக்கு தள்ளிப் போடச்சொல்லி யெழுதி யனுப்பிவிச்சான். யிப்படி தன்னுடனே சொல்லிக் கொண்டவர்களுக்கு தள்ளிப் போடச் சொல்லுகுறதும், சிறிது பேருக்கு எழுதச் சொல்லுறதும் யிப்படி சம்மதியானபடிக்கு ஒரு நாளைக்கு எத்தனை விதமோ நடப்பிக்கிறான். யிதல்லாமல் 80000 க்கு உசத்தி யெழுதுகிறதே யல்லாமல் தனக்கு பிறயோசனத்தைத் தொட்டு யிதுகளெல்லாம் அவர்கள் உள்ளுக் குள்ளே வந்து பேசுவார்கள். அதனாலே நமக்குப் பிறயோசனமுண்டு யென்று நடப்பிக்கிறான். ஆகையாலே பணமும் தண்டியாகிறதில்லை. பட்டணத்து பலபட்டடை செனங்களும் காபராப்பட்டுப் போகுது. யினிமேல் சுவாமியுடைய தயவு யெப்படி யிருக்குமோ அறிய வேண்டியது.

முந்தாம் நாள் அய்யாயிரம் விராகனுக்கு சீட்டெழுதி யனுப்பிவிச்சவன் பின்னைக்கு அவன் துபாசி கிஷ்ணமனாயக்கனுடனே சொல்லி யனுப்பி விச்சது மூவ்வாயிரம் வராகனுக்கு சமாச்சாரம் பண்ணச் சொல்லி அனுப்பிவிச்சான். அதுக்கு நாம் சொன்னது "முந்தாம்னாள் தானே சொன்னோமே நமக்கு ஒரு யானைக் குட்டி யிருக்குது. வீடு வாசல் தோட்டம் மளிகை கிடங்குகளிருக்குது. எடுத்துக் கொள்ளச் சொல்லும்படி அவன் துபாசியுடனே சொன்னது நல்லது. யிந்தப் பணங்களை சீக்கிரமாய் தஸ்து பண்ணிக் கொண்டு வரச்சொல்லுமென்று முந்தாம்னாள் சொன்னபடிக்குத் தானே சொன்னானென்று" வந்து சொன்னான். மைசூர் வைக்கீல் வெங்கிட்ட நாறணப்பய்யன் என்கிறவன் யெத்தனம் யென்ன யென்றால் யிற்தப்பட்டணத்துக்குள்ளே உள்ள செனங்கள் குமிபினி கணக்கு பிள்ளையாயிருந்த அரும்பாத்தை கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராயப் பிள்ளையுமிருக்கிற உத்தியோகஸ்தரதான் மகாசனங்கள் கும்பினி நிலுவை சம்மதியான யிதுகளெல்லாம் யென் வசம் பண்ணினால் கும்பினீருக்கு எழுபத்தஞ்சு லக்ஷம் ரூபாய் தஸ்து பண்ணித் தாரோமென்றும் முன்னாளைக்கு முன்னே முசே லசேலுக்கு ஸ்தானாதிபத்தியம் விட்டு யிறநூத்தன்பது விராகனுக்கு நதரும் குடுத்து பேசிவிச்சான். அதுக்கு ஒன்றும் யிணங்காமல் போச்சுது.

அப்பிறம் வந்தவன் கோனேரி நாயக்கனைக் காவல் பண்ணி, யிருந்தவனை விடுதலை பண்ணி முசே லசேல் அண்டைக்கு அழைச்சுக்

கொண்டு போயி நீர் வெள்ளைக்காறர், தமிழர் கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி யிவர்களுக்கு குடுத்திருக்கிற சம்மதி நீர் யெழுதி வியாதபடிக்கி யிருந்த படியினாலே உமக்கு காவல் வந்தது. யிப்போ யெழுதி வையுமென்று சொன்னான். அந்தப்படிக்கி வெள்ளைக்காறருக்கு குடுத்ததும் தமிழருக்கு குடுத்ததும் எழுதிவிச்சான். முசே லசேல் வெள்ளைக்காறருக்குக் குடுத்திருக்குறதெல்லாம் தள்ளிப் போட்டு தமிழருக்கு கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளைக்கு குடுத்திருக்கிற சம்மதி மாத்திரம் எழுதிக் கொண்டான். அப்பறம் வெங்கிட்ட நாறணப்பய்யன் யிந்தப் பட்டணத்திலே பணம் வாங்கிக் குடுக்கிறமென்று வந்தவனுக்கு யிவ்விடத்திலே ஒண்ணும் நடவாதபடியினாலே நாளது தேதி சீட்டு வாங்கிக் கொண்டு வில்லியநெல்லூருக்குப் போய் விட்டான். வரி சம்மதி பிராமணருக்கு எழுதினது கடலோரம் கணக்கு சந்திர ராயனுக்கு ரூபாய் 6000 மும் புகையிலைக் கிடங்கு பாப்புராயனுக்கு ரூபாய் 2000 மும் பிராமணருக்கு ரூபாய் 4000 மும் ஆக பன்னீராயிரம் விராகனாய் வரி பிறிச்செழுதி யிருந்ததை மறுபடி முசியே லசேல் ராமச்சந்திர ராயனுக்கும் பாப்பு ராயனுக்கும் ரூபாய் 4000 மும் மத்த விராகன் எட்டாயிரமும் பிராமணாள் பேர்வழிகளிலேயும் வாங்கச் சொல்லி சாவடி கணக்கப் பிள்ளையனுக்கு சீட்டெழுதி யனுப்பிவிச்சான். யித்தனாள் சாயங்காலமும் சாவடிக்குப் போயிருந்து பணம் காசு தஸ்து பண்ணி வைக்கச் சொல்லி திட்டம் பண்ணி ராத்திரி யெட்டு மணிக்கு மட்டும் அவ்விடத்திலே யிருந்து பிறகு வீட்டுக்கு வந்து விட்டான்.

***1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 12; பிறமாதி வருசம் ஆவணி மாசம் தேதி 31; புதவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்டது யென்னவென்றால் பெரியண்ண முதலி சம்மதிக்கி முசே அபேல், முசே தெபொ சேத்து ரெண்டு பேரும் முசியே லாலி அவர்களுடனே கண்டு பேசி ராமிரெட்டியைக் காவல் விடுதலை பண்ணி நேத்து ராமரெட்டி வில்லியநல்லூருக்குப் போயி கண்டு பேசி லக்ஷம் ரூபாயாய் தீத்துக் கொண்டு வந்ததாய் அந்தப்பணம் கடன் குடுக்கிற பாவனையாய், வழுதாவூர் சிமையின் பேரிலே தணக்கா பண்ணி குடுக்கிறதாய் யிந்தப் படியாய் தீந்து யின்றைய தினம் பெரியண்ண முதலியை அழைச்சு வாக்காடி போனதாய் சேதி கேட்டோம். அப்பால் யினிமேல் நடக்கிற சம்மதியள் தெரிஞ்சு அறிய வேண்டியது.

துறையூர் வைக்கீல் கோனேரி னாயக்கன் நேத்திய தினம் கசோத்திலே போட்டிருந்தவர் முசே லசேல் மாரிபத்திலே விடுதலையாயி வீட்டுக்கு வந்தார். அவர் வெள்ளைக்காறர், முசியே லெறி, முசே பெடுத்தல்மீ, முசே தெபோ சேத்து, முசே தெபோ, முசே மரியேர், தமிழரிலே

கந்தப்ப முதலி, பெரியண்ண முதலி, சவுரிராய பிள்ளை பின்னையும் தமிழருக்கு குடுத்திருக்கிறது. முசே லசேல் கையிலே எழுதி விச்சாரென்றும் எழுதிவிக்கயில்லை யென்றும் சொல்லுகிறார்கள். நமக்குத் தோணினது யெழுதிவியாமல் விடத்தக்கனதில்லை யென்று நமக்குத் தோணி யிருக்குது. அது யினிமேல் விசிதமாயறிய வேண்டியது.

***1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 15; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 3; சனிவாரம்***

இத்தனாள் சூரிய உதயத்துக்குப் போன வருஷம் யிவ்விடத்திலே யிருந்து போன தாமஷே கொம்மாந்தாம் என்குறவர் (Commander d'Acha) ராசாவுடைய கப்பல் பதினேழு கப்பலுடனே பாய் தூக்கி ஒடி வருகையில் நாகப்பட்டணத்துக்கு நேராய்க் கிழக்கே யிங்கிலீசுக்காறருடனே கப்பலுடனே ரெண்டு மூணு நாள் சண்டை போட்டு அவர்கள் கப்பலை செயம் பண்ணி செயத்துடனே உலாந்தாக்காறர் இங்கிலீசுக்காறருக்கு ஒரு கப்பலிலே மருந்து குண்டு றஸ்து அனுப்பிவிச்ச கப்பலையும் பிடிச்சுக் கொண்டு, ராசாவுடைய கப்பல் கொம்மாந்தாம் தாமஷே என்கிறவர் உலாந்தாக்காறர் கையிலே பிடிச்ச கப்பல் ஒண்ணும், யிவர் கப்பல் பதினேழும் ஆக பதினெட்டு கப்பலும் சூரிய உதய வேளையிலே அக்கினி மூலையிலே கண்டு யெட்டு மணிக்கு வந்து துரை பிடிச்சு நங்கூரம் போட்டுது.

இத்தனாள் மகா நாட்டார் பலபட்டடை கையிலே தண்டி முசியே லசேல் வசம் செலுத்தின 2157 ரூபாயும் 294 ரூபாயும் 43 விராகனும் 3 பணமும் சென்றுது. நம்மையும் முசியே லசேல் அழைச்சனுப்பி விச்சான் நாமும் போனோம். அவனும் கப்பல் வருகுறது பார்க்க கப்பல் பார்க்கிற ஒக்கல் எடுத்துக் கொண்டு போய் கொத்தளத்தின் பேரிலே யேறிப் பார்த்துப் போட்டு வந்தான். நாமும் போனோம். அவன் சொன்னது "நம்முடவர்களுது பிரான்சுக்காறர் கப்பல் இங்கிலீசுக்காறர் கப்பலை ஒன்று பிடிச்சுக் கொண்டு வருகுது. அதுக்கு அடையாளம் யென்னயென்றால் அடியிலே யிங்கிலீசுக் கொடியும் மேலே பிரான்சுக் கொடியும் போட்டு வருகுது. யிதிலே றெண்டு மூணு கப்பலிலே பாய்மரம் ஒடிஞ்சுயிருக்குது. ஆனபடியினாலே யிங்கிலீசுக்காறர் கப்பலுடனே சண்டை பண்ணி வருகுறது. மெய்யென்று சொல்லியும் பின்னையும் கப்பல் சேதியும் அந்தப் பேச்சும் சந்தோஷமாய்த் தானே பேசிக் கொண்டிருந்து நீர் போய்க்கப்பல் வருகுறது பார்த்துப் போட்டு சாவடிக்குப் போய் பணம் காசு சீக்கிரமாய் தண்டச் சொல்லி திட்டம் பண்ணி விசாரிச்சுப் போட்டு வீட்டுக்குப் போகச் சொல்லி" சொன்னான் நல்லதென்று அங்கே யிருந்து கடலோரம் துவானத்துக்கு வந்தோம்.

யிவ்விடத்திலே யிருந்து சலிங்கின் பேரிலே கப்பலுக்கு முசே புலோ, முசே துப்பிளாமும் முன்னே யேறினார்கள். பிறகு முசே லெறியும்

முசே புசியும் முசியே சுப்பீரும் முசியே லாகும் யேறிப் போனார்கள். கப்பலிலே யிருந்து ரெண்டு பேர் ஒப்பிசியேல் மார் யிறங்கி வந்தார்கள். வந்தவர்கள் சொன்ன சேதி யென்னயென்றால் நம்முட பிரான்சுக்காறர் கப்பல் பதினேழு கப்பல் யிங்கிலீசுகாறருட கப்பல் பதினோரு கப்பல் யெதிராக வந்தது. அந்த கப்பலும் யிந்தக் கப்பலும் நாகூர், காரைக்கால், தலங்கம்பாடி யிந்த துரைக்கு கிழக்கே நாலு நாழிகை வழிக்கி சந்திச்சு அவ்விடத்திலே சிறிது சண்டையாச்சுது. அப்பால் யிவர்களும் ஒசந்து போய் சண்டை பண்ணுகையில் நம்முடைய பிரான்சுக்காறர் கப்பலுக்குத் தென்னல் காத்து அடிச்சடியினாலே இங்கிலீசுக்காறருடைய கப்பலிலே றண்டு கப்பலுக்கு குண்டுகள் பட்டு கொடிக் கம்பங்கள் முறிஞ்சு கப்பலுகளெல்லாம் ஒட்டையாய் பொடிப்பொடியாய் சல்லியாய் அடிச்சான். அதிலே வெகு செனங்களுக்கு காயமுமாச்சுது. வெகுசனங்கள் செத்தும் போனார்கள். அந்த ரெண்டு கப்பல்க்காறருக்கு நிறுவாகம் யில்லாமல் போனபடியினாலே வெள்ளைக்கொடியைப் போட்டு ஒப்புவிச்சுப் போடுகுறோம் என்று சொல்லச்சே அதிலே அந்தக் கப்பலுகளுக்கு கொம்மாந்தாமா யிருக்கிறவன், மூணு கப்பலுடனே குறுக்கே வந்து விழுந்து யிந்த ரெண்டு கப்பலையும் பிறகே வந்து தள்ளிக் கொண்டு சென்றது. பிறகு சண்டை துவக்கினான். அதிலே வாடைக்காத்து திரும்பினபடியினாலே யிங்கிலீசுக்காறருடைய கப்பல் குண்டும் புகைச்சலும் பிரான்சுக்காறர் கப்பலை சுத்திக் கொண்டு ரெண்டு மூன்று கப்பலுக்குக் காயம் பட்டுது. கொடி கம்பங்கள் ஒடிஞ்சு சிறிது பேருக்கு காயமும் சிறிது பேர் சாவும் யிப்படியாக சண்டை குடுத்தார்கள். யிதிலே சாயங்காலம் ஆச்சுது. ஆனவுடனே நம்முடவர்கள் கப்பல் பிறப்பட்டு வந்து விட்டது. அவர்கள் கப்பல் அவ்விடத்திலே தானே யிருந்தது. அவர்கள் ரெண்டு கப்பலும் ஒண்ணுத்துக்கும் ஆகாதபடி யினாலே கொளுத்தி விட்டார்கள் யென்று காரைக்கால் தலங்கம்பாடி யிவ்விடங்களிலே யிருந்து வந்தவர்கள் வெளிச்சங்கண்டோம் யெறியுரது யென்று சொன்னபடியினாலே நிச்சயம் என்கிறதாய் கடுதாசியிலே எழுதப்பட்டுது.

இங்கிலீசுக்காறருது ஒரு கப்பலைப் பிடிச்சு வந்தது யென்ன யென்றால் உலாந்தாக்காறர் சிறிது மருந்து குண்டு றஸ்தும்போட்டு அனுப்பி விச்சத்தை மத்தையிலே கண்டு பிடிச்சுக் கொண்டு வந்துது இங்கிலீசுக்காறருடைய கப்பல் நாகப்பட்டணம் துறை பிடிச்சு அங்கே வச்சுப் பிடிச்சு கொடிக்கம்பங்கள் போனது வந்தது முஸ்தீது பண்ணிக் கொள்ளுகிறதாகவும், அதுக்கு உலாந்தாக்காறர் சிறிது சாமானுகள் மத்தத்துப் பண்ணிக் கொடுக்கிறதாகவும் சேதி கேழ்க்கப்பட்டுது. பிறஞ்சுக்காறருடைய கப்பலுக்கு குமாந்தமாய் வந்த முசே லீத்தினாந்து செனரால் தான்சேறு என்கிறவருக்கு துடையிலே காயம் பட்டதாய்

சொல்லுகிறார்கள். இங்கிலீசுக்காறர் மாங்கியிலே சல்லி போட்டு அடிச்சபடியினாலே சல்லி அடிச்சது அந்தக்காயம் அசூரக்காயம் ஆறிப்போமென்றும் சொல்லுகுறார்கள். இந்த கப்பலிலே அறுபத்து மூணு வெள்ளிப்பெட்டி வந்ததென்றும் சொல்லுகுறார்கள். இவர்கள் கப்பல் வரச்சே காப்தே போன்ஞ்சுப் பிரான்சு (Cap de Bonne Eoperance) அண்டை ஒரு இங்கிலீசுக்காறர் கப்பல் ஒரு கப்பல் பிடிச்சார்கள். அந்த கப்பல் தேவனாம்பட்ணடம் துறையிலே துரைத்தனம் பண்ணுகிறவர் தலங்கம்பாடியான் கொடி போட்டுக் கொண்டு கப்பலிலே சிறிது திரவியமும் சிறிது வயிரம் ரத்தினமிழைத்த நகையும் யேத்திக் கொண்டு போகச்சே பிரான்சுக்காறர் கப்பல் யில்லையென்று இங்கிலீசுக் கொடி போட்டுக் கொண்டு போகச்சே கண்டு பிடிச்சுக் கொண்டு மோரிசுக்கு கொண்டு வந்து அதிலே சிறிது வயிரம் சிறிது ரத்தினம் யிழைத்த நகையும் வைச்சியிருக்கிற ஒரு பெட்டி யிந்த கப்பலிலே வந்ததாய் வெள்ளைக்காறர் சொல்லச்சே கேழ்க்கப்பட்டுது. இதுகளெல்லாம் பயாவாரியாய்க் கேட்டு எழுத வேண்டியது.

யித்தனாள் சாயங்காலம் சாவடியிலே போயிருந்து அவரவரை அழைச்சனுப்பி பணங்காசு கொண்டு வரச்சொல்லி திட்டம் பண்ணிப்போட்டு நான் அது தண்டினது முன்னே எழுதியிருக்கிறது. அந்த துகைப்படிக்கி பணம் முசே லசேல் வசம் செலுத்திப் போடச் சொல்லி திட்டம் பண்ணிப் போட்டு ஒன்பது மணிக்கு வீட்டுக்கு பிறப்பட்டு வந்து விட்டோம். இந்தக் கப்பலிலே சீமையிலே யிருந்து முசே கொதேயவர்கள் காகிதம் 1ம் முசியே துப்பிளேயிக்குசு காகிதம் 1ம் முசியே துவலார் பெண்சாதி காகிதம் 1–ம் அவன் தம்பி காகிதம் 1–ம் ஆக நாலு காகிதங்களும் யிதுவரைக்கும் வந்தது. வந்த கப்பலிலே ஆயிரம் பேர் சொலுதாதுகளும் ஆயிரம் பேர் காப்பிரிகளும் யிறங்கினார்களென்றும் முன்னூறு பேர் மட்டுக்கும் காயக்காறர்களும் யிறங்கினார்களென்றும் சொன்னார்கள். முன்னே கோட்டையிலே கரையிலே 21 இருபத்தோரு பீரங்கி போட்டபிறகு கொம்மாந்தாம் கப்பலிலே யிருபத்தோரு பீரங்கி போட்டான்.

***1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 16; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 4; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசியே லசேல் வீட்டுக்குப் போன விடத்திலே அவரிருந்துக் கொண்டு அவரவர் உத்தியோகஸ்தரை நிறுத்தி செட்டியளும் கோமுட்டியளும் யிந்த ரெண்டு சாதிக்கும் பணம் வாங்கிறது. யிது வாங்கியானவுடனே மத்த வெள்ளாழர் அகம்முடையர் இந்த ரெண்டு சாதிக்கும் வாங்குறது. அந்தப்படிக்கி ரெண்டு சாதியாய் வாங்குறது யென்று யிப்போ கொமுசேலில் கோமுட்டியளுக்கும் செட்டியளுக்கும்

ரெண்டு சாதிக்கும் வாங்கச் சொல்லி கப்பல் வந்திருக்கிறபடியினாலே யின்றைக்கு குமுசேல் கூடப்போறார்கள். முசியே லாலி அழைச்சனுப்பி விச்சார் நான் போகவேணும். நீர் சாவடிக்குப் போயி இந்தப்படிக்கி திட்டம் பண்ணிப்போட்டு வீட்டுக்குப் போமென்றான். அவ்விடத்திலே யிருந்து கோட்டைக்கு வந்தோம். முசியே லாலி அவர்களும் முசியே லெறியும் கோவிலுக்குப் போயி வரச்சே ஆசாரம் பண்ணினேன். பதிலுக்கு ஆசாரம் பண்ணார்கள். அங்கே யிருந்து கடலோரத்துக்குப் போனோம்.

கப்பலிலே யிருந்து மருந்து பீப்பாயிகள் குண்டுகள் சாராயப்பீப்பாயிகள் இப்படிப் பட்ட தினிசுகள் யிறக்கினார்கள். சில்லரை சில்லரையாயி இருபது பொட்டி வெள்ளிப் பொட்டியும் பின்னை யொருவகுப்பு யேழு பொட்டியும் ஆக இருபத்தேழு வெள்ளிப் பொட்டியும் ஒரு பொன்பொட்டியும் இறக்கினார்கள் யென்று சொன்னார்கள். இதல்லாமல் முசே லசேல் சொன்னது "யிப்ப ரெண்டு சாதியிலே தானே பணம் தண்டுகிறது யென்னத்துக்கு அவ்விடத்திலே நூத்தன்பது பேர் சிப்பாயிகள் முப்பது பேர் சிப்பாயிகள்? மாத்திரம் வைச்சுக் கொண்டு மத்த சிப்பாயிகள் மாத்திரம் வைச்சுக் கொண்டு மத்த சிப்பாயிகளை அனுப்பி விட்டு யிந்த யிரண்டு சாதியிலும் பணம் தண்டச் சொல்லி திட்டம் பண்ணிப்போம்." பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து விட்டோம்.

கப்பலிலே யிருந்து யிறங்கின வெள்ளிடங்காசாலையிலே விட்டது. வெள்ளி மார்க்கு ஏழாயிரத்து யெண்ணூறு யிதுக்கு ரூபாயில் லக்ஷத்து அறுபதினாயிரமும் பொன் விராகனிடை ஆயிரத்தெண்ணூறு அதிலே மாத்து விராகன் யென்ன ஒசந்திருக்குமோ யிப்ப வந்தது யிம்மாத்திரம். யினிமேல் என்னமோ யென்று டங்காசாலையன் வந்து கபுறு சொன்னார்கள். கப்பல் கொம்மாந்தாம் முசியே தெஷெக்கும் முசியே லாலிக்கும் ஒருத்தருக்கொருத்தர் ஆகாமல் சச்சரவு பண்ணி பணத்தின் பேரிலே யிவ்விடத்துக் காரியங்களுக்கெல்லாம் முசே லெறியும் முசியே புசியும் அனுப்பிவிச்சு பேசும் யிடத்திலே தாம்ஷே யிடம் குடாமல் படிக்கி முசியே சுப்பியேர் யிவர்கள் முகாந்திரமாய் சந்தி நடப்பிச்சு விடத்திலே முசியே மோன்சியேர் சம்மதியாமல் யென் மனசு நான் மோரிசுக்குப் போவேனோ, பின்னை யெங்கே போவேனோ உங்களுக்கென்ன கவையென்று யேன் சென்னான். அவன் மனசுப்படிக்கி நடப்பானென்று சொன்னது யெது யுக்த்தமோ அந்தப்படிக்கி நடப்பேன். அது உங்களுடனே சொல்லத் தக்கனதில்லை. உங்கள் பேச்சு கேழ்க்கத் தக்கினதில்லை. ஆனால் யிங்கிலீசுக்காறர் கப்பல் நாகப்பட்டணத்திலே யிருக்குதே அதன் பேரிலே சண்டைக்கிப் போவீரா? என்று கேட்டார். சண்டைக்குப் போவேனோ, சும்மா யிருப்பேனோ உங்களுக்கென்ன கவை, யென்

மனசுப்படி நடப்பேன். நான் ராத்திரிக்கு கப்பல் பாயெடுத்து ஓடிப்போவேன் யென்று ஒருத்தரையும் யிறக்காமல் கொஞ்ச நஞ்சம் யிறக்கின பேரையும் சீக்கிரமாய் யேறி வரச் சொல்லி தாக்கீது பண்ணினான். அதின் பேரிலே முசியே லாலியும் யிவ்விடத்திலே யிருக்கிறவர்களும் யின்னம் ஒரு மாசத்துக்கு யிவ்விடத்திலே கப்பல். யிருந்தால் சென்னப்பட்டணத்தின் பேரிலே யாகிலும் போகலாம் இங்கிலீசுக்காறர் கப்பல் நாகப்பட்டணத்திலே யிருக்குதே அதன் பேரிலே யாகிலும் போகலாம் யெத்தனை காரியத்துக்கு அனுகூலமென்று சொல்லி யின்றைய தினமெல்லாமிப்படியாக சச்சரவிலே யிருந்தார்கள் யென்று நாலத்து ரெண்டு பேர் வெள்ளைக்காறர்கள் சொன்னார்கள். நாளைக்கு குமிசேல் கூடுவோமென்று சொன்னார்களென்றும் சொன்னார்கள்.

இதல்லாமல் யின்றைய தினம் மத்தியானம் முசியே லாலி முசியே தெவொ தம்முட கணக்கு சீமையிலே தானே கும்பினியாரண்டை தானே போய் தீத்துக் கொள்ளுகுறோமென்று முன்னாலே முசியே பொசேத்தும் முசே தெவோவும் குமிசேலுக்கு பித்திசாமெழுதிப் போட்டபடிக்கி யின்றைய தினம் முசியே தெவோவுக்கு உத்தாரம் கொடுத்தார்கள் யென்று தெவோ தட்டு முட்டு சாரஞ்சாமும் அவன் பெண்சாதியும் சாயங்காலம் கப்பல் யேறினதாகவும் வெள்ளைக்காறர் சொன்னார்கள். சீமையிலிருந்து மூணு மாசம் ஒன்பது நாளையிலே மயேயிக்கு (Mahe) வந்த கப்பலிலே முசே தெஷேக்கு லூத்தினாந்து செனரால் என்கிற படைத் தலைவர்களுக்கு காயமும் முசியே லாலி போட்டு யிருக்கிறாப் போலே சிகப்பு பட்டையும் சடையின் பேரிலே தெய்க்கிற கிறங்குருவா யென்குறதும் ராசாவானவர் பர்வானாவும் எழுதி யிதெல்லாம் குடுத்தனுப்பி விச்சதை முசியே லாலி யவர்கள் முசே சுப்பியிரே கையில் குடுத்து கப்பலுக்கு அனுப்பி வச்சார். இது யென்னத்துனாலே யென்றால் அவரைக் கரைக்கு அழைச்சனுப்பி விச்சத்துக்கு வாரத்தினாலே கப்பலுக்குத்தானே அனுப்பிவிச்சார்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 18; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 6; செவ்வாய்வாரம்*

இத்தனாள் காலத்தாலே முசியே லசேல் வீட்டுக்குப் போனவிடத்திலே முசியே லசேல் சொன்னது பாத்தீரா நேத்து ராத்திரி ஒன்பது மணிக்கி மட்டும் குமிசேல் கூடி யிருந்தோம். நேத்து நேத்து மத்தியானம் ஒரு குமுசேல் ராத்திரி ஒரு குமிசேல் யிந்தப்படி யிருந்தது யென்று சொன்னதின் பேரிலே நமக்கு தெரியாது போலே அது யெதுனாலே யென்று கேட்டோம். அதுக்குச் சொன்னது "முசியே துப்பிளேயிக்சுக்கும் முசியே லபோர்தெனேயிக்கும் கடலின் பேரிலேயும்

கரையின் பேரிலேயும் யெப்படி முகத்து யிருந்ததோ அப்படி முசியே லாலி யவர்களுக்கும் முசியே தஷேக்கும் அப்படி யிருக்குது. முசே தெஷே யென்கிறவர் அவர் மனோ பாவத்தை முசியே லாலி யவர்களுக்குச் சொல்லமாட்டோமென்கிறார். தமக்கு யெது யுக்த்தமோ அந்தக் காரியத்தைப் பார்ப்போமென்கிறார். ராத்திரி கப்பலெல்லாம் பாயெடுத்து ஓடிப்போய் விட்டார். ஆனால் அவரப்படி போகத்தக்கினதில்லை. சத்துருக்கள் பேரிலே போவாரென்கிறது எனக்கு தோத்தியிருக்குது. ஆகையினாலே சீமைக்குக் காகிதம் யெழுதுகுறதுக்கும் ராத்திரி ஒன்பது மணி மட்டுக்கும் சென்னுதென்றும் அவரவர் கையிலே கையெழுத்து வாங்குறதுக்கும் அன்னேரம் மட்டுக்கும் சென்னுதென்றும் சொன்னார்." ஆனால் முன்னாலே சென்னபட்டணம் பிடிச்ச போது முசியே துப்பிளேயிக்சுக்கும் முசியே லபோதுனேக்கும் சச்சரவினுலுண்டான போடவிடகாத பட்டணத்தை தொட்டு முசியே லபோடுதுனேக்கி சீமையிலே தோணிக்கி காவல் வந்துதே பிறகு தெலிப்போச்சுது. அப்படி யிவருக்கு வருமொயென்று கேட்டதுக்கு ஆனால் அப்படி வரமாட்டாது வந்தாலும் யிவர்களுக்கு பிறப்பு உண்டு. ஆகையினாலே கெலிப்போமென்று சொன்னான்.

ஆனால் நான் கேழ்விப்பட்டது செனங்களை கையிலே கிட்டிக் கோலிப்போடுத்தும் காலிலே மூக்கிலே கிட்டியைக் கோலிப் போடுறதும் அண்ணாந்தாள் போடுறதும் கல்லெடுத்துப் போடுறதும் மேலே வைக்குறதும் வீட்டுகளிலே பெண்டுகளை வெளியே வரச்சொல்லி வீட்டை கட்டி முத்திரை வைக்கிறதும் யிப்படி யெல்லாம் செய்யுரார்களாம். இதுகளெல்லாம் துரைகள் கேட்டு பிராது வந்தால் தமிழருக்கெல்லாம் நீர் யெசமானானபடியினாலே குமிசேலுக்கு நீர் உத்தரிப்பீரென்று சொன்னதுக்கு நாம் சொன்னது "பண்ங்குடாத பேரை நூறடி (100) அடிச்சு கசோத்திலே போடச்சொல்லி நீர்தானே உத்தாரம் குடுத்தீர். ஆனபடியினாலே அந்த உத்தாரமும் 'சாவடி கணக்குப்பிள்ளை நயினாருக்கும் நாட்டாருக்கும் உத்தாரம் குடுத்தீராம் காட்டுமென்று யிருந்தேன். அப்படியும் நேத்து மத்தியானதிலே தானே யிந்தப் பணம் கடன் கேட்டு வாங்கிறதே யல்லாமல் மத்தப்படியல்லவே. யிப்படி யெல்லாம் செய்ய வேண்டாமென்றும் தாக்கீது பண்ணினோம் யென்று சொன்னதுக்கு" ஆனால் யிப்படி யெல்லாம் செய்யாமல் படிக்கு யிப்பதானே நீர் போயி அவர்களுக்கு தாக்கீது பண்ணி லகுவிலே பணம் வாங்கச் சொல்லி திட்டம் பண்ணி வையுமென்று சொன்னான். ஆனால் நல்லதென்று சொல்லி கோட்டைக்கு வந்து முசியே லாலியவர்களைக் கண்டுது. நாட்டாமைக்காறர், சாவடி கணக்கர், நயினார் யிவர்களை அழைச்சு யிப்படி யெல்லாம் செனங்களை கிட்டியக் கோல் போடுவதும்

கல்லெடுத்து வைக்குறதும் அண்ணாந்தாள் போடுறதும் யிப்படி யெல்லாம் செய்யுறதேது யென்று சொல்லித் தாக்கீது பண்ணினதின் பேரிலே அவர்கள் யின்றைய தினம் பணம் வரமாட்டாது என்று சொன்னார்கள். ஆனால் யென்ன கடன் கொடுக்குற சம்மதி அல்லாமல் மத்தப்படி யல்லவே யென்றும் சீக்கிரத்துக்கு பணம் தண்டச் சொல்லியும் பணம் குடாத பேரையும் காவலிலே வைக்கிறதே யல்லாமல் அவர்களைக் கண்டனை தெண்டனை பண்ணத் தேவையில்லை யென்று சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் சாங்காலம் நானாவுடைய குமாஸ்தா முராட்டியக் குதிரைக்கு சறுதாராய் யிருக்கிற கோபால் அரியுடைய வைக்கீல் அப்பாசிராயன் யென்கிறவன் முசியே லாலி யவர்களுக்கு ஒரு யானையும் ஒரு குதிரையும் மாதாபி சரிகை சீரொப்பாவும் கொண்டு வந்து குடுத்து பேட்டி கண்டான். அப்போ பதினஞ்சு பீரங்கியும் போட்டு அவனுக்கு பாக்கு வெத்திலை பன்னீரும் குடுத்து விடுதிக்குப் போமென்று அனுப்பி விச்சார். இத்தனாள் சாயங்காலமும் சாவடிக்கிப் போயிருந்து அவரவரை அழைச்சு தாக்கீது பண்ணி பணம் சீக்கிறமாய் கொண்டு வரச் சொல்லி யித்தனாள் பணம் தஸ்ரத்தான் பூவிராகன் 285 இருநூத்தெண்பத்தஞ்சு அல்லது 995 ரூபாயும் முசே லசேல் வசம் கொண்டு போய் செலுத்தச் சொல்லி சாவடியாருக்குச் சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

*1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 27; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 15; குருவாரம்*

இத்தனாள் காலத்தாலே சூரிய உதையத்துக்கு கடலோரத்து சேவுகன் வந்து சொன்ன கபுறு யென்ன யென்றால் இங்கிலீசுக்காறருடைய கப்பல் சண்டை போட்டு நாகப்பட்டணத் துறையிலே போயிருந்து பனிரெண்டு கப்பலும் ஆசுதா பண்ணிக் கொண்டு ராத்திரி ரெண்டு சாமத்துக்கோ மூணு சாமத்துக்கோ நம்முடைய துரையிலே வந்து யிறங்கியிருந்தானென்றால் கப்பல் நங்கூரம் போட்டிருக்கச்சேயும் கொடி போடாமலிருக்கச் சேயும் சண்டை போடப் போகாதென்கிற மரியாதை அவர்களுக்குள்ளே யிருக்குறபடியினாலே சும்மாயிருந்தானென்று நாம் அஞ்சரை மணிக்கு தெருவிலே உலாத்திக் கொண்டிருக்கச்சே கடலோரத்து சேவுகன் வந்து சொன்னான். அப்பிறம் நாமும் ரெண்டு பேர் மனுஷரை அனுப்பி விசாரிச்சு வரச்சொன்னோம். அவர்கள் வந்து சொன்னது. யிங்கிலீசுக்காறர் கப்பல்காறர் சண்டைக்கு அழைக்குறார்கள். நம்முடையக் கப்பல் கப்பல்க்காறர் கரையிலே யிறங்கி யிருக்கிற சொலுதாது மத்தளோத்து காப்பிரியர்கள் ஆயிரம் பேர் மட்டுக்கும் யிறங்கியிருந்தவர்களை சீக்கிறமத்துக்கு யேறி வரச்சொல்லி

பீரங்கி போட்டான். யிவர்களை யெல்லாம் படிகின் பேரிலே யேத்திப் போயி கப்பலிலே யேத்தினவுடனே நம்முடவர்களுநது பதிமூணு கப்பல் பாயெடுத்து கிழக்கே அக்கினி மூலையாய் சிறிது கப்பலும் யீசானிய மூலையாய் சிறிது கப்பலும் ஆக வளைஞ்சாப் போலே சுத்திக் கொண்டு பதிமூணு கப்பலும் பாயெடுத்து ஓடினார்கள். இங்கிலீசுக்காறர் கப்பலும் கிழக்கே தெரியாதெ தானே ஓடினார்கள். நாமும் கடற்கரை ஓரத்துக்குப் போயி வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

யித்தனாள் வியாழக்கிழமை கொமிசேல் கூடுகிற நாளான படியினாலே குமிசேல் கூடயில்லை. யெதுனாலே யென்றால் யிந்தக் கப்பல் கோதாபடை யானபடியினாலே முசியே லாலி முதலாகிய குமுசேல்க்காற ரெல்லாம் அவரவர் கப்பல் வேடிக்கை பார்க்கிறதும் யிந்த யோசனையிலே யிருந்து விட்டார்கள். அப்பிறம் பத்து மணிக்கு நாமும் வீட்டுக்குப் பிறப்பட்டு வந்துவிட்டோம். பகலைக்கு மேலாகவும் சுவாரி போயி கப்பல் வேடிக்கை பார்த்தோம். இங்கிலீசுக்காறர் கப்பலெல்லாம் கிழக்கே ஒசந்து யிருக்குறது ரெண்டு பேர் கப்பலும் தெரியாதே தானே யிருக்குது. யினிமேல் என்ன நடக்குமோ அறிய வேணும். அப்பால் சாயங்காலமும் சாவடிக்கி வந்து அவரவர் நாட்டாண்மைக்காறர், சாவடி கணக்கர் யிவர்களை யெல்லாம் பணம் சீக்கிறமாய் தஸ்து பண்ணிக் குடுக்கச் சொல்லி தாகீது பண்ணிப் போட்டு ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் தஸ்தான பூவிராகன் 210 ரூபாய் 624–ம் முசியே லசேல் வசம் செலுத்திப் போடச் சொல்லிப்போட்டு நாம் வீட்டுக்கு வந்து விட்டோம்.

### *1759 வருசம் செப்தம்பர் மாசம் தேதி 29; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 17; சனிவாரம்*

இத்தனாள் காலத்தாலே நாம் கோட்டைக்குப் போனவிடத்திலே ஒன்பது மணிக்கு கப்பலுக்கு கொம்மாந்தாமாயிருக்கிற முசியே தஷே என்கிறவர் சிகப்பு பித்தையையுடையவர் முசியே லாலி அவர்கள் முத்திரையைப் போல் சமானமான முத்திரையை உடையவர் கப்பலிலே யிருந்து யிறங்கினார். அவர் யிறங்கச்சே யிவ்விடத்திலே யிருந்து முசியே லெறி, முசியே பூஞ்சி முதலாகிய பேரெல்லாம் கடலோரத்திலே போயி காத்திருந்து அழைச்சுக் கொண்டு வந்தார்கள். அவருக்கு இங்கிலீசுக்காறருடைய சண்டையிலே காலிலே காயமானபடியினாலே முசியே லெறியுடைய பல்லக்கிலே வைச்சுக் கொண்டு அழைச்சுக் கொண்டு வந்தார்கள். இறங்கச்சே இருபத்தோரு பீரங்கி போட்டார்கள்.

அப்பிறம் வரிசை வைச்சு முசியே லாலி அவர்களுக்கு அடிக்குற றடனூ பெங்தம்புகிற தம்பூறு அடிச்சார்கள். அப்பிறம் முசியே லாலி அவர்களும் கொவற்ணமாம் விட்டு தாழயிறங்கி வந்து முசியே தெஷேயைக் கட்டிக் கொண்டு ஆசாரம் பண்ணிக் காலிலே காயமானபடியினாலே பல்லக்குடனே முசியே லாலி அவர்கள் யிருக்குற காம்பிராவிலே வாசற்படிகிட்டப் போய் பல்லக்கு விட்டிறங்கி காம்பிராவுக்குள்ளே போய் முசே லாலியும் அவருமாய் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து முசியே லாலி அவர்கள் காம்பிராவிலே கட்டில் போட்டிருந்தார். பீங்கான் தளவரிசை போட்டிருக்கிற காம்பிராவிலே யிருக்கிற கட்டிலிலே யிருந்தார். அப்பறம் குமிசெல்க்காறர் ஒப்பிசியால் மார் அரமனைக்காறர் சகலமான பேரும் வந்து ஆசாரம் பண்ணி ஒபசாரமான வார்த்தை விசேஷம் சொன்னார்கள். அவரவரும் பதிலுக்கு அவர் பதில் உபசாரம் சொன்னார். அப்பறம் முசியே தெஷே (M. de Ache) என்குறவர் யின்னம் ரெண்டு நாளைக்கு யிங்கே யிருந்து நாளை நன்றைக்கு யேறிப் போறாரென்று முசியே சுப்பியோர் முதலாகிய ராசாவுடைய ஒப்பிசியால் மாரெல்லாம் சீமைக்கு வரச்சொல்லி யெழுதியிருந்த படியினாலே மோரிசுக்குப் போற யிந்த கப்பலிலே சீமைக்கி யேறிப்போறார் களென்றும் முசே சுப்பியோர் போய் கப்பலிலே யிடம் பார்த்து வந்தாரென்று நாளை நாளை நன்றையிலே கப்பலிலே யேறுகுறுதுக்கு அவரவர் முஸ்தீப்பாயிருக்குறார் களென்றும் சொன்னார்கள். அப்பிறம் பதினோரு மணிக்குப் பிறப்பட்டு நாம் வீட்டுக்கு வந்து விட்டோம். அப்பிறம் சாயங்காலமும் சாவடிக்குப் போயிருந்து அவரவரை அழைப்பிச்சு பணம் காசு சீக்கிறமாய் கொண்டு வரச்சொல்லி தாக்கீது பண்ணி திட்டம் வட்டம் பண்ணிப் போட்டு ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்து விட்டோம்.

இத்தனாள் தஸ்தான பூவிராகன் 124 அல்லது ரூபாய் எண்ணுத்திருபது (820) யையும் முசியே லசேல் வசம் செலுத்தச் சொல்லிப் போட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம். இத்தனாள் காத்தாலே நாம் முசே லசேல் வீட்டுக்குப் போனவிடத்திலே அவர் யிருந்து யின்றையதினம் தமிழருக்கெல்லாம் பண்டிகையாவென்று கேட்டார். நாம் சொன்னது நம்முட சேவுகனும் சிப்பாயிகளும் போயி அவர்களை பணம் கேழ்க்கிற விடத்திலே அவரவர்கள் வீட்டிலே யெழவு பிறந்தாப்போலே அழச்சே யென்ன பண்டிகை யிருக்குது. ஊரிலே யேதாகிலும் ஒரு மேளதாளம் சந்தடிகளே தாகிலும் உண்டா யெப்போதும் யிந்த யெட்டு பத்து நாளும் ஊரிலே அவரவர் சந்தோஷமாய் வேடிக்கையாய் அவரவர் வீட்டுகளிலே, சந்தடியாயிருக்கும் கோவில் வாசற்படி யெல்லாம் சாயங்காலம் துவக்கி ராத்திரி இருபது இருபத்தஞ்சு நாழிகை மட்டுக்கும் சந்தடிகள் யென்னபட்டால் எள்ளுப்போட்டால் எள்ளு விழாமலிருக்கும். தெருவுகளெல்லாம் சந்தடியாயிருக்க அவரவர்களுக்கு உள்ள மட்டுக்கும்

குடுக்கல் வாங்கலாயிருக்கும். அவரவர் வீட்டு வாசற்படிகளிலே சந்தடி யாயிருக்கும். ஒருத்தர் வீட்டுக்கு ஒருத்தர் போயி பண பண்டிகை மெனவுவார்கள். மேளதாளம் சங்கீதம் பட்டணமெல்லாம் யிந்த பத்து நாளும் தூக்கமில்லாமல் கோ என்கிற சத்தமாயிருக்கும். இதல்லாமல் நாம் தமிழருக்கு யெல்லாம் யெசமானானபடியினாலே நம்முடைய வீட்டுவாசலிலே பின்னை சத்துவிசேஷிச்சு சந்தடியாயிருக்கும். யின்றைய தினம் நம்முடைய வீட்டிலே யெப்போதும் யிருக்கிற நாலஞ்சு பேர் மாத்திரம் அல்லாமல் வேரே ஒருத்தரும் வரயில்லை. யிப்படி யிருக்கச்சே யென்ன பண்டிகையிதெல்லாம். சிப்பாயிகள் போயி அவரவர் வீட்டிலே போயி வீட்டைக் கட்டியும் பெண்டுகளை பிடிச்சு யிழுத்தும் ஆண்பிள்ளைகளை அடிச்சு யிழுத்தும் அவர்களை வெகுசாய் காபராபடுத்துகுற படியினாலே தமிழருக்குள்ளே பிறேதம் விழுந்து போனால் அதை நடுவே சுத்திக் கொண்டு பெண்டுகளெல்லாம் சுத்தி வாயிலே அடிச்சுக் கொண்டு அழுவார்கள். அந்தப்படியாய் அவரவர் வீட்டிலே அழச்சே யென்ன பண்டிகையிருக்குது. யிதல்லாமலும் திருப்பதி யாத்திரைக்கிப் போறமென்று வெகுசெனம் போயிவிட்டார்கள்.

காவேரி ஸ்நானத்துக்கு யெப்போதும் சிறிது பேர் பிராமணாள் போவார்கள். யிப்ப பிராமணாரிலே வெகுபேர் போயி விட்டார்கள். வந்தவாசியிலே தண்டு யிருக்கிற படியினாலே அந்தப் பேரைப் போட்டுக் கொண்டு மாத்திரமே சிறிது பேரும் ஆனபடியினாலே பீடாயிருக்கிறதே யல்லாமல் பின்னை வேறேயில்லை. இன்றைய தினம் சனங்களெல்லாம் அவரவர் சிங்காரிச்சுக் கொண்டு வெளியே பிறப்படுவார்கள். யிதுகளெல்லாம் நீர் கேழ்விப்பட்டு யிருப்பீர்கள் ஒண்ணுமில்லை. இதுகளெல்லாம் உம்முடைய மனுஷர்களை அனுப்பி மெய் பொய் யென்று விசாரிக்கச் சொல்லு மென்று சொன்னதுக்கு பின்னையும் நான் சொன்னது யிந்த பட்டணத்திலே யெந்த சாவுக்கார் யெந்த வர்த்தகர் லக்ஷம் பதினாயிரத்துக்கு ஆஸ்தியா யிருக்குறான். முசியே னுவார் நாளையிலே முதல் கொண்டு சென்னப்பட்டணமும் ஆற்காடு பட்டணம் நன்றாயிருக்கச்சே அவ்விடத்திலே யிருந்து வர்த்தகர் பதில் சதில் வர்த்தகம் நடந்தபடியாலும் யிவ்விடத்தியார் அவ்விடங்களிலே போய் வற்தகம் சற்தகம் நடந்தபடியினாலேயும் யிந்த பட்டணத்திலே யிருந்த குடிசைகளெல்லாம் கல் வீடாச்சுது யென்று யிந்தகாலம் தொவக்கினதோ அன்று முதல் யிந்த செனங்களுக்கு நாள் பீடாய்ப் போச்சுது அந்த வீடுகள் மாத்திரமே யல்லாமல் ஒருத்தருக்கும் ஆஸ்தியில்லை யென்று சொன்னதுக்கு உம்முடைய வீடும் அப்படித்தானா யென்று கேட்டான். ஆம் அப்படி நாலத்தனை அதிகம் யென்று சொல்லி வந்த கப்பல் யின்னம் பதினஞ்சு நாள் மட்டுக்கும் யிருந்தால் கொஞ்ச நஞ்சம் அவரவர் பிடவை

சீலைகள் வித்து சிறிது பணம் வரும் யில்லாவிட்டால் பணம் வருகுறதுக்கு ரொம்ப பிறயாசமா யிருக்கும் யென்று சொன்னதுக்கு ஆனால் நீர் யிப்படி யெல்லாம் சொல்லுகிற படியினாலே பணம் வருகிறதாய்க் காணம். உமக்கு மனசுயில்லை அந்தக் காரியத்தை நீர் பார்க்கயில்லை யென்று குமிசேல்லி யெனக்கு கவையில்லை யென்று கையெழுத்துப் போட்டு முசே லாலியுடனேயும் சொல்லுவே னென்று சொன்னதுக்கு நீர் சொன்னால் செனங்களுக்கு ஆலில்லை யென்கிறதும் நாம் யிது காரியங்களிலே வசனையில்லாமல் பிறயாசப்படுகுறதுக்கு நூறு விதத்திலே சாதகம் கொண்டு வந்து பிறயாசைப்பட்டுப் பார்க்கிறதுக்கு துருசு கொண்டு வந்து விடுவேனென்று சொன்னதின் பேரிலே யித்தனை நாளும் மனம் பொறுத்துக் கொள்ளாதவன் யின்னைய தினம் யிதுகளை யெல்லாம் மனம் பொறுத்துக் கேட்டு ஆனால் யிந்த ரெண்டு நாள் பணம் தண்டத் தேவையில்லை யென்று நீர்தானே சொல்லுகிறாப்போலே சொல்லி நிறுத்தி செவ்வாயிக்கிழமை முதல் கொண்டு பணம் தண்ட சீக்கிரத்துக்கு செலுத்திப் போடச் சொல்லி சொல்லவும், பின்னையும் குண்டுசாலையிலே யிருக்கிற சேவுகரெல்லாம் சம்பளம் வராதபடியினாலே யெங்களுக்கு சேவுகம் தேவையில்லை யென்று சொல்லிப் போட்டார்கள். நயினாருக்கும் ராசகோபால் நாயக்கனும் சொல்லி அவர்கள் சேவுகம் வழியிலே யிருக்குறார்களே அவர்களைப் பத்திரமாய் விசாரிக்கச் சொல்லவும். மூணு மாசத்தைக்கு சம்பளம் குடுத்தால் அப்பிறம் கப்பல் வந்தால் குடுப்போமென்றால் போய் விட்டவனுக்கு சம்பளம் போனது தானென்று சொன்னான் யென்று சொல்லி நூறுபேரை மாத்திரம் வைச்சுக் கொண்டு கும்பினியிலே ரெண்டு மாசம் ஒரு மாசத்தைக்கி யிப்ப சம்பளம் கொடுத்தால் பணம் வந்தவுடனே சம்பளம் சாடாவாய் குடுத்து விடுவோம். யிந்தப்படிக்கி திட்டம் பண்ணச் சொல்லி சொன்னான். அங்கே யிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு கோட்டைக்கு வந்தோம்.

வந்தவிடத்திலே முசியே லாலி முதலாகிய பேரெல்லாம் கோவிலுக்குப் பூசை கேழ்க்கப் போனார்கள். முசியே தெஷே மாத்திரம் அலாயிதாயி நாற்காலியின் பேரிலே யெடுத்துக் கொண்டு போனார்கள். போய் பூசை கேட்டு யெல்லாருமாய் கோவற்ணமாம் வீட்டுக்கு வந்தார்கள். முசியே லாலிக்கும் முசியே தெஷேக்கும் யிருக்கிற ஒப்பு உயர்வு பார்க்கப் போனால் பூனைக்கும் எலிக்கும் யெந்த ஒப்பு உயர்வு யிருக்குமோ அந்தப்படிக்கி யிருந்தது. யெதுனாலே யென்றால் முசியே லாலிக்கு முசே தெஷேக்கும் மெட்டு பார்க்கப் போனால் முசியே தெஷே ஒரு படி அதிகமானபடியினாலே அவர் கரையிலே யிறங்குறதுக்கு பிரார்த்திச்சு

யிவ்விடத்திலே யிறங்கத்தக்கதாக ஒபசாரமாய் யெழுதிக் கொண்டபடியினாலே அவர் யிறங்காவிட்டால் யிவ்விடத்திலே யிருக்கிற வெள்ளைக்காறருக்கு வெகு சின்னத்தனமாயிருக்குமென்று பிரார்த்திச்சுக் கொண்டு எழுதினபடியினாலே முசே தெஷே யிறங்கின விடத்திலே அவருக்குத் தக்கின மரியாதை பண்ணாதபடியினாலே அவரவர் மனசுக்கு சமாதானமில்லை என்று பகலைக்கு சாப்பிட்டவுடனே முசே லாலியுடனே சொல்லாமல் யேறிப் போய் விடுவாரென்றும் வெள்ளைக்காறர் சொல்லிக் கொண்டார்கள். அப்பிறம் யின்றைக்கி மகற்நவமி பண்டிகை பூசையானபடியினாலே பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

இத்தனாள் சாயங்காலம் யேழு மணிக்கு முசே லாலி வெளியே போயிருக்கிற வேளை பார்த்து ஒருத்தருடனேயும் சொல்லாமல் படிக்கி கடற்கரைக்கிப் போய் படகின் பேரிலே யேறி கப்பலுக்குப் போய் விட்டார். கப்பலிலே யேறினவுடனே கப்பலுக்காறரெல்லாம் நாளை சாமம் பதினைஞ்சு நாழிகைக்கு கப்பலெல்லாம் பாய் தூக்குறதென்று ஒடுதி பண்ணி விட்டாரென்றும் கேழ்க்கப்பட்டுது. முசே தெபோ பெண்சாதி சீமைக்குப் போறபடியினாலே அவளுடைய தட்டு முட்டுகளெல்லாம் கப்பலிலே யேறிச்சு தென்றும் முசே லெறி யண்டைபோய் மதாம் தெவோ அனுப்பிவிச்சுக் கொண்டு போனவிடத்திலே முசியே தெஷே கையிலே ஒப்புவிச்சாரென்றும் அவர் கப்பலிலே யேறச்சே கூடத்தானே யேறிப் போனானென்றும் யிப்படியாக சேதி கேழ்விப்பட்டோம்.

நேத்து சனிக்கிழமை ராத்திரி நம்முடைய தண்டு வந்தவாசியிலே யிறங்கி யிருந்ததின் பேரிலே யிங்கிலீசுக்காறர் பவுன்சு வந்து விழுந்து நல்ல சண்டையாயி நம்முடைய பவுன்சிலே முன்னூறு நானூறு பேர் சேதமென்று முசே தெபொவா (M. Debove) அவர்கள் கையிலே கைப்பிடியாய் அகப்பட்டுக் கொண்டாரென்றும் ராயப்பிள்ளையும் ராமலிங்க பிள்ளையும் ஒறத்தி ஒடி வந்து விட்டார்களென்றும் இங்கிலீசுக்காறருக்குள்ளே யெழுநூறு எண்ணூறு பேர் மட்டுக்கும் சேதமென்றும் ஒரு கொம்மாந்தாம் நம்முடவர்கள் கையிலே அகப்பட்டானென்றும் சிறிது சொலுதாதுகள் அகப்பட்டார்களென்றும் அந்த மட்டிலே அவர்கள் தண்டு முறிஞ்சு திருவத்தூரே போய் சேர்ந்தார்களென்றும் யிந்த சமாச்சாரமெல்லாம் யிவ்விடத்துக்கு எழுதி வந்ததின் பேரிலே மு முசே லாலி நாளை காலத்தாலே யேழு மணிக்கி கோட்டையைச் சுத்தியிருக்கிறக் கொத்தளங்களிலே யெல்லாம் யிறநூறு பீறங்கி போடச் சொல்லி உத்தாரம் பண்ணாரென்றும் கேழ்விப்பட்டோம்.

இந்தக் கப்பலிலே யிருந்து வெள்ளைக்காறர் மத்தலோத்து யெண்ணூறு பேரும் அதுக்கு ஒப்பிசியால்மாரும் நானூறு பேர் காப்பிரியனும் ஆக ஆயிரத்திற நூறு பேர் மட்டுக்கும் முசே தெஷே கரையிலே யிறக்கி விட்டார். முசே லாலி யிவ்விடத்துக்கு மனுஷர் வேணுமென்று முசே தெஷேயைக் கேட்ட படியினாலே அவர் கரையிலே ஆயிரத்திறநூறு பேர் மட்டுக்கும் (1200) யிறக்கி விட்டார். இத்தனாள் சாயங்காலம் சாவடிக்குப் போய் அங்கே தஸ்தாரு எழுபத்தொன்பது (79) ரூபாயையும் முசே லசேல் வசம் செலுத்திப் போடச் சொல்லி வீட்டுக்கு வந்துவிட்டோம்.

## அக்டோபர் 1759

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 1; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 19; சோமவாரம் விஜயதசமி***

இத்தனாள் காலத்தாலே வந்தவாசி தண்டு சமாச்சாரம் நிமித்தியம் பட்டணத்தைச் சுத்தி யிருக்கிற கோட்டைக் கொத்தளங்களிலே யிறநூறு (200) பீறங்கி மட்டுக்கும் கொத்தளத்துக்கு அஞ்சு பீரங்கி விழுக்காடு இறநூறு பீங்கிகள் மட்டுக்கும் போட்டார்கள். நேத்து ராத்திரி பதினாறு நாழிகைக்கு முசே லசேலுக்கு ஆண் பிள்ளை பிறந்தது. அதுக்கு இன்றைக்கு காலமே யெழு மணிக்கு முசே லசேல் வீட்டுக்கு நாம் போயி புத்திர உச்சமான முபார்க்கு பாதி சொல்லி அங்கே யிருந்து கோட்டைக்கு வந்து முசே லாலி அவர்களுக்கு வந்தவாசி தண்டு பத்தேயான முபார்க்கு சொன்னோம். வெள்ளைக்காறருக்கு அவரவர் வந்து முபார்க்கு சொன்னார்கள். யின்றைய தினம் வந்தவாசி தண்டு பத்தேயானதுக்கு வெள்ளைக்காறரெல்லாம் பண்டிகை கொண்டாடினார்கள். மத்தியானம் பதினஞ்சு நாழிகைக்கு முசியே தெஷேயுடைய பதிமூணு கப்பலும் பாய் தூக்கி ஓடிப்போய் விட்டார்கள். சீமைக்கு அனுப்ப வேண்டிய காகிதங்கள் அவரவர் யிந்த கப்பலிலே அனுப்பிச்சார்கள்.

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 3; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 21; புதவாரம்***

இத்தனாள் காத்தாலே யேழு மணிக்கி முசே லாலி அவர்கள் அழைக்குறார்களென்று றெண்டு சேவுகர் வந்து அழைச்சார்கள். நாம் கோட்டைக்கிப் போனோம்...

அதிலே முசே பசேன் யெதிரே படியண்டை வந்து முசியே லாலி அவர்கள் உத்தாரம் வந்தவாசி தண்டுக்குப் போற ஒப்பிசியால்மார் நாலு பேருக்கு நாலு குதிரை வேணும், யெங்கே யாகிலும் நல்லதாய் ஒப்பிசியால் மாருக்கு ஆனதாய் நாலு குதிரை மாத்திரம் பிடிச்சு வந்தால் உள்ள விலை குடுத்து விடுவோமென்று சொன்னான். நல்லதென்று நயினாருக்குச் சொல்லி அனுப்பிவிச்சோம். நம்முடைய மனுஷரை போய் அனுப்பிவிச்சோம். அவர்கள் போய் அந்தப்படிக்கி அஞ்சு குதிரையும் வந்தது. முசே லசேலுக்கு முசியே பசேன் சொல்லி அனுப்பிவிச்சார். அவர் சாவடி கணக்கப்பிள்ளைகளுக்கும் நயினாருக்கும் எட்டு குதிரை வேணுமென்று சொல்லி அனுப்பி விச்சார். அவர்களும் குதிரை பிடிக்கிற வேலையிலே யிருந்து வந்த முசியே தெஷேயுடைய கப்பலிலே முசியே

லாலி யவர்கள் இந்தியாவிலே யிராமல் சீமைக்கு வந்துவிட்டால் அவ்விடத்திலே முசியே புசியை யிருந்து யிந்த சண்டை பவுன்சுகளுக் கெல்லாம் யெசமானாகயிருந்து பார்க்கச் சொல்லி சீமையிலே யிருந்து கும்பினியார் கடுதாசியும் வந்தபடியினாலே, அவர் சீமைக்குப் போகாமல் அவருக்கு ரெண்டாவதா யிருக்கிற முசியே சுப்பியோர் (சுப்பீர்) சீமைக்கி யேறிப் போனபடியினாலே அவரிருந்த ரெண்டாவது யிடம் முசியே புசிக்குக் குடுத்து யிந்த சண்டைகளுக்கு யெசமானாய் வந்தவாசியிலே யிருக்குற தண்டுக்குப் போகச் சொல்லி, அவர் பிறகே கப்பலிலே யிருந்து யிறங்கின வெள்ளைக்காறர் எண்ணூரு (800) பேரும் காப்பிரியள் அன்னூறு பேரும் அவர்களுக் கெல்லாம் துப்பாக்கி ஆயுதுங்கள் சாஞ்சாமி சாமானுகள் மருந்து குண்டுகள் எல்லாம் குடுத்து பின்னையும் பாறு போயிகள் குதிரைக்காற ரெல்லாம் அவர் பிறகே அனுப்பிவிச்சார்கள்.

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 4; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 22; வியாழக்கிழமை***

இத்தனாள் காலத்தாலே முசியே லசேல் நம்மை அழைச்சனுப்பி விச்சதுக்கு சலதோஷமாயிருக்கு தென்று சொல்லியனுப்பி விச்சோம். ஆனபடியினாலே யின்னைய தினம் நாம் வெளியே போகயில்லை. யித்தனாள் குமிசேல்கூடி பனிரெண்டு மணிக்கு குமிசெல் கலைஞ்சு குமிசெலியே ரெல்லாம் வீட்டுக்குப் போகச்சே, அவரவர் றகசியம் பேசிக்கொண்டு நகைச்சுக் கொண்டு படி யிறங்கிப் போற மட்டுக்கும் யிந்தப்படியாய் பேசிக் கொண்டு போறார்கள். யித்தனாலும் சின்னதுரை முசியே பெடுத்தல்மீ ஒரு விதமாய்ப் போறவன், யின்றைய தினம் நகைச்சுக் கொண்டு முசே புலோவும் நகைச்சுக் கொண்டு உடனே றகசியம் பேசிக்கொண்டு படி யிறங்கிப் போற மட்டுக்கும் யிப்படியாகப் போனார்கள். இன்னைய தினம் குமிசேல் நடந்திருக்கிறது. யினிமேல் விசிதமாய் அறியவேணும்.

இத்தனாள் பகலைக்கு மேலாக கேழ்விப்பட்ட சேதி யென்ன வென்றால், முசியே தெ புசோத்து சாலை விசாரிப்பு உத்தியோகம் முசே லசேலை விசாரிக்கச் சொன்னதை, முசே பெடுத்தல்மீயை விசாரிக்கச் சொல்லி உத்தாரமாச்சு தென்றும், முசியே புசி ஆற்காடு யிந்த விடங்களிலே போய் சீமை கட்டுகிறதை முசே தெபோவை போய் விசாரிக்கச் சொன்னதாகவும், அவன் அதுகளுக்கு அமுல்தாரர்களை அழைச்சுக் கொண்டு போறதாகவும், யிப்படி யாகக் கேழ்விப்பட்டுது. யிந்த ஒயித்தோபர் மாசம் 15 தேதியிலே அவிழ்த்துப் பார்க்கச் சொல்லி சீமையிலே யிருந்து வந்த கடுதாசியிலே ஒரு கட்டு யிருக்குறது. அவிழ்த்துப் பார்க்கச்சே அதிலே யென்ன அதிசெயம் யிருக்குமோ அது

அறிய வேண்டியது. யிதல்லாமல் 1760-ம் ஆண்டு சனவரி மாசம் ரெண்டாந்தேதி மூணாந் தேதி அவிழ்த்துப் பார்க்கச் சொல்லி ஒருகட்டு கடுதாசி யிருக்குது. அது அவிழ்த்துப் பார்க்கச்சே என்ன அதிசெயம் யிருக்குமோ அது அறிய வேண்டியது. ஒப்பித்தோபர் மாசம் கடுதாசியிலே அதிசெயங்கள் மட்டாயிருக்கும். சனவரி மாசம் கடுதாசியிலே ரொம்ப அதிசெயங்களிருக்கு மென்று வெள்ளைக்காறர் அவரவர் சொல்லிக் கொள்ளுகுறார்கள். அது யினிமேல் அறிய வேண்டியது யென்ன அதிசெயமிருக்குமோ என்றால் அவரவர் வெள்ளைக்காறருடைய திருட்டுப் பிறட்டுகள் லஞ்சங்கள் வாங்கி யிருக்கிறது களெல்லாம் விசாரிக்கச் சொல்லி எழுதி வந்ததாய்த் தோணுதே யல்லாமல் பின்னை வேறே யொன்றுமில்லை.[1]

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 5; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 23; வெள்ளிக்கிழமை***

இதல்லாமல் முசே லாலி அவர்கள் தம் அண்டையிலிருக்கிற மனுஷரைக் கேட்டது, யிந்த கவை காரியங்களெல்லாம் பார்க்கிறதுக்கு தமிழருக்குள்ளே பெரிய மனுஷராய் பொருத்தவராக யில்லையா யென்று கேட்டதுக்கு, "யெல்லாம் யிருப்பார்கள். உம் அண்டைக்கு வந்தால் நீர் கோபிச்சுக் கொள்ளுகிறீ" ரென்று சொன்னதின் பேரிலே, "யில்லை. நாம் யினி மேல் அப்படியெல்லாம் கோபிச்சுக் கொள்ளுகிறதில்லை" யென்று சொன்னதாகவும் ஆனால் அப்படிப்பட்ட பெரிய மனுஷரும் இருப்பார்களென்று சொன்னதாகவும், யிதுகள் யெல்லாம் முசியே லாலி வீட்டிலே அவனண்டை சேவிக்கிற வீரராகவ அய்யன் சம்பிறீதி குமாரசாமிப் பிள்ளை யிவர்கள் சொல்லிக் கொண்டதாகக் கேழ்விப்பட்டோம்.

---

[1] ஆங்கிலேய சொல்தாதுக்களும் ஊர்களைக் கொள்ளையிட்டு அந்தப் பணத்தை ஆளுநர் முதல் அதிகாரிகள் வரை பங்கிட்டுக் கொண்டார்கள். எனினும், கம்பெனிக்கு வரவேண்டிய குத்தகைப் பணத்தை வசூல் செய்வதற்கெனக் கர்னாடகத்தில் தாசில்தார் போன்ற அதிகாரிகளை நியமித்துக் குத்தகைப் பணத்தை ஒழுங்காகக் கம்பெனியின் கணக்கில் செலுத்தினார்கள்.

பிரெஞ்சுக்காரர்களோ குத்தகைப் பணத்தை முறையாக வசூல் செய்வதை லெறியின் காலத்தில் கைவிட்டு விட்டு, ஊர்களையும் கொள்ளையிட்டு லட்சக்கணக்கில் பங்கிட்டுக் கொண்டனர். இப்படிக் கொள்ளையடித்த தொகைகளை ஆங்கிலேயக் கப்பல்களுக்கு அஞ்சி, சதுரங்கப்பட்டணம், தரங்கம்பாடி ஆகியவற்றிலிருந்து புறப்பட்ட நடுநிலை நாடுகளின் (டச்சு, டேனிஷ்) கப்பல்களில் ஏற்றிப் பிரான்சில் தம் குடும்பங்களுக்கு அனுப்பி வைத்தார்கள்.

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 6; பிறமாதி வருசம் புரட்டாசி மாசம் தேதி 24; சனிவாரம்***

இத்தனாள் முராரி ராயன் அண்டை போயிருந்து மயிலாப்பூர் பிசப்பு பாதிரி நொரோனா என்கிறவர் நூறு பேரை சகாயமாய் அழைச்சுக் கொண்டு அவன் கையிலே ஒரு ஆனையும் சீரொப்பாவும் வெகுமானம் வாங்கிக் கொண்டு, யிவர்கள் அனுப்புகுறோ மென்று சொன்னபடிக்கி பணம் அனுப்பி வையாமல் போனபடியினாலே நான் போய் பணம் அனுப்பி வைக்குறேனென்று சொல்லி வேலூர் வந்து சேர்ந்தாரென்று சேதி கேழ்விப்பட்டோம். முன்னே அவர்கள் பவுன்சு காஞ்சீபுரம் யிதுகள் கட்டினார்களென்கிறது சேதி அபத்தம்.

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 17; பிறமாதி வருசம் அற்ப்பிசி மாசம் தேதி 4;***

இத்தனாள் வந்தவாசியிலே யிருந்து கொண்டிருந்த ரெஜிமெண்டு தெ லாலி சொலுதாதுகள், யாவத்து ரெஷிமாண்டு தெலோரொன் என்கிற சொலுதாதுகள் யாவத்தும் (?), சீமையிலே யிருந்து வந்த சொலுதாதுகளும் சம்பளம் வரயில்லை யென்று யேகமாய்ப் பிறப்பட்டுப் போகச்சே, அவடத்திலே யிருந்த ராசாவுடய ஒப்பிசியால்மாரும் கும்பினீர் தாலூக்கு சொலுதாதுகளும் ஒப்பிசியால்மாரும் போய் போகவாண்டாமென்று குறுக்கே மறிச்சார்கள். அதின்பேரிலே அவர்கள் யிழுத்துக் கொண்டு போற பீறங்கியளைத் திருப்பிவிச்சு யெதித்தார்கள். இவர்கள் எதிர்க்கலாகா தென்று திரும்பி வந்து யிவ்விடத்தார்கள். அவர்களெல்லாம் காத–வழிக் கப்பாலே போயி யிறங்கி யெங்களுக்குள்ள சம்பளம் குடுத்தால் நாங்கள் வருவோம், யில்லாவிட்டால் இங்கிலீசுக் காறரண்டைக்கிப் போயி விடுவோமென்று சொன்னதின் பேரிலே வந்தவாசியிலே யிருக்கிற பேர் யிவ்விடத்துக்கு யெழுதி அனுப்பிவிச்சார்கள். அதின் பேரிலே முசியே லாலி ரொம்ப சின்னமாய் யோசனை பண்ணி லக்ஷம் லக்ஷத் திருபதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் இருந்ததை அனுப்பிவிச்சு, முன்னே குமிசெல்க்காறர் பேரிலே யெப்படி யெழுதினதை நிறுத்தி தமிழர் கையிலே மாத்திரம் வாங்கின படியினாலே, யிப்போ குமிசெல்க்காறரை யெல்லாம் அழைச்சு முன்னே எழுதினபடிக்கி யிப்படிப் போட்டு வாங்கி விடச் சொல்லி குமிசேலிலே தீந்தபடியினாலே, அவரவர் தட்டுமுட்டுகள் டங்காசாலையிலே உருக்கிலே விடப்போறார்கள் யென்று யித்தனாள் சேதி கேட்டோம்.

***1759 வருசம் ஒயித்தோபர் மாசம் தேதி 20; பிறமாதி வருசம் அற்பிசி மாசம் தேதி 7; சனிவாரம்***

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி : வந்தவாசியிலே யிருந்த ரெஷமாம் தெ லாலி என்கிற பவுன்சு சொலுதாதுகளும், யேகத்துக்கு சொலுதாது தமாமும் சம்பளம் வரயில்லை வரயில்லை யென்று அப்பாலே வாங்கி யிருந்தவர்களெல்லாம் யேகமாய்க் கூடி வந்தவாசியிலே வந்து விழுந்து சார்ப்பனா ஊரெல்லாம் கொள்ளையிட்டு சிறைகள் பிடிச்சு வெகு சேதம் பண்ணினார்கள். அதன் பேரிலே வந்தவாசிக் கோட்டை (துக்கே) சாயபு கோட்டைக் கதவை சாத்திக் கொண்டு உள்ளே யிருந்தான். அவ்விடத்திலே யிருந்த முசியே மீரான், முசே தெபுவாவும் பின்னையு மிருந்த சறுதாரா யிருந்தவர்க ளெல்லாரும் கோட்டைக்குள்ளே பூந்து கொண்டார்கள். அமுல்தார் மத்தப் பேரெல்லாரும் கண்ட கண்ட வழியே ஓடிப்போய் விட்டார்களென்று சேதி கேழ்விப்பட்டோம். இத்தனாள் வெள்ளைக்காறர் யெல்லாரும் டங்காசாலையிலே வெள்ளி நகைகளை அனுப்பி விச்சார்கள் யென்று பழைய கொவற்ணதோர் முசே லெறியும் முப்பத்தோரு மார்க்கு ஆறு நூறு ரூபா யெடை வெள்ளி நகை டங்காசாலைக்கு அனுப்பிவிச்சான்.

தில்லை மேஸ்திரியை முசே லசேல் கட்டிவிச்சு அடிச்சதுக்கு சின்ன துரை முசே கில்லியார் நம்முடைய ஞாயத்துக்கு யிவனா அதிகாரஸ்தன் என்று ரொம்ப கோபிச்சுக் கொண்டதாய்ச் சேதி கேட்டோம்.

## நவம்பர் 1759

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 1; பிறமாதி வருசம் அற்பிசி மாசம் தேதி 19; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே நாமும் முசே பெடுத்தல்மீ அண்டைக்குப் போயி பெடுத்தல்மீயும் முசே லோஸ்தீஸ் ஒரு கை போனவனும் ரெண்டு பேரும் பேசிக் கொண்டு யிருந்தார்கள். அவர்கள் ரெண்டு பேரும் எழுந்திருந்து ஆசாரம் பண்ணி கனப்பையின் பேரிலே ஊளுக்காரச் சொல்லிச் சொன்னார்கள். என்ன பட்டணத்து சமாச்சாரமென்று கேட்டார்கள். உங்களுக்குத் தெரியாத சமாச்சாரம் யென்ன யிருக்குது, அல்லாம் தெரிஞ்சே யிருக்குமென்று சொன்னோம். மெய்தான் பட்டணத்திலே யிருக்கிற செனங்கள் வெகுபேர் ஓடிப்போய் விட்டார்களாம், பட்டணம் குட்டிச் சுவராயப் போம் யென்று கேட்டார்கள். உங்களுக்கு யெல்லாம் தெரிஞ்சு யிருக்கச்சே யென்னைக் கேழ்க்க வேண்டியதென்னா யென்று சொன்னோம். ஆனால் யிந்தப் பட்டணம் முசியே நுவார் (லெனுவார்) நாளையிலே உண்டாச்சுது. யிப்போ முசே லாலி நாளையிலே அழிஞ்சு போச்சுது. அந்த கீர்த்தி அவருக்கும், யிந்த கீர்த்தி யிவருக்கும் வந்ததென்று வெள்ளைக்காற ரெல்லாம் சொல்லிக் கொள்ளுகுறார்கள் யென்று சொன்னார்கள். யெல்லாம் உங்களுக்குத் தெரிஞ்சு யிருக்கச்சே நம்மைக் கேழ்க்க வேண்டிய தென்னா யென்று சொல்லி, பின்னையும் சத்து நேரம் பேசிக் கொண்டிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

***1759 வருசம் நோவம்பர் மாசம் தேதி 9; பிறமாதி வருசம் அற்பிசி மாசம் தேதி 27; சுக்கிரவாரம்***

இத்தனாள் பந்தரிலே இங்கிலீசுக்காறர் கையிலே அகப்பட்டிருந்த பிரான்சுக்காற சொலுதாது 200 இறநூறு பேரை விட்டு, அவர்கள் ஆலம்பரையை (Alambarai) வந்து சேர்ந்தார்கள். இவ்விடத்திலே அகப்பட்டிருந்த இங்கிலீசுக்காற சொலுதாதுகள் பதிலுக்கு இறநூறு பேரை விட்டு சென்னப்பட்டணத்துக்கு அனுப்பிவிட்டார்கள். யினிமேல் இங்கிலீசுக்காற சொலுதாது ஒருத்தரும் யிவ்விடத்திலே யில்லை, சாடாவாய்ப் போச்சுது.

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 11; பிறமாதி வருசம் அற்பிசி மாசம் தேதி 29; ஆதிவாரம்***

இத்தனாள் காலத்தாலே தமிழிலே ஒரு கடுதாசி எழுதி முசே

லாலியுடைய மேசையிலே வச்சிருந்ததாகவும், அதை முசே லசேல் வந்தவுடனே அவன் கையிலே குடுத்து, "உமக்கு தமிழ் தெரியுமா? யிதேது தமிழிலே யெழுதி நம்முடைய மேசையின் பேரிலே வைச்சு யிருந்தது," யென்று படிச்சுப் பாருமென்று குடுத்ததாகவும், அதை முசே லசேல் படிச்சுப் பார்த்து அதிலே யெழுதி யிருந்தது... யிந்தப் பட்டணத்திலே யிருக்கிற "யேழை செனங்களை யேன் உபத்திரியம் பண்ணுகுறீரகள். யிதிலே பட்டணம் வெகு காபராப்பட்டுப் போகுது. செனங்களெல்லாம் ரொம்ப கேட்டுப் போனார்கள். அல்லவென்று யித்தனை உபத்திரியம் பண்ணி பணத்தை வாங்கியும் உங்களுக்கு யெந்தக் காரியத்துக்கு ஆச்சுது? யினி மேலாகிலும் யேழை செனங்களை உபத்திரவம் பண்ணாமல் படிக்கு சுவாமி முகத்தைப் பார்த்து தயவு பண்ண வேண்டியது. உங்களுக்கு தண்டு சிலவுக்கு நடக்க வேணுமென்றால் யிந்தப் பட்டணத்துக்குள்ளே மூணு பேர் உங்களண்டையே யிருக்குறார்கள். அவர்களை விட்டுப்போட்டு யேழை செனங்களை யேன் உபத்திரவம் பண்ணுகுறீர்கள். யிப்பவும் அந்த மூணு பேரையும் அழைச்சு கேட்டால் வேணுமென்றது லக்ஷாந்திரம் குடுப்பார்கள். உங்களுக்கும் தண்டு சிலவுக்கும் சிப்பந்தியும் நடந்துபோம். யிந்தப்படிக்கி நடப்பிச்சால் உங்களுக்குப் புண்ணியமும் கீற்தியும் உண்டு. அல்லவென்று பின்னையும் யேழை செனங்களை உபத்திரவம் பண்ணி நடத்தினால் உங்களுக்கு வெகு பாபம் வரு," மென்று எழுதியிருந்ததாகவும் யிந்தப்படிக்கி முசே லசேல் படிச்சுக் காண்பிச்சதாகவும், யிதிலே பாதிரி சம்பா கோவில் லாவாரே (Father Lavaur) என்கிறவரும் வந்தார். அவரும் கூட படிச்சுப் பார்த்து ரெண்டு பேருமாய்த் தெரிஞ்ச மட்டுக்கும் சொன்னார்கள். அதை முசே லசேலை யெடுத்துப் போயி பிறஞ்சுப்படுத்தி வரச்சொன்னார். அதை முசே லசேல் தான் வீட்டுக்கு யெடுத்துப் போயி பிறஞ்சுப்படுத்தி முசே லாலி கையிலே கொண்டு வந்து குடுத்ததாய்ச் சேதி கேட்டோம். யிந்த மூணு பேர் பேரும் யாரென்றால் டங்காசாலை பாபுராயன், அவன் தம்பி கடலோரத்திலே யிருக்கிற ராமச்சந்திரராயன் (Ramachandra Rayan) அவன் தம்பி காரைக்காலிலே யிருக்கிற சீனிவாசராயன் யிந்த மூணு பேரும் எழுதியிருந்தது. ஒண்ணானாலும் அவரவர் உத்தியோகம் வேறேயான படியினாலே மூணுபேரும் வேறே யெழுதியிருந்தது. புகையிலைக் கிடங்கு பாப்புராயனும் கூட எழுதியிருந்தது.

இத்தனாள் சாயங்காலமும் சாவடிக்கிப் போயிருந்தோம். தஸ்தான விராகன் 125ம் ரூபாய் 88ம் முசே லசேல் வசம் செலுத்தச் சொல்லிப் போட்டு ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 15; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 3; குருவாரம்***

இத்தனாள் காலத்தாலே முசே புலோ யிருந்து கொண்டு "மெய்தானா? பட்டணத்திலே யுள்ள செனங்களிலே பாதி செனங்கள் வெளியே போய்விட்டார்களா" மென்று கேட்டான். அதென்னா முக்கால் வாசி செனங்கள் போயிவிட்டார்கள் யென்று சொன்னோம். அதுக்கு அவர் சொன்னது : முசே லாலி யின்னம் யிந்தப்படிக்கி ரெண்டு மாசம் துரைத்தனம் பண்ணுவானேயாகில் பட்டணத்துக்குள்ளே தமிழர் ஒருத்தரும் யிருக்கப்போறது யில்லை. நாங்களும் பிறப்பட்டுப் போய் விடுவோம் முசியே லாலி ஒருத்தனும் ஒண்டியாய் உட்கார்ந்து கொண்டு யிருப்பான். சொலுதாது மாத்திரம் யிருப்பார்கள் போலே காணுது. அவர்களும் யிருக்கமாட்டார்கள் போய் விடுவார்கள். ஒண்டியாய் முசே லாலி ஒருத்தனும் ஒண்டியாய் உட்கார்ந்துக் கொண்டு யிருப்பான். சொலுதாது ஒண்டியாய் முசே லாலி ஒருத்தனும் குந்திக் கொண்டு யிருப்பானென்று சொன்னான். யிப்படியாகப் பேசிக் கொண்டிருந்து பதினோரு மணிக்குப் பிறப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 18; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 6; ஆதிவாரம்***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி, யிவ்விடத்திலே யிருந்து போன முசே பிமேல் செனரால் மயோர் (M. Fumel, Major General) பவுன்சு உள்பட தூர் வாங்கிக் கொண்டு, சமயபுரத்தண்டையிலே போனார்கள் யென்கிற சேதி கேட்டோம்.

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 25; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 13;***

இத்தனாள் காலத்தாலே திருச்சிராப்பள்ளிக்குப் போன நம்முடைய பவுன்சு சமயபுரத்தண்டை போகச்சே இங்கிலீசுக்காறருடைய பவுன்சு யெதிரே வந்து சண்டையாயி, நம்முடையவர்கள் பவுன்சு பின்னடைஞ்சு உட்டத்தூர் வாங்கிக் கொண்டு வந்ததாயும், தண்டுச் சிலவுக்கு பண்மில்லை யென்று எழுதி வந்ததாய் சேதி கேட்டோம்.

***1759 வருசம் நொவம்பர் மாசம் தேதி 26; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 14; சோமவாரம்***

இத்தனாள் காலத்தாலே பட்டணத்திலிருக்கிற தமிழர் ஆகட்டும் வெள்ளைக்காறர் ஆகட்டும் யெவர்களிடத்திலே பத்து விராகன்

மட்டுக்கும் ஆஸ்தி பஞ்சுமையா யிருக்கிறதோ அதுகளெல்லாம் விடத்தக்கனதில்லை. வாங்கவேண்டும் கும்பினீருக்கு சிப்பந்திக்கு. பணமில்லாமல் முழுகிப் போகச்சே, யிவர்களை யெல்லாம் விடத்தக்கனதில்லை யென்று குமிசேலிலே சொல்லி யிந்துப்படிக்கி முசியே லசேலுக்கும் உத்தாரம் குடுத்ததாய் சேதி கேட்டோம்.

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 27; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 15; செவ்வாய்***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி : நம்முடைய பவுன்சு ஸ்ரீரங்கத்துக்குப் போன தண்டு உட்டத்தூரிலே யிருந்து முசே பிமேல் (M. Fumel) செனரால் மயோர் பிறப்பட்டு சமயவரத்தண்டையிருந்த இங்கிலீசுக்காறருடய பவுன்சின் பேரிலே போய் சண்டை பண்ணி அவர்களிலே அறுநூறு பேர் மட்டுக்கும் சேதமென்றும் யிறநூறு பேர் மட்டுக்கும் கைப்பிடியாய் அகப்பட்டார்களென்றும், ரெண்டு பீரங்கி அகப்பட்டதென்றும், அதன் பேரிலே அவர்கள் பவுன்சு முறிஞ்சு தென்றும், நம்முடையவர் பவுன்சு ஸ்ரீரங்கத்தைப் போய்ப் பிடிச்சு ரெண்டு தெரு கொள்ளையிட்டார்கள் யென்றும், கோவிலிலே யிருந்த பிராமணர் பயிராகியள் தாசரியுள்பட யிருந்தவர்கள் கோவில் கதவை அடைச்சுக் கொண்டு திறக்கிறதில்லை யென்றும், அதன் பேரிலே யேறிக் கொண்டு விழுந்து சாகிறோம், இருக்குறதில்லை என்கிறதின் பேரிலே ரெண்டு தெருவும் கொள்ளையிட்டு சிறையள் பிடிச்சார்கள். ஸ்ரீரங்கத்தைப் போயிச் சேர்ந்தோ மென்கிற சமாச்சாரம் யிவ்விடத்துக்கு எழுதி வந்ததின் பேரிலே கடுதாசி கொண்டு வந்த அறுக்காராவுக்கு முசே லாலி பத்து ரூபாயி யினாம் குடுக்கச் சொன்னதாய் சேதி கேட்டோம். யிங்கிலீசுக்காறருடைய பவுன்சிலே அந்த மட்டுக்கும் சேதமான மட்டுக்கும், நம்முடவர்கள் பவுஞ்சுலேயும் சேமாயிருக்கும்.

யித்தனாள் சாயங்காலமும் சாவடிக்கிப் போயிருந்து மகாநாட்டார் அவரவரைப் பணம் சீக்கிரத்துக்குத் தண்டிப் செலுத்திப் போடச்சொல்லி தாக்கீது பண்ணி, யித்தனாள் தஸ்தான வ 140 ரூபாய் 10ம் முசே லசேல் வசம் செலுத்தச் சொல்லிப் போட்டு யெட்டு மணிக்கு வீட்டுக்கு வந்து விட்டோம். முசியே பிரினியை (M. Brenier) ஸ்ரீரங்கத்துக்குக் கொம்மாந்தாமாய் அனுப்பிவிச்சார்கள்.

***1759 வருசம் நவம்பர் மாசம் தேதி 28; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 16; புதன்***

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி யென்ன வென்றால், பிரான்சுக்காறருடைய பவுன்சு ஸ்ரீரங்கத்துக்குப் போயி பிடிச்சதைத்

தொட்டு யிங்கிலீசுக்காறருடய வந்தவாசியின் பேரிலே நாம் போயி ரூட்டி பண்ணால் ஸ்ரீரங்கத்துத் தண்டு திரும்பு மென்கிறதைத் தொட்டு பவுன்சு காஞ்சீபுரத்திலே யிருந்தவர்களும் செங்கல்பட்டுலே யிருந்தவர்களும் மத்தடிக் கொண்டு வந்தவாசியின் பேரிலே வந்து யிறங்கி, ஒரு தெருவும் கொள்ளையிட்டு சிறிது வீடுகளும் கொளுத்திப் போட்டு வந்தவாசியை சுத்திக் கொண்டு யிருக்குறார்கள் என்கிற சமாச்சாரம் யிவ்விடத்துக்கு யெழுதி வந்தது. அதன்பேரிலே ஸ்ரீரங்கத்துக்குப் போயிருக்கிற பவுன்சிலே சிறிது பேரை வரச்சொல்லி யிவ்விடத்திலே யிருந்து யெழுதினதாய் சேதி கேட்டோம்.

## டிசம்பர் 1759

### *1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 1; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 19; சனிக்கிழமை*

இத்தனாள் காலத்தாலே நேத்தய தினம் முசே லாலி கேட்ட சமாச்சாரம், பட்டணத்திலே பணத்துக்கு ஒண்ணரை படி அரிசி கொள்ளக் கிடைக்கயில்லை, வெகு சனம் பட்டினியா யிருக்குதென்கிற சமாச்சாரம் கேட்டு, ஒரு கவிலொன்று எழுதி தம்முடைய கையெழுத்தும் போட்டு முசே லசேல் கையிலே குடுத்து தமுக்கும் போடச் சொல்லிச் சொன்னார். அதிலே யெழுதி யிருக்கிற சமாச்சாரம் : பட்டணத்திலேயுள்ள வர்த்தகர் நெல்லு நீர் நாலாதினசுகளும் அவரவர் வெளிகளிலே யிருந்து கொண்டு வந்து வித்துக் கொள்ளுகுறது. மாடு கன்று ஆள் அம்மஞ்சி ஒன்றும் பிடிக்கிறதில்லை. பின்னை யாராகிலும் பிடிச்சால் அந்தச் சமாச்சாரம் தம்முடனே சொன்னால் அவர்களுக்குத் தக்கின ஆக்கினை பண்ணாகுறோம். வர்த்தகர் நீங்கள் யாதொரு காரியம் பண்ணுகுறதுக்கும் சிந்தை பண்ணத் தேவையில்லை" யென்று கவில் கடுதாசி ஒன்று எழுதிக் குடுத்து தமுக்கு போடுவிச்சார்.

யித்தனாள் மத்தியானம் பதினோரு மணிக்கி சீமைக் கடுதாசி மயேயிலே யிருந்து சாடாவிலே பத்தாம் நாள் யின்றைய தினம் மத்தியானம் வந்தது. இருபத்தஞ்சு கப்பல் மய்யே பிடிச்சு மறுபடி பிறப்பட்டுது என்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டோம். சீமையிலே யிருந்து அவரவருக்கு சொந்தத்துக்கு வந்த கடுதாசிகளை குடுத்துவிட்டார்கள். யிந்த சமாச்சாரம் யெல்லாம் யினிமேல் கேட்டு சவிஸ்தாரமாய் எழுதவேண்டியது.

யித்தனாள் முசியே நூவார் (M. Lenoir) சம்பளக்காறர் சிலவு நிமித்தியம் முசியே லாலியைப் பணம் கேட்டவிடத்திலே, "யென் கையிலே யென்னா பணம் யிருக்குதா? குண்டு கிராமம் குத்தகைக்காறர் வகையரா அவரவர் பேரிலே வர வேண்டிய நிலுவையிலே தண்டி குடுக்கப் போகாதா? உன்கையிலே ஆகா," தென்று கோபிச்சுக் கொண்டு சொன்னதின் பேரிலே, முசியே னுவார் குண்டு கிராமம் குத்தகைக்காறர்களை அழைச்சு உங்கள் நிலுவைப் பணத்தைக் குடுத்து விடுங்களென்று சாயங்காலம் மட்டுக்கும் காவல் பண்ணி விச்சான். அதின்பேரிலே யெட்டு நாளையிலே ரெண்டாயிரம் ரூபாய் குடுக்க கெடுவு பண்ணி விச்சான். அந்தப்படி உடன்படிக்கை பண்ணிக்கொண்டு காவல் விட்டுவிட்டான். முசியே லசேல் சாவடி மணியக்காறரை அழைச்சு

முத்திரைச் சாவடியிலே பழய பாக்கியர்களை யெல்லாம் எடுத்தெழுதி சீக்கிறத்துக்கு தண்டச் சொல்லியும், மகாநாட்டார் பணம் யின்னம் வரயில்லை சீக்கிரத்துக்கு தண்டிப் போடச்சொல்லி தாக்கீது பண்ணி விச்சதாய் சேதி கேட்டோம்.

திருவண்ணாமலைக்கிப் போனவர்கள் வந்தவாசியின் பேரிலே யிங்கிலீசுக்காறர் வந்து சண்டை சுறுக்கானபடியினாலே திருவண்ணாமலைக்கிப் போகாமல் படிக்கித்தானே நடுவழியிலே தானே சிறிது பேர் திருப்பிக் கொண்டு வந்து விட்டார்கள்... யித்தனாள் நாலு மணிக்கி வந்தவாசிக் கோட்டை யிங்கிரேசுக்காறர் பிடிச்சுக் கொண்டார்கள் யென்று முசே லாலிக்கு சமாச்சாரம் வந்ததாய் சேதி கேட்டோம்.[1]

### *1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 2; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 20; ஆதிவாரம்*

இன்றைய தினம் மப்பும் மந்தாரமுமாயிருந்தது. பட்டணத்திலே கொள்ளைக் கிடக்கயில்லை. நேத்திய தினம் மாடுகள் ஆளமஞ்சி பிடிக்கயில்லை யென்று கவில் யெழுதி தமுக்குப்போட்டு யின்றைய தினம் மாடுகளை ஆளமஞ்சி (ஆட்கள்) பிடிக்குறார்களென்று சகல செனங்களும் சொல்லிக் கொள்ளுகுறார்கள். வெளியே போய்விட்ட செட்டியளுக்கும் கவில் குடுத்து விட்டார்கள். மறுபடியும் அழைப்பிச்சபடியினாலே அவர்கள் கவில் படிக்கி பணத்தைக் குடுத்து விட்டார்கள். மறுபடியும் அவர்களிடம் பணம் வாங்கச் சொல்லி நேத்து முசியே லசேல் சொன்னதாய், அதன் பேரிலே யின்னைய தினம் சாவடிக் கணக்கப்பிள்ளையும் அவர்களையும் வரி குடுத்து தாளும் தாளா தென்கிறவர்களையும் அழைச்சு பணம் கேட்டவிடத்திலே நாங்கள் கவில்படிக்கி பணத்தைக் குடுத்து விட்டோம். யினிமேல் யெங்களுக்குக் குடுக்குறத்துக்கு யில்லை யென்று சொன்னதின் பேரிலே, அவர்களை யெல்லாம் மத்தியானம் முசியே லசேல் அண்டை அனுப்பிவிக்க வேணுமென்று யிருக்கச்சே முசே லசேல் ஒழுகரைக்குப் போயிருந்தான். அதுனாலே மத்தியானம் அனுப்பிவிக்கயில்லை. சாயங்காலம் ஏழுமணிக்கு யிவர்களையெல்லாம் அனுப்பிவிச்சார்கள். நாமும் முத்திரைச் சாவடிக்குப் போயிருந்து வீட்டுக்கு வந்துவிட்டோம்.

### *1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 3; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 21; சோமவாரம்*

இத்தனாள் காலத்தாலே வந்தவாசிக் கோட்டையை

[1] வந்தவாசியின் வீழ்ச்சி இந்தப் போரில் பிரெஞ்சுக்காரருக்கு ஒரு பெரிய இடி.

இங்கிலீசுக்காறர் பிடிச்சுக் கொண்ட படியினாலே செஞ்சி மத்த யிடங்கள் பிலகாயிக்கிறதுக்கு. யிவ்விடத்திலிருந்து மருந்து குண்டும் சிறிது சொலுதாதுகளும் சிறிது காபிரியளும் அனுப்பிவிச்சார்கள். கார்த்திகை மாசம் மழை யில்லாதபடியினாலே பட்டணத்திலே க்ஷாமம் யென்கிறது நன்றாய்த் தெரிஞ்சுது. பணத்துக்கு ஒண்ணரைபடி அரிசி கொள்ளக் கிடைக்காதபடியினாலே வெகு சனங்கள் யெல்லாம் ரொம்பதா பந்தியப்படுகுறார்கள். சென்னப்பட்டணம் அந்த வட்டங்களிலே பணத்துக்கு ஒரு சேர் அரிசி கொள்ளக் கிடைக்காமல் க்ஷாமமா யிருந்தது. பங்காளத்திலே யிருந்து சென்னப்பட்டணத்துக்கு மூணு நாலு கப்பலிலே அரிசி வந்து பணத்துக்கு ஒண்ணரை படி அரிசி உண்டு என்று விக்கிறபடியினாலே செனங்கள் குதிரி யிருக்குதென்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. யிந்தப் பட்டணத்துக்கு அது முதல்க் கொண்டு வடக்கே கடப்பை மட்டுக்கும் கிஷ்ணாதீரம் நெல்லூர் யிந்த மட்டுக்கும் க்ஷாமமாயிருக்குது யென்றும் சேதி கேழ்க்கப்பட்டுது. யிந்தப் பட்டணத்துக்கு மாத்திரம் வரி வாங்கிப் போட்டார்கள். ஆனபடியினாலே யிந்த சனிமிருத்தியு பாய்ச்சல் தேசமெல்லாம் பிடிச்சு யிருக்குறபடியினாலே நம்முடைய பட்டணத்துக்கு வலை (வரி) வாங்கினது ஆச்சரியமென்று எண்ணத் தேவையில்லை.

### *1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 4; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 22; செவ்வாய்*

இத்தனாள் மப்பு மூடிக்கொண்டு பிலத்த மழையாய் பேயாவிட்டாலும் தூத்தலாய்ப் பேஞ்சு கொண்டு யிருந்தபடியினாலே நாம் வெளியே போகயில்லை. பத்து மணிக்கி மணிலா முசே லத்தூர் (M. La Tour) நம்முடைய வீட்டுக்கு யெதிரே யிருக்கிற பாதிரி கோவிலுக்கு வந்தவன் நம்மை அழைச்சு அனுப்பிவிச்சு யெனக்கு யிப்ப சிலவுக்குயில்லை நூறு விராகன் மாத்திரம் நீர் குடுக்கவேணும். ஆனால் யிப்ப உம்மைக் கேழ்க்கிறதுக்கு ஞாயமில்லை. சத்தியாய் சிலவுக்கு யில்லாதபடியினாலே நான் கேழ்க்குறேன். யெப்படி யாகிலும் குடுக்கவேணுமென்று கேட்டார். நாமும் யில்லையென்று சொல்லப் போகா தென்று நல்லது தெசம்பர் மாசம் 30 தேதியிலே குடுக்குறோம் யென்று சொன்னோம். அப்பயல்லா பண்டிகை வருகுது, சம்பளக்காறர் சிலவுக்குயில்லை. இருபதாந்தேதி குடுக்கவேணுமென்று சொன்னான். நல்லது தாரோ மென்று சொன்னோம். முசியே லத்தூறு(யும்) பாதிரி மத்தோமும் (Father Mathom) பின்னையும் ரெண்டு மூணு பேர் பாதிரியும் பேசிக் கொண்டிருந்தார்கள். தண்டுச் சிலவுக்கு யில்லை யென்று முசே லாலிக்கி தண்டிலே யிருக்கிற ஒப்பிசியால்மாரும் சொலுதாதுகளும் பணமனுப்பிவிச்சால் நாங்களிருந்து நிறுவாகம் பண்ணுவோம். பணம்

அனுப்பாவிட்டால் யிவ்விடத்திலே யெல்லாம் கொள்ளையிட்டுப் போட்டு நாங்கள் பிறப்பட்டுப் போயி விடுவோமென்று வறையறவாய் யெழுதி யனுப்பிவிச்சார்கள். அதின் பேரிலே துரைத்தனம் முசே லாலி பேருக்கு வந்தபடியினாலே ரொம்ப அவனுக்கு விசாரம் வந்து சம்பா கோவிலே கடன் கேழ்க்க வேணும் யென்று யிந்த மழையிலே நனைஞ்சுகொண்டு மழையென்று பாராமல் முசே லாலியும் முசே பசேனும் ரெண்டு பேருமாய் யிப்பத்தான் சம்பா கோவிலுக்குக் கடன் கேழ்க்கப் போனார்கள். முசியே லாலிக்கும் சிலவுக்குப் பணம் யில்லாதபடியினாலே ஒரு காரியமும் கட்டிவராதென்று திகிலெடுத்து வயறு ரெத்தம் ரெத்தமாய் பேதியாகுது யென்கிற தாய்ப் பேசிக் கொள்ளுகுறார்கள். நாமும் யிதுகளெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தோம்.

அப்புறம் முசியே லத்தூறு நம்மைப் பார்த்து சீர்மையிலே யிருந்து முசியே லாலி பேருக்கு துரைத்தனம் யெழுதி வந்தபோது உமக்கும் சகயேகத்தாருக்கும் ராசா உடைய முகற் பண்ணி யெழுதி வந்தது. அந்தக் கடுதாசியும் தை மாசத்தையிலே குமிசேலிலே படிக்கப் போனார்கள் யென்று பாதிரி மத்தோமுடனே சொன்னான். அதுக்கு அவரிருந்து கொண்டு, "முன்னே தானே முசே துப்பிளேயிக்சு நாளையிலே தானே மினீஸ்துறுகளுடைய கையெழுத்துப்பட சகலயெகத்தாரும் யிவர் பேருக்கு யெழுதி வந்திருக்குதென்று சொன்னார். அந்தக் கடுதாசியும் நான் பார்த்திருக்கிறேன் யென்று சொன்னார். மெய்தான் அந்தக் கடுதாசி யென் கையிலே யிருக்குதென்று சொன்னோம். அதுக்கு முசே லத்தூர் சொன்னது, "யிப்போ பின்னையும் புஷ்ட்டியாய் ராசா உடைய (உம்மிடம் கூடுதல் அதிகாரத்தைக் கொடுக்கும் உத்தரவு) மொகற் பண்ணி வந்திருக்குதென்று பெரிய மனுஷர் சொல்ல நான் கேழ்விப்பட்டேன் யென்று சொன்னான். யிப்படியாக பேசிக் கொண்டிருந்து அனுப்பிவிச்சுக் கொண்டு வீட்டுக்கு வந்து விட்டோம்.

யித்தனாள் சாயங்காலம் முசே லசேல் சொல்லியனுப்பி விச்சது. "உம்மைக் கண்டு பேசவேணு மென்று அழைச்சனுப்பி விச்சால் நீர் வராமல் (போனீர்). யிப்பவும் நான் ஸ்ரீரங்கத்துக்குப் போறேன். உம்முடைய வீட்டிலே கூடார்க்கா லிருக்கு தென்றும் பாப்பய்யப் பிள்ளை சொன்னான். அந்த கூடாரக்கால் குடுத்தனுப்பி விக்க வேணு" மென்று தன் துபாசி கிஷ்ண நாயக்கனை அனுப்பிவிச்சான். அதுக்கு நாம் சொல்லி அனுப்பி விச்சது : யெப்போதும் யிந்த காற்திகை மாசத்தையிலே யெனக்கு மூலமுண்டு. யிப்பவும் அது கண்டிருக்குது. அதுனாலே யிப்போ நாம் வெளியே பிறப்படயில்லை. சொஸ்தமானவுடனே யின்னம் ரெண்டு மூணு நாளையிலே வந்து கண்டு பேசுகுறேனென்று சொல்லி கூடாரக்காலம் எடுத்துப் போகச் சொல்லி உத்தாரம் குடுத்தோம்.

யித்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன யென்றால், யிங்கிலீசுக்காறருடைய பவுன்சு வந்து செய்யூர் சூனாம்பேடு ஆலம்பரை யிந்த வட்டங்களிலே வந்து தோறணம் வச்சு, ஒடிப்போன குடியானவர்கள் மாடு கண்ணுகளையும் ஒட்டிக்கொண்டு அங்கங்கே மனுஷர்களை வச்சுப் போனார்களென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டது. ராத்திரி பனிரெண்டடிச்சு ஒரு மணிக்கி நாலு பீரங்கி கேழ்க்கப்பட்டுது. நேத்தய தினம் குமிசேலிலே தீந்து யிந்த மட்டுக்கும் மகாநாட்டார் கையிலே வாங்கின வரி போக யினிமேல் வரிவாங்கத் தேவையில்லை யென்று தீந்ததாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

### *1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 7; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 25; சுக்கிறவாரம்*

இத்தனாள் கேழ்விப்பட்ட சேதி யென்ன யென்றால், முசே லசேல் அந்தந்த சாதி நாட்டாண்மைக்காறரை யெல்லாரையும் அழைப்பிச்சு யிது வரைக்கும் அவர்கள் கையிலே வரி தண்டி செலுத்தின கணக்கு ஒத்துப் பார்த்துக் கொண்டு நீங்கள் செலுத்தின பணத்துக்கு முசே லங்கறனே (M. Lagrenee) குமிசெல்க் கடுதாசி வாங்கிக் குடுப்பானென்று முசே லங்கறனையும் அழைச்சு வைச்சுக் கொண்டு சொன்னான். சொன்ன உடனே மகாணாட்டாரெல்லாரும் யிருந்து கொண்டு நாங்கள் செலுத்தின பணத்துக்குத்தான் குமிசெல் கடுதாசி வாங்கி குடுக்கிறீர். யின்னொரு காரியமிருக்குது. அந்தப்படிக்கி நீர் செய்விச்சால் உமக்கு வெகு கீர்த்தி வரும். பட்டணத்திலேயானால் தானியம் கொள்ளைக் கிடைக்கயில்லை. ஆனபடியினாலே யினிமேல் வரி வாங்க யில்லை யென்று தமுக்குப் போடுவிச்சால் வெளிகளிலே யிருந்து தானியங்களும் வந்து விக்கும். செனங்களுக்கும் சவுக்கிரியமா யிருக்கும். உமக்கு வெகு கீர்த்த வரும். தமுக்குப் போடுவிக்க வேணும்," யென்று சொன்னதின் பேரிலே, "மெய்தான் நீங்கள் சொல்லுகுறது. நீங்கள் சத்தேறக்குறைய பணம் குடுத்து விட்டீர்கள். பாப்பாரும் கிறிஸ்துவரும் ரெண்டு பேரும் பணம் விஸ்தாரமாய்க் குடுக்க வேணுமானபடியினாலே தமுக்கு வரி விட்டு விட்டோமென்றுப் போடப்போகாது. அவர்கள் ரெண்டு பேர் பணமும் வாங்கச் சொல்லி முசே லங்கறனே யிடம் சொல்லி யிருக்குறேன். யினிமேல் நான் சொல்லப் போகாது. முசே லங்கறனேயுடனே சொல்லி முசே லாலிக்குச் சொல்லிச் சொல்லி. அப்படித்தானே தமுக்குப் போடுவிக்குறே"னென்று சொன்னதாய் மகாநாட்டாரும் வந்து சொன்னார்கள்.

(இன்று) கப்பலிலே (வந்த) சேதி யென்ன யென்றால், இசுப்பாஞ்சி ராசா (King of Shain) வும் புடுதிசுக்கால் ராசாவும் (King of Portugal) ரெண்டு பேரும் செத்துப் போனார்களென்றும், யிசுப்பாஞ்சி ராசா பிரான்சு

ராசாவுக்கு சாக்ஷாத் சிறிய தகப்பனான படியினாலே, யிசுப்பாஞ்சி ராசாவுக்கு மூணு பிள்ளைகள், அதிலே ரெண்டு பிள்ளைகள் பிரஞ்சு ராசா வீட்டுப் பெண்ணைக் கலியாணம் பண்ணி யிருக்குறார்கள். ஆனபடியினாலே அந்தப் பட்டம் யிந்தப் பிள்ளையளுக்குக் குடுக்குறத்துக்காக பிரான்சு ராசா மத்திதாய் பேசுறாரென்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. யிந்தப்படியாய் அவ்விடங்களிலேயும் கலாபிச்சுக் கொண்டே யிருந்தது.

### *1759 வருசம் டிசம்பர் மாசம் தேதி 9; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 27; ஆதிவாரம்*

இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதி யென்ன யென்றால், ரெண்டு மூணு நாளையத்தானே வெள்ளைக்காறர் சொல்லக் கேட்டது: வியாழக்கிழமை குமிசெல்க் கூடினவிடத்திலே முசியே லாலியை முசியே லெறி கேட்டது : "சொலுதாதுகள் ஒப்பிசியால்மார் சிப்பாயிகள் பத்து மாசம் பதினோரு மாசம் சம்பளம் வரயில்லை யென்று கூப்பிடுகுறார்கள். நீர் சகல அமுலும் பண்ணுகுறீர். தமிழர் குடியானவர்கள் கையிலேயும் பணம் வாங்கி நீர் சீமா மூல சம்மதி பணமும் வந்தது. பின்னையும் சம்மதிகளிலே பணங்கள் வந்தது. யிந்தப் பணங்களெல்லாம் உம்முட வசத்திலே வந்திருக்க யிப்படி சிப்பந்திக்காறர் சம்பளம் குடுக்கயில்லை யென்று கூப்பிட்டால் அந்தப் பணம் யெங்கே போச்சுது? அந்தப் பணத்துக்கு நீர் கணக்குச் சொல்ல வேணும்" யென்று முசே லெறி கேட்டவிடத்திலே, முசே லாலி, "நீயா யென்னைக் கேழ்க்கிறவன்? உன்னை நாயடிக்குறாப்போலே அடிச்சு காலிலே விலங்கு போட்டு சீமைக்கி யேத்தி விடுவேன்," யென்று சொன்னவுடனே முசே லெறி யித்தனாளும் சும்மா யிருந்தவன் யின்றைய தினம் முசே லாலியை உனக்கு யிந்தத் திராணி யில்லை யென்று சொன்னான். அதின் பேரிலே முசே லாலி யெழுந்திருந்து யிந்தப்படிக்கி ஒருத்தருக் கொருத்தர் விசேஷங்கள் நடந்தது. அதிலே அங்கே யிருந்தவர்கள் யிருவரையும் சமாதானப்படுத்தினார்கள். அன்றைய தினம் அந்த விசேஷ மெல்லாம் அல்லாமல், பின்னை குமிசேலிலே வேறே நடக்கயில்லை. முசே லெறி முசே தெபோ யிருந்த வீட்டே குடிபோறதுக்கு முஸ்தீது பண்ணச் சொன்னதாக சமாச்சாரம் கேட்டோம். யித்தனாளும் முசியே லாலிக்கும் முசே லெறிக்கும் தீனி கும்பினிச் சிலவாய் அரும்பாத்தை விசாரிச்சுக்

---

1 போர்த்துக்கீசிய அரசர் முதலாம் ஜோசப் 1777 வரை உயிருடன் இருந்தார். ஸ்பானிஷ் மன்னர் 6ஆம் பெர்டினாண்ட் தான் 1759 ஆகஸ்ட்டில் காலமானார்.

கொண்டு வந்தது. வியாழக்கிழமை முதல்க் கொண்டு கும்பினி தீனி சிலவு கவையில்லை. அவரவர் சொந்தத்திலே சிலவு நடக்கிறதென்று முசே லாலி உத்தாரம் பண்ணதாய்ச் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டோம்.

***1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 10; பிறமாதி வருசம் கார்த்திகை மாசம் தேதி 28; திங்கள்கிழமை***

யித்தனாள் குமிசெல் கூடயில்லை. சாயங்காலம் அஞ்சு மணிக்கி முசே லாலியும் முசியே லெறியும் ரெண்டு பேரும் ஆறு குதிரை கட்டின ஒயில் (கோச்) வண்டியின் பேரிலே யேறிக் கொண்டு சுத்துக்கோட்டையிலே செய்யுற வேலையைப் பார்க்கப் போனார்களென்கிற சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

கருங்குழிப் பாளையத்தின் பேரிலே வந்து யிறங்கி யிருந்த இங்கிலீசுக்காறருடைய பவுன்சை நம்முட பிரான்சுக்காறர்கள் அடிச்சுத் துரத்தி விட்டார்களென்கிற சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. பின்னை யொன்றும் விந்தையான சமாச்சாரம் கேழ்க்கப்படயில்லை. இத்தனாள் கேழ்க்கப்பட்ட சேதியென்ன யென்றால், வந்தவாசியிலிருந்து முசே லாலிக்கு ஒரு கடுதாசி யெழுதி வந்தது. அதிலே டக்கே சாயபுவுடைய உடமை (யான வந்தவாசிகள்) கோட்டையை யிங்கிலீசுக்காறர் பிடிச்சுக் கொண்டபடியினாலே அதிலே யிருந்தது நாலு லக்ஷ ரூபாயும் சின்ன சின்ன பெட்டி நூத்திருபத்தி ரெண்டும் நாற்பத்தி மூணு றத்தினக் கம்பிளியும் யெடுத்துக் கொண்டு டக்கே சாயபுவையும் அழைச்சுக் கொண்டு நேத்து சுக்கிரவாரத்தினன்று சென்னபட்டணத்துக்குப் போனதாய் எழுதி அனுப்பிவிச்சதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. அந்த நூத்திருபத்தி ரெண்டு பெட்டியிலேயும் நகையள் தட்டு முட்டு யிருந்தது யென்கிறதாய் சமாச்சாரம் எழுதி வந்ததாய் கேழ்க்கப்பட்டுது. அந்தக் காகிதம் வந்தவுடனே முசே தெலார்ஷை அழைச்சு அனுப்பி முசே லாலி, "பார்த்தியா? துலுக்கரை நம்பப் போகாது. நாம் சிலவுக்கு யில்லை, யென்று கேட்டனுப்பிவிச்சால் நம்மண்டை தானே சேர்ந்து கொண்டிருந்து நமக்குக் ஒரு காசுயில்லை யென்றான். யிப்ப இங்கிலீசுக்காறர் நாலு லக்ஷம் ரூபாயி யிருந்ததை எடுத்துக் கொண்டு போனார்கள். அவர்கள் அதிருஷ்ட்டம் அப்படி யிருந்தது. துலுக்கரை நம்பப் போகா" தென்று சொல்லி, சந்தா சாயபு குமாரன் றசா சாயபு அண்டைக்கு அவன் வக்கீல் முறத்தாசா சாயபு யென்குறவனுக்கு முப்பது பேர் போயண்டரைக் கூட்டி யிந்த க்ஷணம் பிறப்பட்டு ராத்திரிக்குப் போயி அப்பாலே சாத்துக்கெடிக்குப் (சாத்கர்) போகச்சொல்லி அனுப்பிவிச்சதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டது.

*1759 வருசம் டிசம்பர் மாசம் தேதி 12; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 1; புதன்கிழமை*

இத்தனாள் கஞ்சாமுக்குப் போயிருந்த முசியே மொர்சேன் கலிங்கத்து நாராயண தெசுக்கும் யிவனுக்கும் ஒத்து வராமல் படிக்கி அவ்விடத்திலே யிருந்து மூணு பேர் வெள்ளைக்காறருடனே ஒரு படகின் பேரிலே யேறி பழவக்காடு வந்து சேந்தான். பழவக்காடு துரை யிங்கிறேசுக்காறர் கையிலே பசுப்போடுதும் (Pass-port) வாங்கிக் குடுத்து பல்லக்கு மத்ததும் சரஞ்சாம் பண்ணிக் குடுத்தான். அவ்விடத்திலே யிருந்து பிறப்பட்டு யித்தனாள் காலமே ஏழு மணிக்கு முசியே மொர்சேன் வந்து சேர்ந்தான். நேத்தய தினம் தலிசந்து தலினான்சு (Diligent) என்கிற கப்பல் கரை உதக்கினதிலே யின்றை தினம் சிறிது பீரங்கியள் கோதும்பை சரக்குகள் யெறக்கினார்கள். ஆற்காட்டிலே யிருந்த முசே புசி யித்தனாள் காலமே யெட்டு மணிக்கி வந்து சேர்ந்தான். முசியே புசி வந்தது என்னத்துக்கு யென்றால் யிப்ப யிவன் அழைச்சு வந்த பவுன்சுகளுக்குப் பணம் காசு நிமித்தியமும் யினிமேல் நடக்க வேண்டிய காரியங்களுக்கும் கண்டு பேசத் தக்கதாக வந்தான். யித்தனாள் முன்னே யிங்கிலீசுக்காறர் கப்பல் பிடிச்சதிலே யிருந்த வச்சிரம் கோட்டையிலே யிருந்தது. சென்னப்பட்டணம் வர்த்தகர்கள் நீலகண்ட டாக்கர் நாற்பது நாளைய தவணைக்கு அன்பத்து நாலாயிரம் (54000) விராகனாய் வித்தார்கள். யிந்த வச்சிரம் முன்னாலே தொண்ணூறு ஆயிரம் வராகனாய் மதிப்பு விலை பார்த்து அதை முன்னே ரொக்கத்துக்கான படியினாலே யெழுபத்தேழாயிரம் விராகனாய் கேட்டார்கள். பிறகு எழுபதினாயிரம் விராகனாய் கேட்டார்கள். பிறகு அறுபதினாயிரமாய்க் கேட்டார்கள். அதை யிப்ப அன்பத்தினாலாயிரம் விராகனுக்கு நாற்பது நாள் தவணைக்கு வித்தார்கள்.

*1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 13; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 2; வியாழக்கிழமை*

இத்தனாள் கருங்குழிப் பாளையத்திலே யிருந்த முசே கின்னலி பிறகாதியேர் (Brigadies M.O. Kennely) என்கிறவன் சென்னப்பட்டணத்துச் சண்டையிலே பீறங்கி குண்டு போட்டு காயப்பட்டு ஊனமாயிருந்தவன் இங்கிலீசுக்காறருடனே சண்டை போட்டு கருங்குழிக் கோட்டையை இங்கிலீசுக்காறர் கையிலே ஒப்புவிச்சுப் போட்டு யிருந்த சொலுதாதுகளுடனே பிறப்பட்டு ஆலம்பிறைவைக் கோட்டையை வந்து சேர்ந்தானென்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. இராத்திரி யெட்டு மணிக்கு கேழ்க்கப்பட்ட சேதி, முசே லாலியும் முசே லெறியும் முசே புசியும் கூட காலமே யெட்டு மணிக்குத் துவக்கி பேசினவர்கள் பகலைக்கும் ஒண்ணாய் சாப்பிட்டு ராத்திரி யெட்டு மணி வரைக்கும்

கிட்ட நாலாம் பேர் வராமல் படிக்கி பேசிக்கொண்டிருந்தார்கள் என்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

இத்தனாள் கருங்குழிப்பாளையம் கோட்டையிலே யிருந்த முசே கினன்லி பிறகாதியோர் என்கிறவர் சென்னப்பட்டணத்துச் சண்டையிலே பீரங்கிக் குண்டுக் காயம் (பட்டு) இங்கிலீசுக்காறருடனே சண்டை போட்டு கருங்குழிக் கோட்டையை இங்கிலீசுக்காறர் கையிலே ஒப்பிவிச்சுப்போட்டு யிருந்த சொலுதாதுகளுடனே பிறப்பட்டு ஆலம்பிறவைக் கோட்டையே வந்து சேர்ந்தானெங்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

### *1759 வருசம் டிசம்பர் மாசம் தேதி 18; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 7; செவ்வாய்*

இத்தனாள் உலாந்தாக்காறர் அவ்விடத்திலே பிறசித்தம் பண்ணதாய் (வெளிப்படையாய் பேசி வந்தபடி) யித்தனாளும் "பட்டணம் பிரான்சுக்காறருது யென்று யிருந்தோம். அவர்களுது அல்லா பட்டணம், குடிகள் பலபட்டடைகளுது. அது யெப்படி யென்றால் பலபட்டடைகள் குடிகள் கஞ்சி வார்க்கத் தக்கதாய் அடிச்சுக் கொண்டு துரைத்தனம் பண்ணுகுறார்க"ளென்று யிப்படி யெகத்தாளி பண்ணத்தின் பேரிலே அவ்விடத்திலே யிருக்கிறவர்கள் யிவர்கள் மனுஷர் எழுதியனுப்பி விச்ச கடுதாசியைக் குமிசேலிலே படிச்சார்கள் என்கிற சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

யிதல்லாமல் சீமை கடுதாசி கோவைக்கு வந்து அவ்விடத்திலே யிருந்து மய்யயேவுக்கு வந்து மய்யேயிலே யிருந்து நேத்து ராத்திரி யிவ்விடத்துக்கு வந்ததாய், அந்தக் கடுதாசி யின்றைய தினம் மட்டுக்கும் குமிசேலிலே அவிழ்த்துப் பார்த்ததாய், அதிலே கேழ்க்கப்பட்ட கசம் சேதி யென்னயென்றால், (சேதி?) முசே லாலி முதலாய் ராசா உடய மனுஷர் முடிய சீமைக்கு வந்துவிடச் சொல்லியும் முசே லெறியை மாத்திரம் சீமையிலே யிருந்து துரைத்தனம் வரந்தன்னிலும் யிருந்து வந்தவுடனே அவர் கையிலே ஒப்புவிச்சுப் போட்டு முசே லெறியையும் சீமைக்கு வந்துவிடச் சொல்லியும், யிதல்லாமலும் சீமையிலே யிருக்கிற வற்த்தகர் கும்பினியாருக்கு நாற்பதினாயிரம் மிலியோம் வெள்ளி கடன் குடுத்ததாயும் அதன் பேரிலே முப்பது நாற்பது கப்பல் பயணம் பண்ணி அதிலே யிந்தப் பட்டணத்து ஒரு கோவற்ணதோரும் குமுசேல்க்காறரும் ஞாயம் விசாரிக்குறவர்களும் வருகுறார்களென்றும் யிந்தக் கப்பலிலே சரக்குகள் பணங்காசுகள் விஸ்தாரமாய் வருகுதென்றும், யிதெல்லாம் யிந்த மட்டுக்கும் உலாந்தாக்காறர் யிங்கிலீசுக்காறருக்கு முன்னூறு கப்பல் (300) மட்டுக்கும் சிறிது திரவியங்களும் மத்தத்துப் பண்ணினதாயும், யிப்ப உலாந்தாக்காரருக்கும் யிங்கிலீசுக்காறருக்கும் ஆகாமல் படிக்கி

உலாந்தாக்காறர் யிங்கிலீசு ராசாவுக்கு எழுதி அனுப்பிவிச்சது. யினிமேல் நாங்கள் உங்களுக்கு மத்தத்துப் பண்ணத்தக்கினது மில்லை யென்று நீங்கள் யெங்கள் பேரிலே சண்டைக்கி வந்(தது) யுண்டானால் நாங்கள் பிரான்சுக்காறருடனே கூடிக் கொண்டு உங்கள் பேரிலே சண்டை பண்ணுவோமென்று எழுதியனுப்பி விச்சதாயும் சீமையிலே பிரான்சுக்காறர் பேச்சு பெலனா யிருக்குதென்றும், யிசுப்பாஞ்சிய ராசா செத்துப் போனத்துக்குப் பட்டத்துக்கு மூத்த பிள்ளையைத் தானே வைச்சு யிசுப்பாஞ்சிா ராசா உடய பவுன்சும் பிரான்சு ராசாவுடைய பவுன்சும் யேகோபிச்சு சிபில்த்தார் (Giliraltar) யென்கிற ராச்சியத்தின் பேரிலே போயி யிறங்கி சண்டை பண்ணுகுறார்களென்கிற சேதியும் இங்கிலீசுக்காற ராசா உலாந்தாக்காறருடைய மத்தத்து தீந்து போனபடியினாலே ஒரு பெரிய பெலயீனமும் யிவர்களுக்கு மத்தத்தாய் இங்கிலீசுக்காறருடனே கூடிக்கொண்டு சண்டை பண்ண புருஷ (பிரஷ்ய) ராசாவுடைய பவுன்சு ரொம்ப சேதமாயிப் போனபடியினாலேயும் அவர் வேறே சீமை கட்டுப்போட்டுப் போனபடியினாலேயும் புருஷ ராசாவுக்கு (King of Prussia) ரொம்ப பலயீனம் ஆச்சுது யென்றும், யிந்த ரெண்டு காரியத்தினாலேயும் யிங்கிலீசுக்காறருக்கு ரொம்ப பலயீன மெங்கிறதாயும், யிதினாலே சீமையிலே பிரான்சு ராசாவுடைய காரியங்களெல்லாம் அனுகூலமாய் நடக்குதென்றும் கும்பினியாருக்கும் வெகு திரவியம் வந்து அதினாலே இந்தியாவுக்கு முப்பது நாற்பது கப்பலும் சரக்கு சப்படியாளும் திரவியமும் விஸ்தாரமாய் வருகுதென்கிறதாய் சந்தோஷ வார்த்தை கேழ்க்கப்பட்டுது. பின்னையும் முராரி ராயனுடைய குதிரை ஆயிரத்தன்னூறு (1500) குதிரை ஆற்காட்டுக்கு வந்ததென்றும் சந்தா சாயபு மகன் றசா சாயபும் மயிலாப்பூர் பாதிரியும் ரெண்டு பேரும் வேலூர் வந்து சேர்ந்தார்களென்றும் அங்கே யிருந்து யிவ்விடத்துக்கு வருகுகிறார்களென்றும் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

***1759 வருசம் டிசம்பர் மாசம் தேதி 20; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 9; குருவாரம்***

இத்தனாள் சென்னப்பட்டணத்து வர்த்தகன் நீலகண்ட டாக்கர் கோட்டையிலே அன்பத்து நாலாயிரம் விராகனாய் கொண்ட வச்சிரங்கள் குண்டூர் பாலிசெட்டி முகாந்திரமாய்க் கொண்டபடியினாலே அவனுக்கு 100க்கு 2 விழுக்காடு தறகும் முசியே திப்பிளாம் முகாந்திரமாய் விசேஷம் நடந்தபடியினாலே அவனுக்கு ஆயிரம் விராகனும் அவன் பெண்சாதிக்கு முன்னூறு விராகனும் யிந்தப்படிக்கு யிவர்களுக்கெல்லாம் சிலவு குடுக்குறோமென்று சொல்லி வச்சிரம் அன்பத்து நாலாயிரம் விராகன் முசே லாலி வசம் செலுத்தி வைக்கச்சே, முசே திப்பிளாமுக்கு

குடுக்குறோமென்று சொன்ன ஆயிரம் விராகனும் அவன் பெண்சாதிக்குச் சொன்ன முன்னூறு விராகனும் செலுத்திப் போட்டானென்று சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது. முன்னே முராரி ராயன் குதிரை ஆற்காடு வந்து தென்று எழுதியிருக்குறோம். அதிலே ஆயிரம் குதிரை மாத்திரம் பிறப்பட்டு காஞ்சீபுரம் யிந்த வட்டங்களெல்லாம் கொள்ளையடிச்சு தமாலிலே (Damal) அந்த வட்டங்களிலே போச்சுது என்கிறதாய் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

***1759 வருசம் தெசம்பர் மாசம் தேதி 28; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 17; சுக்கிரவாரம்***

இத்தனாள் நம்முட வெள்ளைக்காறர் ஸ்ரீரங்கத்திலே யிருந்தவர்கள் உள்படத்தூர் வந்து சேர்ந்தார்களென்றும், முசே லசேல் யெல்லாரும் உள்படத்தூரிலே யிருக்குறார்களென்றும், இங்கிலீசுக்காறருடைய சோல்சத்து (force) (அல்ல. ஊட்டத்தூர்) அதிகமாயிருக்குதென்றும் சமாச்சாரம் கேழ்க்கப்பட்டுது.

***1759 வருசம் டிசம்பர் மாசம் தேதி 31; பிறமாதி வருசம் மார்கழி மாசம் தேதி 20; சோமவாரம்***

இத்தனாள் ராத்திரி ஒன்பது மணிக்கு சாவடி மணியம் சீயாளப் பிள்ளை வந்து சொன்ன சமாச்சாரம் யென்ன யென்றால், முசியே லங்கற்னே யண்டைக்கு மகாநாட்டாரை அழைச்சுக் கொண்டு போனவிடத்திலே முசே லங்கற்னே (M. Le Granee) சொன்னது "நீங்கள் கொடுக்க வேண்டிய வரி சம்மதி நிலுவைக்கு யிப்போ ஆயிரம் பூவிராகன் யெட்டு நாளைக்குள்ளே குடுத்தால் நீங்கள் முன்னே குடுத்திருக்கிற வராகனும் யிப்போ குடுக்கிற ஆயிரம் விராகனும் சேர்ந்து குமிசேலிலே கையெழுத்துப் போட்டு கடன் சீட்டு அவரவர் பேருக்கு வாங்கித் தாறேன். நீங்கள் யிருபது சாதியாரும் கூடி யிந்த ஆயிரம் விராகனும் குடுங்கள். யிதின் பேரிலே யினிமேல் வரி கேழ்க்கயில்லை. யிந்த விராகனுடனே சாடா (வரிவசூல் தீந்துது) யென்று சொன்னதின் பேரிலே மகாநாட்டாரும் நல்லதென்று ஆயிரம் விராகனும் யெட்டு நாளையிலே குடுக்குரோமென்று கடுதாசி யெழுதி அதிலே கணகசபை முதலியும் தில்லை மேஸ்திரி, முத்தா பிள்ளை, கோமுட்டியன் நாட்டாண்மை கிஷ்ணம செட்டியும் செட்டியள் நாட்டாண்மைக்காறரும் கையெழுத்துப் போட்டு நாங்கள் இருபது சாதியாரும் யிந்த ஆயிரம் வராகனும் குடுக்கிறது. யிந்த விராகனுடனே சம்மதி சாடா யென்று உடம்படிக்கையும் யெழுதி அந்தக் கடுதாசியிலே கையெழுத்துப் போட்டுக் குடுத்தார்கள். அதின் பேரிலே

முசே லங்கற்னேயும், "நான் சத்தியமாய் சொல்லுகுறேன். நீங்கள்... பரவசமாய் நம்புங்கள்" யென்று கையடிச்சுக் குடுத்தான். யிந்தப்படிக்கி உடம்படிக்கை யெழுதிக் குடுத்து மகாநாட்டாரும் சந்தோஷமாய் வந்து அவரவர் வீட்டுக்குப் போய் விட்டார்கள். யிந்தப் பட்டணத்தை பில்காயிச்சுப் பிடிச்சிருந்த தோஷம் அல்ப்பத்திலே வந்தது. யிதுவும் யிந்த மாசத்துடனே விட்டுப்போம்.

---

